தஞ்சை சரசுவதி மகால் வெளியீடு-143.

# இலக்கண விளக்கம்

## பொருளதிகாரம்

### அகத்திணையியல்

### முற்பகுதி





தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்
சரசுவதி மகால் நூல் நிலையம்



1972

தஞ்சை சரசுவதி மகால் வெளியீடு—143.

வைத்தியநாத தேசிகர் இயற்றிய

# இலக்கண விளக்கம்

## பொருளதிகாரம்—அகத்திணையியல்

முற்பகுதி

பதிப்பாசிரியர் :
பண்டித வித்வான், தி. வே. கோபாலையர், எம். ஏ., பி. ஓ. எல்.,
திருவையாறு.



தஞ்சை சரசுவதி மகால் நிர்வாகக் கமிட்டியினருக்காகக்
கௌரவ காரியதரிசி,
நீ. கந்தசாமிப் பிள்ளை அவர்களால்
வெளியிடப்பட்டது.

கி. பி. 1972]

[விலை ரு. 17-00

# PUBLISHER'S PREFACE.

Ilakkanavilakkam, which is popularly known as *Tholkappiyam* in *parvo*, is a standard treatise on Tamil Grammar in three books. We have very recently published the first and the second books viz. the *Ezuthathikaram* and the *Sollathikaram*. dealing with letters and words respectively. Now, we are placing before the public the first chapter of the Third book. The third book is known as *Porulathikaram* dealing with the subjective and the objective poetry, literary conventions, rhetoric, prosody, and other connected matters. The first chapter is known *Akathinaieiyal* i. e. the internal and immediate affairs and their bases. This author has condensed five chapters of Tholkappiam in this one chapter. So, this chapter has become too bulky to be released as a single volume and we are obliged to publish this volume in two parts.

When presenting a treatise on Grammar, we think it necessary to say a few words about Grammar in General and its usefulness in directing the mental activities on right lines to achieve the ideal of human nature and to develop it harmoniously to the full perfection which it is capable of, but we reserve detailed introduction, giving all particulars about our language, the grammatical studies in general: and in particular the other linguistic information, which are essential to bring our language and grammatical studies in the proper perspective of the international academic studies, to the last volume of this work, in addition to a concise and clear exposition of the Third book i. e. Porulathikaram.

We are profoundly indebted to Thiru N. Mahalingam, B. Sc., M. I. E. leading industrialist and well-known savant of Tamil for his gift to this Library, of a hand written copy of Ilakkanavilakkam, which. along with a very old printed edition by Thiru C.V. Damodharam Pillai, long out of print and another by Vidvan Thiru Ramalingam son of Thiru Somasundara Desigar has been the main basis of this publication.

We thank the learned editor, Thiru Panditha Vidvan, T. V. Gopala Iyer, M. A., B. O. L., for bringing out a self contained volume giving all parallel citations in the original and all aids a student would like to have. We are thankful to our present Librarian, Thiru M. Seeralan who has spared no pains in seeing to the early release of this work. Our thanks are due to Messrs Vetrivel Press for their neat and speedy execution of the printing.

With all our efforts to be perfect we are aware of some deficiencies which would be set aright in the next edition. We shall feel thankful to our friends who would kindly point out the defects in this edition and favour us with suggestion for the improvement of this edition.

We wish to record our gratitude to the Government of Tamil Nadu for their annual publication grant which has made this publication possible.

Thanjavur,
27-12-72.

**N. Kandaswamy Pillai,**
Honorary Secretary,
T. M. S. S. M. Library.

# பதிப்பாசிரியர் முன்னுரை.

பதினேழாம் நூற்றாண்டில் தமிழகத்தில் வாழ்ந்த தமிழிலக்கணப் பெரும்புலவர் மூவருள் ஒருவராகிய திருவாரூர் வைத்தியநாத தேசிகர் இயற்றிய இலக்கணவிளக்கத்தின் மூன்றும் படலமாகிய பொருட்படலத்தின் முதல் இயலாகிய அகத்திணையியல் இப்பொழுது வெளியிடப்பெறுகிறது.

இதற்குத் திருவாளர் தாமோதரம் பிள்ளையவர்களின் இலக்கணவிளக்கப் பதிப்பும், இலக்கணவிளக்க ஆசிரியர் பரம்பரையினரான திருவாளர் வித்துவான் இராமலிங்கம் அவர்களின் இலக்கணவிளக்கப் பொருளதிகாரப் பதிப்பும் தஞ்சை சரசுவதிமகால் கையெழுத்துப் பிரதியும் துணை போந்துள்ளன. தொல்காப்பியப் பொருட்படல் உரையாசிரியர் நச்சினார்க்கினியர் பேராசிரியர் ஆகியோர் உரைகள் சிறந்த பாடங்கொள்வதற்கு உதவியுள்ளன.

ஆசிரியர் சுருக்கமாக உரை வரைந்துள்ள நூற்பாக்களுக்கு உரை விளக்கமாக வரையப்பட்டுள்ளது. எடுத்துக் காட்டுப்பாடல்களின் போந்தபொருள் விளக்கி எழுதப்பட்டுள்ளது. வழக்கம்போல ஒத்தநூற்பாக்கள் அவ்வந்நூற்பாவின் இறுதியில் கட்டப்பட்டுள்ளன. ஒத்தநூற்பாக்கள் என்ற தலைப்பில் முழுதும் ஒத்தனவும், ஒருபுடை ஒத்து ஒருபுடை ஒவ்வாதனவும் ஆகிய நூற்பாக்கள் குறிக்கப்பெற்றிருத்தலின், இப்பகுதி, ஒப்புநோக்கு ஆராய்ச்சி, வளம்பெற உதவும் என்பது ஒருதலை.

முகவுரையில் நூற்செய்தி, இவ்வியலில் இடம் பெற்றுள்ள ஏனையநூல்களின் நூற்பாக்கள், இவ்வாசிரியர் தாமே யாத்த நூற்பாக்கள், அகத்திணையியல் அமைப்பு என்பன விளக்கப்பட்டுள்ளன.

இவ்வாசிரியர் வரைந்துள்ள இவ்வகத்திணையியல் நம்பியகப்பொருளைப் பெரிதும் ஒத்து அமைந்திருப்பதால், இவ்வியலின் உட்பகுதிகளாகப் பொதுச்செய்திகள், களவியற்

செய்தி, வரைவியற்செய்தி, கற்பியற்செய்தி என்பனவும் ஒழிபியற்பகுதியும் வகுத்துக்கொள்ளப்பட்டுள்ளன. நூலை எளிதின் உணரப் பதிப்பாசிரியர் தந்துள்ள விளக்கங்கள் [ ] குறிக்குள்ளும், விளக்கம் என்ற தலைப்பிலும் ஆங்காங்குப் பிரித்துணரும் வகையில் பதிப்பிக்கப்பட்டுள்ளன. நம்பியகப் பொருளை அடியொற்றித் தொல்காப்பியப் பொருட்படல அகத்திணையியல் களவியல் கற்பியல் வரைவியல் மெய்ப்பாட்டியல் செய்யுளியல் ஆகியவற்றின் செய்திகளையும் உரைகளையும் ஆசிரியர் விளக்கமாகக் கூறிச் செல்வதால், இவ்வியல் இப்பொருட்படலத்திலேயே மிகப்பெரிய இயலாக அமைந்துள்ளது.

தொல்காப்பிய மெய்ப்பாட்டியற் செய்திகள் பலவும் பேராசிரியர் உரையும் அமைந்துள்ள ஒழிபியற்பகுதி கற்பார் நலம்கருதி விரிவாக விளக்கப்பட்டுள்ளது.

இவ்வியலின் இறுதியில் நூற்பா முதற்குறிப்பு அகரவரிசை, எடுத்துக்காட்டுப்பாடல் முதற்குறிப்பு அகரவரிசை முதலியவற்றோடு துறை அகரவரிசையும், பொருள் அகரவரிசையும், ஒத்தநூற்பாக்கள் அகரவரிசையும், அருஞ்சொற்பொருள் அகரவரிசையும் இணைக்கப்பட்டுள்ளன.

இதனைப்பதிப்பிக்குமாறு எனக்கு வாய்ப்பளித்துப் பதிப்பிக்கும் முறையைக் குறிப்பிட்ட தஞ்சை சரசுவதிமகால் கௌரவ காரியதரிசியாகிய திருவாளர் முதுபெரும்புலவர் நீ. கந்தசாமிப்பிள்ளையவர்களுக்குப், பதிப்பித்துள்ள வெற்றிவேல் அச்சகத்தாருக்கும் என் நன்றி உரியதாகுக.

பல குறைபாடுகளுக்கிடையே அச்சிற்போந்துள்ள இந்நூலில் சிற்சில பிழைகள் உள்ளன. அவற்றைப் பொறுக்குமாறு தமிழ்கூறு நல்லுலகத்தை வேண்டி, என்னைத் தோன்றாத் துணையாய் இத்தகைய நற்பணிக்கண் உய்க்கும் ஐயாறன் அடியிணை இறைஞ்சி இப்பணியினைத் தொடர்கின்றேன்.

46. மேலமடவளாகம்
திருவையாறு

**தி. வே. கோபாலையர்**

# அகத்திணையியல்—முற்பகுதி

## பொருளடக்கம்.

5. களவுப்பகுதி





# நான்முகம்

தமிழ்மொழியில் பண்டைக்காலத்தில் இயற்றமிழ் இலக்கணம் எழுத்து, சொல், பொருள் என்னும் மூன்று பகுப்பினதாக அமைந்தது. தொல்காப்பியனார் காலத்தே இம்மூன்று பகுதிகளையே காண்கிறோம். பின் இறையனார் களவியல்உரை எழுத்து, சொல், பொருள், யாப்பு என்ற நான்கு பகுப்புக்களைக் குறிப்பிடுகிறது. அணியிலக்கணம் தமிழிலும் விரிவாகத் தோன்றவே, இடைக்காலச் சோழர்கள் காலத்தில் தமிழ்இலக்கணம் எழுத்து சொல் பொருள் யாப்பு அணி என்ற ஐம்பகுப்பினதாயிற்று.

பொருள்இலக்கணம் தமிழ்மொழியில் தனிச்சிறப்பிற்று. அஃது அகம் எனவும், புறம் எனவும் இருபகுதிப்பட்டது. அகப்பொருள் பற்றிய சங்கச் சான்றோர் பாடல்கள் பலவாக இருத்தலைக் காண்கின்றோம். தொல்காப்பியனார் அகப் பொருள் இலக்கணத்தை அகத்திணையியல், களவியல், கற் பியல், பொருளியல் என்ற நான்கு இயல்களான் விளக்கியத னோடு அமையாது, அகப்பொருள்பற்றிய செய்திகளை மெய்ப் பாட்டியல், உவமவியல், செய்யுளியல் என்ற இயல்களிலும் விரிவாகச் சுட்டிச் செல்கிறார்.

சங்கப்பாடல்கள் பொருள்தொடர்நிலையாக அமையா மல் தனித்தனிப் பாடல்களாக அமைந்தமையின், அக்காலத் தவராகிய தொல்காப்பியனார், தலைவன்கூற்று தலைவிகூற்று தோழிகூற்று எனப் பலவகைக் கூற்றுவகைகளைத் தொகுத் துச் சுட்டினாரே யன்றி, அகப்பொருட்செய்திகளைத் தொடக் கம்முதல் இறுதி காறும் தொடர்பாகக் கூறினார் அல்லர். ஆனால் கோவைநூல்கள் அகப்பொருட் செய்திகளைக் கோவை யாகக் கூறத் தொடங்கிவிட்டன. திருச்சிற்றம்பலக் கோவை

யாருக்கு உரை வரைந்த பேராசிரியர் தம் உரையில் அகப் பொருள் இலக்கண நூற்பாக்களையும் தொடர்பாக அமைத் துள்ளார்.

இடைக்காலச் சோழர்கள் ஆட்சியில் தோன்றிய நம்பி அகப்பொருள் என்ற நூல் அகப்பொருள் இலக்கணத்தைப் பொருள் தொடர்பு சிறக்க அமைக்கவே, அதுவே பிற்காலக் கோவைகள் பலவும் தோன்றுதற்கு இலக்கணமாகி, அகப் பொருள் இலக்கணமாக நாட்டில் பயில வழங்குவதாயிற்று. பதினாறும் நூற்றாண்டில் தோன்றிய மாறன் அகப் பொருள் கோவைகளில் துறைகளைச் சிறிது விரிவாக்கியது. பிற்பட்ட முத்துவீரியமும் பெரும்பாலும் திருக்கோவை யாரையும் நம்பிஅகப்பொருளையும் அடியொற்றியே நிகழ்வ தாயிற்று.

இவ்வாசிரியர் தாம் மேற்கொண்ட கொள்கைக்கு ஏற்ப ஒவ்வோரதிகாரத்தையும் ஐந்து இயல்களாக அமைக்கும் முறையில், பொருளதிகாரத்தை அகத்திணையியல், புறத்திணை யியல், அணியியல், செய்யுளியல், பாட்டியல் என்ற ஐந்து இயல்களாக அமைத்துள்ளார்.

அகத்திணையியற்கண் பெரும்பாலும் நம்பியகப்பொருள் நூற்பாக்களே இடம் பெற்றுள எனினும், தேவைப்பட்ட இடங்களிலெல்லாம் தொல்காப்பியக் கருத்துக்களும் நச்சி னார்க்கினியர் பேராசிரியர் உரையாசிரியர் ஆகியோர் தரும் உரை விளக்கங்களும், சில இடங்களில் இறையனார் களவியல் உரைச்செய்திகளும் இடம் பெற்றதனால், இவ்வகத்திணையியல் நம்பியகப்பொருளினும் பல்லாற்றானும் சிறந்து விளங்குகின் றது. பழையனவற்றோடு முரணாதனவாகிய புதியன புணர்த்து இவ்வாசிரியர் நூல்யாத்துள்ள சிறப்பு இவ்வகத்திணையியற் கண்ணும் மிளிர்கிறது. ஏனைய இயல்கள் பற்றிய முன்னுரை களை அவ்வவற்றின் தொடக்கத்தில் காணலாம்.

---

# நூற்செய்தி

(சூத்திர எண்)

மலை பாலை காடு வயல் கடல், இவைசேர்ந்த இடங்கள் ஆகியவை முறையே குறிஞ்சி முதலிய ஐந்திணைக்கும் உரிய நிலங்களாம் என்பது. ... 10

பொழுது, பெரும்பொழுது சிறுபொழுது என இரு வகைப்படும் என்பது .... 11

கார் கூதிர் முன்பனி பின்பனி இளவேனில் முதுவேனில் என்ற ஆறு பெரும்பொழுதுகளும், ஆவணி தொடங்கி இரண்டிரண்டு திங்கள் அளவைய என்பது. .... 12

மாலை யாமம் வைகறை காலை நண்பகல் பிற்பகல் எனச் சிறுபொழுது அறுவகைப்படும் என்பது. .... 13

கூதிர் முன்பனி யாமம் குறிஞ்சிக்கும், வேனில் பின்பனி நண்பகல் பாலைக்கும், காரும் மாலையும் முல்லைக்கும், பெரும்பொழுது வரையறையின்றி, வைகலும் விடியலும் மருதத்திற்கும், பிற்பகல் நெய்தற்கும் உரியவாம் என்பது. .... 14

தெய்வம், தலைமக்கள், பொதுமக்கள், புள், விலங்கு, ஊர், நீர், பூ, மரம், உணவு, பறை, யாழ், பண், தொழில் என்ற பதினான்கும் கருப்பொருள் என்பது. .... 15

குறிஞ்சித்திணைக்குரிய கருப்பொருள்கள் இவை என்பது. 16

பாலைத்திணைக்குரிய கருப்பொருள்கள் இவை என்பது .... 17

முல்லைத்திணைக்குரிய கருப்பொருள்கள் இவை என்பது.... 18

மருதத்திணைக்கு உரிய கருப்பொருள்கள் இவை என்பது. 19

நெய்தல்திணைக்கு உரிய கருப்பொருள்கள் இவைஎன்பது. 20

உடன்போய் வரைதல், மீண்டு வரைதல், உடன்போக்கு இடையீடுற்று வரைதல் எனக் களவு வெளிப்பட்ட பின் வரைதல் மூவகைப்படும் என்பது. .... 40

உடன்போய் வரைதல் ஒரே வகையினை உடையது என்பது. .... 41

மீண்டு வரைதல், தலைவன் தன்மனைக்கண்ணே வரைதலும் தலைவிமனைக்கண்ணே வரைதலும் என இருவகைப்படும் என்பது. .... 42

தலைவன் குறிக்கு வரும் வழியின் இடையூற்றை அஞ்சியஇடத்தும், தலைவன் வரைதலைத் தலைவிதமர் மறுத்தவிடத்தும், வேற்றவர் தலைவியை மகட்கோடற்கு ஏற்பாடு செய்தவிடத்தும், தலைவியை இற்செறித்தவிடத்தும் அறத்தொடுநிலை நிகழும் என்பது. .... 43

தலைவி பாங்கிக்கும், பாங்கி செவிலிக்கும், செவிலி நற்றாய்க்கும், நற்றாய் தந்தைதன்னையருக்கும் முறையே அறத்தொடுநிற்பர் என்பது. .... 44

பாங்கியிற் கூட்டம் நீங்கலான ஏனைய மூவகைக் கூட்டத்தின்கண்ணும் தலைவன் ஒருவழித் தணத்தலானும், தலைவன் வரைவு இடைவைத்துப் பொருள்வயின் பிரிதலானும், தலைவனைச் செவிலி குறியிடத்துக் காண்டலானும், தலைவியை இற்செறித்தலானும் தலைவிக்கு வருத்தம் மிகுமிடத்துத் தோழி தன்னை வினவியவிடத்தும் வினவாதவிடத்தும் தலைவி அறத்தொடுநிற்பாள் என்பது. .... 45

பாங்கி முன்னிலைப்புறமொழிகளானும் முன்னிலை மொழிகளானும் செவிலிக்கு அறத்தொடுநிற்பாள் என்பது. .... 46

காமக்கிழத்தி, ஒருவனிடமே உரிமை பூண்டு வாழ்ந்த பரத்தைமகளாய்த் தலைவன் மணத்தற்கு உரியள் என்பது. .... 109

பொருளையே விரும்பும் சேரிப்பரத்தையர் மகளிராய்த் தலைவனால் காதலில் புணரப்படுவோர் காதற்பரத்தையர் என்பது. .... 110

அவருள்ளும் சிலரைத் தலைவன் வரைந்துகோடலும் உண்டு என்பது. .... 111

இல்லறத்தைச் செவ்வனே செய்து மக்களொடு மகிழ்ந்து வாழ்ந்து காமவேட்கை தீர்ந்த முதுமையில் தலைவனும் தலைவியும் தம்ஊரை விடுத்துக் காட்டிற்குச் சென்று எல்லையற்ற சுற்றத்தாரோடு துறவறத்தை மேற்கொள்வர் என்பது. .... 112

களவு ஒழுக்கம் எனப்படுவது பிரமம் முதலிய எண் வகையாக வேதம் கூறும் மணங்களுள் கந்தருவ வழக்கத்தை ஒக்கும் என்பது. .... 113

காட்சி ஐயம் துணிவு குறிப்பறிவு என்று கைக்கிளை நான்கு வகைப்படும் என்பது. .... 114

ஊழினது ஆணையானே ஒத்த தலைவனும் தலைவியும் எதிர்ப்படுதலே காட்சி; தலைவன் தலைவியைவிட மேம்பட்டவனாய் இருப்பினும் அஃது ஒக்கும் என்பது. .... 115

தலைவன் தலைவியரிடையே உள்ள ஒப்புமைகள் பிறப்பு முதலிய பத்தும் என்பது. .... 116

தலைவியின் வடிவத்தையும் அவளைக் கண்ட சூழலையும் நோக்கத் தலைவனுக்கு ஐயம் பிறக்கும் என்பது. .... 117

எழுதியவல்லி முதலிய பலவும் தலைவன் தலைவியிடத்து அவள் தெய்வமகளோ மானுடமகளோ என்று கொள்ளும் ஐயத்தைப் போக்கும் என்பது. .... 118

முன்னிலை எனவும், முன்னிலைப் புறமொழி எனவும் அறத்தொடுநிலை இருவகைப்படும் என்பது. .... 160

கையறுதோழி கண்ணீர் துடைத்தல் முதலிய பதி ஞென்றும் பிறவும் அறத்தொடு நிற்றலின் விரி யாம் என்பது. .... 161

போக்கு, கற்பொடு புணர்ந்த கவ்வை, மீட்சி என்ற மூன்றும் களவு வெளிப்பாட்டிற்கு உரிய கிளவித் தொகைகளாம் என்பது. .... 162

போக்கு அறிவுறுத்தல் முதலாக உடன்போக்கு எட்டு வகைப்படும் என்பது. .... 163

பாங்கி தலைவற்கு உடன்போக்கு உணர்த்தல் முத லாகிய பதினெட்டுக் கிளவியும் உடன்போக்கின் விரியாம் என்பது. .... 164

செவிலி புலம்பல் முதலிய ஐந்தும் கற்பொடு புணர்ந்த கவ்வையின் வகைகளாம் என்பது. .... 165

வினவிய பாங்கியின் உணர்ந்தகாலை இனையல் என் போர்க்கு எதிர்அழிந்து மொழிதல் முதலிய இருபத் தொன்றும் பிறவும் கற்பொடு புணர்ந்த கவ்வை யின் விரியாம் என்பது. .... 166

தெளித்தல் முதலிய நான்கும் மீட்சியின் விரியாம் என்பது. .... 167

தலைவி சேண் அகன்றமை செவிலி தாய்க்கு உணர்த் தல் முதலாகக் கூறப்பட்ட ஆறும் மீட்சியின் விரி யாம் என்பது. ... 168

தலைவியை உடன்போய் வரைந்து மீடற்தும் அவள் மனை வரைதற்கும் தன்மனைவரைதற்கும், மீட்சியின் விரியில் செவிலிகூற்று ஒழிந்த ஐந்தும் உரியவாம் என்பது. .... 169

விறுதல் செப்பல் மேவல் என்று, தலைவன் மீண்டு வந்து தன் மனையின்கண் வரைதல் மூவகைத்து என்பது. .... 170

பணிமொழி நற்றாய் மணன் அயர் வேட்கையின் செவிலியை வினுதல் முதலிய ஐந்தும் தன்மனை வரைதலின் விரியாம் என்பது. .... 171

நற்றாய் மணன் அயர்வேட்கை ஒன்றும் ஒழித்து அல்லாத நான்கும், தலைமகன் புணர்ந்து உடன் போய்த் தலைமகளைத் தன் ஊரில் வரைந்து மீடற்கு உரியவாம் என்பது. .... 172

தலைவன் தம்மூர் சார்ந்தமை உணர்த்தல் முதலாகப் பாங்கி தான் அது முன்னே சாற்றியது உரைத்தல் ஈறுகச் சொல்லப்பட்ட கிளவி பதினொன்றும் உடன் போய் மீண்டு வரைந்துகோடலின் விரியாம் என்பது. .... 173

போக்கு அறிவுறுத்தல் முதலிய நான்கும் உடன் போக்கு இடையீட்டின் வகைகளாம் என்பது. .... 174

நீங்கும் கிழத்தி பாங்கியர்தமக்குத் தன் செலவு உணர்த்தி விடுத்தல் முதலாகிய ஆறும் உடன் போக்கு இடையீட்டின் விரியாம் என்பது. ... 175

தன் ஊர் வரைதலும் தன் மனை வரைதலும் நீங்கலான ஏனைய வரைவுகளில், தலைவன், அந்தணர் சான்றோரை முன்னிட்டு அருங்கலன்களை அணிவித்துத் தலைவியை வரைவான் என்பது. .... 176

கற்பாவது மகிழ்வும் ஊடலும் ஊடல்உணர்த்தலும் பிரிவும் பிறவும் பொருந்தியதாகும் என்பது. .... 177

இல்வாழ்க்கை முதலிய ஏழும் கற்பின் கிளவித் தொகையாம் என்பது. .... 178

திணையும் கைகோளும் முன்னரே இவ்வியலின் தொடக்கத்தில் கூறப்பட்டன; திணைகளுள் ஒன்றும் கைகோள்களுள் ஒன்றும் அகச்செய்யுளுள் தவறாது வரும் என்பது. ... 189

பார்ப்பான் முதலிய அறுவரும் களவுக்காலக் கூற்றிற்கும், அவ்வறுவரோடு பாணன் முதலிய அறுவரும் சேரப் பன்னிருவரும் கற்புக்காலக் கூற்றிற்கும் உரியர் என்பது. .... 190

ஊரவர் முதலியவருடைய கூற்றுக்கள் நேர்முகமாக அமையாது கொண்டுஎடுத்து மொழிப்படும் என்பது. .... 191

தலைவனொடும் தலைவியொடும் தலைவியின் நற்றாய் நேர்முகமாகக் கூற்று நிகழ்த்தாள் என்பது. .... 192

நற்றாயும் செவிலித்தாயும் கூற்று நிகழ்த்துங்கால், அவர்கள் கூற்று இன்னாரோடு இன்னுழி ஆம் என்பது. 193

கண்டோர் தாயர் பாங்கியர், தலைவன் தலைவியரோடு கூற்று நிகழ்த்துவர் என்பது. .... 194

தலைவிதமர் உடன்போக்கில் தொடர்ந்துவரின், தலைவன் தலைவியோடு ஆணையும் கூறும் என்பது. ... 195

உடன்போய் மீண்ட தலைவி பின், கற்புக்காலத்துப் பிரிவுழித் தலைவனொடு சுரத்து இயல்பு கூறுவள்; பிரிந்துழிச் சுரத்து இயல்பு நினைந்து நெஞ்சொடும் பிறரொடும் வருந்திக் கூறுவள் என்பது. .... 196

விதந்து கூறப்படாத பார்ப்பான் முதலியோர், தேவைப்பட்ட இடங்களில் தலைவன் தலைவியரோடு கூற்று நிகழ்த்துவர் என்பது. ... 197

காமம் இடையீடு பட்டவழித் தலைவனும் தலைவியும் அஃறிணைப் பொருள்களோடும், கேட்குந போலவும் கொண்டு, கூற்று நிகழ்த்துதல் முதலியன நிகழும் என்பது. .... 198

காமம் இடையீடு பட்டுழிக் கனாக் கண்டு அதனைப் பிறருக்குக் கூறுதல் தலைவன் தலைவியருக்கு உண்டு என்பது. .... 199

பிறரொடு கூறாதே தாமே கூறி அமைதியுறுதலும் உண்டு என்பது. .... 200

தலைவன்கூற்றும் தலைவிகூற்றும் மறையோர் முதலிய பதின்மரும், மறையோன் கூற்றும் அறிவர் கூற்றும் இறையோன் முதலிய ஏனையோரும் கேட்பர் என்பது. .... 201

ஒருவழிப்பட்டு ஓர் இலக்கணத்தான் முடியும் கரும நிகழ்ச்சி இடம் எனக் கூறப்படும் என்பது. .... 202

இறப்பு நிகழ்வு எதிர்வு என்ற முக்காலத்தும் பொருள் நிகழ்ச்சியை உரைப்பது காலமாகும் என்பது. ... 203

தறல் இது மிகவும் பயக்கும் என்று தொகுத்துச் சொல்லப்படும் பொருள் பயன் என்னும் உறுப்பாம் என்பது. .... 204

இவ்விடத்து இம்மொழி இவர் இவர்க்கு உரிய என்று குறிப்பான் அறியுமாறு செய்வது முன்னமாகும் என்பது. .... 205

உய்த்துணர்ச்சியின்றி உடலின் வரும் வேறுபாடுகள் கொண்டு அறிவது மெய்ப்பாடாகும்; அம்மெய்ப்பாடு நகை முதலாக உவகை ஈறாக எட்டுவகைப்படும்; அவை ஒவ்வொன்றும் நந்நான்கு நிலைக்களன்களை உடைய என்பது. ... 206

இவை போலவே, உடைமை இன்புறல் முதலிய மெய்ப்பாடுகளும் உண்டு என்பது. ... 207

புகுமுகம் புரிதல் முதலிய பன்னிரண்டும், பாராட்டெடுத்தல் முதலிய பன்னிரண்டும் முறையே புணர்ச்சிக்கு முன்னும் புணர்ச்சியின் பின்னும் நிகழும் மெய்ப்பாடுகள் என்பதும், இன்பத்தை வெறுத்தல் முதலிய பன்னிரண்டும் கற்பினும் களவிற்கே சிறந்த மெய்ப்பாடுகள் என்பதும், முட்டுவயின் கழறல் முதலிய எட்டும் வரைதல்வேட்கையைப் புலப்படுத்தும் மெய்ப்பாடுகள் என்பதும், தெய்வம் அஞ்சல் முதலிய பதினொன்றும் கற்பிற்கு உரிய மெய்ப்பாடுகள் என்பதும், நிம்பிரி முதலிய பன்னிரண்டும் நற்காமத்திற்கு ஆகா மெய்ப்பாடுகள் என்பதும். .... 208

கூற்றினும் குறிப்பினும் முடிக்கப்படும் இலக்கணத்தோடு கூடிய கிளவிகள் எச்சமாகும் என்பது. .... 209

எல்லாத் திணைகளுக்கும் பொதுவாய்ச் செய்யப்படும் பொருட்கூறு பொருள்வகையாம் என்பது. .... 210

பிறதிணைப் பொருள்கள் ஒரு நிலத்தில் பொருந்தி அந்நிலத்திற்கு ஏற்ற இயல்பைப் பொருந்துதல் துறையாம் என்பதும், கவிக்கூற்றும் துறையுள் அடங்கும் என்பதும். .... 211

பாடல்களில் உவமப்பொருளும் இறைச்சிப்பொருளும் திணையை உணர்த்தப் பயன்படும் என்பது. .... 212

உவமமானது உள்ளுறை உவமம், வெளிப்படை உவமம் என்று இருவகைப்படும் என்பது. .... 213

உள்ளுறை உவமம் உய்த்துணர் வகைத்தாய்க் கருப்பொருள் களனாத் தோன்றும் என்பது. .... 214

வெளிப்படை உவமம் வினை, பயன், வடிவு, நிறம் என்று நால்வகைப்படும் என்பது. .... 215

இறைச்சிப் பொருள் பொருளின் புறத்தே புலப்படும் என்பது. .... 216

முதியவன் காமஞ் சாலா இளமையோளை வருணித்து அவள் மறுமாற்றம் தாராத நிலையினும் தானே பேசி இன்புறுதலே சிறப்பான கைக்கிளையாம் என்பது. 217

இக்கைக்கிளை தலைமைப்பாடு இல்லாதவருக்கும் இழிகுலத்தோருக்குமே உரித்து என்பது. .... 218

மடல் ஏறுதல் முதலிய நான்கும் சிறப்பில்லாப் பெருந்திணை என்பது. .... 219

பாட்டுடைத் தலைவன் கிளவித்தலைவன் எனப் பாடலுள் தலைவர் இருவர் சுட்டப்படுவர் என்பது. .... 220

அவருள் பாட்டுடைத் தலைவனே உயர்ந்தோன் என்பது. .... 221

நிலப்பெயர் முதலிய ஐந்தானும் பாட்டுத் தலைவரும், இயற்பெயர் ஒழிந்த ஏனைய பெயர்களால் கிளவித் தலைவரும் சுட்டப்படுவர் என்பது. .... 222

கிளவித்தலைவனுக்கு இயற்பெயர் கூறுர் என்பது. .... 223

ஒரே பாடலில் இருவரும் ஒருசேர வருதலும், அவருள் ஒருவரே வருதலும், ஒருவரும் வாராதுஒழிதலும் நிகழும் என்பது. .... 224

அகப்புறப் பாடலும் அகப்பாடல் இலக்கணத்தைப் பெரும்பாலும் ஏற்கும் என்பது. .... 225

கூறியது கொண்டு கூறுததனையும் உய்த்துணர்ந்து கொள்ளுதல் பண்பாளர் கடமை என்ற இயல் புறனடை இஃது என்பது. .... 226

# தொல்காப்பிய நூற்பாக்கள்

115 ஒன்றே வேறே என்றிரு பால்வயின்
ஒன்றி உயர்ந்த பாலது ஆணையின்
ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப
மிக்கோன் ஆயினும் கடிவரை யின்றே தொல். பொ. 93

116 பிறப்பே குடிமை ஆண்மை ஆண்டொடு
உருவு நிறுத்த காம வாயில்
நிறையே அருளே உணர்வொடு திருஎன
முறையுறக் கிளந்த ஒப்பினது வகையே. 273

190 பார்ப்பான் பாங்கன் தோழி செவிலி
சீர்த்தகு சிறப்பின் கிழவன் கிழத்தியோடு
அளவியல் மரபின் அறுவகை யோரும்
களவியல் கிளவிக்கு உரியர் என்ப. 501

பாணன் கூத்தன் விறலி பரத்தை
யாணம் சான்ற அறிவர் கண்டோர்
பேணுதகு சிறப்பின் பார்ப்பான் முதலா
முன்னுறக் கிளந்த கிளவியொடு தொகைஇத்
தொன்னெறி மரபின் கற்பிற்கு உரியர். 502

191 ஊரும் அயலும் சேரி யோரும்
நோய்மருங்கு அறிநரும் தந்தையும் தன்னையும்
கொண்டெடுத்து மொழியப் படுவது அல்லது
கூற்றுஅவண் இன்மை யாப்புறத் தோன்றும். 503

192 கிழவன் தன்னொடும் கிழத்தி தன்னொடும்
நற்றாய் கூறல் முற்றத் தோன்றாது. 504

198 நோயும் இன்பமும் இருவகை நிலையின்
காமம் கண்ணிய மரபுஇடை தெரிய
எட்டன் பகுதியும் விளங்க ஒட்டிய

உறுப்புடை யதுபோல் உணர்வுடை யதுபோல்
மறுத்துரைப் பதுபோல் நெஞ்சொடு புணர்த்தும்
சொல்லா மரபி னவற்றொடு கெழீஇச்
செய்யா மரபின் தொழில்படுத்து அடக்கியும்
அவரவர் உறுபிணி தமபோல் சேர்த்தியும்
அறிவும் புலனும் வேறுபட நிறீஇ
இருபெயர் மூன்றும் உரிய வாக
உவம வாயில் படுத்தலும் உவமம்
ஒன்றிடத் திருவர்க்கும் உரியபாற் கிளவி.
தொல். பொ. 196

199 கனவும் உரித்தால் அவ்விடத் தான. 197

202 ஒருநெறிப் பட்டாங்கு ஓரியல் முடியும்
கரும நிகழ்ச்சி இடம்என மொழிப. 513

203 இறப்பே நிகழ்வே எதிரது என்னும்
திறத்தியல் மருங்கின் தெரிந்தனர் உணரப்
பொருள்நிகழ்வு உரைப்பது காலம் ஆகும். 514

204 இதுநனி பயக்கும் இதனான் என்னும்
தொகைநிலைக் கிளவி பயன்எனப் படுமே. 515

205 இவ்விடத்து இம்மொழி இவர்இவர்க்கு உரியஎன்று
அவ்விடத்து அவரவர்க்கு உரைப்பது முன்னம். 519

206 உய்த்துணர்வு இன்றித் தலைவரு பொருளின்
மெய்ப்பட முடிப்பது மெய்ப்பாடு ஆகும் 516

அவைதாம்,

நகையே அழுகை இனிவரல் மருட்கை
அச்சம் பெருமிதம் வெகுளி உவகைஎன்று
அப்பால் எட்டாம் அவ்வகை எட்டும் 251

எள்ளல் இளமை பேதைமை மடமே 252
இளிவே இழவே அசைவே வறுமை 253

மூப்பே பிணியே வருத்தம் மென்மை தொல். பொ. 254
புதுமை பெருமை சிறுமை ஆக்கம் 255
அணங்கே விலங்கே கள்வர்தம் இறையே 256
கல்வி தறுகண் இசைமை கொடையே 257
உறுப்பறை குடிகோள் அலைகொலை அவற்றொடு 258
செல்வம் புலனே புணர்வுவிளை யாட்டெனப் 259
புல்லித் தோன்றும் பொருள்வகை அவற்றுள்
ஒன்று நான்குசெய்து உறழாண் ணான்காம்
என்று கூறுப இயல்புஉணர்ந் தோரே.

207 ஆங்கவை ஒருபால் ஆக ஒருபால்
உடைமை இன்புறல் நடுவுநிலை அருளல்
தன்மை அடக்கம் வரைதல் அன்புஎனாஅக்
கைம்மிகல் நலிதல் சூழ்ச்சி வாழ்த்தல்
நாணுதல் துஞ்சல் அரற்றுக் கனவுஎனாஅக்
கையாறு இடுக்கண் பொச்சாப்புப் பொறாமை
வியர்த்தல் ஐயம் மிகைநடுக்கு எனாஅ
இவையும் உளவே அவைஅலங் கடையே. 260

208 புகுமுகம் புரிதல் பொறிநுதல் வியர்த்தல்

நகுநயம் மறைத்தல் சிதைவுபிறர்க்கு இன்மை 261

கூழை விரித்தல் காதுஒன்று களைதல்
ஊழ்அணி தைவரல் உடைபெயர்த்து உடுத்தல் 262

அல்குல் தைவரல் அணிந்தவை திருத்தல்
இல்வலி உறுத்தல் இருகையும் எடுத்தலொடு 263

பாராட்டு எடுத்தல் மடம்தப உரைத்தல்
ஈரம்இல் கூற்றம் ஏற்றுஅலர் நாணல்
கொடுப்பவை கோடல் உளப்படத் தொகைஇத் 264

தெரிந்துடன் படுதல் திளைப்புவினை மறுத்தல்
கரந்திடத்து ஒழிதல் கண்டவழி உவத்தல் 265

புறம்செயச் சிதைதல் புலம்பித் தோன்றல்
கலங்கி மொழிதல் கையறவு உரைத்தல்எனக் 266

காட்சிமுதல் ஆறையும் கண்ணிஒன்று ஈரிரண்டு
ஆட்சியின் அமைந்தஈ ராறுமெய்ப் பாடும்
அன்ன பிறவும் அகன்ஐந் திணைக்கண் தொல்.பொ. 267

துன்னும் என்ப துணிந்திசி னோரே.

209 சொல்லொடும் குறிப்பொடும் முடிவுகொள் இயற்கை
புல்லிய கிளவி எச்சம் ஆகும். 518

210 இன்பமும் இடும்பையும் புணர்வும் பிரிவும்
ஒழுக்கமும் என்றிவை இழுக்குநெறி இன்றி
இதுவாகி இத்திணைக்கு உரிப்பொருள் எனாது
பொதுவாய் நிற்றல் பொருள்வகை என்ப. 520

211 அவ்வம் மாக்களும் விலங்கும் அன்றிப்
பிறஅவண் வரினும் திறவதின் நாடித்
தத்தம் இயல்பின் மரபொடு முடியின்

அத்திறம் தானே துறைஎனப் படுமே. 521

216 இறைச்சி தானே பொருள்புறத் ததுவே. 229

217 காமம் சாலா இளமை யோள்வயின்
ஏமம் சாலா இடும்பை எய்தி
நன்மையும் தீமையும் என்றுஇரு திறத்தால்
தன்னொடும் அவளொடும் தருக்கிய புணர்த்துச்
சொல்எதிர் பெறாஅன் சொல்லிஇன் புறுதல்
புல்லித் தோன்றும் கைக்கிளைக் குறிப்பே. 50

219 ஏறிய மடல்திறம் இளமை தீர்திறம்
தேறுதல் ஒழித்த காமத்து மிகுதிறம்
மிக்க காமத்து மிடலொடு தொகைஇச்
செப்பிய நான்கும் பெருந்திணைக் குறிப்பே. 51

## இறையனார் களவியல்

113 அன்பின் ஐந்திணைக் களவெனப் படுவது
அந்தணர் அருமறை மன்றல் எட்டினுள்
கந்தருவ வழக்கம் என்மனார் புலவர். இறை. கள. 1

## இவ்வாசிரியர் தாமே யாத்த நூற்பாக்கள்

உமைஉரு உருமடுத்து உலகு இளைப்பு ஒழிக்கும்
இமையவன் அடிபணிந்து இயம்புவன் பொருளே. பொ.1
போக்கறு மரபின் பொருள்எனப் படுவது
நோக்கறும் வீடு நுவற்சிசெல் லாமையின்
அறம்பொருள் இன்பம் ஆகும் அதுவே
அகனும் புறனுமென்று ஆயிரு பாற்றாய்
வகைபட வந்த அணிநலம் தழீஇச்
செய்யுள் இடவயின் புல்லிய நெறித்தே. 2
அகம்எனப் படுவது வகைஒரு மூன்றனுள்
இன்பம் என்னும் இயல்பிற்று ஆகி
அகத்துநிகழ் ஒழுக்கம் ஆதல் வேண்டும். 3

அதுவே கைக்கிளை ஐந்திணை ஏனைப்
பெருந்திணை எனஎழு பெற்றித்து ஆகும். 4

அவைதாம்,

ஆவணி முதலா இரண்டிரண்டு ஆக
ஆடி இறுதிய ஆயுங் காலே. 12

மாலை யாமம் வைகுறு என்று
காலை நண்பகல் எற்பாடு என்று
அறுவகைத்து என்ப சிறுபொழுது அவைதாம்
படுசுடர் அமையம் தொடங்கி ஐயிரு
கடிகை அளவைய காணுங் காலே. 13

அவை, ஓரிரண்டு ஓரிரண்டு உரைத்தஐந் திணைக்கும்
நேரும் என்மனார் நெறிஉணர்ந் தோரே. 21

ஒருதலைக் காமமும் ஒவ்வாக் காமமும்
விரவியும் வரூஉம் மரபின என்ப. 23
காட்சி வேட்கை உள்ளுதல் மெலிதல்
ஆக்கம் செப்பல் நாணுவரை இறத்தல்
நோக்குவ எல்லாம் அவையே போறல்
மறத்தல் மயக்கம் சாக்காடு என்ற
ஐயிரு அவத்தையும் பெய்கழல் காளையும்
புகுமுகம் புரிதல் முதல ஆகிக்
காட்சிமுதல் மூன்றையும் கருதிநந் நான்காய்
ஆட்சியின் அமைந்தஈ ராறுமெய்ப் பாடும்
முருந்துஇள முறுவலும் பொருந்துதல் உறினே
மெய்யுறு புணர்ச்சி எய்துதற்கு உரித்தே. 33

கூறிய அகப்பொருள் ஆறிரு வகைத்தாய்ப்
பாட்டுறுப் பாய்வரூஉம் பண்பிற்று என்ப
போக்கறு மரபின் புல்லிய நெறித்தே. 187

திணையே ...... அப்பால் ஆகும்அவ் வாறிரு வகையே. 188
முன்னவை இரண்டும் சொன்னவை யாய்அவற்று
ஒன்றுஅவண் வருதல் ஒன்றித் தோன்றும். 189

கிழவோன் தன்னொடும் கிழத்தி தன்னொடும்
நற்றாய் கூறல் முற்றத்தோன்றாது. 192

இவையன்றித் தொல்காப்பிய நூற்பாக்களும் இறையனார் களவியல் நூற்பாவும் நீங்கலான யாவும் நம்பியகப் பொருள் நூற்பாக்களைத் தனித்தும் இணைத்தும் கொண்டனவேயாம்.

# உரை மேற்கோள் நூற்பாக்கள்

10 நடுவண் ஐந்திணை நடுவணது ஒழியப்
படுதிரை வையம் பாத்திய பண்பே. தொல். பொ. 2

53 கொடுப்போர் இன்றியும் கரணம் உண்டே
புணர்ந்துஉடன் போகிய காலை யான. 143

113 முன்னைய மூன்றும் கைக்கிளைக் குறிப்பே
பின்னைய நான்கும் பெருந்திணை பெறுமே. 105

117 சிறந்துழி ஐயம் சிறந்தது என்ப
இழிந்துழி இழிபே சுட்ட லான. 94

135 நாற்றமும் தோற்றமும் ஒழுக்கமும் உண்டியும்
செய்வினை மறைப்பினும் செலவினும் பயில்வினும்
புணர்ச்சி எதிர்ப்பாடு உள்ளுறுத்து வரூஉம்
உணர்ச்சி ஏழினும் உணர்ந்த பின்றை 114

ஆங்குஉணர்ந்து அல்லது கிழவோன் தேஎத்துத்
தான்குறை உறுதல் தோழிக்கு இல்லை. இறை. கள. 8

நாணவும் நடுங்கவும் நாடாள் தோழி
காணுங் காலைத் தலைமகள் தேஎத்து. பழைய நூற்பா.
காமப் புணர்ச்சியும் இடந்தலைப் படலும்
பாங்கொடு தழாஅலும் தோழியின் புணர்வும்என்று
ஆங்கநால் வகையும் அடைந்த காமமொடு
முறையான் மொழிந்தசின் மறையோர் ஆறே.
தொல். பொ. 498

புணர்ந்த பின்றை ஆங்கனம் ஒழுகாது
பணிந்த மொழியால் தோழி தேஎத்து
இரந்துகுறை யுறுதலும் கிழவோன் மேற்றே
இறை. கள. 5

பெட்ட வாயில்பெற்று இரவுவலி உறுப்பினும்
ஊரும் பெயரும் கெடுதியும் பிறவும்
நீரில் குறிப்பின் நிரம்பக் கூறித்
தோழியைக் குறையுறும் பகுதியும் இறை. கள. 102

இரந்துகுறை பெறாஅது தோழியும் செவிலியும்
ஒருங்குதலைப் பெய்த செவ்வி நோக்கிப்
பதியும் பெயரும் பிறவும் வினாஅய்ப்
புதுவோன் போலப் பொருந்துவ கிளந்து
மதியுடம் படுத்தற்கும் உரியன் என்ப. 6

156 கொடுப்போர் இன்றியும் கரணம் உண்டே
புணர்ந்துடன் போகிய காலை யான. தொல். பொ. 143

157 கரணம் பிழைக்கின் மரணம் பிழைக்கும். பழைய நூற்பா

195 இடைச்சுர மருங்கின் கிழவன் கிழத்தியொடு
வழக்கியல் ஆணை கிளத்தற்கும் உரியன். தொல். பொ. 506

208 இன்பத்தை வெறுத்தல் துன்பத்துப் புலம்பல்
எதிர்பெய்து பரிதல் ஏதம் ஆய்தல்
பசிஅட நிற்றல் பசலை பாய்தல்
உண்டியில் குறைதல் உடம்புநனி சுருங்கல்
கண் துயில் மறுத்தல் கனவொடு மயங்கல்
பொய்யாக் கோடல் மெய்யே என்றல்
ஐயம் செய்தல் அவன்தமர் உவத்தல்
அறன்அளித்து உரைத்தல் ஆங்குநெஞ்சு அழிதல்
எம்மெய் ஆயினும் ஒப்புமை கோடல்
ஒப்புவழி உவத்தல் உறுபெயர் கேட்டல்
நலத்தக நாடின் கலக்கமும் அதுவே. 270

முட்டுவயின் கழறல் முனிவுமெய் நிறுத்தல்
அச்சத்தின் அகறல் அவன்புணர்வு மறுத்தல்

தூதுமுனிவு இன்மை துஞ்சிச் சேர்தல்
காதல் கைம்மிகல் கட்டுரை யின்மை
ஆயிரு நான்கே அழிவில் கூட்டம். 271

தெய்வம் அஞ்சல் புரைஅறம் தெளிதல்
இல்லது காய்தல் உள்ளது உவர்த்தல்
புணர்ந்துழி உண்மை பொழுதுமறுப்பு ஆக்கம்
அருள்மிக உடைமை அன்புதொக நிற்றல்
பிரிவுஆற் ருமை மறைந்தவை உரைத்தல்
புறஞ்சொல் மாணுக் கிளவியொடு தொகைஇச்
சிறந்த பத்தும் செப்பிய பொருளே. தொல். பொ 272

நிம்பிரி கொடுமை வியப்பொடு புறமொழி
வன்சொல் பொச்சாப்பு மடிமையொடு குடிமை
இன்புறல் ஏழைமை மறப்போடு ஒப்புமை
என்றுஇவை இன்மை என்மனுர் புலவர். 274

# அகத்திணையியல் அமைப்பு

அறம் பொருள் இன்பம் வீடு என்னும் உறுதிப்பொருள் நான்கனுள், வீடுபேறு சிந்தையும் மொழியும் செல்லா நிலைமைத்து. ஆதலின், நூல்களான் நுவலப்படுவன அறம் பொருள் இன்பம் என்ற மூன்றே. அவை தொகுத்துக் கூறும் தமிழ்மரபிலே அகம் புறம் என்று இருபகுதியாக வழங்கப் பட்டு, அணி நலன்களோடு செய்யுளகத்துக் கூறப்படும். அவற்றுள், அகமாவது அறம் பொருள் இன்பம் என்ற மூன்றனுள் இன்பம் என்னும் வகையதாகி, உள்ளத்தாலேயே நுகர்ந்து இன்புறும் காம இன்பமாகும். அது கைக்கிளை ஐந்திணை பெருந்திணை என எழுவகைப்படும். கைக்கிளை யாவது ஒருதலைக்காமம்; பெருந்திணையாவது பொருந்தாக் காமம்; ஐந்திணையாவது அன்புடைக் காமம் ஆகும். இவ் வெழுவகைத்திணையும் பண்டைய சான்றோர் கூறிய மரபு வழாமல், யாதானும் ஒரோவழி ஒருசாரார்மாட்டு உலகிய லான் நிகழும் ஒழுக்கத்தினை எல்லாருக்கும் பொதுவாக்கி இடனும் காலமும் நியமித்துப் புனைந்துரை வகையானும் உலகியல் வகையானும் கூறப்படும். ஐந்திணைகள் குறிஞ்சி பாலை முல்லை மருதம் நெய்தல் என்பனவாம். ஒவ்வொரு திணைக்கும் முதற்பொருள் கருப்பொருள் உரிப்பொருள் என் பன கொள்ளப்படும். முதற்பொருள், நிலன்எனவும் பொழுது எனவும் இருவகைப்படும். மலையும் மலைசார்ந்த இடமும், பாலையும் பாலைசார்ந்த இடமும், காடும் காடுசார்ந்த இட மும், வயலும் வயல்சார்ந்த இடமும், கடலும் கடல்சார்ந்த இடமும், முறையே இவ்வைந்திணைக்கும் நிலன்களாகும். பொழுது, பெரும்பொழுது எனவும் சிறுபொழுது எனவும் இருவகைப்படும். கார் கூதிர் முன்பனி பின்பனி இளவேனில் முதுவேனில் என்ற ஆறு பெரும்பொழுதுகளும், ஆவணித் திங்கள் தொடங்கி ஆடித்திங்கள் இறுதியாக, இரண்டு இரண்டு திங்களை வரையறையாக உடையன. மாலை யாமம் வைகுறு காலை நண்பகல் எற்பாடு என்ற சிறுபொழுது ஆறும், கதிரவன் மறைதல் தொடங்கி மறுநாள் கதிரவன் மறையுங் காறும் ஒவ்வொன்றும் பப்பத்து நாழிகையான அளவை உடையவாம். குறிஞ்சிக்குப் பெரும்பொழுதுகள் கூதிரும்முன்பனியும், சிறுபொழுது யாமமும் ஆகும். பாலைக் குப் பெரும்பொழுதுகள் இளவேனிலும் முதுவேனிலும், சிறு பொழுது நண்பகலும் ஆகும். முல்லைக்குப் பெரும்பொழுது காரும், சிறுபொழுது மாலையும் ஆகும். மருதத்திற்கு ஆண்டு முழுதும் பெரும்பொழுதும், வைகுறுவும் விடியலும் சிறு பொழுதுகளும் ஆகும். நெய்தலுக்கு ஆண்டு முழுதும் பெரும் பொழுதும், எற்பாடு சிறுபொழுதும் ஆகும்.

ஒவ்வொரு நிலத்திற்கும், தெய்வம்—உயர்மக்கள்-பொதுமக்கள்—பறவைகள்—விலங்குகள்—ஊர்—நீர்நிலை — பூக்கள் — மரங்கள் — உணவுகள் — பறை—யாழ் — பண்—தொழில்கள்—எனக் கருப்பொருள் பதினான்கு வகையாகக் குறிப்பிடப்படும்.

| கருப்பொருள் | குறிஞ்சி | பாலை | முல்லை | மருதம் | நெய்தல் |
|---|---|---|---|---|---|
| அணங்கு | முருகன் | கன்னி | திருமால் | இந்திரன் | வருணன் |
| உயர்ந்தோர் | பொருப்பன், வெற்பன், சிலம்பன், குறத்தி, கொடிச்சி | விடலை, காளை, மீளி, எயிற்றி | குறும்பொறை நாடன், தோன்றல், மனைவி, கிழத்தி. | ஊரன், மகிழ்நன், கிழத்தி, மனைவி | சேர்ப்பன் புலம்பன் பரத்தி நுளைச்சி |
| அல்லோர் | குறவர், கானவர், குறத்தியர் | எயினர், மறவர், எயிற்றியர் மறத்தியர் | இடையர், ஆயர், இடைச்சியர், ஆய்ச்சியர் | உழவர், கடையர், உழத்தியர், கடைச்சியர் | நுளையர் பரதர் அளவர் நுளைச்சியர் பரத்தியர் அளத்தியர் |
| புள் | கிளி, மயில் | புறவு, பருந்து, எருவை, கழுகு | காட்டுக்கோழி | வண்டானம், அன்றில், நாரை, அன்னம், போதா, கம்புள், குருகு, தாரா | கடற்காக்கை |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| விலங்கு | புலி, கரடி, யானை, சிங்கம் | செந்நாய் | மான், முயல் | எருமை, நீர்நாய் | சுறா |
| ஊர் | சிறுகுடி | குறும்பு | பாடி | பேரூர் மூதூர் | பாக்கம் பட்டினம் |
| நீர் | அருவி, சுனை | குழிவறுங்கூவல் | சுனை, கான்யாறு | ஆறு கிணறு இலஞ்சி | உவர்நீர்க்கேணி |
| பூ | வேங்கை, குறிஞ்சி காந்தள் | குரா, மரா | குல்லை, முல்லை, தோன்றி, பிடவம் | தாமரை கழுநீர் குவளை | நெய்தல் கைதை முண்டகம் அடம்பு கண்டல் |
| மரம் | ஆரம், தேக்கு, அகில், அசோகம், நாகம் | உழிஞை, பாலை ஓமை, இருப்பை | கொன்றை, காயா, குருந்தம் | காஞ்சி வஞ்சி மருதம் | புன்னை ஞாழல் |
| உணா | வேரல், ஐவனம், தோரை, ஏனல் | வழிப்பறி, ஊர்க்கொள்ளை | வரகு, சாமை, முதிரை | செந்நெல் வெண்ணெல் | மீன் உப்பு இவை விற்றுப்பெற்றன |
| பறை | தொண்டகம் | பகைத்துடி | ஏறுகோட்பறை | நெல்லரிகிணை முல்லையாழ் | மீன்கோட்பறை நாவாய்ப்பறை |
| யாழ் | குறிஞ்சியாழ் | பாலையாழ் | முல்லையாழ் | மருதயாழ் | விளரியாழ் |
| பண் | குறிஞ்சி | பஞ்சுரம் | சாதாரி | மருதம் | செவ்வழி |

| கருப்பொருள் | குறிஞ்சி | பாலை | முல்லை | மருதம் | நெய்தல் |
|---|---|---|---|---|---|
| தொழில் | வெறிகோள், ஐவனம்வித்தல் புனம் காத்தல், தேன் அழித்தல், கிழங்கு அகழ்தல், அருவி சுனை ஆடல் | வெஞ்சமம் பகற் சூறையாடல் | சாமை வரகு உழவு நிரைமேய்த்தல் குழல் ஊதல் ஏறுதழுவல் குரவை ஆடல் கான்யாறு ஆடல் | விழாக்கோள் உழவு குளனும் யாறும் ஆடல் | மீன் வற்றலாக்கி விற்றல் கடலாடல் |

புணர்தலும் புணர்தல் நிமித்தமும் குறிஞ்சியாம்; பிரிதலும் பிரிதல் நிமித்தமும் பாலையாம்; இருத்தலும் இருத்தல் நிமித்தமும் முல்லையாம்; ஊடலும் ஊடல் நிமித்தமும் மருதமாம்; இரங்கலும் இரங்கல் நிமித்தமும் நெய்தலாம என்று திணைக்கு உரிப்பொருள் கொள்ளப்படும். காலமாகிய முதற் பொருளும் கருப்பொருளும் உரிப்பொருளும் தத்தமக்கு உரிய திணையோடு கூடிவருதலேயன்றி, ஏனைய திணைகளோடு கூடிவரும் திணைமயக்கமும் கொள்ளப்படும். கைக்கிளையும் பெருந்திணையும் ஐந்திணைக்குரிய முதல்கருஉரிப்பொருள்களைப் பெற்று, ஐந்திணைப் பாடலுள் கலந்துவருதலும் உண்டு.

ஐந்திணை இன்பத்திடத்தே களவு என்றும் கற்பு என்றும் இரண்டு ஒழுகலாறுகள் உண்டு. இயற்கைப்புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கற் கூட்டம், பாங்கியிற் கூட்டம் எனக் களவுப் புணர்ச்சி நான்கு வகைப்படும். கந்தருவத்தோடு ஒக்கும் களவுப்புணர்ச்சி நிகழும்முன், தலைவனிடம் தலைவியைக் கண்ட அளவில் ஒருதலைக்காமம் தோன்றும். கைக்கிளையாவது ஈண்டுக் காமஞ் சான்ற இளையவள் அருகில் நின்று அவள் உள்ளக்குறிப்புத் தனக்கு இசைவிற்றுதலை அறியுங்காறும் அவளை அணுகாமல் தலைவன் தன்வழித்தாகிய நெஞ்சினோடு சொல்லுதலாம். இக்கைக்கிளைக்கு உரியார்

பெரும்பாலும் மருதநிலத்து வாழ்வாராகிய அந்தணர் அரசர் வணிகர் வேளாளர் என்ற நாற்குலத்தினர் ஆவர். இவரே யன்றிக் குறிஞ்சி முதலிய ஐவகை நிலத்தில் வாழும் பொருப்பன், விடலை, குறும்பொறை நாடன், ஊரன், சேர்ப்பன் முதலாகிய தலைமக்களும் கைக்கிளைக்குச் சிறுபான்மை உரிய ராவர்.

இயற்கைப் புணர்ச்சி தெய்வத்தாலும் தலைவியாலும் நிகழும். அது தெய்வத்தான் முடியும்வழி, முயற்சியின்றி முடிவதாகும். உள்ளத்தால் புணரும் புணர்ச்சியும், மெய்யுற்றுப் புணரும் புணர்ச்சியும் களவுக்காலத்தில் தலைவனுக்கும் தலைவிக்கும் உரியனவாம். தலைவனுக்குப் பெருமையும் உரனும் தலைவிக்கு அச்சமும் நாணும் மடனும் நிலைபெற்ற குணங்கள் ஆதலின், உள்ளப்புணர்ச்சியே முதற்கண் உரியது ஆகும். காட்சி-வேட்கை-உள்ளுதல்-மெலிதல்-ஆக்கம் செப்பல்-நாணுவரை இறத்தல்-நோக்குவ எல்லாம் அவையே போறல்-மறத்தல்-மயக்கம்-சாக்காடு துணிதல்- என்ற பத்து அவத்தைகளையும் தலைமகனும், காட்சி-வேட்கை-உள்ளுதல் என்ற மூன்று அவத்தைகளுக்கும் உரிய புதுமுகம் புரிதல்-பொறிநுதல் வியர்த்தல் - நகுநயம் மறைத்தல்-சிதைவு பிறர்க்கு இன்மை - கூழை விரித்தல்-காது ஒன்று களைதல்-ஊழ் அணி தைவரல் - உடை பெயர்த்து உடுத்தல்-அல்குல் தைவரல்-அணிந்தவை-திருத்தல்-இல்வலி உறுத்தல்-இருகையும் எடுத்தல்-என்ற பன்னிரண்டு மெய்ப்பாடுகளையும் தலைவியும் பொருந்தின், மெய்யுறு புணர்ச்சி நிகழும். தலைவனும் தலைவியும் புணர்ச்சி நிகழ்த்தும் இடங்கள், பகற்குறி இரவுக்குறி என்ற இருவகையினவாம். அவற்றுள், பகற்குறி வீட்டு எல்லையைக் கடந்தது; இரவுக்குறி வீட்டு எல்லையைக் கடவாததாகும். களவுக்காலத்துப் பிரிவுகள் ஒருவழித்தணத்தல், வரைவு இடைவைத்துப் பொருள்வயின் பிரிதல் என்ற

இருவகையினவாம். அவற்றுள், ஒருவழித்தணத்தல் கால வரையறை உடையது அன்று; வரைவு இடைவைத்துப் பொருள்வயின் பிரிதல்இரண்டு திங்கள் எல்லைக்குஉட்பட்டது.

திருமணம், களவு வெளிப்படாமுன் வரைதல் களவு வெளிப்பட்டபின் வரைதல் என்று இருவகைப்படும். இயற்கைப் புணர்ச்சி முதலிய நான்கனுள் தலைவன் தானே தலைவியை மணத்தல் வேண்டும் என்று மனம் தெளிந்து மணத்தலும், பாங்கனாலாவது பாங்கியாலாவது மனம் தெளி விக்கப்பட்டுத் தலைவியை மணத்தலும் களவு வெளிப்படா முன் வரைதலாகும். உடன்போய் மணத்தலும், உடன்போய் மீண்டு வந்து மணத்தலும், உடன்போக்கு இடையீடுபட் டுப் பின் மணத்தலும் களவு வெளிப்பட்ட பின் மணத்த லாகும். அவற்றுள், உடன்போய் மணத்தல் ஒரே வகைப் படும். தலைவியினுடைய வீட்டில் மணம்செய்துகோடலும், தலைவனுடைய வீட்டில் மணம்செய்துகோடலும் என்று உடன் போய் மீண்டு வரைதல் இருவகைப்படும். தலைவன் இரவுக்குறிக்கண் வரும் வழியை அஞ்சினாலும், தலைவன் தலைவியைமணத்தலைத் தலைவிதமர் மறுத்தாலும், வேற்றவன் ஒருவனுக்குத் தலைவியை அவள்தமர் மணம்செய்துகோட லைக் குறித்தாலும், தலைவிக்குத் தலைவனைக் காணாத வகை யில் காவல் மிகுந்தாலும் முறைப்படி அறத்தொடுநிலை நிக ழும். தலைவி பாங்கிக்கும், பாங்கி செவிலிக்கும், செவிலி நற் றாய்க்கும், நற்றாய் தந்தை தன்னையருக்கும் முறைப்படி அறத்தொடுநிற்பர். பாங்கியிற் கூட்டம் ஆகிய ஒன்று நீங்கிய ஏனை இயற்கைப் புணர்ச்சி முதலிய மூன்று புணர்ச்சிக்கண்ணும் தலைவன் ஒருவழித் தணந்துபோனாலும், தோழியிற் புணர்ச்சி முதலியவற்றின் பின் தலைவன் வரைவு இடைவைத்துப் பொருள்வயின் பிரிந்தாலும், தலைவனைச் செவிலி இரவுக்குறியிடைக் காணும் வாய்ப்பு ஏற்பட்டாலும் அவை காரணமாகவும் தன்னை இற்செறித்தாலும் தலைவிக்கு

வருத்தம் மிகும். அப்பொழுது அவள், தோழி செவிலி முதலியோர் தன்னை வினவினாலும் வினவாவிட்டாலும் அறத்தொடு நிற்கும் நிலை ஏற்படும். தன்னிடம் தலைவி அறத்தொடு நின்ற செய்தியைத் தோழி பொதுவாகச் செவிலி கேட்ப உலகியல் கூறும் முகத்தானும், நேரிடையாகச் செவிலி கேட்பப் பட்டாங்கு நிகழ்ந்தது கூறியானும், தம் குலத்திற்கும் ஒழுக்கத்திற்கும் பெண்தன்மைக்கும் தாய் காவலுக்கும் தம் நாணத்திற்கும் உலகியலுக்கும் மாறுபடாத வகையில் அறத்தொடுநிற்கும். செவிலி, நற்றாய்க்கு நிகழ்ந்தபடியை வெளிப்படையாகக் கூறுவாள். நற்றாய் தந்தை தன்னையருக்குக் குறிப்பினால் அறத்தொடுநிற்பாள். தலைவியை உற்றுநோக்கி, நாற்றமும் தோற்றமும் ஒழுக்கமும் உண்டியும் செய்வினைமறைப்பும் செலவும் பயில்வும் ஆகிய அவ்வகை தம்மால் ஐயமுற்றுத் தோழி வினவுவாள். செவிலி பாங்கியை வினவுவாள். தன்மகளை உற்றுநோக்கி வேறுபாடு கண்டவழித் தோழியை நற்றாயும் வினவுவாள். தலைவி தலைவனோடு உடன்போயவிடத்துப் பாங்கியும் செவிலியும் நற்றாயும் ஒருசேர அறத்தொடுநிற்பர்.

களவின்வழி வந்த கற்பும் களவின்வழி வாராக் கற்பும் எனக் கற்பு இருவகைப்படும். கற்புக்காலப் புணர்ச்சியானது குரவரால் செய்விக்கப்படும் மன்றல் புணர்ச்சி எனவும், வாயில்களால் ஊடல்தீர்த்துப் புணர்விக்கப்படும் புணர்ச்சி எனவும் இருவகைப்படும். அவற்றுள், களவுப்புணர்ச்சியில் தலைவன் தலைவியை அழைத்துக்கொண்டு உடன்போய் வேற்றூரில் தமர்மனையில் வரைதலும் உண்டு; ஆதலின், இருமுதுகுரவர் கொடுப்பக் கொள்ளாநிலையும் அதன்கண் நிகழும். இருவகைக்கற்புக்காலத்தும், தலைவனுக்குக் களவுப் புணர்ச்சியும் வதுவைப்புணர்ச்சியும் நிகழ்தலும் உண்டு. அவ்விருவகைப் புணர்ச்சிக்கும் காதற்பரத்தையரும், காமக்

கிழத்தியரும், பின்முறை ஆக்கிய பெரும்பெயர் வதுவைத் தலைவியும் உரிமையுடையர். காதற்பரத்தையர் களவுப் புணர்ச்சிக்கே உரியர். ஏனையார் இருவரும் திருமணம் செய்துகோடற்கு உரிமை உடையர். பரத்தையிற்பிரிவு, ஓதற்குப்பிரிவு, காவற்குப்பிரிவு, தூதிற்குப்பிரிவு, மன்ன னுக்கு உதவிசெய்யப் பகைவயின் பிரிவு, பொருள்வயின் பிரிவு என்ற அறுவகைப்பிரிவுகளும் கற்புக்காலத்து நிகழும். தலைவன் பரத்தையிற் பிரிவில் அடுத்தவீட்டிற்கும், அடுத்த சேரிக்கும், ஊருக்கு வெளிப்புறத்துக்கும் பிரிந்துபோதற்கு உரியன்; தன் காமக்கிழத்தியர் பொருட்டாக அடுத்த மனைக்குப் பிரிந்து செல்வான்; தான் பின்மணந்த பெதும் பைப்பருவத்தாள் பொருட்டாகவும், பரத்தைபொருட்டாக வும், விழாக்கள்பொருட்டாகவும் அவன் அயற்சேரிக்குச் செல்வான்; புதியளாகப் பெற்ற பரத்தையைத் தன்தேரின்மீது ஏற்றிக்கொண்டு இளமரசசோலையில் விளையாடுவதற்கும் யாறு குளங்களில் நீர்விளையாட்டு நிகழ்த்துவதற்கும் அவன் ஊருக்கு வெளியே புறப்பட்டுப் போவான். இச்செய்தி களால் தலைவிக்கு ஊடல் நிகழும். அவ்வூடலைப் போக்கு வதற்குப் பாணன், பாடினி, கூத்தர், இளையர், கண்டோர், பார்ப்பனப்பாங்கன், வேளாளப்பாங்கன், பாகன், தோழி, செவிலி, அறிவர், காமக்கிழத்தியர், காதல்புதல்வன், விருந் தினர் என்பார் வாயிலாக அமைவர். இவர்கள் இல்லாத இடத்து ஆற்றாமையும் வாயிலாக அமையும்.

வேதம் ஓதுதல் அரசர் அந்தணர் வணிகர் என்ற மூன்று வருணத்தார்க்கும் உரித்து. ஏனைய நூல்களைப் பயிலும் கல்வி நான்கு வருணத்தாருக்கும் உரித்து. படைக்கலம் பயிலுதல், யானை ஏற்றம், குதிரை ஏற்றம், தேர் செலுத் துதல் முதலிய தொழிற்கல்விகள் அந்தணர் அரசர் வணிகர் என்ற மூவருக்கும் உரிய.

காவல், அறப்புறம்காவல் நாடுகாவல் என இருவகைப் படும். அவற்றுள், அறப்புறம்காவல் நான்கு வருணத்தா

ருக்கும் உரித்து. நாடு காத்தல்தொழில் சிறப்பாக அரசருக்கே உரியது. அரசனால் சிறப்புப்பெயர் பெற்றால் நாடுகாத்தல் தொழிலை வணிகரும் வேளாளரும் செய்தற்கும் உரியராவர்.

அந்தணருக்கும் அரசருக்கும் தூதுபோதல்தொழில் உரியதாகும். அரசனால் சிறப்புப்பெயர் பெறின், வணிகருக்கும் வேளாளருக்கும் கூட அவ்வுரிமை வழங்கப்பெறும்.

அரசருக்குப் பகை வந்தவிடத்துப் பிரிதல், அந்தணர் அல்லாத மூன்று வருணத்தாருக்கும் உரித்து.

பரத்தையிற்பிரிவும் பொருள்வயிற்பிரிவும் நான்கு வருணத்தாருக்கும் உரிய. வேதம்ஓதல், நாடுகாவல், தூது போதல் இம்மூன்றும் நீங்கலான ஏனைய பிரிவுகள் குறிஞ்சி முதலிய ஐவகை நிலத்துத் தலைமக்களுக்கும் உரிய.

கல்வி முதலிய ஐவகைப் பிரிவுகளிலும் பிரிந்து செல்லும் தலைவன், தலைவியிடமும் தோழியிடமும் சொல்லிச் செல்லுத லும் உண்டு; பிரிவு குறித்துத் தலைவி ஆற்றாளாவள் என்று, அவளிடம் சொல்லாது பிரியினும் பாங்கியிடம் கூறியே பிரிவான். பின், பாங்கி, தலைவிக்கு அவன் பிரிவைக் குறிப் பால் உணர்த்துவாள். பிரிவின்போது காலால் நடந்துசேறல் கப்பலில் சேறல், ஏனைய ஊர்திகளில் சேறல் என்ற மூத்திற மும் நிகழும். அறிவான் மிக்க அந்தணருக்கு, நாடோறும் நிகழ்த்தும் இறைவழிபாட்டுச் சடங்குகளுககு முட்டுப்பாடு நிகழும் ஆதலின், கப்பலில்செல்லுதல் நீக்கப்பட்டது ஏனைய வருணத்தார்களுக்கும் குலமகளிரை அழைத்துக்கொண்டு கப்பலில் பயணம் செய்தலும், பாசறைக்கண் தங்கியிருத்த லும் தக்கன அல்ல என்று கடியப்பட்டன. ஓதற்பிரிவு முதலிய ஐந்தன்கண்ணும் பிரிவினுக்குத் திட்டம்இட்ட தலைவன் மனம் இரங்குதலையும் உடையனுவான். தலைவியையும் தன் மனத்தையும் அமைதிஉறச் செய்வதற்கு வீட்டின்கண் இரங் குதலும், தன் மனத்தை அமைதியுறச் செய்வதற்கு

இடைச்சுரத்தின்கண் இரங்குதலும் தலைவற்கு நிகழும். தலைவியின் மனம் சுழலுதலையும் தன்மனம் சுழலுதலையும் நீக்குவதற்காகத் தலைவன் அழுங்குவானேயன்றித் தான் மேற்கொண்ட செயற்கண் செல்லுதலை அடியோடு நீக்க மாட்டான். ஓதற்குப் பிரியும் பிரிவு மூன்று ஆண்டுக்கால வரையறை உடையது. தூது, துணை, பொருள் என்ற இவை காரணமாகப் பிரியும் பிரிவு ஓர் ஆண்டு என்னும் காலவரையறை உடையது. தலைவி பூப்பெய்தி முந்நாள் கழித்து, நீராடியபின், அடுத்த பன்னிரண்டு நாள்களும் அவள் வயிற்றில் கருத்தரிக்கும் காலம் ஆதலின், பரத்தையரைக் குறித்துப் பிரியும் தலைமகன் அப்பன்னிருநாள்களும் தலைவியைப் பிரியான். ஓதற்குப் பிரிந்த தலைவன் இடையே ஓதலைவிடுத்து ஊருக்குத் திரும்பி வருதலையும், ஓதற்கு அகன்ற இடத்தில் தனிமை குறித்து வருந்துதலையும் மேற்கொள்ளான். தூது காரணமாகவும், பகைவயின் நண்பனுக்கு உதவுதல் காரணமாகவும் பிரிந்த தலைமகன் தான் மேற்கொண்ட செயல், தான் மீண்டு வருதற்குக் குறித்த காலவரையறையைக் கடந்து நீட்டிப்பின், மனம் வெறுத்துப் பாசறைக்கண் தன் தனிமைத்துயர் பற்றி வருந்துதலும் உரியன்.

கற்புக்காலத்தில் தலைவி தான் பூப்பு எய்திய செயலைச் செவ்வணி அணிவித்துத் தன்தோழியை அனுப்பிப் பரத்தையர் இல்லில் இருக்கும் தலைவனுக்குத் தெரிவிப்பாள். உடனே தலைவன் தன் காமக்கிழத்தியை விடுத்துத் தலைவி இல்லத்திற்குப் புறப்படவே, அவனைப் பற்றி இழிவாகப்பேசும் காமக்கிழத்தியைத் தலைவி ஏசுவாள்; பரத்தைமை கொண்ட தலைவனையும் கடிந்து உரைப்பாள்; தலைவன் பின்னும் ஒருத்தியை மணந்துகொள்வான் ஆயின், அப்பின்முறைக் கிழத்தியைக் கணவனோடு மகிழ்ந்து எதிர்கொள்வாள்; அவளையும் தோழியரையும் தன்பக்கல் கொண்டு பரத்தையைப் பழித்துக் கூறுவாள்; வீட்டினை விடுத்துக் கணவனோடு ஊருக்கு வெளியே போய்ச் சோலைகளிலும், தோட்டங்களிலும், வரிசையான

அழகிய வயல்களிலும், மலைகளிலும், கானகங்களிலும், அருவிக்கரைகளிலும் விளையாடி மகிழ்வாள்; ஆறும் ஓடையும் குளனும் ஆகியவற்றில் கணவனோடு நீராடி மகிழ்வாள். இங்ஙனம் பொதுவான செய்திகள் கூறப்பட்டபின்னர், வாயில்கள் ஆகும் பாணன் முதலியோர் தொழில்கள் முறையே கூறப்பெறுகின்றன. பின்னர் அவருள் சிலருடைய இயல்புகள் விளக்கப்பெறுகின்றன.

பாணன் தொழில்களாவன — தலைவன் பரத்தையிற் பிரிந்து வந்தகாலைத் தலைவியை வாயில்வேண்டலும், வாயில் உடன்படச் செய்தலும், அவள் ஊடலைப் போக்குதலும், பிரிவிடைத் தலைவியது அழகு அழிவு கண்டு இரங்கலும், தலைவன் பிரிந்துபோன இடத்திற்குச் சென்று அவனிடம் தலைவிநிலைமையைக் கூறுதலும், தலைவன் மீண்டுவரும் நன்னாளைத் தலைவிக்கு உணர்த்துதலும், பின்னர்த் தலைவன் வந்தபின் தலைவியின் நலன் குறித்து வினவுதலும் போல்வனவாம்.

விறலியின் தொழில்களாவன — தலைவன் பிரிந்த இடத்துத் தலைவியைத் தேற்றலும், தலைவியின் புலவியை நீக்கலும், அவளை வாயில்வேண்டலும், வாயில் உடன்படச் செய்தலும் போல்வனவாம்.

கூத்தரின் தொழில்களாவன — தலைவனுடைய செல்வத்தை வாழ்த்துதலும், இல்லறம் இனிது நடத்தற்குரிய வாய்ப்பினைக் கூறலும், அணிகலன்களை அணியும் முறைமைகளை உணர்த்தலும், இன்பம் துய்க்கும் வாய்ப்புக்களை விளக்கலும், தலைவியின் புலவியைக் காரணம் காட்டி நீக்கலும், தலைவன் செல்லக் கருதிய தேயத்தின் சேய்மையைக் கூறலும், தலைவன் போர்மேற் சென்றகாலை அவனைப் பாசறையில் சென்று காண்டலும், அவன் மீண்டுவரும் காலம் உணர்த்துதலும் போல்வன.

இளையோரின் தொழில்களாவன — தலைவியை வாயில் வேண்டலும், வாயில் நேர்வித்தலும், அவள் ஊடல்தீர்த்தலும், தலைவனைப் பிரியாதுஇருந்து பாதுகாத்தலும், அவன் இட்ட குற்றேவல்களைச் செய்தலும், பிரிந்த தலைவன் மீண்டு வருங்கால் அவனுக்கு முன்வந்து தலைவிக்கு அவன் வருகையைக் கூறலும், அவனுடைய அருஞ்செயல்களைக் கூறலும், வினையின் முடிவுபற்றிக் கூறலும், தலைவன் மீண்டுவரும் வழியின் இயல்பைக் கூறலும், வழியிடையே தாம் கண்டனவற்றைக் கூறலும் போல்வன.

கண்டோர் தொழில்களாவன — தலைவன் தலைவியரிடையே ஏற்படும் புலவியை நீக்குதலும், தலைவன் பிரிந்தகாலை அவன் மீண்டு வருஞ் செயலைத் தலைவிக்கு உணர்த்துதலும் போல்வன.

பார்ப்பனப்பாங்கன் தொழில்களாவன — தலைவனிடம் 'இளமையும் யாக்கையும் செல்வமும் ஏனைய உலகியல் பொருளும் நிலையா ஆதலின், இந்நிலையாதனகொண்டு நிலைத்த புகழுக்குரிய செயல்களைச் செய்துகொள்ளுதல் வேண்டும்' என்பன போல்வனவற்றை எடுத்துஉரைத்தலும், தலைவன் பிரியக் கருதும்வழிப் பிரிவை விலக்கலும், பின் தேவைப்பட்டதாயின் அவன்பிரிவிற்குத் தலைவியை உடன்படச்செய்தலும் போல்வன.

வேளாளப்பாங்கன் தொழில்களாவன — தலைவனை நன்னெறிக்கண் நிறுத்தலும், தீநெறிக்கண் செல்லாமை விலக்கலும், பார்ப்பனப்பாங்கனுக்குக் கூறிய ஏனைய செயல்களும் போல்வன.

பாகன் தொழில்களாவன— தலைவன் பரத்தையிற் பிரிந்து மீண்டவழித் தலைவியை வாயில்வேண்டலும், அவளைத் தலைவன் வருகைக்கு உடன்படச் செய்தலும், அவள் கோபத்தைத் தணித்தலும், வினை முடிந்தபின்னர் மீண்டு செல்ல வேண்டிய தன்ஊரின் சேய்மை கண்டு வருந்திய தலைவனைத் தேரின் விரைவு கூறித் தெளிவித்தலும் போல்வன.

தோழியின் தொழில்களாவன — தலைவன் பிரியக் கருதிய வழி அவள் பிரிவினைத் தடுத்தலும், தலைவன் பிரிந்தவழித் தலைவியை அவன் பிரிவை உட்கொள்ளச் செய்தலும், பிரிதல் துன்புறும் தலைவியைத் தேற்றலும், தலைவன் பிரிந்தவழித் தலைவி நிலைகண்டு இரங்கலும் போல்வன.

செவிலிக்கும் அறிவர்க்கும் உரிய தொழில்களாவன — இல்லறம் நிகழ்த்தும் நெறிமுறைமை கூறலும், தலைவியைக் கூடுதற்குரிய நாள்நிமித்தம் கூறலும், அதனால் பின்னர் இல்வாழ்க்கை சிறக்கும் பெற்றியைக் கூறலும், வாயில் வேண்டல் முதலியனவும் போல்வன.

காமக்கிழத்தியர் தொழில்களாவன — நற்குடிமகளிரைக் குறைகூறலும், தலைவியைப் பழித்தலும், தலைவியது ஊடல் கேட்டு அவளை இடித்து உரைத்தலும், தலைவிக்கு அமைந்த நற்குண நற்செய்கைகளும் போல்வன.

பரத்தையர் தொழில்களாவன — தலைவனையும் தலைவியையும் இகழ்தலும், தம்மைப்புகழ்தலும், கிடைத்த செல்வத்தை வீணே செலவிடாது பாதுகாத்தலும் போல்வன. பரத்தையர் தமக்குள்ளேயே காதற்பரத்தையைப் புகழ்ந்து, தம்மை இகழ்ந்து கூறிக்கொள்ளுதலும் உண்டு.

இளையராவார், இரவும் பகலும் தலைவனைப் பிரியாது அவனுக்கு இடப்பட்ட கவசம்போல இருந்து அவனைப் பாதுகாத்தற்கு உரியார் ஆவர்.

இருவகைப்பாங்கரும் ஒப்பற்ற தலைவனுக்கு உயிர்த் துணைவராய், அவன் தாயும் தந்தையும் அவனைத் தம்மிடம் அடைக்கலமாக வழங்கத் தாம் பெற்றுக்கொண்ட தன்மையர் ஆவர்.

தோழியாவாள், செவிலியின் புதல்வியாதலோடு, தலைவிக்கு அருகில்இருந்து உரையாடும் நட்பினளாய், அவள் துயரைப் போக்குதலே தனக்குக் கடப்பாடாக அமைந்த அன்பு பொருந்திய துணைவியாவாள்.

செவிலியாவாள், நற்றாயின் தோழியாய், தலைவியின் துயரங்களை நீக்கி அவளுக்கு அறிவும் வாழும்முறையும் உணர்த்தி, அவளை நன்னெறிக்கண் வளர்க்கும் தாயாவாள்.

அறிவராவார் தலைவன் தலைவி என்ற இருவருக்கும் உறுதிப்பொருள் கூறும் ஒப்பற்ற தலைவராவார்.

காமக்கிழத்தியர் ஆவார், தனித்தனி ஒருவனுக்கே உரிமை பூண்டு வாழ்ந்துவந்த பரத்தையரின் மகளிராய், தலைவனால் அன்போடு வரைந்துகோடற்கு உரியராவார்.

காதல்பரத்தையர் ஆவார், பொருளையன்றித் தருவார் யாரையும் விரும்பாத இயல்பினர் ஆகிய சேரிப்பரத்தையரின் மகளிராய்த் தலைவனால் அன்போடு கூடப்பட்டவராவார். அவருள்ளும் சிலர், தலைவனால் மணந்துகொள்ளப்படும் உரிமையைப் பெறுதலும் உண்டு.

தலைவனும் தலைவியும், திருமணத்தின் பின்னர், மனைமாட்சியின் நன்கலனாகிய நன்மக்களோடு மகிழ்ந்து இல்லறத்தை நல்லறமாகச் செய்து, தமக்கு மிக்கிருந்த காமவேட்கை நீங்கிய அளவில், இருவருமாகத் தம்ஊரை விடுத்துக் காட்டின்கண் சென்று எல்லையில்லாச் சுற்றத்தாரோடும் துறவறத்தைக் காத்து வீடுபேறு எய்துவர். ஆகவே, மக்கட்பிறப்பின் முடிந்தபயன் வீடுபேறு எய்துதலாம்.

இவ்வாறு அகத்திணைக்குப்பொதுவான செய்திகளை முதல் 112 நூற்பாக்களில் உரைத்த ஆசிரியர், கைகோள் இரண்டனுள் முதலாவதாகிய களவுபற்றி அடுத்து விரிவாகக் குறிப்பிடத் தொடங்குகிறார்.

அன்பினான் ஆகிய ஐந்திணைக்கண் களவு என்று சிறப்பித்துச் சொல்லப்படுவது, அந்தணருடைய அரிய வேத நூலினிடத்துக் கூறப்பட்ட பிரமம்—பிரசாபத்தியம் — ஆரிடம்—தெய்வம்—காந்தருவம் —அசுரம்—இராக்கதம்—பைசாசம்—என்ற மகட்கோடலாறு எட்டனுள், கந்தருவ வழக்கத்தோடு ஒத்த இயல்பிற்று என்று கூறுவர் புலவர்.

கைக்கிளையாவது தலைமகளைக்காண்டல், அவள் மானுட மகளோ வேற்றுஉலகமகளோ என்று ஐயுறுதல், பின் காரணங்களால் அவள் மானுடமகளே என்று துணிதல், அவள் தன்னைப்பற்றிக் கொண்டுள்ள உள்ளக் குறிப்பினை அறிதல் என மாட்சிமைப்பட்ட நான்குவகையினை உடைத்து.

அவற்றுள் காட்சியாவது, பலபிறப்புக்களிலும் கணவன் மனைவியராய் வருவார் இருவரையும் ஒன்றுபடுத்தலும் வேறுக்கலும் ஆகிய இருவகை ஊழினுள்ளே ஒன்றுக்கும் ஊழின் ஆணையால், பிறப்பு முதலிய பத்தானும் தலைமகளை ஒத்த தலைவனும் தலைவியும் ஒருவரை ஒருவர் காணுதலே யாகும். தலைவன் பிறப்பு முதலியவற்றான் மேம்பட்டவனாய் இருப்பினும் நன்று; தலைமகள் அவற்றான் மிக்காளாய் இருத்தல் கூடாது.

நற்குடியில் பிறத்தல், அக்குலத்திற்கு ஏற்ற ஒழுக்கம், ஆளும்தன்மை, ஆணுக்கும் பெண்ணுக்கும் வரையறுத்த ஆண்டுகள், வடிவம், புணர்ச்சிக்கு வாயிலாகிய அன்பு, நிறை, அருள், உணர்வு, திரு என்பன அப்பத்துவகை ஒப்புமைகளாம். ஐயமாவது தலைவியின் வடிவத்தையும் அவளை எதிர்ப்பட்ட இடத்தையும் நோக்கத் தலைவனுக்கு ஏற்படுவதாம்; தலைவிக்கு ஐயம் நிகழ்தல் கூடாது. துணிவாவது தலைவிக்குக் கோலம் செய்யப்பட்ட தொய்யில், அவள அணிந்த அணிகலன்கள், அவள் அணிதலால் வாடிய பூக்கள், அவற்றில் படிந்த வண்டுகள், நிலம்தோயும் அவள் அடிகள், பிறழும் கண்கள், அவளுக்கு நிகழ்ந்த அச்சம், நிழலீடு; வியர்த்தல் முதலியவற்றால் ‘இவள் தேவமகள் அல்லள், மானுட மகளே’ என்று துணிவதாம். குறிப்பறிதலாவது தலைவியின் பார்வையினால் அவள் உள்ளத்து நிகழும் வேட்கையைத் தலைவன் குறிப்பான் அறிதலாம்.

களவு என்னும் ஒழுகலாற்றிற்கு உரிய உள்தலைப் புக்கள்-இயற்கைப்புணர்ச்சி, வேற்புறுத்தல், தலைவி தெளிதல், பிரிவுழி மகிழ்ச்சி, பிரிவுழிக்கலங்கல், இடந்தலைப்பாடு, பாங்கற்கூட்டம், பாங்கிமதிஉடன்பாடு, பாங்கியின்கூட்டம், பகற்குறி, பகற்குறி இடையீடு, இரவுக்குறி, இரவுக்குறி இடையீடு, வரைதல் வேட்கை, வரைவுகடாதல், ஒருவழித் தணத்தல், வரைவு இடைவைத்துப் பொருள்வயின் பிரிதல் என்ற பதினேழாம்.

## இயற்கைப் புணர்ச்சி

புலவரால் கூறப்பட்ட இயல்பினானும் கந்தருவ வழக்கத்தோடுஒத்த இயல்பினானும் புணரும் புணர்ச்சி என்பது.

இது தெய்வத்தான் ஆவது, தலைவியான் ஆவது என இருவகைப்படும். அவற்றுள், தெய்வப் புணர்ச்சியின் விரியாவன—தலைவியைக் கூடியவழி மகிழ்தலும், அவள் வனப்பினைப் புகழ்தலும், அவளுக்கு ஆடை அணிகலன்களைத் திருத்தி முறைப்பட அணிவித்தலும் என்பனவாம். இதன்கண், தலைவியின் சொல்லைத் தலைவன் கேட்க விரும்புதலும், தன் விருப்பம்கூறி அச்சொல் கேளாத அயர்வு நீங்குதலும் அடங்கும். இது தெய்வத்தான் நிகழ்ந்த இயற்கைப்புணர்ச்சியின் திறமாம்.

இனி, தலைவியான் எய்தும் இயற்கைப் புணர்ச்சியின் வகைகளாவன—தலைவன் தன் வேட்கை உரைத்தலும், முதற்கண் தலைவி மறுத்தலும், பின் உடன்படுதலும், அடுத்துக் கூட்டம் நிகழ்தலும் ஆம்.

தலைவியான் எய்தும் இயற்கைப் புணர்ச்சியின் விரிகளாவன—தலைவன் தலைவியை இரந்துபின்நிற்றற்கு எண்ணுதலும், எண்ணியவாறே அவளை இரந்துபின்நிற்றலும், தலைவியைத் தனக்கு முற்படுத்தித் தலைவன் கூறுதலும், வண்டு ஓச்சி மருங்குஅணைந்து தலைவியின் மெய்யைத்

தீண்டுதலும், தலைவியின் அழகைப் புனைந்து கூறுதலும், உரிய இடத்தைப் பெற்றுத் தலைவன் விரும்பிக் கூறுதலும், தலைவன் செய்யும் வழிபாட்டைத் தலைவி நாணினால் மறுத்தலும், தலைவியின் செயலால் தனக்கு ஏற்படும் இடையூறுகளைத் தலைவன் கூறுதலும், அவள் செயலால் காலம் நீட்டித் தலைக் கருதித் தலைவன் வருந்துதலும், தன் நாணத்தை மறுத்துத் தலைவி தலைவனை எதிர்கொள்ளுதலும், அதற்கு அறிகுறியாகத் தலைவி புன்முறுவல் பூத்தலும், தலைவியின் புன்னகையால் பெற்ற உடன்பாட்டுக் குறிப்பினைத் தலைவன் அறிதலும், தலைவியைத் தழுவுதலும், புணர்ச்சியின் மகிழ்தலும், புகழ்தலும், தலைவியை ஏற்புற அணிதலும் போல்வனவாம்,

## வன்புறை

தலைவன் தலைவியிடம் உறுதி கூறுதல் என்பது.

வற்புறுத்தலின் வகைகளாவன—தலைவியின் ஐயத்தைத் தீர்த்தலும், தலைவன் தன் பிரிவை அறிவுறுத்தலும் ஆப.

வற்புறுத்தலின் விரிகள் ஆவன—தலைவன் தலைவிக்கு ஆடை அணிகலன்களைத் திருத்தி அணிவித்தபொழுது அவள் நாணியது கண்டு தலைவன் முன்புபோலவே தான அணிவித்ததனைக் கூறி அவளை நாணம் தெளியச்செய்தலும், தனது மிக்க காதலைப் புகழ்ச்சிவகையான் தலைவன் உரைத்தலும், தம்மைச் சேர்த்துவைத்த ஊழ்வினையின் தன்மையைக் கூறலும், தலைவியைப் பிரிதலை ஒருகாலத்தும் தான் நினையாதவாற்றைத் தலைவன் கூறுதலும், இருவர் நலனும் கருதித் தான் பிரிந்து வரவேண்டிய செய்தியைத் தலைவன் கூறுதலும், தலைவியைப் பிரியாமைக்குச் சூளுறவு செய்தலும், தம்முடைய ஊர்கள் ஒன்றற்கு ஒன்று அணிமையிலேயே உள்ளன என்பதைத் தலைவன் கூறுதலும் ஆம்.

## தெளிவு

தலைவிக்குத் தெளிவாவது, தலைமகன் கூறிய சொற்களைத் தலைவி சிறிதும் மனம் திரியாது தெளிவாக ஏற்றுக் கோடலேயாம்.

## பிரிவுழி மகிழ்ச்சி

தலைவி பிரிந்தவழித் தலைவன் மகிழ்தல் என்பது.

பிரிவுழி மகிழ்ச்சியின் விரிகளாவன—தலைவி பிரிந்து ஆயத்திடைச் செல்லுங்கால் அவள் தோற்றங் கண்டு தலைவன் தானே மகிழ்ந்து கூறுதலும், தான் தன் தேர்ப் பாகனைத் தலைப்பட்டபின் அவனிடம் கூறலும் ஆம்.

## பிரிவுழிக் கலங்கல்

தலைவி பிரிந்தவழித் தலைவன் கலங்குதல் என்பது.

பிரிவுழிக் கலங்கலின் வகைகளாவன—மனம் கலங்கி உரைத்தலும், மனம் தெளிந்து உரைத்தலுமாம்.

பிரிவுழிக் கலங்கலின் விரிகளாவன—தன்னைப் பிரிந்து ஆயத்திடைச் சென்ற தலைவியைப் பற்பன்னூறாயிரவர் ஆகிய கண்ணும் மனனும் கவரும் ஒண்ணுதல் மகளிராகிய ஆயத்தவர் வழிபடுதலைக் கண்டு அவளைத் தான் கூடியது கனவோ எனத் தன் நெஞ்சொடு கூறுதலும், தலைவன் கருதுதலும், ஆயத்தாருள்ளும் தலைவியின் உயிர்த்தோழியாவாள் யாவள் என்பதைக் கண்டு தலைவியை அடைதற்குரிய தூது அவளே என்று ஆற்றுமை நீங்குதலும், தலைவியின் அழகை மிகவும் புகழ்தலும், தலைவியின் தாய்தந்தையர்களை வாழ்த்தலும், தலைவியைப் பிரிந்தமையால் தலைவன் துயில் பெறாது இரவில் வருந்திக் கூறுதலும் ஆம்.

## இடந்தலைப்பாடு

தலைவன் இயற்கைப் புணர்ச்சி நிகழ்ந்த இடத்தை அடைதல் என்பது

இடந்தலைப்பாட்டின் வகைகளாவன—ஊழ்வினை தனக்குத் தலைவியைத் தொடர்ந்து கூட்டுவிக்கும் என்று மனம் தெளிதலும், தலைவியைக் கூடுதலும், பின்னர் அவளை ஆய வெள்ளத்திடை விடுத்தலும் ஆம்.

இடந்தலைப்பாட்டின் விரிகளாவன—முன்பு தலைவியைக் கூட்டிய விதி மீண்டும் அவளைக் கூட்டும் என்ற எண்ணத்தால் மறுநாளும் இயற்கைப் புணர்ச்சி நிகழ்ந்த இடத்தினைத் தலைவன் சென்று அடைதலும், விதிதவறுது கூட்டுமோ என்று தன்நெஞ்சொடு கூறலும், தலைமகள் புனங்காவலுக்கு வரும் வாய்ப்பினைத் தந்த கிளிகளை வாழ்த்தலும், தலைவியை எதிர்ப்பட்ட இடத்தைக் காண்டலும், அதனை அவளாகவே புனைந்து கூறலும், அவ்விடத்து வந்த தலைமகள் 'தலைவன் வருவான் கொல்? வாரான்கொல்?' என்ற நினைப்பினுல் மனம் மெலிந்து நிற்றலும், தலைவன் தலைவியைக் காணுதலும், தலைவி தனியளாய் வந்து நிற்பது கண்டு தலைவன் தன்மனச் சோர்வு நீங்கி உரைத்தலும், அவளைஅணுகி அவளைத் தான் நீங்கியவழித் தனக்குப் பிறந்த வருத்தமும் வேட்கையும் அவள் அறியுமாறு கூறுதலும், தலைமகள் நாணத்தால் பேசாதது கண்டு அவள் உடன்பாடு அறிதல் இயலாமையின் தலைவன் கூடுதற்கு அரிது என்று வாடி உரைத்தலும், தலைவியைத் தலைவன் தழுவுதலும், புகழ்தலும், அவளைத் தோழிமார் கூட்டத்திற்கு அனுப்பிவைத்தலும், தலைவன் தலைவியைக் கூடின இடத்திலேயே நின்றுகொண்டு அவளை நீங்கி வாழ்தல் இனி அரிதுஎன்று நினைத்தலும் ஆம்.

### பாங்கற் கூட்டம்

பாங்கற்கூட்டம் என்பது பாங்கனைத் தலைவன் அடைதல் என்றும், பாங்கனுடைய உதவியால் தலைவன் தலைவியை அடைதல் என்றும் பொருள்பெறும்.

பாங்கற்கூட்டத்தின் வகைகளாவன—தலைவன் பாங்கனைச் சார்தல், தலைவனைப் பாங்கன் வினவுதல், தலைவன்

விடையிறுத்தல், பாங்கன் முதலில் தலைவன் வேண்டு கோளுக்கு உடன்படாமை, பின்னர் உடன்படுதல், பாங்கனால் செய்தி அறிந்தபின் தலைவன் சென்று தலைவியைக் கூடல், அவளை ஆயவெள்ளத்தோடு கூட்டல் என்பனவாம்.

பாங்கற்கூட்டத்தின் விரிகளாவன—தலைவன் பாங் கனைச் சென்று அடைதலும், தலைவனுடைய முகவேறு பாட்டினைக் கண்டு பாங்கன் அவனை நிகழ்ந்தமை வினாதலும், பாங்கனிடம் தலைவன் நிகழ்ந்த நிகழ்ச்சியைக் கூறலும், பாங்கனிடம் 'இதனை நின்காரியமாகக் கருதி முடித்தல் வேண்டும்' என்று தலைவன் வேண்டுதலும், தலைவன் கருத் திற்கு இசையாத கற்றறி பாங்கன் அவனை இடித்து உரைத் தலும், தலைவன் அவ்வன் இடித்துக் கூறியதை மனம் கொள் ளாது அவனிடம் மறுத்துக் கூறலும், பாங்கனைத் 'தலைவி இருக்கும் இடம் செல்லவேண்டும்' என்றலும், பாங்கன் தலைவனைப் பழித்தலும், தலைவன் தான் தன் விருப்பத்தை அடக்கிக்கொள்ள இயலாத நிலையினன் ஆதலைப் பாங்கனிடம் கூறலும், பாங்கன் தன்மனத்தே வருந்துதலும், தலைவனோடு கூட வருந்துதலும், பாங்கன் தலைவனிடம் தலைவி இருக்கும் இடமும் அவள் வடிவமும் பற்றி வினவுதலும், தலைவன் அவற் றைக் கூறுதலும், பாங்கன் தலைவனுக்கு ஆறுதல்மொழி கூறுதலும், பாங்கன் தலைவன் குறித்த இடத்துச் சேறலும், அந்நிலையில் தலைவியின் உருவுவெளிப்பாடு கண்டு தலைவன் தனக்குள் கூறிக்கொள்ளலும், 'பாங்கன் தலைவியைத் தான் குறிப்பிட்ட இடத்துக் காணுங்கொல்லோ' என்று தலைவன் ஐயுற்று வருந்தலும், பாங்கன் குறியிடத்துத் தலைவியைக் காணுதலும், அவளைத் தலைவன் குறித்த இடத்தில் எளிதில் காட்டிய தெய்வத்தைப் பாங்கன் வணங்குதலும், இத்தகைய வனப்பினளிடம் தன் மனத்தைப் போக்கிய தலைவனை இகழ்ந்து கூறியதற்குப் பாங்கன் வருந்தலும், இத்தகைய தலைவியைக் கண்டு கூடிப் பின் பிரிந்து தன் அளவும் வந்து செய்தியைக் கூறும்அளவிற்கு மனத்திட்பம் கொண்ட

தலைவனைப் பாங்கன் வியத்தலும், அங்ஙனமே மேதக்காளாகிய தலைவியின் வடிவுநலன் கண்டு பாங்கன் வியத்தலும், தலைவனிடம் மீண்டு வந்து தலைவி அவன் வருகையை எதிர்நோக்கி நிற்கும் திறத்தைக் கூறலும், தலைவன் தன்னை வந்து அடையும் முன்னர் தலைவி 'தலைவன் வருவான் கொல்லோ? வாரான்கொல்லோ' எனக்கவலையோடு நினைத்து நிற்றலும், தலைவன் தலைவியின் இருப்பிடம் நோக்கிச்சேறலும், தலைவியைக் காண்டலும், தலைவியோடு புணர்ச்சியின் மகிழ்தலும், தலைவி நிலை யறிந்துவந்துஉரைத்த பாங்கனை மனமார நினைத்தலும், தலைவியைப் புகழ்தலும், தலைவியிடம் மறுநாள் அவள் உயிர்த்தோழியோடு அவ்விடம் வருமாறு கூறலும், தலைவியை அவள் ஆயத்தாரை நோக்கிச் செல்லுமாறு விடுத்தலுமாம்.

## பாங்கிமதி உடன்பாடு

தலைவன் தலைவி ஆகிய இருவரிடையும் அமைந்த நட்பை அறிந்து பாங்கி அதற்கு உடன்படுதல் என்பது.

பாங்கிமதி உடன்பாட்டின் வகைகளாவன—தலைவியின் உடல் உள்ளம் செய்கை இவற்றின் வேறுபாட்டால் யாதோ பண்டு நிகழாதது ஒன்று நிகழ்ந்துள்ளது என்று பாங்கி உணர்தலும், தலைவன் தழையும் கண்ணியும் கொண்டு பின்னிலை முனியாது நிற்ப, 'இவன் இரந்துபின் நிற்கின்றது எற்றிற்கோ?' என ஐயுற்று உணர்தலும், தலைவியும் தோழியும் நின்ற இடத்துத் தலைவன் வந்து பதியும் பெயரும் பிறவும் வினவவே, நிகழ்ச்சியைத் துணிந்து உணர்தலும் ஆம்.

பாங்கிமதி உடன்பாட்டின் விரிகளாவன — பாங்கி தலைவியைப் பலகாலும் உற்றுநோக்கி அவளிடத்துப் புதியனவாகத் தோன்றிய நறுமண வேறுபாடும், உடல் உறுப்பின் வேறுபாடும், ஒழுக்க வேறுபாடும், பண்டையிற் குறைவாக உணவு உண்ணுதலும், தன் செயல்களை மறைத்தலும், செவிலியிடம் உறங்குதலை விடுத்துத் தனித்துத் துயிலுதலை

விரும்புதலும், கண்டு 'இவ் வேறுபாடு எதனால் ஏற்பட்டது' என்று தன் உள்ளத்துள்ளே ஐயமுற்று ஆராய்தலும், அவற்றைக் கூர்ந்து நோக்கி 'இவ் வேறுபாடு புணர்ச்சியான் ஆயிற்று' என்று தன் மனத்து ஐயம் தெளிதலும், தெளிந்த பின்னர்த் தலைவியிடம் மெய்யினானும் பொய்யினானும் பல வாய் இருவேறு பொருள்பட்ட சொற்களைக் கூறி ஆராய் தலும், இயற்கைப்புணர்ச்சியின்பின் தன் செயலைத் தொடர்ந்து முடித்ததற்குத் தோழியே தக்க வாயில் என்று முடிவு செய்த தலைவன் தோழியை நோக்கிச் செல்லுதலும், அவளிடம் இரந்து குறையுறுதல் வேண்டும் என்று மனத்து முடிவு செய்தலும், அங்ஙனம் அவன் தோழியை நோக்கிக் கண்ணியும் தழையும் ஏந்திச் சென்று அவளிடம் இரந்து தன் காரியத்தை முடித்துச்செல்ல உறுதிசெய்து, ஊரும் பெயரும் கெடுதியும் பிறவும் வினவியவழி, 'இவன்யார்?' எனவும் 'இவன் எண்ணம் யாது?' எனவும் தோழி ஆராய்தலும், ஆராய்ந்து ஓராற்றான் அவன் மனக்கருத்தைத் தோழி தெளி வாக உணர்தலும், பின் தலைவன், தலைவி தோழி என்ற இரு வரும் சேர்ந்து இருக்கும் நிலையில் அவர்களைக் காண்டற்குச் சேறலும், அவர்கள் இருக்கும் புனம்கண்டு மகிழ்தலும், புனத் திடைத் தோழியோடு தலைவியைக் கண்டு தலைவன் மகிழ் தலும், தலைவன் இருவரையும் கண்டுநின்று முன்புபோலத் தழையும் கண்ணியும் ஏந்தியவனாய் ஊர் முதலியவற்றை வினவியவிடத்துத் தோழி அவனுக்கு மறுமாற்றம் உரைத்த லும், தோழி தலைவனை எள்ளி நகையாடலும், தோழி தலைவன் தலைவி என்ற இருவருடைய உள்ளக்கருத்தையும் துணிவாக உணர்தலுமாம்.

## பாங்கியிற்கூட்டம்

பாங்கியால் தலைவியைத் தலைவன் அடைதல் என்பது.

பாங்கியிற் கூட்டத்தின் வகைகளாவன — தலைவன தோழியை இரந்துபின்நிற்றலும், தோழி தலைவனை அகற்றி நிறுத்தலும், தலைவன் மடலே பொருள் எனமுடிவுசெய்தலும்,

மடல் ஏறும் எண்ணத்தைத் தலைவன் விடுக்குமாறு தோழி செய்தலும், தலைவன் விருப்பினை நிறைவேற்றத் தோழி உடன் படலும், தலைவன் மடல் ஏறும் எண்ணத்தை விடுத்தலும், தோழி தலைவியிடம் தலைவனுடைய காரியம்பற்றிக் கூறலும், தலைவி அதற்கு உடன்படுதலும், தோழி தலைவியைத் தலைவ னிடம் சேர்ப்பித்தலும், தலைவன் தலைவியைக் கூடலும், தலைவன் தலைவியை விடுத்தபின் அவளை ஆயத்தாரோடு கூட்டலும், தோழி தலைவனிடம் அவன் கடமைஉணர்ச்சி கூறி அதனை அவன் நிறைவேற்றுதலை விரும்புதலும் ஆம்.

பாங்கியிற்கூட்டத்தின் விரிகளாவன—தன் மனத்தில் தலைவிமாட்டு உள்ள காதலைத் தலைவன் பாங்கிக்குக் கூறு தலும், தலைவனுடைய குலத்தின் மேம்பாட்டையும் தங்கள் குலத்தின் தாழ்வையும் பாங்கி தலைவனுக்குக் கூறலும், தலைவன் தலைவியை மேம்படுத்திச் சொல்லுதலும், பாங்கி தலைவன் விரும்பிய நங்கை இன்னாள் என்று அறியாதவள் போலத் தலைவனை வினவுதலும், தலைவன் தலைவியின் சிறப் பியல்புகளை விளக்கி கூறுதலும், தலைவன் குறித்த நங்கை பெறுதற்கு அரியள் என்று பாங்கி தலைவனுக்கு இயம்பலும், தலைவி தனக்கு இன்றியமையாதவள் என்று தலைவன் சொல்லுதலும், பாங்கி தலைவனிடம் அவன் காரியத்தை அவனே சென்று தலைவியிடம் கூறுமாறு குறிப்பிடுதலும், தலைவன் பாங்கி தனக்குப் பயன்படுதலுக்கு மறுக்கிறாளே என்ற எண்ணத்தால் அவளைப் பழித்தலும், தலைவியின் அறியாமையைத் தலைவன் மனம் கொள்ளுமாறு பாங்கி அவனிடம் கூறலும், தலைவி மூதறிவுடையவள் என்று தலைவன் பாங்கிக்குக் கூறலும், தலைவனுக்குமுன்னமே தலைவி பால் அமைந்திருந்த நட்பினைப் பாங்கி சுட்டிப் பிறர் உதவி யின்றித் தலைவன் தானே நட்புறவு கொள்ளுமாறு கூறலும், பாங்கியின் உதவியின்றித் தான் தலைவியோடு தொடர்ந்து

ஏறுதல் ஒருதலை என்பதைக் குறிப்பிடுதலும், அதற்கும் நாணத்தால் மறுமாற்றம் கூருத தலைவியைத் தோழி சினந்து கூறுதலும் தன்னின் வேருனவள் அல்லளாகிய தோழி தன்னிடம் இவ்வளவு பேசுதல் வேண்டா; ஆதலின் அவள் கருத்தே தன்கருத்து; அவ்வாறிருப்பத் தன்னிடம் அவ்வளவுக்குத் தோழி பேசியது ஏன்என்று தலைவி சினத்தலும், தலைவன் தோழி வாயிலாகக்கொடுத்த கையுறையைத் தலைவி ஏற்றலும் என்றுகூறிய இவ்வாறும்;

தலைவி கையுறையை ஏற்றுக்கொண்ட செய்தியைப் பாங்கி தலைவனுக்கு உணர்த்துதலும், தலைவனிடம் பகற்குறிக்கு ஏற்றஇடத்தைத் தோழி குறிப்பிட்டுக் கூறலும், அவ்விடத்திற்குத் தலைவியைக்கொண்டு சேறலும், தலைவியைக் குறியிடத்துச் செலுத்தித் தோழி தான்காரணம் ஒன்று கூறிப்பிரிந்து நீங்கலும், தலைவன் தலைவியைக் குறியிடத்து எதிர்ப்படுதலும், அவளைக் கூடுதலும், அவளைப்புகழ்ந்து பேசுதலும், பின் பாங்கியோடு கூடுமாறு விடுத்தலும், பாங்கி அந்நேரத்திற்குள் பூமாலை முதலிய கையுறைகளில் ஒன்று அமைத்துக்கொண்டுவந்து தலைவியைக் காண்டலும், தலைவியைப் பாங்கி ஆயத்தாரோடு சேர்த்தலும், பின் ஆயத்தினை நீங்கிவந்து தலைவனை அணுகித் தலைவியை இறுதிவரை பாதுகாக்கும் பொறுப்பு அவனுக்கு உரியதாகிய செய்தியைத் தோழி விளம்பலும், தன்இருப்பிடம் செல்லத்தொடங்கிய தலைவனை நோக்கி 'விருந்து உண்டு செல்க' என்று தோழி செலவு விலக்கலும், தலைவனும் அன்று அவ்வூரில் அவர் மனைக்கண் விருந்தயர்தலை விரும்புதலும் ஆகிய பதின்மூன்றும் கூட, அறுபத்தொரு துறைகளாகும்.

## பகற்குறி

(பகற்காலத்துக்கு என்று அமைக்கப்பட்ட குறியிடத்தில் தலைவன் தலைவியைச்சென்று கூடுதல் என்பது.

பகற்குறியின் வகைகளாவன — தோழி தலைவியைத் தலைவனிடம் குறிக்கண் கூட்டலும், தலைவியைத் தலைவன் குறிக்கண் கூடுதலும், தோழி தலைவியை ஆயத்திடம் அழைத்துச்சேறலும், தலைவனிடம் தலைவியை ஓம்படைசாற்றலும் ஆகிய நான்குமாம்.

பகற்குறியின் விரிகளாவன — தோழி தலைவனிடம் குறியிடம் கூறலும், தலைவியைக் குறியிடத்துக்கொண்டு சேர்தலும், தலைவியை விடுத்துத் தோழி நீங்கலும், தலைவன் தலைவியைக்காண்டலும், கூடுதலும், புகழ்தலும், தலைவியை விடுத்தலும், பாங்கி தலைவியை எய்திக் கையுறை காட்டலும், பாங்கி தலைவியை ஆயத்திடைக் கூட்டலும், தலைவியை விடுத்துத் தலைவனுக்கு ஓம்படைசாற்றலும், விருந்தினனுமாறு கூறித்தலைவன் செலவினை விலக்குதலும், தலைவன் விருந்தினனாய் இருத்தலை விரும்புதலும் என்று பாங்கியிற் கூட்டத்துக் கூறப்பட்ட பன்னிரண்டுமாம்.

## ஒருசார்பகற்குறி

பகற்குறியிடத்து ஒருவரைஒருவர் எய்தாமல் தலைவனும் தலைவியும் வருந்துதல் என்பது

ஒருசார் பகற்குறி வகைகளாவன — ஒருவரை ஒருவர் எய்தாமையால் தலைவனும் தலைவியும் தனித்தனியே வருந்துதலும், வருந்தும் தலைவியைத் தோழி வற்புறுத்துதலும், வருந்தும் தலைவனுக்குத் தோழி தலைவியை இற்செறித்த செய்தியை உணர்த்தலுமாம்.

ஒருசார் பகற்குறி விரிகளாவன—தலைவன் பிரிந்தவிடத்துத் தலைவி அந்திப்பொழுதுகண்டு ஆற்றாது வருந்துதலும், தலைவிநிலைகண்டு பாங்கி வருந்துதலும், தலைவன் வருதற்குக் காலம் தாழ்த்ததனால் தலைவி வருந்துதலும், அங்ஙனம் வருந்துதலால் களவுவெளிப்பட்டு ஏதம் நிகழும் எனப்பாங்கி தலைவியை இடித்து உரைத்தலும், பாங்கியிடம் தனக்கு ஏற்

பட்ட வெறுப்பால் அவள் தன்முன்னே நிற்கவும் அவளை நேராக நோக்கிக் கூறாது புறமாக மொழிந்து தலைவி தன் மனநிலையை அவளுக்கு அறிவுறுத்தலும், பின்நட்பின் காழ்ப்பால் நேரிடையாகப் பாங்கியொடு பேசுதலும், பாங்கி அஞ்சித் தலைவியை அச்சமுறச்செய்தலும், தலைவனைப் பிரிதற்கு இயலாமை குறித்துத் தலைவி இரங்கி உரைத்தலும், தலைவன் வந்துவிட்ட செய்தியைத் தோழி தலைவிக்கு அறிவித்தலும், தலைவன் வேலிப்புறத்தே நிற்பத் தலைவியை இற்செறித்தலைக் கிளி முதலியவற்றிற்குக் கூறுவாள்போன்று தோழி அவனுக்கு அறிவித்தலும், தோழி தலைவன் தன் முன்னே நிற்ப அவனை நோக்கிக் கூறாமல் வண்டு முதலியவற்றை நோக்கிக்கூறுவாள்போல அவனுக்கு அறிவித்தலும், தலைவியைச் செவிலி இற்செறித்த நிலையைப் பாங்கி தலைவனுக்கு நேரிடையாகக் கூறலும், இற்செறிப்பு உணர்த்திய பின் தலைவியைப் பாதுகாக்க வேண்டிய பொறுப்புப்பற்றித் தலைவனிடம் கூறலும், தலைவியைப் பகற்குறிக்கண் காண்டல் இயலாமை குறித்துத் தலைவன் பற்றுக்கோடு ஏதுவும் இன்றித் தன்நெஞ்சோடு வருந்திக் கூறலும் என்றபதினான்குமாம்.

## பகற்குறிஇடையீடு

பகற்குறிக்கு இடையில் சில தடைகள் நிகழ்தல்என்பது.

பகற்குறி இடையீட்டின் வகைகளாவன—பாங்கி முறையே தலைவனையும் தலைவியையும் பகற்குறிக்கு வாராது விலக்கலும், தலைவன் வாராத நேரத்துத் தலைவியும், தலைவி இல்லாத நேரத்துத் தலைவனும் பகற்குறிக்கண் சேறலும், அதனால் இருவரும் மனம் கலங்குதலும் என்ற மூன்றும்.

பகற்குறி இடையீட்டின் விரிகளாவன—தலைவன் குறியிடத்து வருதலைத் தோழி விலக்குதலும், தலைவி பகற்குறியிடத்து வாராதவாறு தோழி விலக்குதலும், தலைவி தான் விளையாடிய இடங்களை நோக்கி இனி அப்பக்கல் வருதற்கு

வாய்ப்பு இன்மை கருதி வருந்துதலும், தோழி தலைவியை அவ்விடத்தினின்றும் தம் இல்லத்துக்கு அழைத்துச் சேறலும், இடையே தலைவி தலைவனுடைய உருவு வெளிப்பாடுகண்டு வருந்துதலும், மறுநாள் தலைவன் பகற்குறிக்கண் வந்து நெடுநேரம் இருந்து வருந்துதலும், தலைவியில்லாத அவ் வெற்றிடம் முழுதும் அவளைத் தேடித் தலைவன் மனம் உளை தலும், தலைவி வாழும் ஊரை நோக்கி ஆண்டுச் சேறற்கு அருமையின் தலைவன் மனம் சுழலுதலும் ஆம்.

## இரவுக்குறி

இரவில் தலைவன் தலைவியை எதிர்ப்படற்கு உரிய தனி இடம் என்பது.

இரவுக்குறியின் வகைகளாவன — தலைவன் தோழியை இரவுக்குறி வேண்டுதலும், தோழி முதற்கண் வழி முதலிய வற்றது ஏதம்கூறி மறுத்தலும், பின் அவன் ஆற்றாமை கண்டு உடன்படுதலும், தலைவியை இரவுக்குறிக்கு அழைத் துச் சேறலும், தலைவன் தலைவியைக் கூடலும், அவள் நலத் தைப் பாராட்டலும், தோழியோடு கூட்டுதலும், பாங்கி 'இரவுக்குறி வேண்டா' என்று கூறத் தலைவன் வாடுதலும், பின் தன்னூர் அடைதலும் ஆகிய ஒன்பதுமாம்.

இரவுக்குறியின் விரிகளாவன — தலைவன் தோழியிடம் இரவுக்குறியில் தலைவியைக் கூடுதற்கு வாய்ப்புச்செய்து தருமாறு வேண்டுதலும், பாங்கி தலைவன் வரவேண்டிய வழி யினது துன்பங்கள்பற்றிப் பேசுதலும், தலைவன் அவ்வழிக் கண் வருதல் தனக்கு மிகஎளிய செயலே என்று விளக்கிக் கூறுதலும், அதுகேட்டுத் தோழி இரவுக்குறிக்கு உடன்படு தலும், தோழி தலைவனிடம் அவன் நாட்டு அணியியல்பற்றி வினுதலும், அங்ஙனம் வினவியதோழி 'யாது காரணம்பற்றி என்னை என் நாட்டு அணியியல் வினவினுள்?' என்பதனை உட் கொண்ட தலைவன், அவளிடம் அவள் நாட்டு அணியியல்பற்றி வினவுதலும், பாங்கி தன் நாட்டு அணியியலைத் தலைவனுக்கு

அறிவித்தலும், தலைவிக்குத் தலைவன் இரவுக்குறி வேண்டி நிற்கும் செய்தியைத் தோழி அறிவித்தலும், இரவுக்குறியின் ஏதம் அஞ்சித் தலைவி அதனுக்கு உடன்படாது தன் நெஞ்சோடு உசாவுதலும், பாங்கி தலைவனுடைய ஆற்றுமை முதலியன கூறி இரவுக்குறிக்குத் தலைவியை இசையச் செய்தலும், தலைவி தோழியிடம் இரவுக்குறிக்குத் தன் இசைவினைத் தெரிவித்தலும், தலைவி இரவுக்குறிக்கு உடன்பட்ட செய்தியைத் தோழி தலைவனுக்குத் தெரிவித்தலும், தலைவனைக் குறியிடத்து நிறுத்தி வந்து தோழி செவிலித் தாயின் உறக்கத்தினைச் சோதித்து அறிதலும், தலைவியிடம் தலைவன் இரவுக்குறிக்கண் வந்துள்ள செய்தியைத் தெரிவித்தலும், தலைவியைத் தோழி இரவுக்குறி இடத்துக்கு அழைத்துக் கொண்டு சேறலும், தலைவியைக் குறியிடத்து விடுத்துத் தோழி கையுறை அமைத்துக் கொணர்வதாகக் கூறி நீங்கலும், தலைவன் தலைவியைக் குறியிடத்துக் காண்டலும், அவள் நலன் புகழ்தலும், தலைவி தலைவன் வரும் வழியின் ஏதங்களை நினைத்து மனம் மறுகுதலும், தலைவன் தான் ஏதமின்றி எளிதின் வரும் செய்தியைத் தலைவி மனம் கொளக் கூறி அவளைத் தெளிவித்தலும், தலைவியைக் கூடுதலும், அவள் நலத்தைப் புனைந்து உரைத்தலும், தலைவி தலைவனை இரவுக்குறியின் ஏதம் அஞ்சி 'இரவுக்குறி வேண்டா' என்று விலக்குதலும், தலைவன் தலைவியை வீட்டு எல்லைக்குக் கொண்டு விடுத்தலும், தோழி தலைவியை அணுகி அவளுக்குத் தான் அமைத்துக்கொண்டு வந்த கையுறையைக் காட்டலும், பின் தலைவியை விட்டிற்குள் உய்த்தலும், பின் தலைவனிடத்துச் சென்று இரவுக்குறிக்கண் வருதலைத் தோழி விலக்கலும், புணர்ச்சி இடையிடு கருதித் தலைவன் மனம் மயங்குதலும், தோழி இரவுக்குறியில் தலைமகனைத் தலைப்படுதற்கண் தலைவி உறும் துயரை விளக்கிக் கூறித் தலைமகனை இரவுக்குறியை விடுக்குமாறு வேண்டலும், தலைவியை இரவுக்குறிக்கண் துய்த்த தலைவன் இரவே தன் ஊரை நோக்கி மீண்டு போதலும் ஆம்.

## இரவுக்குறி இடையீடு

இரவுக்குறிக்கண் தடைகள் நிகழ்தல் என்பது.

இரவுக்குறி இடையீட்டு வகைகளாவன—குறி அல்லாத தனைக் குறியாகக் கொண்டு மருளுதலும், இரவுக்குறியில் தலைமகளை எதிர்ப்படுதற்கு இடையே ஊறுகள் பல உளவாதலும் என்ற இரண்டாம்.

இரவுக்குறி இடையீட்டு விரிகளாவன—தலைவிக்குத் தோழி தலைவன் இரவுக்குறிக்கண் வந்துள்ள செய்கையை உணர்த்தியவழித் தலைவி தான் முன்பே மற்றொன்றைத் தலைவன் செய்த குறியாகக் கருதிச் சென்று வறிதே மீண்ட செய்தியைக் கூறுதலும், தோழி தலைவி தெளிவாக அறிந்து கொள்ளாதபடி அவன் குறிப்புச் செய்த குறைபாட்டை எடுத்துக் கூறலும், தலைவியைக் காணுமையால் இரவுக்குறிக் கண் வந்த தலைவன் மனம்வாடி மீண்டுசேறலும், பொழுது விடிந்தபின், தலைவன் இல்லாத அவ்விரவுக்குறியிடத்து அவன் வைத்துச்சென்ற அடையாளம்கண்டு தலைவி இரங்குதலும், தலைவி அச்செய்தியைத் தோழிக்குக் கூறலும் தோழி தம்பிழைப்பு அன்று என்று அமைதிகூறித் தலைவியின் வருத்தத்தைத் தணித்தலும், பின்வந்த தலைவனிடம் குறிப்புத் தவறியதை அவன்மேல்ஏற்றித் தோழி கூறுதலும், தலைவன் குறிப்புத்தவறிய செயலைத் தலைவிமேல் ஏற்றிக்கூறுதலும், தலைவி தலைவன் செய்தகுறிப்பாக வேறொன்றை நினைத்துக் குறிக்கண்சென்று மீண்டசெய்தியைத் தோழிகூறலும், தான் செய்த குறிப்பை அறிந்தும் தலைவி இரவுக்குறியிடத்து வரவில்லை என்று தலைவன் கூறியசொற்களைத் தோழி தலைவியிடம் இயம்பலும், தன்மேல் உண்மையாகக் குறை எதுவும் இல்லையே என்று தலைவி வருந்துதலும், இரவில் தாய்தூங்காமல் விழித்திருத்தலும், நாய் உறங்காமல் குரைப்பதற்கு

ஏற்றதாய் இருத்தலும், ஊர்மக்கள் உறங்காமல் பேசிக்கொண்டிருத்தலும், ஊர்க்காவலர் ஊரைச்சுற்றிக்கொண்டு வருதலும், நிலவு பகல்போலக் காய்ந்து வெளிப்படுதலும், கோட்டான் ஒலித்தலும், கோழி கூவுதலும் ஆகிய இரவுக்குறியிடையீடுகளைக் கூறுதலும் ஆகிய பதினெட்டும் ஆம்.

## வரைதல் வேட்கை

தலைவன் தன்னை விரைவில்மணந்துகோடல் வேண்டும் என்று தலைவி விரும்புதல் என்பது.

வரைதல்வேட்கையின் வகைகளாவன — 'களவு வெளிப்பட்டு விடுமோ' என்ற அச்சமும், பலவகை ஏதங்களும் தரும் களவிடத்து ஏற்பட்டவெறுப்பும், தலைவனைத்தலைவி பிரிந்திருக்க ஆற்றுமையும் ஆகிய மூன்றுமாம்.

வரைதல் வேட்கையின் விரிகளாவன — தோழி தலைவியின் துயரம்பற்றி வினவுதலும், பிறரால் அறிதற்கு அரிய இரகசியமாகிய தன்களவொழுக்கத்தைச் செவிலி அறிந்துவிட்டாள் என்றசெய்தியைத் தலைவி தோழிக்குக் கூறுதலும், தலைவி தன்னைக்காண்பதற்குத் தலைவன் வருவது அரிதாய் இருக்குமாற்றைத் தோழிக்குக் கூறுதலும், தலைவன்பிரிவு தாங்கவொண்ணுததாய் இருத்தலின் ஆற்றுமை மிகுதியால் தலைவி தலைவன்ஊருக்கே செல்வதற்கு மனம் துணிதலும், அப்போது, தலைவியைத் துன்புறுத்தியதால் தலைவனைத் தோழி பழித்துக் கூறுதலும், தலைவனைத்தோழி பழிப்பதனைப் பொருத தலைவி 'அவன் நற்குண முடையவனே' என்று எடுத்துச் சொல்லுதலும், தலைவனைக் கனவிடைக் கண்டதால் அக்கனவு தன்னை நனவில் நலிகின்ற தன்மையைத் தலைவி தோழியிடம் கூறலும், தன்இயற்கை அழகு தேய்ந்து குறைகின்றவாற்றைத் தலைவி தோழியிடம் கூறலும், தோழியிடம் தன்துயர்பற்றித் தலைவனுக்கு எடுத்துக் கூறவேண்டும் என்று தலைவி விரும்பிக்கூறலும், 'உன்மன

நிலையை நீயே தலைவனிடம் கூறுக' என்று தோழி தலைவியிடம் கூறலும், ஊரில்பலரும் கூறும் பழிமொழியை அறிந்து தான்கொண்டுள்ள அச்சத்தைத் தலைவி தோழியிடம் கூறுதலும், தலைவன் வரும்வழியின் அருமையை அறிந்து தலைவி தான்கொண்டுள்ள அச்சத்தைத் தோழியிடம் கூறலும், காமம் மிகுகையினாலே தலைவனிடம் தனக்கு ஏற்பட்ட மிக்க நினைவால் ஏற்பட்ட சொற்களைத் தலைவி கூறுதலும், தலைவி தன்னுள்ளே செயல்அற்று இருக்கும் செய்தியைக்கூறலும், கொடியவழிகளைக் கடந்து தலைவன் தன்னைக் காணவாராத வண்ணம் அவனை விலக்கும்படித் தோழியைத் தலைவி வேண்டலும், குறியிடத்து வாராதபடி தலைவனை விலக்கும்படி தலைவி தோழியை வேண்டலும், இல்லத்தில் வெறியாடுதல் நிகழாதபடி தடுக்குமாறு தலைவி தோழியை வேண்டலும், தன்னை மணம்செய்தற்பொருட்டுத் தமர்பால்வரும் பிறரை உண்மைகூறி விலக்கும்படி தலைவி தோழியிடம் கூறலும், தலைமகனது வரைவை ஏற்றுக்கொள்ளும்படி குரவருக்குத் தெரிவிக்குமாறு தலைவி தோழியிடம் கூறலும் ஆகிய பதினெட்டுமாம்.

## வரைவுகடாதல்

தலைவியை மணம்செய்துகொள்ளும்படி தலைவனைத் தோழி வற்புறுத்துதல் என்பது.

வரைவுகடாதலின் வகைகளாவன — பொய்யாகக் கூறுதலும், தலைவன் களவுக்கூட்டத்தை மறுத்தலும், தலைவனை இடித்துக்கூறலும், உண்மைநிலையைக் கூறலும் என்ற நான்குமாம்,

வரைவுகடாதலின் விரிகளாவன — தலைவியது வேறுபாட்டிற்குக்காரணம் என்ன என்றுகேட்ட செவிலித்தாய்க்குத் தான் வேறுகாரணம் காட்டிக் கூறியதைத் தலைவிக்குத் தோழி கூறுதலும், பலரும் கூறும் பழிமொழியைத் தலைவனுக்குத் தோழி தெரிவித்தலும், களவொழுக்கத்தைத் தாய்

அறிந்தாள் என்பதைத் தலைவனுக்குத் தோழி அறிவுறுத்தலும், தலைவியின் இல்லத்தில் வெறியாட்டு நிகழ்த்தப்போவதைத் தோழி தலைவனுக்குக் கூறி அவனை அச்சுறுத்தலும், 'தலைவியை அயலார் மணம் செய்துகொள்ள முயல்கின்றனர்கள்' என்பதைத் தோழி தலைவனுக்குக் கூறுதலும், தலைவன் தமர் மணம்பேசுதற்கு வரின் தலைவிதமர் ஏற்றுக்கொள்வார் என்று தலைவனுக்கு உரைத்தலும், 'மணம் செய்துகொள்ளுதற்கு உரியகாலம் இஃது' என்பதைத் தோழி தலைவனுக்கு உரைத்தலும், தலைமகளுடைய மூதறிவைத் தோழி தலைவனுக்கு அறிவித்தலும், குறியிடங்களைத் தோழி மாற்றி அமைத்தலும், பகலில் வருகின்ற தலைவனை இரவில் வருமாறு கூறுதலும், இரவில் வரும் தலைவனைப் பகலில் வருமாறு கூறுதலும், பகலினும் இரவினும் பலகாலும் வருமாறு தோழி தலைவனிடம் கூறுதலும், பகற்காலத்தும் இரவுக் காலத்தும் இவ்விடத்தினின்றும் நீங்குவாயாக என்று தோழி தலைவனிடம் கூறுதலும், தலைவன் அங்ஙனம் வரையாது வந்து ஒழுகுவது அவனுடைய நாடு ஊர் குலம் என்பனவற்றின் பெருமைக்குத் தகாது என்று தோழி தலைவனுக்குக் கூறுதலும், தலைவன்வரும் வழியின் துன்பத்தை நினைத்துத் தலைவி அஞ்சுதலைத் தோழி தலைவனுக்குக் கூறுதலும், தலைவியின் பொறுக்கமுடியாத தன்மையைத் தலைவனுக்குத் தோழி மிகக்கூறுதலும், தலைவன் குறிக்கண்வரும் வழியில் காவல்மிகுதியும் உண்டு என்பதைத் தோழி தலைவனுக்கு உணர்த்துதலும், கனவில் தலைவனைக்கண்டு பின் நனவில் காணுமையால் தலைவி மிகவும் வருந்தும் தன்மையைத் தோழி தலைவனுக்கு உணர்த்துதலும், தலைவியின் இயற்கை அழகு நாள்தோறும் குறைந்து வருதலைத் தோழி தலைவற்கு உணர்த்துதலும் ஆகிய இருபதும் ஆம்.

## ஒருவழித்தணத்தல்

ஒருவாறு பிரிதல் என்பது.

ஒருவழித்தணத்தலின் வகைகளாமாறு — தலைவன் தலைவியைப் பிரிந்து ஒன்றிரண்டு நாள்கள் தன்னூருக்குச் செல்ல வேண்டியநிலை ஏற்பட்டுள்ளமையைக் குறிப்பிடுதலும், அதற்குத்தோழி முதற்கண் உடன்படாமையும், தலைவன் காரணங்காட்டி அவளை உடன்படவேண்டுதலும், தோழி தலைவன் செலவுக்கு உடன்படுதலும், தலைவன்பிரிந்து சென்றவழித் தலைவி கலங்குதலும், தோழி தலைவியைத் தெளிவித்து அமைதியுறச் செய்தலும், தணந்துவந்த தலைவனிடத்தில் வருந்தி உரைத்தலும் ஆகிய ஏழுமாம்.

ஒருவழித்தணத்தலின் விரிகளாவன — தலைவன் தன்னூருக்குத் தான்செல்லவேண்டும் என்பதனைத் தோழிக்குக் கூறலும், தோழி தலைவனுடைய செலவைத் தலைவியின் ஆற்றாமைகூறி விலக்கலும், தலைவன் தான்பிரிந்து செல்ல வேண்டியதன் இன்றியமையாமையைக் கூறலும், தோழி தலைவனைத் தன்னூர் செல்வதற்கு விடுத்தலும், தோழி தலைவிக்குத் தலைவன் தன்னூருக்குச்சென்ற செய்தியை இயம்பலும், தலைவி தலைவன் பிரிவுகுறித்துத் தன்மனத்தோடு நொந்துகூறுதலும், தலைவன் வருதற்குக் காலம் தாழ்த்திய தனால் காமம்மிகவே மிகவும் நினைந்து கூறுதலும், தோழி தலைவியை ஆற்றுவித்தலும், பாங்கி ஆற்றுவித்துழித் தலைவி நெஞ்சு நினைந்து இரங்கலும், நெஞ்சொடுகிளத்தலும், கடலொடு புலம்பலும், ஆற்றொடு புலம்பலும், புள்ளொடு புலம்பலும், கையறுகிளவி கூறலும், கூடல்இழைத்தலும், சூளுறவு பொய் என்றலும், தன்அறியாமை கூறலும், தலைவி தன்னுள்ளே சொல்லுதலும், பின் தலைவன் வந்த செய்தியைத் தலைவிக்குத் தோழி அறிவித்தலும், தோழி தலைவனிடம் மனம் வருந்திக் கூறுதலும், தலைவியின் துன்பத்தைத் தான்தணியச்செய்துகொண்டிருந்த அருமையைத் தோழி தலைவனுக்குக் கூறுதலும் என்று இருபத்திரண்டாம்.

### வரைவிடைவைத்துப் பொருள்வயின் பிரிதல்

மணம் செய்துகொள்ளுதற்குஇடையே பொருள் ஈட்டுதற்குத் தலைவன் பிரிதல் என்பது.

வரைவு இடைவைத்துப் பொருள்வயின் பிரிதலின் வகை களாமாறு — தலைவன் தான் பிரியக்கருதிய செய்தியைத் தோழிக்கு அறிவுறுத்தலும், தோழி பிரிவுக்கு உடன்படாமல் கூறலும், தலைவன் தோழியைத் தன்பிரிவுக்கு உடன்படுத்தலும், தோழி தலைவன் பிரிவுக்கு உடன்படுதலும், தலைவி தலைவன் பிரிந்தவழிக் கலங்கலும், தோழி தலைவியை வற்புறுத்திக் கூறலும், தலைவி மிக்க பொறுமையுடன் இருத்தலும், தலைவன் வருங்காலம் நீட்டித்தவழித் தலைவி கலங்குதலும், தலைவன் வந்தஅளவில் தலைவி மகிழ்தலும் என்று ஒன்பதாம்.

வரைவு இடைவைத்துப் பொருள்வயின் பிரிதலின் விரி களாவன — தலைவன் தான் வரைவு இடைவைத்துப் பொருள் வயின் பிரியக்கருதிய செய்தியைத் தலைவிக்கு உணர்த்து மாறு தோழியை வேண்டலும், அவன் பொருள்வயின் பிரியக் கருதிய செய்தியை அவனையே தலைவிக்கு உணர்த்துமாறு தோழி வேண்டுதலும், தான் காலம் தாழ்த்தாது மீண்டு வருவதாகக் கூறித் தலைவன் நீங்குதலும், தோழி தலைவிக்குத் தலைவன் பொருள்வயின் பிரிவை உணர்த்துதலும், தலைவி மனம் வருந்துதலும், தோழி தலைவியின் வருத்தம் புறத் தார்க்குப் புலனாகும் என்றுற்போலக் கொடுஞ்சொல்கூறலும், தலைவி தன்னை இடித்துரைக்கும் தன் தோழியிடம் கொடுஞ் சொல் கூறுதலும், தலைவன் விரைவில் மீண்டுவருவான் என்று தோழி வற்புறுத்திக் கூறலும், தலைவன் குறித்த பருவம் வந்தவிடத்துத் தலைவி பிரிதல்துன்பத்தால் நோத லும், தலைவியிடம் தோழி காலம்அல்லாக் காலத்து முந்திப் பொழிந்தது மழை என்று கூறலும், தோழி கூறியதைத் தலைவி மறுத்துக் கூறலும், தலைவனுடைய தூதாகி மேகம் அப்பொழுது வந்தது என்று தலைவிக்குத் தோழி கூறலும், தலைவி பிரிவினை ஆற்றி இருத்தலும், தான் பிரிந்து சென்ற அவ்விடத்தில் தலைவியின் பிரிவினை ஆற்றுமல் தலைவன் புலம்புதலும், வினை முற்றி மீண்டு வந்த காலத்துத் தேர் ஊர்ந்து வரும் தலைமகன் பாகனுக்குக் கூறுதலும், மேகத்

தொடு கூறுதலும், தன் வரவினைத் தலைவிக்கு அறிவுறுத் தலுக்குத் தலைவன் ஊதிய சங்கு முழக்கத்தைத் தோழி கேட்டுத் தலைவிக்கு அவன் வரவை அறிவுறுத்தலும், தலைவன் ஊதிய வலம்புரிச்சங்கினைத் தலைவி வாழ்த்தலும், தலைவன் வந்தவிடத்து ‘பிரிந்த காலத்து நீவிர் அவளை நினைத்தது உண்டோ?’ எனத் தோழி அவனை வினவுதலும், தலைவி யை நினைத்ததைத் தலைவன் கூறுதலும், தோழி தலைவியைத் தான் ஆற்றுவித்துஇருந்த அருமை கூறலும் ஆகிய இருபத்தொன்றுமாம்.

## வரைவு

வரைவு இடைவைத்துப் பொருள் வயின் பிரிந்த தலைவன் வந்துழி வரைவு நிகழும். வரைவாவது தலைமகன் தலைமகளைக் குரவரும், அவரோடு ஒரு தன்மையார் ஆகிய தாயத்தாரும், தாயொடு பிறந்தாரும், அவர் இல்லாவழிச் சான்றோரும், தேவரும் கொடுப்பவும் கொடாது ஒழியவும், அங்கியங்கடவுள் அறிகரியாக மணந்து கொள்ளுதலாம். வரைவு கற்பிற்கு ஒருதலையாக வேண்டப்படுவதாகும்.

வரைவின் கிளவித்தொகைகளாவன — வரைவு மலிவு (திருமணம் பற்றிய செய்திகளின் மிகுதி), அறத்தொடு நிலை என்ற இரண்டுமாம்.

## வரைவு மலிவு

திருமணச் செய்திகளின் மிகுதிபற்றிக் கூறுதல் என்பது. அதன் வகைகளாவன-திருமணத்திற்குத் தலைவன் முயலுதலை உணர்த்துதலும், தலைவன் தமரைத் தலைவிதமர் எதிர் கொண்டதை உணர்த்துதலும், திருமணச் செய்தி அறிந்து தலைவியும் தோழியும் மகிழ்தலும், தலைவி தெய்வத்தை வழி படுதலைக்கண்டு தலைவன் மகிழ்தலுமாகிய நான்குமாம்.

வரைவு மலிவின் விரிகளாவன — தலைவன் பரிசப் பொருளைத் தமர் வாயிலாக அனுப்பி வைத்த செய்தியைத்

தோழி தலைவிக்கு உணர்த்தலும், தன்னைப் பெற்ற தாய்க்கு ஏற்படச்கூடிய மனமகிழ்ச்சியைத் தலைவி நினைத்துப் பார்த்தலும், தலைவன் தலைவியை மணந்துகோடலைத் தலைவிதமர் ஏற்றுக் கொண்ட செய்தியைத் தோழி தலைவிக்கு உணர்த்துதலும், தலைவி தனக்கு ஏற்பட்ட மகிழ்ச்சியை அடக்கிக் கொள்ள இயலாமல் மனத்திற்குள்ளேயே சொல்லிக் கொள்ளுதலும், தலைவனைத் தோழி வாழ்த்துதலும், திருமணத்தின் பொருட்டுக்கொற்றவையைத் தலைவி வழிபடும் நிலைமையைத் தலைவனுக்குத் தோழி காட்டுதலும், அதனைக்கண்ட தலைவன் மகிழ்தலும் என்ற ஏழுமாம்.

## அறத்தொடு நிற்றல்

உண்மை கூறலும், தக்கதனைச் சொல்லி நிற்றலும், கற்பின்தலை நிற்றலும் அறத்தொடுநிலை என்பதன் பொருளாம்.

அறத்தொடு நிலையின் வகைகளாவன — முன்னின்று நேராகச் சொல்லுதலும், முன்நின்று புறமொழியாகப் பொதுப்படக்கூறலும் என்ற இரண்டாம்.

அறத்தொடு நிற்றலின் விரிகளாவன - தலைவியைத் தலைவன்பிரிவு பற்றி ஆற்றிச் செயலற்ற தோழி அவள் கண்ணீரைத் துடைத்தவழித் தலைவி தான் கலங்கி அழுதற்குரிய காரணங்களை அவட்குக் கூறுதலும், தலைவன் தெய்வத்தின்மேல் ஆணையிட்டுத் தன்னைத் தெளியச் செய்யத் தான் அதனை மெய் என்று துணிந்தமையைத் தலைவி தோழிக்குக் கூறுதலும், தலைவன் தன்னைப் பிரிந்த செய்தியைத் தலைவி தோழிக்குக் கூறுதலும், அதுகேட்ட தோழி தலைவன் பண்புகளைப் பழித்துக்கூறுதலும், தலைவன் நற்குணம் உடையவன் என்று தோன்றத் தலைவி கூறுதலும், 'தலைவன் குறித்துச சத்தியம் செய்து தவறியதைப் பொறுக்கும்படி தெய்வத்தை வழிபடுதற்குச் செல்வோம்' என்று தலைவி தோழிக்குக் கூறுதலும், புறத்தே போகாதபடி வீட்டின்கண் தனைத்

தாய் அடக்கி வைத்தமையைத் தலைவி தோழிக்குக் கூறுதலும், மிக்க இருளில் தலைவனைச் செவிலி கண்ட செய்தியைத் தலைவிக்குத் தோழி கூறுதலும் என்ற ஏழும், தலைவியின் வேறுபாட்டிற்கு உரிய காரணத்தைச் செவிலி தோழியிடம் வினவுதலும், தோழி வெறியாட்டினை விலக்குவித்தலும், வெறிவிலக்கியவழிச் செவிலி தோழியை வினவுதலும், தலைவி பூத்தருபுணர்ச்சி—புனல்தரு புணர்ச்சி—களிறுதருபுணர்ச்சி என்ற இவற்றால் தலைவனைச் சந்தித்த செய்தியைத் தோழி அறத்தொடு நிற்றலும், தலைவியின் வேற்றுமை கண்டு தாய் வினவியவழிச் செவிலி முன்னிலைமொழியான் செய்தியை விளக்குதலும் ஆகியனவாம்.

## களவு வெளிப்படை

களவொழுக்கம் வெளிப்படுதல் என்பது.

உடன்போக்கு, தலைவி தலைவனுடன் ஊரைவிட்டுச் சென்றதைப் பலரும் அறிதலாகிய கற்பொடு புணர்ந்த கவ்வை, மீட்சி என்று களவுவெளிப்படை மூன்று கிளவித்தொகைகளை உடையது.

## உடன்போக்கு

தமரைப்பிரிந்து தலைவி தலைவனுடன் செல்லுதல் உடன்போக்காம்.

தோழி தலைவனிடம் உடன்போக்கை வற்புறுத்திக் கூறுதல், தொடக்கத்தில் தலைவன் உடன்போக்கிற்கு உடன்படாதிருத்தல், தோழி உடன்போக்கிற்குத் தலைவனை உடன்படச்செய்தல், தலைவன் உடன்போக்கிற்கு உடன்படுதல், தோழி தலைவனையும் தலைவியையும் உடன்போக்கல், புணர்ந்துடன்போகிய அவ்விருவரையும் கண்டோர் விலக்குதல், தலைவன் தலைவியைப் புகழ்தல், தலைவியைத்தேற்றல் என்ற எட்டும் உடன்போக்கின் வகைகளாம்.

உடன்போக்கின் விரிகளாவன —

'எமர் இவளை நீ வரைதற்கு உடன்படார்; ஆதலால் இவளை உடன்கொண்டு செல்க' என்று தோழி தலைவனுக்கு அறிவித்தலும், தலைவியின் மென்மைத்தன்மை கூறி அவளை உடன்கொண்டு செல்லுதலைத் தலைவன் மறுத்துக்கூறலும், அங்ஙனம் போதற்குத் தோழி தலைவனை உடன்படச்செய்தலும், தலைமகனும் உடன்போக்குக்கு உடன்படுதலும், தோழி தலைவிக்கு உடன்போக்கினை அறிவித்தலும், அங்ஙனம் உடன்சென்றால் தன் நாணம் அழிந்துவிடுதல் குறித்துத் தலைவி வருந்துதலும், 'நாணினும் கற்பே சிறந்தது' என்று தோழி தலைவிக்குக் கூறுதலும், தலைவனுடன் செல்வதற்குத் தலைவி உடன்பட்டு எழுதலும், சுரத்தின் இயல்பைத் தோழி உரைத்தவிடத்துத் தான் அதற்கு அஞ்சாமல் சுரம் செல்லத் துணிந்திருத்தலை அவளுக்குத் தலைவி கூறுதலும், அதனைத் தோழி தலைவற்குக் கூறுதலும், தலைவனிடம் தலைவியைத் தோழி அடைக்கலமாகக் கொடுத்தலும், தோழி நடுயாமத்தில் தலைவியைத் தலைவனுடன் விடுத்தலும், தலைவன் தலைவியைப் பாலைநிலத்தில் மெல்லக் கொண்டுசெல்லுதலும், தலைவி நடந்து வந்ததால் அடைந்த களைப்பை அறிந்து தலைவன் அவளை இடைப்பட்டதொரு பொழிலில் இளைப்பாறச் செய்தலும், ஆண்டிருந்த மலர்களைப் பறித்துத் தலைவிக்குச் சூட்டி அவள் இயற்கையழகோடு கூடிய செயற்கையழகைக்கண்டு தலைவன்மகிழ்ந்து உரைத்தலும், சுரத்திடை அவ்விருவரையும் கண்டோர் 'இவர் தேவரோ? மானிடரோ?' என்று ஐயுறுதலும், அவர்களைக்கண்டு மகிழ்தலும், அச்சுரத்திடை அவர்கள் நடந்துவந்ததற்கு இரங்கலும், 'பொழுது போயிற்றாதலின் இனிப்போதற்கு இவ்வழி உரியதுஅன்று' என்று கண்டோர்கூறி அவ்விருவரையும் மீண்டும் நடக்காதவாறு தடுத்தலும், தங்கள் ஊர் அருகில் உள்ள செய்தியை அவ்விருவருக்கும் எடுத்துக் கூறலும், தலைவன் தாம்செல்ல வேண்டிய ஊர் அணிமையிலேயேஉள்ள செய்தியைத் தலைவிக்குக் கூறலும், தலைவிக்குத் தலைவன் தன்நகரைச் சிறிது

தொலைவிலேயே சுட்டிக்காட்டலும், தலைவன் தன்பதியை அடைந்த செயலைத் தலைவிக்கு உணர்த்துதலும், அவளோடு தன்மனையைச் சார்தலும் ஆம்.

## கற்பொடு புணர்ந்தகவ்வை.

*தலைவி தலைவனுடன் சென்றதைப் பலரும் அறிதலாம்*

கற்பொடுபுணர்ந்த கவ்வையின் வகைகளாவன—செவிலி புலம்புதலும், நற்றாய் புலம்புதலும், நற்றாய் மயங்கி உரைத்தலும், கண்டோர் வருந்திஉரைத்தலும், செவிலி தேடிச்செல்லுதலும், என்ற ஐந்தாம்.

கற்பொடு புணர்ந்த கவ்வையின் விரிகளாவன — மேம்பட்ட என்மகள் எங்கே போயினாள் ?' என்று செவிலி தோழியை வினவுதலும், தமர்மணத்திற்கு உடன் படாமையால் தலைவி தன்விருப்பின்படி தலைவனுடன் உடன் போயின செய்தியைத் தோழி செவிலிக்கு உணர்த்தலும், செவிலி தன்னைத் தேற்றுவோரை நோக்கி வருந்திக் கூறுதலும், தலைவனுடன் தான் போதலைத் தலைவி குறிப்பாக உணர்த்தியும் தான் அறிந்துகொள்ள முடியாமையைச் செவிலி தன் அறியாமை காரணமாக நொந்து உரைத்தலும், தலைவியை விரைவில் மீண்டுவரச்செய்யவேண்டும் என்று செவிலி முருகக்கடவுளை வாழ்த்துதலும், தன்கற்பின்மிகுதி தோன்றத் தலைவி தலைவனுடன் போயினசெய்தியைச் செவிலி நற்றாய்க்கு அறத்தொடு நிற்றலும், தலைவியின் பிரிவினால் நற்றாய் தன்மனத்துள்ளே வருந்துதலும், நற்றாய் தோழியோடு கூறி வருந்துதலும், தோழியின் வருத்தம் கண்டு நற்றாய் புலம்புதலும், நற்றாய் பாங்கிமார்களோடு வருந்திக் கூறலும், அயலாரோடு வருந்திக் கூறலும், தலைவி வளர்த்து விடுத்துச்சென்ற கிளியோடு வருந்திக் கூறலும், தலைவி பழகும் இடங்களைஎல்லாம் கண்டு வருந்திக் கூறலும், தன்மகள் மீண்டுவரும்படி காக்கை கரைவதாயின் அதற்குச் சிறந்த உணவு வழங்குவதாகக் கூறி நற்றாய் காக்கையைக் கொண்டு சகுனம் பார்த்தலும், தலைவன் தலைவியிடம் மிக்க

அன்பு காட்டுமாறு அருள்செய்யத் தெய்வத்தை வேண்டலும், தலைவி செல்லும் பாலைநிலம் வெப்பம்மாறி மருதநிலமாக அவளுக்கு அமையச் செய்யுமாறு நற்றாய் சூரியனை வேண்டலும், மலரை மிதிப்பினும் பொறாத தலைவியின் மெல்லடிகளின் தன்மைகருதி இரங்கலும், உலகியல் அறியாத தலைவியின் இளமைத் தன்மையை நினைத்து இரங்குதலும், தலைவியின் இயல்பான அச்சத்தன்மையை நினைத்து இரங்குதலும், நற்றாயும் ஆயத்தாரும் படும் துயரை நோக்கிக் கண்டோர் இரங்கிக் கூறுதலும், தலைவியின் பிரிவினை ஆற்றாது வருந்திய நற்றாயைச் செவிலி தேற்றுவித்தலும், செவிலி தலைவியைத் தேடிச்சென்ற வழியில் முக்கோலை உயர்த்தி வந்த அந்தணரைக்கண்டு தலைவியைப்பற்றி வினாதலும், வழியிடைக் கண்ட மாவிரதியரிடம் தலைவியைப்பற்றிச் செவிலி வினாதலும், அச்சான்றோர்கள் 'தலைவி செயல் தக்கதே' என்று காரணம் காட்டி விளக்குதலும், செவிலி சுரத்திடைக்கண்ட எயிற்றியோடு வருந்திப்பேசுதலும் குராமரத்தோடு புலம்பலும், புறாக்களோடு வருந்திக் கூறலும், சுரத்திடையே தலைவன்தலைவியரின் அடிச்சுவடு கண்டு அவர்தம் செலவுக்கு வருந்துதலும், தன்னை நோக்கிவந்த இருவராகிய தலைவன்தலைவியரை நோக்கி 'என்மகளையும் அவள் காதலனையும் இடையே கண்டீரோ ?' என்று வினவுதலும், அவர்கள் செவிலியைத் தேற்றி மீண்டு செல்லுமாறு கூறுதலும், தலைவியைக்காணாது செவிலி கவலைமிகுதலும் ஆம்.

## மீட்சி

உடன்போன தலைவனும் தலைவியும் தம்மூருக்குத் திரும்பி வருதல் என்பது.

தெளிவித்தல், மகிழ்ச்சி, வினவுதல், விடையிறுத்தல் என்ற நான்கும் மீட்சியின் வகைகளாம்.

மீட்சியின் விரிகளாவன — தலைவியைத் தேடிச்சென்ற செவிலித்தாய் அவள் தலைவனுடன் நெடுந்தொலைவு சென்று

விட்ட செய்தியை நற்றாய்க்குக் கூறுதலும், தலைவியை அழைத்துச்சென்று வேற்றூரில் மணந்துகொண்ட தலைவன் தலைவியிடம் அவள் விரும்பியவாறு தம்ஊருக்குத் திரும்புதற்கு ஒருப்படலும், தலைவன் தம்மூர் அணிமையில் வந்துவிட்டது என்று மீண்டுவருகாலைத் தலைவியிடம் கூறுதலும், தலைவி தாம் மீண்டுவரும்செய்தியைத் தமக்கு முன்னமேயே ஊர் நோக்கிச்சென்றுகொண்டிருந்தவர் வாயிலாகத் தன்தோழியருக்குச் சொல்லி அனுப்புதலும், அவர்கள் தோழிமார்களுக்குத் தலைவி மீண்டுவரும் செய்தியைத் தெரிவித்தலும், தோழிமார்கள் அம்மகிழ்ச்சிச் செய்தியை நற்றாய்க்கு அறிவித்தலும், நற்றாய் 'என்மகளை முதற்கண் என்மனைக்கு அழைத்து வருவானா? அல்லது அவன் தாய்மனைக்கு அழைத்துச் செல்வானா? என்று வேலனிடம் வினவுதலும் என்பனவாம்.

தலைவன் தலைவியை அழைத்து உடன்போக்குச்சென்று ஆண்டு அவளை மணந்து மீடற்கும், அவளை வரையாது அழைத்துவந்து தன்மனையிலோ அவள் மனையிலோ மணந்துகொள்வதற்கும் தலைவன் தம்மூர் சார்ந்தமை சாற்றல்—தலைவி முன்செல்வோரிடம் தன்வரவு பாங்கியருக்கு உணர்வித்தல்—அவர் பாங்கியருக்கு உணர்த்தல் — பாங்கியர் நற்றாய்க்கு உணர்த்தல்—நற்றாய் கேட்டு அவன்உளம் கொள வேலனை வினவுதல்—என்ற துறைகள் உரியன.

தலைவன் இல்லத்தில் வரைதல்,—வினவுதலும் விடை இறுத்தலும் மனம் பொருந்துதலும் என்ற மூவகைத்து.

தலைவன் இல்லத்தில் வரைதலின் விரிகளாவன—நற்றாய் தன்மகளுக்குத் தன்மனையில் திருமணம் செய்விக்கும் விருப்பத்துடன் அதுபற்றிச் செவிலியை வினவுதலும், செவிலிக்குத்தோழி திருமணம் முன்னமேயே நடந்துவிட்ட செய்தியைக் கூறுதலும், அதனைச் செவிலி நற்றாய்க்குத் தெரிவித்தலும்; தலைவன் தலைவி என்ற இருவரும் உடன் போய் மீண்டு வந்தபின் தான்வேற்றூரில் தலைவியை மணம்செய்துகொண்ட

செய்தியைத் தோழிவாயிலாகத் தலைமகள் தலைமகன் தமருக்கு அறிவித்தலை விரும்புதலும், தோழி அச்செய்தியை முன்னமேயே தமருக்கு அறிவித்துவிட்ட செய்தியைக் கூறலும் என்பனவாம்.

தலைமகன் தலைவியைப் புணர்ந்து உடன்போய்த் தன் மனையகத்து ஊரில்வரைந்து மீடற்கும், செவிலிக்கு இருவரை வரைந்தமை உணர்த்தல் —வரைந்தமை செவிலி நற்றாய்க்கு உணர்த்தல்-தலைவன் பாங்கிவாயிலாகத்தான் மணன் அயர்ந்ததைத் தலைவி தமர்க்கு அறிவிக்க விரும்புதல்-தோழி அதனைத் தான் முன்னமேயே அறிவித்துவிட்ட செய்தியைக் கூறல் என்ற துறைகள் உரியனவாம்.

ஒருவகையான் மீண்டுவரைதலும் உண்டு. அஃதாவது தலைவி தலைவனொடு உடன்போக்கு நிகழ்த்தியவழித் தலைவி தமர் பின்தொடர்வார் என்று விரைந்து உடன்போகிப்பின் மீண்டுவந்து வரைதலாகும். அதற்கும் தலைவன் தம்ஊர் சார்ந்தமை உணர்த்தல் முதலாகத் தான் அதுமுன்னே சாற்றியதனைத் தோழி உணர்த்தல் ஈறுகக் கூறப்பட்டன யாவும் துறைகளாம்.

## உடன்போக்கு இடையீடு

தலைவனும் தலைவியும் உடன்போக்கு நிகழ்த்திய இடத்து இடையே தடை நிகழ்தல் என்பது.

உடன்போக்கு இடையீட்டின் வகைகளாவன — தலைவி தன் உடன்போக்கினைப் பாங்கியருக்கும் செவிலிக்கும் தெரிவிக்கச்செய்தலும், தமர்பின் தொடர்ந்து வருதலைத் தலைவி தலைவற்கு அறிவித்தலும், தலைவன் தலைவியை விடுத்து நீங்கலும், கண்டோர் இந்நிலைகண்டு இரங்குதலும், தலைவி தமரொடு மீடலும் ஆம்.

வீட்டினை விட்டுத் தலைவனோடு உடன்போக்கிற்காக நீங்கிச்செல்லும் தலைவி தன்தோழியருக்குத் தன் உடன்போக்

கினை உணர்த்திவிடுத்தலும், தன்உடன்போக்கினை நற்றாய்க்கு உணர்த்தி விடுத்தலும், தலைவியால் கூறி விடுவிக்கப்பட்ட அந்தணர் நற்றாயிடம் தலைவி தலைவனுடன் போயின செய்தியைக் கூறுதலும், நற்றாய் தந்தைதன்னையர்க்கு அறத்தொடு நிற்றலின் தலைவிசெயலைப்பொறாத அவள்தமர் அவரைப் பின்தொடர்ந்து சேறலும், அதனைக் கண்டோர் இரங்கிக் கூறுதலும், தமர் பின்தொடர்ந்து வருதலைத் தலைவி தலைவற்கு உணர்த்தலும், தலைவிதமருக்கு ஊறு செய்தல் ஆகாதுஎன்ற கருத்தான் தலைவன் தலைவியை விடுத்து மறைதலும், தமரொடு மீண்டுசெல்லும் தலைவி தலைவன் புறங்காட்டிச் செல்லுதலைக்கண்டு கவலையுற்றுக் கூறுதலும் உடன்போக்கு இடையீட்டின் விரிகளாம்.

உடன்போய்த் தன் ஊரின்கண்ணே தலைவியை மணத்தலும், மீண்டுவந்து தன் மனையின்கண்ணே அவளை மணத்தலும் ஆகிய இரண்டையும் தவிர, ஏனைய எல்லா மணங்களிலும் தலைவன் அந்தணர்களையும் சான்றோர்களையும் முன்னிட்டுத் தலைவிக்கு அருங்கலம் கொடுத்து அவளை மணத்தலே உலகியற்கையாம்.

## கற்பு

நிறுத்தமுறையானே, களவு என்றும் கைகோள் உணர்த்தியபின், அதன் முடிவில் நிகழற்பாலதாய வரைவு பற்றியன எல்லாம் உணர்த்தி அடுத்துக் கற்பு என்றும் கைகோள் உணர்த்தப்படுகிறது. கற்பாவது இல்வாழ்க்கையில் மகிழ்தலும், தலைவி தலைவனோடு ஊடுதலும், தலைவன் அவ்வூடலை நீக்குதலும், ஓதல்—நாடுகாவல்— நண்பனுடைய பகைவரைத் தணித்தல்—தூது — பொருள் — ஆகியவை காரணமாகத் தலைவியைப் பிரிந்து செல்லுதலும், பிறவும் ஆம்.

## கற்பின் கிளவித்தொகை

இல்வாழ்க்கை, பரத்தையிற்பிரிதல், ஓதற்குப்பிரிதல், நாடுகாத்தலுக்குப்பிரிதல், தூதிற்குப்பிரிதல், நண்பனுக்கு

உற்றுழி உதவற்குப் பிரிதல், பொருள்வயின் பிரிதல் என்ற ஏழும் கற்பிற்கு உரிய கிளவித்தொகைகளாம்.

அவற்றுள், இல்வாழ்க்கை என்ற கிளவியின் வகைக ளாவன—தலைவனுடைய மகிழ்ச்சியும், தலைவியினுடைய மகிழ்ச்சியும், தோழியினுடைய மகிழ்ச்சியும், செவிலியி னுடைய மகிழ்ச்சியும் என்ற நான்காம்.

இல்வாழ்க்கையின் விரிகளாவன—தலைவன் தோழியை நோக்கி அவள் உதவியினால்தான் தனக்குத் தலைமகளை மணக்கும் வாய்ப்பு ஏற்பட்டமை கூறிப் புகழ்தலும், தலை மகனைத் தோழி வாழ்த்துதலும், தலைவனை மணந்து கொள் ளும்வரை வருந்தாமல் இருந்ததன் காரணத்தைத் தோழி தலைவியை வினவுதலும், தலைவன் செய்த கருணை தனக்கு இன்பத்தையே அளித்து வந்தமையால் தான் வருந்தா திருந்த செய்தியைத் தலைவி தோழிக்குக் கூறுதலும், தலை வியை மணந்து கொள்ளும்வரை தலைவன் வருந்தாது இருந் ததன் அடிப்படைக் காரணத்தைத் தோழி வினவுதலும், தலைவனும் தலைவியும் இல்லறம் நடத்தும் இல்லத்துக்கு வந்த செவிலியிடம் தோழி தலைவன் தலைவி இருவருடைய காதல் சிறப்பைக் கூறுதலும், தோழி 'இருவருடைய நல்லற மும் நன்று' என்று செவிலிக்குக்குறிப்பிடுதலும், ஊர் திரும் பிய செவிலி தலைவியின் கற்பியல் சிறப்புப்பற்றி நற்றாய்க்குக் குறிப்பிடுதலும், செவிலி தலைவியின் மனைவாழ்க்கையின் சிறப்பினைப் பாராட்டிக் கூறலும், செவிலி நற்றாய்க்கு இருவ ரின் காதலையும் குறிப்பிடுதலும் என்ற பத்தும் ஆகும்.

## பரத்தையிற் பிரிவு

பரத்தையின் பிரிவின் வகைகளாவன — பரத்தையிற் பிரிந்து வந்த தலைவன் தலைவியை வாயில் வேண்டுதலும், தொடக்கத்தில் தலைவி வாயில் மறுத்தலும், தோழி முதலிய வாயில்கள் தலைவியை அமைதியுறுமாறு வேண்டலும், தலைவி அதனை ஏற்று ஊடல் நீங்குதலும் என்ற நான்காம்.

## உணர்த்த உணரும் ஊடல்

*தலைவன் தெளிவித்தவழி மாறிவிடும் கோபம் என்பது.*

உணர்த்த உணரும் ஊடற்கு உரிய துறைகளாவன — தலைவன் பரத்தையிற் பிரிந்தவழி அதனை அறிந்த மக்கள் 'இது தலைவி ஊடல் கொள்ளுதற்கு வாய்ப்பினை அளிக்கும்' என்று கூறுதலும், தலைவன் பிரிதலான் தனித்து இருக்கும் நிலை ஏற்பட்டவழித் தலைவி இல்வாழ்க்கையில் வெறுப்புக் கொண்டு அழுது வருந்துதலும், தலைவியின் வருத்தத்திற்குக் காரணத்தினைத் தோழி வினவுதலும், தலைமகன் புறத் தொழுக்கம் உடையன் ஆயின செய்தியைத் தலைவி உணர்த் தலும், உலகியல் உரைத்துத் தலைவியைப் பாங்கி இடித்துக் கூறலும், தலைவி பூப்பு எய்தியவழிச் செவ்வணி அணிந்த சேடியைத் தலைவன்பால் அனுப்பவே, செவ்வணி அணிந்து செல்லும் சேடியைக்கண்டு அயலார் வருந்திக் கூறுதலும், செவ்வணி அணிந்து வரும் சேடியைக் கண்ட பரத்தையர் தலைவன் தம்மை நீத்துத் தலைவிபால் பிரிந்து விடுவானே என்ற ஆத்திரத்தால் தலைவியைப் பழித்துக் கூறலும், "தலைவி பூப்பு நீராடிய பின் ஈராறு நாளும் தலைவன் தலைவியோடு இருத்தல்வேண்டும்" என்ற உலகியல் விதியை உட்கொண்டு தலைவனைத் தலைவிபால் செல்ல விடுத்தவழித் தலைவன் இல்லம் நோக்கி வருதலைக்கண்டு வாயில்கள் தலைவிக்கு அவன் வரவு உணர்த்தலும், தலைவன் வருகையை உணர்ந்து தோழி தலைவிக்கு உணர்த்தலும், தலைவி தலைவனை எதிர்ஏற்றுக்கொண்டு பணிதலும், கூடுதலும், மகிழ்தலும் என்பனவாம். தலைவி தனித்துழி இரங்கலின்பின் அவள் தலைவனைக் கனவில் கண்டு வருந்துதலும், தலைவன்திறம் நோக்கிக் கதிரவனோடு நொந்து கூறுதலும், தலைவனைப் பரத்தையருக்கு முற்றூட்டாகத் தலைவி தான் வழங்கிவிட்ட தாக அவன் அன்பின் திரிபினை எடுத்துக் கூறலும், உணவு சமைத்துவைத்தபின் அதனை உண்ணுதற்குத் தலைவன்

வரவில்லையே என்று தலைவி வருந்திக் கூறுதலும், தலைவன் அன்பின்றித் தன்னைப் பிரிந்தமைக்குத் தலைவி வருந்திக் கூறலும் வரவும்பெறும்.

### உணர்த்த உணரா ஊடல்

தலைவன் தலைவியைப் பலவாறு வேண்டவும், அவள் தன் ஊடல் தணியாது காலம் தாழ்க்கும் திறன் கூறுவது.

தான் புதல்வனைப் பெற்றமையைத் தலைவனுர்கு அறிவித்தற்குத் தலைவி வெண்மலர் முதலியவற்றை அணிந்து கொண்ட சேடி ஒருத்தியைப் பரத்தை இல்லத்தில் இருந்த தலைவன்பால் விடுப்ப, அது கண்ட தலைவன் பரத்தையின் இல்லத்தை நீத்துத் தனது இல்லம் அடைந்து தான் தலைவியைப் பார்க்கும்படி செய்தற்குத் தோழியைத் தூதாக வேண்டுதலும், தலைவி ஈன்ற அணிமை தீர்ந்து நெய்யாடிய செய்தியைத் தலைவனுக்குத் தோழி தெரிவித்தலும், தலைவன் புதல்வனும் தானுமாய் இருக்கும் தலைவியைக்காணும் வாய்ப் புக் கிட்டியமைக்குத் தன் உள்ளத்தில் மகிழ்ச்சி மிகுதலும், தலைவன் தம்இல்லத்துக்கு வந்துள்ள செய்தியைத் தோழி தலைவிக்கு உணர்த்துதலும், தலைவன் வருகையை உணர்ந்த தலைவி தலைவனிடம் ஊடல்கொள்ளுதலும், பாணன் தலைவனுக்குப் பரிந்துரை கூறி வாயில்வேண்டிவரத் தலைவி மறுத்தலும், வாயில் மறுக்கப்பட்ட பாணன் மீண்டும் வேண்டலும், தலைவி பாணனைப் பழித்து மறுத்துரை கூறலும், விறலி கூத்தர் பாங்கி முதலியோர் வாயில் வேண்டி மறுக்கப்படுதலும், தலைவன் விருந்தினன் ஒருவனை அழைத்து இல்லத்துப் புக்கவழி இல்லறத்திற்கு ஏற்பத் தலைவி விருந்தினன்முன் தனது புறத்தொழுக்கம்பற்றிய வெகுளியைப் பொறுத்துக் கொண்டமை கருதித் தலைவன் மகிழ்தலும், விருந்துகண்டு ஒளித்த ஊடலை உடைய தலைவி பாயலில்மிக்க ஊடலொடு இருத்தலைநோக்கித் தலைவன் வருந்துதலும், தலைவி தன்னை வெகுளாதபடி அவள் சீறடிகளில் தலைவன் தொழுதலும், தலைவன் தன்அடி தாழ்தலைப் பரத்தையர்கண்டால்

அவனுக்குத் தீங்கு விளைவிப்பர் என்று தலைவி கூறுதலும், தலைவன் தான் பரத்தை ஒருத்தியையும் அறியாதவன் என்று தன்நேரிய ஒழுக்கம்பற்றிப் பேசலும், தலைவனுடைய காமக்கிழத்தியைத் தான் நேரில்கண்ட செய்தியைத் தலைவிகூறலும் தலைவியின் ஊடலைத் தோழி தணிக்க முயலுதலும், தலைவி தோழி கழறவும் தன்புலவி நீங்காது வெகுளுதலும், தலைமகள் புலவி நீங்காளாகவே தலைவன் வெறுத்து மொழிதலும், தோழி தலைவனை அன்பற்ற கொடியவன் என்றுஇகழ்ந்து கூறலும், இத்தொகுப்பிலேயே தலைவி மகற்பெற்றமை தோழி தலைவற்குச் சொல்லி அனுப்புதலும், தலைவன் தன்புதல்வனைக் காண்பதும், பாயலில் தலைவன் வருந்துதலும், விளக்கை அணைத்த விட்டில்பூச்சியை வாழ்த்தலும், பரத்தையர் காதல்பரத்தையரைப் புகழ்ந்து தம்மைத்தாமே இகழ்ந்து கூறிக்கொள்ளுதலும், தலைவி தலைவனோடு புதுப்புனலாடலும், தலைவன் பரத்தையர் யாருடனும் தான் புனலாடவில்லை என்று கூறிய வழித் தலைவி அக்கூற்றை மறுத்து உரைத்தலும், தலைவி பரத்தையைப் பழித்தலும், தலைவனிடம் தலைவி ஊடியவழிக் காமக்கிழத்தி வந்து தலைவியை வாயில்வேண்டலும், தோழி வாயில் நேர்வித்தலும், புதல்வனை வாயிலாகக்கொண்டு தலைவன் இல்லில்புகுதலும், தலைவி தன்புதல்வனை வெகுளுதலும், அவனுக்கு முன்னிலைமொழியாக அறிவுரை கூறுதலும், புதல்வனைப் பழிப்பதுபோலத் தலைவனுடைய குணக் குறைகளை எடுத்துத் தலைவி இயம்பலும் என்பனவும்ஆம்.

புதல்வனும் ஆற்றுமையும் வாயிலாகத் தலைவன் வந்த வழித் தலைவி தலைவனை உவந்து எதிர்கோடலும், தலைவன் தலைவியைக் கூடிச்சென்றபின் வந்ததோழியோடு, தன்மைந்தனை வாழ்த்தலும், தலைவி தலைவனைப்புகழ்தலும், தோழி தலைவியைப் புகழ்தலும்போல்வன, உணர்த்த உணரா ஊடலின் ஒழிபாகக் கொள்ளப்படுவனவாம். உணர்த்த உணரும் ஊடலும், உணர்ப்புவயின் வாரா ஊடலும், அதன்ஒழிபும் பரத்தையிற்பிரிவு என்ற கிளவியின் விளக்கங்களாம்.

## ஏனைய பிரிவுகள்

கல்வி முதலிய பிரிவின் வகைகளாவன — தலைவன் பிரிவினை அறிவுறுத்தலும், தொடக்கத்தில் தலைவி உடன்படாமையும், தோழி தலைவியை உடன்படுத்தலும், அதனால் தலைவி தலைவன் பிரிவிற்கு உடன்படுதலும், தலைவன் பிரிந்தவழித் தலைவி கலங்கலும், தோழி வருந்துதல் கூடாது என்று வற்புறுத்தலும், தலைவி மிக்க பொறுமையோடு இருத்தலும், பருவங்கண்டு தலைவி கலங்குதலும், தலைவன் பிரிவுமுற்றி மீண்டு வந்தவழித் தலைவி மகிழ்தலும் என்பனவாம்.

## ஒழிபு

அகத்திணையியல் தொடக்கத்திலும், களவு, வரைவு, கற்பு என்ற தொகுப்புக்களிலும் கூறப்படாத செய்திகள் யாவும் அகத்திணையியல் இறுதிக்கண் கூறப்படுகின்றன. அகப்பொருள் பன்னிருபகுதிப்பட்டுச் செய்யுளுக்கு உறுப்பாய் வரும். திணை, கைகோள், கூற்று, கேட்போர், இடன், காலம், பயன், முன்னம், மெய்ப்பாடு, எச்சம், பொருள்வகை, துறை என்பனவே அப்பன்னிரு பகுதிகளாம். இவற்றுள், திணையும் கைகோளும் முன்பு கூறப்பட்டனவேயாம்; செய்யுளத்து யாதானும் ஒருதிணையும் ஒரு கைகோளும் தவறாமல் உறுப்பாய் வரும்.

## கூற்று

இனி பார்ப்பான், பாங்கன், தோழி, செவிலி, கிழவன், கிழத்தி என்ற அறுவகையோரும் களவுக்காலத்துக் கூற்று நிகழ்த்துவதற்கு உரியர் ஆவர். பாணன், கூத்தன், விறலி, பரத்தை, அறிவர், கண்டோர், பார்ப்பான், பாங்கன், தோழி, செவிலி, கிழவன், கிழத்தி என்ற பன்னிருவரும் கற்புக்காலத்துக் கிளவி நிகழ்த்துதற்கு உரியர் ஆவர். ஊரவர், அயலோர், சேரியோர், நோயினைக்குறிப்பால் அறிந்தவர், தந்தை, தன்னையர் என்பவருடைய கூற்றுக்கள் கொண்டுஎடுத்துமொழியப்படுவனவேயன்றி முகத்துரையாக நிகழா.

தலைவியின் நற்றாய் மற்றவரிடம் கூற்று நிகழ்த்துவாளே யன்றித் தலைவனோடும் தலைவியோடும் நேர்முகமாகக் கூற்று நிகழ்த்தாள். தலைவி தலைவனோடு புணர்ந்து உடன்போயதை உணர்ந்த பிறகு அந்தணர், தெய்வம், அயலோர், அறிஞர், நோயின்திறத்தை நன்கு அறியும் திறத்தினர், செவிலி, பாங்கி, கண்டோர் என்பவரோடு நற்றாய் கூற்று நிகழ்த்துவாள். நற்றாய், தோழி, முதலியவரோடு செவிலித்தாய் கூற்று நிகழ்த்துவாள். தாயர், தோழியர், தலைவன், தலைவி என்பவரோடு வழியிடைக் கண்டோர் கூற்று நிகழ்த்துவர். உடன்போயகாலை இடைச்சுரத்துத் தலைவிதமர் தொடர்ந்து வரின், அவர் கேட்பச் சுரத்திடைத் தலைமகளோடு செல்லும் தலைவன் அவளோடு ஆணையும் கூறுவான். தலைவனோடு உடன்போய் மீண்ட தலைவி, கற்புக் காலத்துத் தலைவன் பிரியக் கருதும்வழி, அவன் செல்லவேண்டிய நிலத்தின் இயல்பு கூறுங்காலும், தலைவன் தன்னைப் பிரிந்துசென்ற வழித் தன் உள்ளத்தோடும் பிறரோடும் வருந்திச் சொல்லுங் காலும் கூற்று நிகழ்த்துவாள். பார்ப்பான், பாங்கன், தோழி, பாணன், கூத்தன், விறலி, அறிவர் ஆகிய இவர்கள் தலைவனோடும் தலைவியோடும் வாய்ப்பு நிகழும் இடத்தெல்லாம் கூற்று நிகழ்த்துவர்.

காமநுகர்ச்சிக்கு இடையூறு வரும்போது தலைவனும் தலைவியும் நெஞ்சினை முன்னிலைப்படுத்திக் கூறுதலும், கேட்குநபோலவும் கிளக்குநபோலவும் இயங்குநபோலவும் இயற்றுநபோலவும் அஃறிணை மருங்கினும் அறைதலும், மற்றவர் படும்துன்பங்களையும் தம்மைப்போல நுகரப்படும் பிரிதல்துன்பமாகக் கொண்டு கூற்று நிகழ்த்துதலும் உண்டு. காமம் இடையீடுபட்டவழிக் கனவு கண்டு கூற்று நிகழ்த்தலும் தலைவனுக்கும் தலைவிக்கும் உண்டு. தலைவன் முதலிய அனைவரும் மற்றவரோடு கூற்று நிகழ்த்தாது தமக்குள்ளேயே கூறி அமைதிபெறுதலும் உண்டு.

## கேட்போர்

தலைவன் கூற்றையும் தலைவி கூற்றையும் பார்ப்பார் முதலிய பதின்மரும், பார்ப்பான் கூற்றையும் அறிஞர் கூற்றையும் தலைவன் முதலிய அனைவரும் கேட்பர்.

## இடம்

பலவும் ஒருவழிப்பட்டு ஓர் இலக்கணத்தான் முடியும் கருமநிகழ்ச்சிகளாகிய இயற்கைப்புணர்ச்சி, வண்டுறை முதலிய கிளவித்தொகைகள் இடம் எனப்படும். எனவே, இடம் என்பது சந்தருப்பமாம்.

## காலம்

இறப்பு நிகழ்வு எதிர்வு என்ற முக்காலத்துப் பொருள் நிகழ்ச்சியையும் கூறுதல் காலமாகும்.

## பயன்

'இதனால் இது மிகவும் பயன்படும்' என்று தொகுத்துச் சொல்லப்படும் பொருள் பயன் எனப்படும்.

## முன்னம்

இன்ன இடத்து இன்ன சொல்லைக் கூறுதற்குஉரியாரும் கேட்டற்கு உரியாரும் இன்னார் என்று அறியுமாறு குறிப்பிடுவது முன்னம் எனப்படும்.

## மெய்ப்பாடு

அறிவான் மிகவும் ஆராய்ந்து உணர்தல் வேண்டாது நிகழ்கின்ற பொருளை உடலின்கண் நிகழும் கண்ணீர் அரும்பல் மெய்ம்மயிர் சிலிர்த்தல் — முதலிய வேறுபாடுகளால் தெரிவிப்பது மெய்ப்பாடாகும். அம்மெய்ப்பாடுகள் நகை அழுகை இளிவரல் வியப்பு அச்சம் வீரம் வெகுளி உவகை என்று எட்டு வகைப்படும். எள்ளல் இளமை பேதைமை மடன் என்ற நான்கும் நிலைக்களமாக நகை

பிறக்கும். இளிவு இழவு அசைவு வறுமை என்ற நான்கும் நிலைக்களமாக அழுகை பிறக்கும். மூப்பு பிணி வருத்தம் மென்மை என்ற நான்கும் நிலைக்களமாக இளிவரல் பிறக்கும். புதுமை பெருமை சிறுமை ஆக்கம் என்ற நான்கும் நிலைக் களமாக வியப்புப் பிறக்கும். அணங்கு விலங்கு கள்வர் இறை என்ற நான்கும் நிலைக்களமாக அச்சம் பிறக்கும். கல்வி தறுகண் இசைமை கொடை என்ற நான்கும் நிலைக்களமாக வீரம் பிறக்கும். உறுப்பறை குடிகோள் அலை கொலை என்ற நான்கும் நிலைக்களமாக வெகுளி பிறக்கும். செல்வம் புலன் புணர்வு விளையாட்டு என்ற நான்கும் நிலைக்களமாக உவகை பிறக்கும். ஆக, இந்த எண்வகை மெய்ப்பாட்டின் நிலைக் களன்கள் முப்பத்திரண்டாகும். இவையேயன்றி, உடைமை இன்புறல் நடுவுநிலை அருளல் தன்மை அடக்கம் வரைதல் அன்பு கைம்மிகல் நலிதல் சூழ்ச்சி வாழ்த்தல் நாணுதல் துஞ்சல் அரற்று கனவு முனிதல் நினைதல் வெருவுதல் மடிமை கருதல் ஆராய்ச்சி விரைவு உயிர்ப்பு கையாறு இடுக்கண் பொச்சாப்பு பொறாமை வியர்த்தல் ஐயம் மிகை நடுக்கு என்ற மெய்ப்பாடுகளும் உண்டு. இம்மெய்ப்பாடுகள் அகம் புறம் என்ற இரண்டற்கும் பொதுவாவனவாம்.

அடுத்து, அகத்திற்கே உரிய மெய்ப்பாடுகள் கூறப்படு கின்றன. புகுமுகம் புரிதல், பொறிநுதல் வியர்த்தல், நகு நயம் மறைத்தல், சிதைவு பிறர்க்கு இன்மை, கூழைவிரித்தல், காதுஒன்றுகளைதல், ஊழ்அணி தைவரல், உடைபெயர்த்து உடுத்தல், அல்குல் தைவரல், அணிந்தவை திருத்தல், இல்வலி யுறுத்தல், இருகையும் எடுத்தல் என்ற பன்னிரண்டும் புணர்ச்சிக்கு முன்னர் நிகழும் மெய்ப்பாடுகளாம். பாராட்டு எடுத்தல், மடம்தப உரைத்தல், ஈரம்இல் கூற்றம் ஏற்று அலர் நாணுதல், கொடுப்பவை கோடல், தெரிந்து உடன் படுதல், திளைப்புவினை மறுத்தல், கரந்தஇடத்து ஒழிதல், கண்டவழி உவத்தல், புறம்செய அகத்தே சிதைதல், புலப்பித் தோன்றல், கலங்கி மொழிதல், கையறவு உரைத்தல் என்ற

பன்னிரண்டும் புணர்ச்சிக்குப்பின் நிகழ்வனவாம். இவ்விருபத்துநான்கு மெய்ப்பாடுகளும் களவிற்கே உரியன. இவற்றுள் சில சிறுபான்மை கற்பின்கண்ணும் நிகழ்வனவாம்.

இனி, இன்பத்தை வெறுத்தல், துன்பத்துள் புலம்பல், எதிர்பெய்து பரிதல், ஏதம்ஆய்தல், பசிஅடநிற்றல், பசலை பாய்தல், உண்டியில் குறைதல், உடம்புநனி சுருங்கல், கண் துயில் மறுத்தல், கனவொடு மயங்கல், பொய்யாக்கோடல், மெய்யே என்றல், ஐயம்செய்தல், அவன்தமர் உவத்தல், அறன்அளித்து உரைத்தல், ஆங்குநெஞ்சு அழிதல், எம் மெய் ஆயினும் ஒப்புமைகோடல், ஒப்புவழி உவத்தல், கலக்கம் என்பன களவிற்குச் சிறந்த மெய்ப்பாடுகள் ஆயினும் கற்பிற்கும் பயின்று வருவனவாம்.

முட்டுவயின் கழறல், முனிவு மெய்நிறுத்தல், அச்சத்தின் அகறல், அவன்புணர்வு மறுத்தல், தூதுமுனிவுஇன்மை, துஞ்சிச்சேர்தல், காதல்கைம்மிகல், கட்டுரைஇன்மை, என்ற எட்டும், தலைவியின் வரைதல் வேட்கையைப் புலப்படுத்தித் தோழி தலைவனைக் களவினை நீத்துத் தலைவியை வரைந்து கொள்ளுமாறு வேண்டுதற்கு வாய்ப்பாக அமையும் மெய்ப்பாடுகளாம்.

தெய்வம் அஞ்சல், புரைஅறம் தெளிதல், இல்லது காய்தல், உள்ளது உவர்த்தல், புணர்ந்துழி உண்மை, பொழுது மறுப்பு ஆக்கம், அருள்மிக உடைமை, அன்பு தொகநிற்றல், பிரிவு ஆற்றுமை, மறைந்தவை உரைத்தல், புறஞ்சொல் மாணாக்கிளவி என்ற பதினொன்றும் கற்புக் காலத்திற்கே சிறந்த மெய்ப்பாடுகளாம்.

நிம்பிரி கொடுமை வியப்பு புறமொழி வன்சொல் பொச்சாப்பு மடிமை குடிமை இன்புறல் ஏழைமை மறப்பு ஒப்புமை என்ற மெய்பாடுகள் நற்காமத்திற்கு ஆகாதனவாம்.

இம்மெய்ப்பாடுகள் முழுதும் தொல்காப்பியப் பொருட் படல மெய்ப்பாட்டியலையும், அதற்குப் பேராசிரியர் வரைந்த உரை விளக்கங்களையும், மிகப்பெரும்பான்மையும் பின் பற்றியே குறிக்கப்பட்டுள்ளன.

## எச்சம்

செய்யுளுள் வெளிப்படையாகக் கூறப்படாது, வெளிப் படையாகவோ குறிப்பாகவோ அறிந்து கொள்ளப்பட வேண்டிய செய்தி எச்சம் எனப்படும்.

## பொருள் வகை

அகப்பொருளின் ஐந்திணைக்குள்ளும் இன்னதற்கு உரியது என்று வரையறுத்துக் கூறுதற்கு இயலாது அவ் வைந்திணைக்கும் பொதுவாய் வரும் செய்தி பொருள்வகை எனப்படும்.

## துறை

பல்வேறு வகைப்பட்ட மாவும் மாக்களும் சென்று நீர் உண்ணும் நீர்த்துறைபோல, பல நிலப் பொருள்களும் ஒரு நிலக் கருப்பொருளாக மயங்கக் கூறப்படும் இடத்து அந் நிலத்து இயல்பில் பிறழாமல் கொள்ளப்படும் முறையும், கூறு வோரும் கேட்போரும் இன்றிக் கவி தானே கூறும் கவிக் கூற்றும் துறை எனப்படும்.

## உவமம்

பாடலிலே உவமப் பொருளும், கருப்பொருளோடு நட்புக்கொண்ட இறைச்சிப்பொருளும் திணையை உணர் தற்கு வாய்ப்பாகச் செய்யுளுள் கூறப்படும்.

உவமமாவது, உள்ளுறை உவமம் எனவும், வெளிப் படை உவமம் எனவும் இருவகைப்படும்.

உள்ளுறை உவமம் செய்தியை வெளிப்படையாகக் கூருது, பறவை விலங்கு முதலிய உபமானங்களைக் கொண்டே உபமேயமாகிய பொருளைக் குறிப்பான் அறியும் வகையில் வெளிப்படும்.

வெளிப்படை உவமமாவது வினையானும் பயனானும் வடிவானும் நிறத்தானும் உபமானத்தைக் கொண்டு உப மேயத் தன்மையைப் பெறப்படவைக்கும்.

## இறைச்சி

இறைச்சியாவது கருப்பொருள்களைக்கொண்டு நேராக உணரப்படாது கூறப்பட்ட செய்தியின்புறத்தே குறித்து உணரப்படுவதாகும்.

## சிறப்புடைய கைக்கிளை

காமம் சாலாத இளமைப் பருவத்தாள் ஒருத்தியிடம் முதிய தலைவன் ஒருவன், மருந்து பிறிதில்லாப் பெருந்துயர் எய்தி, தான் தக்கவன் எனவும், அவள் தன்னை வருத்தினாள் எனவும் கூறி, அவள் மறுமாற்றம் எதனையும் தான் பெருஞய், இங்ஙனம் அவளைப்பற்றிப் பேசுவதனாலேயே தான் மகிழ்வது. இஃது என்ஞான்றும் கைக்கிளையாகவே இருக்கும் சிறப்புடைய கைக்கிளையாம். இத்தகைய கைக்கிளை தலைமைப்பாடு இல்லாதாருக்கும் இழிகுலத்தாருக்குமே உரியது. மேலும், புலனெறி வழக்கில் இதுபயின்று வாராது அருகியே வரும் என்பதும் கொள்ளப்படும்.

## பெருந்திணை

தனைவன் மடல் ஏறுதலும் வரைபாய்தலும், தலைவி தலைவற்கு ஒத்தபருவத்தளாதல் — தலைவன் தலைவியினும் மிகவும் முதியவனுதல்—தலைவன் தலைவி ஆகிய இருவரும் முதுமைப் பருவத்தும் துறவு உள்ளம் சிறிதும் இன்றிக் காம

நுகர்ச்சியில் திளைத்தல்—ஆகிய பொருந்தாத்திறமும், தலைவி இருபத்துநான்காம் மெய்ப்பாட்டினைக் கடந்து ஏழாம் அவத்தை முதலியவற்றிற்குஉரிய அறிவுஅழிகுணன் உடையள் ஆதலும், காமமிகுதியானே எதிர்ப்பட்டுழித் தலைவன் தலைவியை வலிதின்பற்றிப் புணர்தலும் ஆகிய நான்கு நிலையும் கந்தருவத்துள்பட்டுப் பின்னர் வழுவிய பொருந்தாக் காமப்பெருந்திணைக் கூறுகளாகும். பிரமம், பிரசாபத்தியம், ஆரிடம், தெய்வம் என்ற மணங்கள் நான்குமே பெருந்திணைக்குச் சிறந்தன என்பதும், இந்நான்கும் அத்துணைச் சிறந்தன அல்ல என்பதும் கொள்ளப்படும்.

பாடல்களிலே பாட்டுடைத்தலைவன் பெயரும் கிளவித் தலைவன் பெயரும் வரும், கிளவித்தலைவனினும் பாட்டுடைத் தலைவனே மேம்பட்டவன் ஆவான்.

பாட்டுடைத் தலைவனுக்கு நிலப்பெயர்—வினைப்பெயர் பண்புப்பெயர்—குலப்பெயர்—இயற்பெயர்—என்ற ஐந்தும் கூறப்பெறும்.

கிளவித்தலைவனுக்கு இயற்பெயர் சுட்டுதல் கூடாது. சுட்டின்பாடல் புறத்திணையது ஆகும். ஏனைய நான்கு பெயரும் கூறப்பெறும்.

ஒரேபாடலில் பாட்டுடைத் தலைவன், கிளவித்தலைவன் என்ற இருவர் பெயரும் வருதலும், கிளவித்தலைவன் பெயர் ஒன்றே வருதலும், பாட்டுடைத் தலைவன் பெயர் ஒன்றே வருதலும், இருவர் பெயரும் வாராது நீங்குதலும் உண்டு.

அகப்பாட்டிற்குக் கூறிய இலக்கணங்கள் அகப்புறப் பாட்டிற்கும் ஒக்கும். ஆனால் அகப்பாட்டின் இலக்கணம் முழுமையும் அகப்புறப்பாட்டிற்கும் வருதல் வேண்டும் என்ற யாப்புறவு இன்று. புறத்திணைச்செய்திகள் முதற்பொருள் வாயிலாகவும், உவம வாயிலாகவும் அகப்பாட்டின்கண்

இடம்பெறினும் அவற்ருன் பாடலைப் புறப்பாட்டாகக் கொள்ளாமல் அகப்பாட்டாகவே கோடல்வேண்டும்.

இந்நூலில் அகப்பொருளுக்குக் கூறப்பட்ட இலக்கணங் களேயன்றி வேறுபிற சான்ருேர்செய்யுட்கண்வரினும், அவற்றையும் கூறப்பட்டனகொண்டு உணர்ந்து ஆங்காங்கு அடக்கிக்கொள்ளுதல் நற்பண்புடையார் கடனுகும்.



# இலக்கணவிளக்கம்-மூன்றாவது பொருளதிகாரம்

## முதலாவது அகத்திணை இயல்

### தற்சிறப்புப்பாயிரம்

373 உமைஉரு உருமடுத்து உலகுஇளைப்பு ஒழிக்கும்
இமையவன் அடிபணிந்து இயப்புவன் பொருளே.

என்பது சூத்திரம். மேல்பாயிரத்துள் 'எழுத்துமுதல் மூன்றையும்' என நிறுத்த முறையானே, எழுத்தும் சொல்லும் உணர்த்திப் பொருள் உணர்த்துகின்றார் ஆதலின், இவ்வதிகாரம் பொருளதிகாரம் என்னும் பெயர்த்து. பொருளை உணர்த்திய அதிகாரம் என விரிக்க. பொருள் என்றது அதன் இலக்கணம். அதிகாரம் என்றது முறைமை. பொருளாவது மேல் உணர்த்திப்போந்த சொற்றொடர் கருவியாக உணரப்படுவதாகலின், மேல்அதிகாரத்தோடு இயைபு உடைத்தாயிற்று. இவ்வதிகாரத்துள் ஐவகை ஓத்தினால் பொருள்இலக்கணம் உணர்த்துகின்றார். அவற்றுள், இம்முதல்ஓத்து அகத்திணை இயல்பு உணர்த்திற்று ஆகலான் அகத்திணையியல் என்னும் பெயர்த்து. அகம் என்றது உள்ளம், திணைஎன்றது ஒழுக்கம், இயல்என்றது இலக்கணம்; எனவே, அகத்திணையியல் என்றது உள்ளத்தின்கண்ணே நிகழும். இன்பமாகிய ஒழுக்கத்தினது இலக்கணம் என்றவாறு ஆயிற்று என்பது. இதனுள், இத்தலைச்சூத்திரம், கூறத்தொடங்கிய பொருள் இனிது முடியும்பொருட்டு வணக்கமும் அதனால் முடிபுஎய்தும் பொருளும் உணர்த்துவதாகிய சிறப்புப்பாயிரம் கூறுகின்றது.

(இ-ள்) உமாதேவியினது திருவுருவைத் தனது திருவுருவின்கண்ணே அடக்கி உலகத்து இளைப்பினை ஆற்றும் இறைவனது தாளை வணங்கி யான்சொல்லுவன் பொருள் இலக்கணத்தை என்றவாறு.

ஈண்டு உலகம் என்றது உலகினையும் உலகிலுள்ள சீவான்மாக்களையும், ஆகுபெயரால் பொருள் என்றது அதன் இலக்கணத்தையும் உணர்த்திநின்றன. ஏனையவற்றிற்கும் ஏற்குமாறு 'மலைமகள் ஒருபால்' (இ-வி-1) என்னும் சூத்திரத்திற்கு உரைத்தாங்குப் பொருள் விரித்து உரைத்துக்கொள்க. 1

விளக்கம்

பொருளதிகாரம், அகத்திணையியல் என்பனவற்றின் விளக்கம் நச்சினார்க்கினியத்தை ஒட்டி வரையப்பட்டன.

நச்சினார்க்கினியர் 'பொருளாவன அறம் பொருள் இன்பமும், அவற்றது நிலையின்மையும் அவற்றின் நீங்கிய வீடுபேறுமாம். பொருள் எனப் பொதுப்படக் கூறவே, அவற்றின் பகுதி ஆகிய முதல் கரு உரியும் காட்சிப்பொருளும் கருத்துப்பொருளும் அவற்றின் பகுதியாகிய ஐம்பெரும் பூதமும் அவற்றின் பகுதியாகிய இயங்குதிணையும் நிலைத்திணையும் பிறவும் பொருளாம்' (தொல். பொ.- 1) என்று விளக்கம் தந்துள்ளார்.

உமாதேவியின் திருவுருவைச் சிவபெருமான் தன்உருவில் அடக்குதல்,

'பெண்உரு ஒருதிறன் ஆகின்று அவ்வுருத்
தன்னுள் அடக்கிக் கரக்கினும் கரக்கும்'

புறநா. கடவுள்வாழ்த்து

என்பதனானும் பெறப்படும்.

உலகம் என்பது நிலத்தை உணர்த்தும்போதும், சீவான்மாக்களை உணர்த்தும்போதும் வேறுவேறு சொல் ஆயினும் எழுத்து ஒற்றுமைபற்றிப் பலபொருள் தரும் ஒருசொல்லாகக் கொள்ளப்படுகிறது. இதனைக் 'காலம் உலகம்' (தொல், சொ. 57) என்ற நூற்பாவில் சேனாவரையர் சுட்டியுள்ளார். எனவே, உலகம் என்பது சீவான்மாக்களை ஆகுபெயராய் உணர்த்துவது அன்று என்பது.

பொருள் என்பது ஆகுபெயராய்ப் பொருள் இலக்கணத்தை உணர்த்துதல், நாள்மீனின்பெயர் நாளிற்குப் பெயர் ஆயினாற்போல்வதோர் ஆகுபெயராம் என்பர் நச்சினார்க்கினியர் (தொ. பொ. 1 ந)

உலகு இளைப்பு ஒழிக்கும் இறைவன், பொருளிலக்கணம் உணராது இருக்கும் இளைப்பைப்போக்கி அறிவு வளர உதவுவான் என்பதாம்.

## பொருள் வகை

374 போக்குஅறு மரபின் பொருள்எனப் படுவது
நோக்குஅரும் வீடு நுவற்சிசெல் லாமையின்
அறம்பொருள் இன்பம் ஆகும் அதுவே
அகனும் புறனுமென்று ஆயிரு பாற்றாய்
வகைபட வந்த அணிநலம் தழீஇச்
செய்யுள் இடவயின் புல்லிய நெறித்தே.

இது 'மேல் கூறுவல்' என்ற பொருளாவது விரித்துக் கூறும் உலகநடையானும் வேதநடையானும் இத்துணைப் பகுதிப்படும் எனவும், அதுவே தொகுத்துக் கூறும் தமிழ் நடையான் இத்துணைப் பகுதிப்பட்டு இவ்வாறாக இன்னுழி விளங்கும் இயல்பிற்று எனவும் கூறுகின்றது.

இ-ள் : குற்றமற்ற இயல்பினை உடைய பொருள் என்று சிறப்பித்துச் சொல்லப்படுவது, மனத்தான் நோக்குதற்கு எட்டாத வீடு துறவறமாகிய காரணவகையால் கூறப்படுவது அல்லது இலக்கண வகையால் கூறுதற்கு எட்டாமையின், அதனைவிடுத்து, விரித்துக்கூறும் உலக நடையானும் வேதநடையானும், அறமும் பொருளும் இன்பமும் என மூன்று வகைப்படும். அங்ஙனம் விரித்துக் கூறப்படும் பொருளே, தொகுத்துக் கூறும் தமிழ்நடையான் அகப்பொருளும் புறப்பொருளும் என இரண்டு வகைத்தாய், குணமும் அலங்காரமும் எனக் கூறுபடவந்த அணியான் உளதாகிய சிறப்பினைப் பொருந்தி, செய்யுளிடத்தே சார்ந்து விளங்கும் இயல்பினை உடைத்தாம் என்றவாறு.

அறமாவது, மனுமுதலிய நூல்களின் விதித்தனசெய்த லும் விலக்கியன ஒழிதலுமாம். அஃது ஒழுக்கம் வழக்குத் தண்டம் என மூன்று வகைப்படும். அவற்றுள் ஒழுக்கமாவது அந்தணர் முதலிய வருணத்தார் தத்தமக்கு விதிக்கப்பட்ட பிரமசரியம் முதலிய நிலைகளில் நின்று அவற்றிற்கு ஓதிய அறங்களின் வழுவாது ஒழுகுதல். வழக்காவது, ஒருபொரு ளைத் தனித்தனியே எனது எனது என்று இருப்பார் அது காரணமாகத் தம்முள் மாறுபட்டு அப்பொருள்மேல் செல் வது. அது கடன்கோடல் முதலிய பதினெட்டுப் பதத்தாம். தண்டமாவது, அவ்வொழுக்கநெறியினும் வழக்குநெறி யினும் வழீஇயினோரை அந்நெறி நிறுத்தற்பொருட்டு ஒப்ப நாடி அதற்குத்தக ஒறுத்தல்.

இனி, இல்லறத்தின்வழிப் படுவனவாகிய பொருள் இன்பங்களுள், பொருளாவது அரசநீதி துணைக்காரணமாக ஈட்டப்படுவது. அது மணி பொன் நெல் முதலியனவாம். இன்பமாவது பொருள் துணைக்காரணமாக ஒரு காலத்து ஒரு பொருளான் ஐம்புலன்களும் நுகர்தற்சிறப்பு உடைய தாம். அறம் இம்மைமறுமைவீடு என்னும் மூன்றனையும் பயத்தலானும், பொருள் இம்மைமறுமை என்னும் இரண்ட னையும் பயத்தலானும், இன்பம் இம்மைஒன்றனையே பயத்த லானும் இம்முறைவைத்தார்.

'சிறப்புடை மரபின் பொருளும் இன்பமும்
அறத்துவழிப் படூஉம் தோற்றம்போல' புறநா. 31

என்றார் பிறரும் எனக்கொள்க.

அகம் முதலாயினவற்றின் விகற்பம் எல்லாம் மேலே கூறுப ஆகலின், அவை ஆங்காங்கு உணர்க. (2)

### விளக்கம்

உலகநடையானும் வேதநடையானும் உறுதிப் பொருள் மூன்று வகைப்படுதல் தமிழ்நூலாருக்கும் உடன் பாடாதல்,

' இன்பமும் பொருளும் அறமும் என்றாங்கு
அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கின் '
தொல். பொ. 92
' அந்நிலை மருங்கின் அறம்முத லாகிய
மும்முதற் பொருட்கும் உரிய என்ப ' ,, 418

என்ற தொல்காப்பிய நூற்பாக்களால் வலியுறும்.

' துறவறமாகிய .... .... ... ... எட்டாமையின் '

' அற்றது பற்று எனின் உற்றது வீடு ' என்று வீடுபேறு எய்துதற்கு உரிய வழி வகுத்துக் கூறப்பட்டுள்ளதேஅன்றி, வீட்டுலகத்தின் பரப்பு இயற்கைஅமைப்பு மாந்தர்நிலை விலங்குநிலை முதலிய முதல்கருஉரிப்பொருள்களைக் கூறுதல் நம்மனோர் அறிவிற்கு எட்டாது என்பதாம். பொருளாவது அகப்பொருள் புறப்பொருள் என்ற இரண்டனையும் அணிவகைகளோடு செய்யுளில் அமைத்துக் கூறுவதாகலின், பொருளதிகாரத்தில் அகத்திணையியல்-புறத்திணையியல்-அணியியல் -செய்யுளியல்-எஞ்சியவற்றைக் கூறும் பாட்டியல்-என்ற ஐந்து இயல்கள் அமைந்துள்ளன.

அறப்பொருள் இன்பம் என்பனவற்றின் விளக்கங்கள் பரிமேலழகர் திருக்குறளுக்கு வரைந்த உரைப்பாயிரத்தை ஒட்டி வரையப்பட்டுள்ளன.

ஒழுக்கமாவது — இன்னவை செய்யப்படல்வேண்டும் என்று வரையறுக்கப்பட்டவற்றைச் செய்து, இன்னவை தவிர்க்கப்படல்வேண்டும் என்று வரையறுக்கப்பட்டவற்றை நீக்குதலாம்.

வழக்காவது—ஒரே பொருளிடத்தில் ஒருவருக்கு மேற்பட்டவர் உரிமைபாராட்டி அதனை அவரவர் தாமே உடைமையாக்கும் செயலில் ஈடுபடுதல்.

தண்டமாவது—ஒழுக்கநெறியிலும் வழக்காடுதலிலும் தவறு செய்பவர்களை நல்வழிப்படுத்துவதற்காக நீதிநூல்களில் கூறியவாறு ஒறுத்தலைச் செய்து மீண்டும் நன்னெறிக்கண் நிற்கச்செய்தல்.

இன்பம் என்பது சிறப்பாகக் காம இன்பத்தையே குறிப்பதாம். அறத்தாற்றில் ஈட்டிய பொருளான் இன்பம் துய்க்கப்படுதலும், அறம் பொருள் இன்பம் என்ற முறைவைப்பின் காரணமும் விளக்கப்பட்டுள்ளன.

ஒத்த நூற்பா

அகத்ததும் புறத்ததும் ஆயிரு பகுதியின்
மிகுத்ததும் ஆகி விரிந்தது பொருளே. த. நெ. வி. 1
2

## அகமாவது இஃது என்பது

375 அகம்எனப் படுவது வகைஒரு மூன்றனுள்
இன்பம் என்னும் இயல்பிற்று ஆகி
அகத்துநிகழ் ஒழுக்கம் ஆதல் வேண்டும்.

இது, மேல் நிறுத்தமுறையானே அகப்பொருள் ஆவது இன்னது என அதன் இயல்பு கூறுகின்றது.

(இ—ள்) அகம் என்று சிறப்பித்துச் சொல்லப்படுவது, மேல் கூறிப்போந்த அறம் முதலாகிய மூவகைப்பொருள்களுள் இன்பம் என்னும் இயல்பினை உடைத்தாகி, உள்ளத்தின்கண்ணே நிகழும் ஒழுக்கமாதலை விரும்பும் ஆசிரியன் என்றவாறு.

ஒத்தஅன்பான் ஒருவனும் ஒருத்தியும் கூடுகின்ற கூட்டத்தில் பிறந்த இன்பம், அக்கூட்டத்தின் பின்னர், அவ்விருவரும் ஒருவருக்குஒருவர் தத்தமக்குப் புலனாக இவ்வாறு இருந்தது எனக் கூறப்படாததாய், யாண்டும் உள்ளத்து

உணர்வே நுகர்ந்து இன்பம் உறுவது ஒருபொருள் ஆதலின் அதனை 'அகம்' என்றார். எனவே, அகத்தே எழுகின்ற இன்பத்திற்கு அகம் என்றது ஓர் ஆகுபெயராம். (3)

### விளக்கம்

*நிறுத்தமுறை-சென்ற நூற்பாவில் நிறுத்தப்பட்டமுறை.*

அகம் என்பதன் விளக்கம் நச்சினார்க்கினியத்தை ஒட்டியே வரையப்பட்டுள்ளது தொ. பொ. 1

பொறிபுலன்களால் உணரப்படுவனவற்றையே உலகியல் மொழியால் உணர்த்தலாம்; மனத்தான் உணரப்படுவதை மொழியால் முழுதும் உணர்த்துதல் இயலாது என்பதாம். 3

### அகத்திணைகள்

376 அதுவே கைக்கிளை ஐந்திணை ஏனைப்
பெருந்திணை எனஎழு பெற்றித்து ஆகும்.

இது, மேல் அகம் எனப்பட்ட பொருட்கு வகையும் பெயரும் கூறுகின்றது.

(இ-ள்) மேல் அகப்பொருள் எனக் கூறிப்போந்த அகத்திணைதான், கைக்கிளைத்திணையும் ஐந்திணையும் ஒழிந்த பெருந்திணையும் என ஏழ் இயல்பினை உடைத்தாம் எ-று.

கைக்குடை கையேடு கைவாய்க்கால் எனப் பெருமையில்லாதனவற்றை வழங்குப ஆதலின், கை என்பது சிறுமை பற்றி வருவதோர் இடைச்சொல் என்றும், கிளை என்பது உறவு என்றும் பொருள்கொண்டு, கைக்கிளை என்பதற்குப் பெருமைஇல்லாத தலைமக்கள் கிளைமை என்று பொருள்கூறுவாரும் உளர். அற்றன்று; மேல் 'கைக்கிளை ஒருதலைக் காமம்' என்பதற்கு இயைய, அதற்கு யாம் ஒருமருங்கு பற்றிய கேண்மை என்றே பொருள் கூறுதும், ஐந்திணை ஐந்து திறத்தனவாகிய ஒழுக்கம். அவையாமாறு மேற்கூறுப.

எல்லாவற்றினும் பெரிதாகிய திணை ஆதலின் பெருந்திணை ஆயிற்று; என்னை? எண்வகை மணத்தினுள்ளும் கைக்கிளை முதல் ஆறுதிணையும் நான்கு மணம் பெறத் தான்ஒன்றுமே நான்குமணம் பெற்று நடத்தலான் என்பது 4

## விளக்கம்

கைக்குடை—சிறியகுடை; கைஏடு —சிறிய ஏடு; கை வாய்க்கால் — சிறிய வாய்க்கால்; கைக்கிளை என்பதற்குப் பெருமை இல்லாத தலைமக்கள் கிளைமை என்று எடுத்துக் காட்டுக்களுடன் பொருள்கொள்பவர் உரையாசிரியர். கைக்கிளை என்பது ஒருமருங்கு பற்றிய கேண்மை என்று பொருள் கொள்பவர் நச்சினார்க்கினியர்.

எண்வகை மணங்களாவன—அறநிலை, ஒப்பு, பொருள் கோள், தெய்வம், யாழோர்கூட்டம், அரும்பொருள்வினை, இராக்கதம், பேய்நிலை என்பன. இவற்றுள் அறநிலை முதலிய நான்கும் பெருந்திணைக்கும், யாழோர் கூட்டம்ஒன்றும் ஐந்திணைக்கும், ஏனைய மூன்றும் கைக்கிளைக்கும் உரியன;

‘ முன்னைய மூன்றும் கைக்கிளைக் குறிப்பே
பின்னைய நான்கும் பெருந்திணை பெறுமே ’
தொல். பொ. 105

என்பதனால்.

எழுதிணையுள் பெருந்திணை ஒன்றுமே, எண்வகை மணங்களுள் நால்வகை மணங்களுக்கு உரிமைபூண்டு நிற்ற லான் அப்பெயர்த்து ஆயிற்று. இக்கருத்து உரையாசிரியர் நச்சினார்க்கினியர் ஆகிய இருவருக்கும் உடன்பாடாம்.

### ஒத்த நூற்பாக்கள்

‘ கைக்கிளை முதலாப் பெருந்திணை இறுவாய்
முற்படக் கிளந்த எழுதிணை என்ப ’ தொல். பொ. 1

‘ மலர்தலை உலகத்துப் புலவோர் ஆய்ந்த
அருந்தமிழ் அகப்பொருள் கைக்கிளை ஐந்திணை
பெருந்திணை எனஎழு பெற்றித்து ஆகும். ’ ந. அ 1

‘ அகப்பொருள் புறப்பொருள் ஆம்இரண்டு அவற்றுள்
பெருகிய கைக்கிளை பெருந்திணை குறிஞ்சி
ஆதிஐந் திணைஎன அகப்பொருள் ஏழே
கைகோள் இரண்டாம் களவு கற்பே
வதுவை வாழ்க்கை வரைவுஅகப் பொருளே ’.

தொ. வி. 199

‘ அகப்பொருள் கைக்கிளை ஐந்திணை பெருந்திணை
எனஎழு வகைப்படும் என்மனார் புலவர் ’.

மு. வீ. அக. 1

4

## கைக்கிளை ஐந்திணை பெருந்திணைகள்

377 கைக்கிளை ஐந்திணை பெருந்திணை முறையே
ஒருதலைக் காமமும் அன்புடைக் காமமும்
பொருந்தாக் காமமும் பொருந்துதல் உடைய.

இது முற்கூறிய எழுவகைத்திணைக்கு உரிய காமப் பொருள் உணர்த்துகின்றது.

(இ-ள்) கைக்கிளையும் ஐந்திணையும் பெருந்திணையும் முறையானே ஒருதலைக்காமமும், ஒத்தகாமமும் ஒவ்வாக் காமமும் ஆகிய காமப்பகுதிகளைப் பொருந்துதல் உடையன வாம் என்றவாறு.

எனவே, அகத்திணை விகற்பம் ஆகிய ஏழனுள்ளும், அகம் எனச்சிறப்பித்துச் சொல்லப்படுவன ஐந்திணையே என்பதூஉம், ஏனை இருதிணையும் அத்துணைச் சிறப்புடைய அல்ல என்பதூஉம் கூறியவாறாயிற்று என்பது. 5

### விளக்கம்

கைக்கிளை—ஒருதலைக்காமமாகவே இறுதிவரை இருந்து அழிவதும், முதலில் ஒருதலைக்காமமாக இருந்து பின் அன் புடைக்காமம் ஆவதும் ஆம்.

பெருந்திணை—முதலில் பொருந்தாக் காமமாக இருந்து பின் பொருந்துவதாம்.

ஐந்திணை—தொடக்கம் முதலே இருவர்மாட்டும் அன்புடைக்காமமாய் அமைவது ஆதலின் ஐந்திணைக்காமமே சிறப்புடைத்தாம்.

ஒத்த நூற்பாக்கள்

'கைக்கிளை உடையது ஒருதலைக்காமம்'. ந. அ. 3
'ஐந்திணை உடையது அன்புடைக் காமம்'. ,, 4
'பெருந்திணை என்பது பொருந்தாக் காமம்'. 5
'அவற்றுள் கைக்கிளை ஒருதலைக் காமம்'. மு.வீ.அக.3
'அன்புடைக் காமம்ஐந் திணைவயின் படுமே'. ,, 4
'பொருந்தாக் காமம் பெருந்திணைப் பொருட்டே'. ,, 5

## அகத்திணையைப் பாடுமாறு

378 அவைதாம்,
புனைந்துரை உலகியல் எனும்திறம் இரண்டினும்
தொல்லியல் வழாமல் சொல்லப் படுமே.

இஃது எழுவகைத்திணையும் இத்துணைப்பகுதியான் இவ்வாறு கூறப்படும் என்கின்றது.

(இ-ள்) மேல் காமப்பகுதிக்கு உரிமை கூறிய அகத்திணை ஏழும் நாடகவழக்கும் உலகியல்வழக்கும் என்னும் இருபகுதியானும் சங்கம் மரீஇயினாரை உள்ளிட்ட சான்றோர் பாடலுள் பயின்று தொன்றுதொட்டு வரும்இயல்பில் திரியாது கூறப்படும் என்றவாறு.

ஈண்டு நாடகவழக்கு என்றது, எவ்விடத்தும் எக்காலத்தும் ஒப்ப நிகழும் உலகியல் போலாது, உள்ளோன் தலைவனாக இல்லது புணர்த்தல் முதலாகப் புனைந்துரை வகையால் கூறும் நாடக இலக்கணம்போல, யாதானும் ஒரோவழி ஒருசாரார்மாட்டு உலகியலான் நிகழும் ஒழுக்கத்திணை எல்

லார்க்கும் பொதுவாக்கி, இடமும் காலமும் நியமித்துக் கூறும் செய்யுள்வழக்கு என்றே கோடும். மற்று இல்லோன் தலைவனாக இல்லது புணர்க்கும் நாடக வழக்குப்போலப் புனைந்துரை வகையால் கூறுவது என்னின், உலகியல் இன்றும். இன்று ஆகவே, ஆகாயப்பூ நாறிற்று என்புழி, அது சூடக் கருதுவாரும் இன்றி, மயங்கிக் கூறினார் என்று உலகம் இழித்திடப்படுமாறுபோல இழித்திடப்படுதலானும், இல்லது ஒன்று கேட்டார்க்கு மெய்ப்பாடு பிறந்து இன்பம் செய்யாது ஆகலானும், உடன்கூறிய உலகியல் வழக்கினை ஒழித்தல்வேண்டும் ஆகலானும் பொருந்தாது என்க.

'அவைதாம்' எனப் பொதுப்படக் கூறினாரேனும், 'தொல்இயல் வழாமல்' என்றலின், இங்ஙனம் பயின்று வருதல் ஐந்திணையுமே ஆதலின் அவையே இவ்வாறு கூறப் படும் என்றும், ஏனைக் கைக்கிளையும் பெருந்திணையும் அங் ஙனம் பயின்று வாராமையின் சிறுபான்மை கூறப்படும் என்றும் உய்த்துஉணர்ந்து கொள்க.

வரலாறு :

மனைகெழு வயலை வேழம் சுற்றும்
துறைகேழ் ஊரன் கொடுமை நாணி
நல்லன் என்றும் யாமே
அல்லன் என்னும்எம் தடமென் தோளே.

(ஐங்குறு. 11)

'மனை நடு வயலை' என்பதும் பாடம்.

இவ்வைங்குறுநூற்றுள் முதற்பொருள் முதலிய மூன்றும் கூறலின் நாடக வழக்கும், தலைவனைத் தலைவி கொடுமை கூறல் உலகியல் ஆகலின், உலகியல்வழக்கும் உடன்வந்தன. இவ்விரண்டும் கூடிவருதலே புலன்நெறிவழக்கம் எனப்படும் எனக்கொள்க. புலன்நெறி வழக்கம் எனினும் செய்யுள் வழக்கம் எனினும் ஒக்கும்.

முளிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரல்
கழுவுறு கலிங்கம் கழாஅது உடீஇக்
குவளை உண்கண் குய்ப்புகை கமழத்
தான்துழந்து அட்ட தீம்புளிப் பாகர்
இனிதுஎனக் கணவன் உண்டலின்
நுண்ணிதின் மகிழ்ந்தன்று ஒண்ணுதல் முகனே.
(குறுந். 167)

இஃது உலகியல் வழக்கே வந்தது. பிறவும் அன்ன. 6

விளக்கம்

இவ்வாசிரியர் புலன்நெறி வழக்கத்திற்குக் கூறிய விளக்கம் தொல்காப்பியப் பொருட்படலம் 4, 53 ஆகிய நூற்பாக்களின் உரையில் நச்சினார்க்கினியர் உரைத்தனவேயாம்.

நாடக வழக்கு நான்கு வகைப்படும். அவையாவன: உள்ளோன் தலைவனாக உள்ளது புணர்த்தல், உள்ளோன் தலைவனாக இல்லது புணர்த்தல், இல்லோன் தலைவனாக உள்ளது புணர்த்தல், இல்லோன் தலைவனாக இல்லது புணர்த்தல் என்பன.

இங்குக் கூறும் நாடகவழக்காவது உள்ளோன் தலைவனாக இல்லது புணர்த்தலாம். உலகியலாவது எல்லா இடங்களிலும் எல்லாக் காலங்களிலும் நிகழும்; இங்குக் கூறும் நாடகவழக்காவது ஏதோ ஓரிடத்தில் ஏதோ ஒரு காலத்தில் நிகழக்கூடிய செயலை இன்ன இடத்தில் இன்ன காலத்தில் நிகழவேண்டும் என்று வரையறை செய்து, பின் அதனை எல்லோரிடமும் நிகழ்வது போலச் செய்யுளில் அமைப்பதாம். ஒரு காலத்தும் நிகழ்த்தல் இயலாதசெய்தியை விரித்துக் கூறின், அதனை நன்மக்கள் ஏலார். அச்செய்தி பரிகசிக்கப்படுமே அன்றிக் கேட்டார்க்கு இன்பம்தாராது ஆதலின், ஈண்டுக் கூறும் புலன்நெறி வழக்கம் உலகியலேயாம். அதனுள்ளும் ஐந்திணையே பெரும்பான்மையும் நிகழும். ஏனைய இருதிணையும் அருகியே வரும்.

'யாமோர் கூட்டம் இல்லது எனப்படாது உலகிய லாம்.' (தொ பொ. 498) என்று பேராசிரியரும், 'புணர்ச்சி யைக் களவு என்றும், பிரிவைக் கற்பு என்றும் பெரும் பான்மைபற்றி வகுத்து, அவற்றைச்சுவை மிகுதி பயப்ப உலக நடையோடு ஒப்பும் ஒவ்வாமையும் உடையவாக்கிக் கூறுகின்றார்' (காமத்துப்பால் - பாயிரவுரை) என்று பரிமேலழகரும், 'இஃது இல்லது எனப்படாது உலகியலே யாம்' (தொ. பொ. 3) என்று நச்சினார்க்கினியரும் அகப் பொருள் உலகியலை உடன்கொண்டது என்ற கருத்தினர். "நாடகவழக்காவது சுவைபடவருவன எல்லாம் ஓரிடத்துத் தொகுத்துக் கூறுதல்; உலகியல் வழக்காவது உலகத்தார் ஒழுகலாற்றோடு ஒத்து வருவது. புறப்பொருள் உலகியல்பான் அன்றி வாராமையின் அது நாடகவழக்கம் அன்று ஆயிற்று' (தொ. பொ. 56) என்ற உரையாசிரியரும் இக்கருத்தினரே. 'அகப்பொருள் இல்லோன் தலைவனாக இல்லது புணர்ப்பது' (தொ. சொ. 155) எனச் சேனாவரையரும், 'இல்லது' இனியது நல்லது என நாட்டப்பட்டது' எனப் பல இடங் களிலும் இறையனார்களவியல் உரையாசிரியரும் கூறியுள்ள னர். 'மனைகெழுவயலை' என்ற பாடலில், ஊர் என்ற முதற் பொருளும், ஊரன்-வயலை-வேழம்–என்ற கருப்பொருள்களும், ஊடலாகிய உரிப்பொருளும் கூறப்பட்டமை நாடக வழக் காம். தலைவனுடைய புறத்தொழுக்கம் பற்றித் தலைவி கொடுமை கூறுதல் உலகவழக்காம். எனவே, இப்பாடலில் நாடகவழக்கம் உலகியல் வழக்கம் என்ற இரண்டும் வந்தன.

'முளிதயிர்'— தயிரைப் பிசைந்து மோராக்கித் தாளிப்பின் புகை தன் கண்களை வாட்டத் தான் முயன்று சமைத்த மோர்க்குழம்பைக் கணவன் சுவைத்து உண்டமை யால் தலைவி முகம் மலர்ந்த செய்தி உலகியலில் காணப்படு வதே. இதன்கண் நாடக வழக்கிற்குரிய முதல் கரு உரிப் பொருள்கள் இடம்பெறவில்லை.

ஒத்த நூற்பாக்கள்

'நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்
பாடல் சான்ற புலனெறி வழக்கம்,' - தொல். பொ. 53
முழுதும் -ந. அ. 2
6

## ஐந்திணைகள்

379 குறிஞ்சி பாலை முல்லை மருதம்
நெய்தல் ஐந்திணைக்கு எய்திய பெயரே.

இது, மேல் ஐந்திணை என்றவற்றின் பெயரும் முறையும் கூறுகின்றது,

(இ-ள்) குறிஞ்சியும் பாலையும் முல்லையும் மருதமும் நெய்தலும் மேல் 'ஐந்திணை' எனக் கூறிப்போந்தவற்றிற்குப் பொருந்திய பெயராம் என்றவாறு.

முதற்பொருள் முதலிய மூன்றும்கொண்டே இவ்வைந்திணையாம் என மேற்கூறுப ஆதலின், இவற்றிற்கு இப்பெயரும் முறையும் முறையானே கருப்பொருள்பற்றியும் உரிப்பொருள்பற்றியும் ஆயினபோலும் என்பது. அற்றேல், கருப்பொருள் பலஅன்றே? அவற்றுள் குறிஞ்சி முதலாயினவற்றல் பெயர்பெற்றது என்னைஎனின்,

'கருங்கோல் குறிஞ்சி' —குறுந். 3 எனவும்,
'கோடுறு பல்காய் வால்இணர்ப் பாலை —நற். 107 எனவும்,
'முல்லையந் தண்பொழில்' எனவும்,
'மருத மரநிழல்' அக நா. 37 எனவும்,
'பாசடை நிவந்த கணைக்கால் நெய்தல் குறுந். 9 எனவும்

சான்றோரான் எடுத்துக்கூறப்படுதலின், அவற்றுள் அவை சிறத்தலான் என்க. உரிப்பொருள்பற்றி முறை ஆயினவாறு, மேல் உரிப்பொருள் உரைப்புழிக் காண்க. 7

### விளக்கம்

குறிஞ்சி முதலிய பெயர்கள் அவ்வந்நிலத்துக் கருப்பொருள்களாகிய பூக்களுள் சிறந்தனவற்றை அடிப்படையாகக்கொண்டே அமைந்தன என்பது உரையாசிரியர் கருத்து.

குறிஞ்சி முதலாகிய பெயர்கள் புணர்தல் முதலிய உரிப்பொருள்கள் பற்றி அமைந்தன என்பது நச்சினார்க்கினியர் கருத்து. 'முல்லை முதலிய பூவால் பெயர் பெற்றன இவ்வொழுக்கங்கள் எனின், 'அவ்வந்நிலங்களுக்கு ஏனைய பூக்களும் உரிய ஆகலின் அவற்றால் பெயர் கூறலும் உரிய' எனக் கடாவுவாற்கு விடையின்மை உணர்க' என்று நச்சினார்க்கினியர் உரையாசிரியர் கருத்தினை மறுத்துள்ளார். முல்லை முதலிய பெயர்க்காரணங்களைத் திரு மு. இராகவ ஐயங்கார் தம் பொருளதிகார ஆராய்ச்சியில் விரிவாகக் கூறியுள்ளார்.

பூக்களால் நிலன்கள் பெயர்பெற்றமைக்குச் சங்கப் பாடல்களிலிருந்து எடுத்துக்காட்டுக்கள் தரப்பெற்றுள்ளன. இவ்வாசிரியர் திணைப்பெயரீட்டிற்கு உரையாசிரியர் நச்சினார்க்கினியர் என்ற இருவர்கருத்தையும் ஏற்றுக்கொண்டவராவர்.

உரிப்பொருள் 21-ஆம் நூற்பாவில் விளக்கப்பெறும்.

### ஒத்த நூற்பாக்கள்

'மாயோன் மேய காடுறை உலகமும்
சேயோன் மேய மைவரை உலகமும்
வேந்தன் மேய தீம்புனல் உலகமும்

வருணன் மேய பெருமணல் உலகமும்
முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனச்
சொல்லிய முறையான் சொல்லவும் படுமே'.

தொல். பொ. 5

'அவற்றுள்,

'நடுவண் ஐந்திணை நடுவணது ஒழியப்
படுதிரை வையம் பாத்திய பண்பே'. தொல் பொ. 2

'முழுதும் ந. அ 6

'முல்லை குறிஞ்சி பாலை மருதம்
நெய்தல் ஐந்திணைக்கு எய்திய பெயரே'.

தொ. வி. 174
மு. வீ. அக. 8

7

## மூவகைப் பொருள்கள்

அவைதாம்,

380 முதற்பொருள் கருப்பொருள் உரிப்பொருள் எனமுறை
நுதற்பொருள் மூன்றினும் நுவலப் படுமே.

இது, மேல் குறியீடு எய்திய ஐந்திணையும் இப்பொருட் பகுதிபற்றித் திணையாம் என்கின்றது.

(இ-ள்) மேல் குறிஞ்சி முதலிய குறியீடு எய்திய ஐந்திணையும் முதற்பொருளும் கருப்பொருளும் உரிப்பொருளும் என முறையானே பாடலுள் பயின்றவாற்றான் ஒன்றின் ஒன்று சிறந்தமை கருதுதல்உடைய பொருள் மூன்றனும் திணை ஆதல் கருதப்படும் என்றவாறு.

கருப்பொருள் தோற்றுதற்கும் உரிப்பொருள் நிகழ்தற்கும் காரணமாய் முதல் நிற்றலின் முதற்பொருள் என்றும், அம்முதற்பொருளால் தோன்றுதல்பற்றிக் கருப்பொருள் என்றும், இவை இரண்டினும் சிறந்து திணைக்கு உரித்தாய் நிற்றலின் உரிப்பொருள் என்றும் ஆயின என்பது. ஒன்றின் ஒன்று சிறத்தலாவது முதலில் கருவும் கருவில் உரியும்

சிறந்து வருதலாம். உம்மையான், மூன்றனும் அவற்றுள் சிலவற்றனும் நுவலப்படும் எனக்கொள்க. உதாரணம் மேல் பெறப்படும். 8

விளக்கம்

உரை நச்சினர்க்கினியத்தை ஒட்டியது தொல். பொ. 3

ஒத்த நூற்பாக்கள்

'முதல்கரு உரிப்பொருள் என்ற மூன்றே
நுவலுங் காலை முறைசிறந் தனவே
பாடலுள் பயின்றவை நாடுங் காலை' தொல். பொ. 3
முதல்கரு அணைந்த உரிப்பொருள் அகமே'.
த. நெ. வி. 2]
முழுதும் ந. அ. 7
முதல்கரு உரிப்பொருள் மூன்று கும்மே'.
மு. வீ. அக. 6
8

## முதற்பொருள் வகைகள்

381 நிலனும் பொழுதும்என முதல்இரு வகைத்தே.

இது, நிறுத்த முறையானே முதற்பொருள் இத்துணைப் பகுதித்து என்கின்றது.

(இ-ள்) நிலமும் பொழுதும் என முதற்பொருள் இரண்டு கூற்றினை உடைத்தாம் என்றவாறு 9

விளக்கம்

நிறுத்தமுறை — சென்ற நூற்பாவில் நிறுத்தியமுறை.

ஒத்த நூற்பாக்கள்

'முதல்எனப் படுவது நிலம்பொழுது இரண்டின்
இயல்புஎன மொழிப இயல்புஉணர்ந் தோரே'.
தொல். பொ. 4
முழுதும் ந. அ. 8

‘ முதல்நிலம் பொழுது இரு வகைப்படும் எனலே’.

மூ. வீ. அக. 7

9

## நிலத்தின் வகைகள்

382 வரையே சுரமே புறவே பழனம்
திரையே அவையவை சேர்தரும் இடனே
எனாஅ ஐரைந்தும் இயம்பிய நிலன்அவை
குறிஞ்சி முதலா அகன்ஐந் திணைக்கும்
உறும்திற முறையான் இரண்டுஇரண்டு உரிய

இது, மேற்கூறிய நிலன் என்னும் முதற்பொருள் இத்துணைப் பகுதித்து என்பதூஉம், அப்பகுதிகளுள் இப்பகுதி இத்திணைக்கு உரித்து என்பதூஉம் கூறுகின்றது.

(இ-ள்) வரையும் சுரமும் காடும் பழனமும் கடலும்' அவ்வவற்றைச் சார்ந்த இடனும் ஆகிய பத்து வகையினை உடைத்தாம் முற்கூறிய நிலன் என்னும் முதற்பொருள். அங்ஙனம் கூறப்பட்ட பகுதிகள் குறிஞ்சி முதலாகிய நடுவண் ஐந்திணைக்கும் பொருந்தும் பகுதிக்கண் முறையானே இரண்டிரண்டு உரியனவாம் என்றவாறு.

அவற்றுள்,

நடுவண் ஐந்திணை நடுவணது ஒழியப்
படுதிரை வையம் பாத்திய பண்பே’

(தொல். பொ. 2)

என்ப ஆகலின், பாலைத்திணைக்கு நிலம் கூறுதல் மலைவாம் பிற எனின், மதுரைக்காஞ்சியுள் ‘ பாலை சான்ற சுரஞ்சேர்ந்து ஒருசார் ’ (314) என்பதனானும் பிறவாற்றானும் மலைவு ஆகாது அமைவுடைத்து என்க. 10

### விளக்கம்

குறிஞ்சி — மலையும் மலைசார்ந்த இடமும்;
பாலை — வறண்ட பகுதியும் அது சார்ந்த இடமும்;

முல்லை — காடும் காடுகள் சார்ந்த இடமும்;
மருதம் — வயலும் வயல் சார்ந்த இடமும்;
நெய்தல் — கடலும் கடல் சார்ந்த இடமும்.

இவ்வாறு நிலன் பத்துப்பகுதியினை உடைத்து.

'அவற்றுள், நடுவண் .... பண்பே'-

முற்கூறிய எழுதிணையுள், கைக்கிளை பெருந்திணைக்கு நடுவுநின்ற ஒழுக்கத்தினை, ஒலிக்கும் திரை சூழ்ந்த உலகிற்கு ஆசிரியன் பகுத்துக்கொடுத்த இலக்கணத்தை, நடுவணதாகிய பாலையை அவ்வுலகம் பெறாதே நிற்கும்படியாகச் செய்தார் என்றவாறு.

குறிஞ்சியும் முல்லையும் பல ஆண்டுகள் மழையின்றி ஒழியின் வன்பாலையாகும்; அவையே மீண்டும் மழைவளம் பெறின் முறையே குறிஞ்சியும் முல்லையும் ஆகும்; மருதமும் நெய்தலும் பல ஆண்டுகள் மழைவளம் பெறாது ஒழியின் மென்பாலையாகும்; அவையே மீண்டும் மழைவளம் பெறின் முறையே மருதமும் நெய்தலும் ஆகும் ஆதலின், தொல்காப்பியனார் பாலைக்கு எனத் தனியே நிலம் கூறவில்லை.

மதுரைக்காஞ்சியில் ஏனைய நான்கு நிலங்களோடு பாலையும் வருணிக்கப்பட்டுள்ளது. பாலைக்கலியும், பாலைக்குறுநூறும், அகநானூற்றுள் ஒற்றைப்படை எண்ணுடைய பாடல்களும்; நற்றிணை குறுந்தொகைப் பாடல்கள் சிலவும் பாலை நில வருணனை தருதலின்' பின்னுள்ளோர் பாலையைத் தனிநிலமாகக் கூறுதல் முன்னோர் 'நூலொடு முரணாது என்பதாம்.

'முதலொடு புணர்ந்த யாழோர் மேன
தவலருஞ் சிறப்பின் ஐந்நிலம் பெறுமே'
(தொல். பொ. 106)

எனத் தொல்காப்பியனாரும் பாலைக்கு நிலன் உடன்படாததும் நோக்குக.

ஒத்த நூற்பாக்கள்

'மாயோன் மேய காடுறை உலகமும்'
சேயோன் மேய மைவரை உலகமும்
வேந்தன் மேய தீம்புனல் உலகமும்
வருணன் மேய பெருமணல் உலகமும்
முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல்எனச்
சொல்லிய முறையான் சொல்லவும் படுமே'.
தொல். பொ. 5

'வரையே .... நிலன்அவை ந. அ. 9

'பொருப்பே வெம்பரல் புறவொடு பழனம்
பரப்புஅமை வாரி குறிஞ்சிமுதல் பாகே'. த.நெ.வி. 3
வரையே வனமே சுரமே மருதம்
திரையே அவை அவை சேர்தரும் இடனே'.
தொ. வி. 174
மு. வீ. அக. 9

10

## பொழுதின் பாகுபாடு

383 பெரும்பொழுது என்று சிறுபொழுது என்று
இரண்டு கூற்றது இயம்பிய பொழுதே.

இது மேற்கூறிய பொழுது என்னும் முதற்பொருளின் பாகுபாடு உணர்த்துகின்றது.

(இ-ள்) மேல் சொல்லப்பட்ட பொழுது என்னும் முதற் பொருள் பெரும்பொழுது என்றும் சிறுபொழுது என்றும் இரண்டு பகுதியினை உடைத்து என்றவாறு.

விளக்கம்

'மேற்கூறிய' என்றது இவ்வியல் ஒன்பதாம் நூற்பாவினை.

ஒத்த நூற்பாக்கள்

முழுதும் — ந. அ 10

'காலமே பருவம் பொழுதென இரண்டாம்'.

தொ. வி. 166

'காலம் பருவம் பொழுதுஇரு வகைப்படும்'.

மு வீ. அக. 10

11

## பெரும்பொழுதின் வகைகள்

384 காரே கூதிர் முன்பனி பின்பனி
சீர்இள வேனில் வேனில் என்றுங்கு
இருமூன்று திறத்தது பெரும்பொழுது அவைதாம்
ஆவணி முதலா இரண்டுஇரண்டு ஆக
ஆடி இறுதிய ஆயுங் காலே

இது நிறுத்த முறையானே பெரும்பொழுது இப்பகுதித்து என்பதூஉம், அப்பகுதிகள் இக்கால வரையறைய என்பதூஉம் உணர்த்துகின்றது.

(இ-ள்) கார்முதலாக வேனில் ஈறுகச் சொல்லப்பட்ட ஆறு பகுதியினை உடைத்தாம் பெரும்பொழுது. அங்ஙனம் பகுதிப்பட்ட பெரும்பொழுதின் ஆறுவகைகள்தாம் கால உரிமை எய்திய ஞாயிற்றிற்கு உரிய சிங்கவோரை முதலாக, இரண்டுஇரண்டு ஓரையாகத் தண்மதிக்கு உரிய கற்கடக ஓரை ஈறுக வந்து முடிவனவாம் ஆராயுங்காலத்து என்றவாறு. 12

### விளக்கம்

காலஉரிமை எய்திய ஞாயிறு - சூரியனைக்கொண்டு காலத்தைக் கணக்கிடும் முறையைச் சொல்லுகிறது. சிங்கவோரை ஆவணிமாதம்; சிங்கவோரை ஞாயிற்றிற்குரியது. கற்கடகவோரை ஆடிமாதம்; கற்கடகவோரை சந்திரனுக்கு உரியது என்பதாம்.

எனவே, ஆவணிபுரட்டாசி—கார்; ஐப்பசி கார்த்திகை—கூதிர்; மார்கழி தை-முன்பனி; மாசிபங்குனி-பின்பனி; சித்திரை வைகாசி-இளவேனில்; ஆனி ஆடி - முதுவேனில் எனக்கொள்க.

ஒத்த நூற்பாக்கள்

‘ கூதிர் வேனில் கொழுங்கார் ஒழிபனி,
வேனில் முன்பனி மெய்உயர் பொழுதே ’.
த. நெ வி 4

‘ காரே .... .... பெரும் பொழுதே’. ந. அ. 11

‘ பருவம்கார் கூதிர்பனி முன்பின் வசந்தம்
எரிமுதிர் வேனில் என்றிரு மூன்றே’. தொ. வி. 166

‘ பருவம் காரே கூதிர் முன்பனி
பின்பனி இளவேனில் முதுவேனில் ஆறே’.
மு. வீ. அக. 11

‘ ஆவணி முதலா ஆடிஈ ருக
இரண்டிரண் டாக ஏற்கும் என்ப’. ,, 12

12

## சிறு பொழுதின் வகைகள்

385 மாலை யாமம் வைகறு என்ரு
காலை நண்பகல் எற்பாடு என்ரு
அறுவகைத்து என்ப சிறுபோழுது அவைதாம்
படுசுடர் அமையம் தோடங்கி ஐஇரு
கடிகை அளவைய காணுங் காலே.

இது, மேற்கூறிய சிறுபொழுது இப்பகுதித்து என்பதூஉம், அப்பகுதிகள் இத்துணைக் கால வரையறைய என்பதூஉம் கூறுகின்றது.

(இ-ள்) மாலையும் இடையாமமும் வைகுறுவும் காலையும் நண்பகலும் எற்பாடும் என்ற ஆறுபகுதியினை உடைத்துச் சிறுபொழுது என்று கூறுவர் ஆசிரியர். அங்ஙனம்

அறுவகைப்பட்ட சிறுபொழுதுகள்தாம், அத்தம் சென்று அடைந்த ஞாயிற்றினது அமையம் தொடங்கி ஒரோஒன்று பப்பத்து நாழிகை அளவை உடையனவாம் ஆராயுங் காலத்து என்றவாறு.

உதயம்தொடங்கி அதன்வழி உதயம்காறும் ஒருவாரமாம் அன்றே? அதன் அமையத்தைக் 'காலஉரிமை எய்திய ஞாயிற்றின்மேல் ஏற்றிப் 'படுசுடர் அமையம்' என்றும், 'வைகுறு விடியல் மருதம்' (தொல். பொ. 8) என ஆசிரியர் தொல்காப்பியனார் ஓதிய 'வைகுறு விடியல்' என்பதற்குப் பொருள் காணாது அதனை ஒருபொழுதாகவும் கொண்டார்.

'மாலை யாமம் வைகறை எற்படு
காலை வெங்கதிர் காயும் நண் பகல்எனக்
கைவகைச் சிறுபொழுது ஐவகைத்து ஆகும்'
ந. அ. 12

என்பர்மன்;

இனிச் செவியறிவுறுத்தலைச் செவியறிவுறூஉ என்றாற் போல, வைகுறுவை வைகுறுதல் எனக்கொண்டு வைகுறுதலும் விடியலும் என்று உம்மைத்தொகையாக நோக்கின் சிறுபொழுது அறுவகைத்து என்பார் 'காணுங்கால்' என்றும் கூறினார். எனவே, மாலையும் இடையாமமும் கழியும் துணையும் அக்கங்குல் வைகுறுதலை 'வைகுறு' என்றார் என்பது ஆயிற்று. கங்குல் வைகி அறுதி ஆதலைநோக்கி வைகறை எனவும் பாடம் ஓதுப. நாள்வெயிற்காலையை விடியல் என்றார்:

'விடியல்வெங் கதிர்காயும் வேய்அமல் அகல்அறை
(கலி. 45)

என்ப ஆகலின்.

'விடியல் வைகறை இடூஉம் ஊரன்'. அக நா. 196

என்றது, விடியற்கு முன்னர்த்தாகிய வைகறை என உருபு தொக்கு முன்மொழி நிலையல் ஆயிற்று. 13

## விளக்கம்

60 நாழிகை 24 மணியாகவே மணிக்கு $2\frac{1}{2}$ நாழிகையாகச் சிறுபொழுது ஒவ்வொன்றும் நான்கு நான்கு மணி அளவிற்றும். மாலை—இரவு 6-10 மணி; யாமம்-இரவு 10 முதல் 2 மணி; வைகறை—இரவு 2 மணி முதல் 6 மணி; காலை—6 முதல் 10 மணி; பகல்— 10 முதல் 2 மணி; எற்பாடு பிற்பகல் 2 முதல் 6 மணி எனக்கொள்க.

'வைகுறு விடியல்' என்ற தொடருக்கு வைகுறவும் விடியலும் என்று பொருள்செய்துகொண்டு, விடியல் என்பதற்குக் காலை என்று பொருள்கொள்ளுதல் வேண்டும். வைகுறு விடியல் என்பதனை இருபெயரொட்டாக்கி வைகுறுவாகிய விடியல் என்று பொருள்கொண்டு, இரவின் கடைப் பகுதியைக் கொண்டார் நம்பிஅகப்பொருள் நூலார். அவர் சிறுபொழுது ஐந்தே எனக்கொண்டு மாலை, யாமம், வைகறை, எற்படுகாலை, பகல் என்று பகுத்தார்; ஆனால் சிறுபொழுதுகளுக்கு நேரவரையறை குறிப்பிடவில்லை. சிவஞானமுனிவர் இவர்கருத்தையே பின்பற்றிச் சிறுபொழுது ஐந்தனுக்கும் ஒவ்வொன்றிற்கும் பத்து நாழிகை வகுத்துப் பிற்பகலாகிய இரண்டுமணி முதல் ஆறுமணிவரை உள்ள நேரத்தைப் பயனற்ற நேரம்என்று தள்ளியதோடு, 'நெய்தலின் உரிப்பொருளாகிய இரக்கத்திற்கு வீடியற்காலத்தை அடுத்த காலைப்பொழுதே ஏற்றது' எனச் சான்றோர் செய்யுட்கள் பலவற்றிற்கும் மாறுபாடாக உரைத்துள்ள செய்தியைச் சூத்திரவிருத்தியில் காண்க. நம்பிஅகப்பொருள் நூலார் முதலியோருக்கு எற்படுகாலை என்பது கதிரவன் தோன்றும் காலைப்பொழுதாம். தொல்காப்பிய உரையாசிரியர்களுக்கும் இவ்வாசிரியருக்கும் எற்பாடு என்பது கதிரவன் சாயத்தொடங்கும் பிற்பகல் நேரமாம்.

மாலைப்பொழுதும் இடையாமப்பொழுதும் நீங்கும்வரை செறிந்திருந்த கங்குல் இறுதியில் தங்கியிருக்கும் நேரம்

வைகுறுவாம்; இனி, அக்கங்குல் தங்கிக் கழிந்துபோகும் நேரம் என்பதும் ஆம்.

விடியல் வெங்கதிர் — விடியற்காலத்தில் தோன்றும் விரும்பத்தக்க கதிரவன். வைகுறு பற்றிய விளக்கம் யாவும் நச்சினார்க்கினியர் உரைத்தனவே. (தொல். பொ. 8 நச்)

முன்மொழி நிலையல் — வைகறை என்ற சொல்லில் பொருள் சிறத்தல்

சிறுபொழுது ஐந்தே என்பதனை வலியுறுத்த முற்படும் முனிவர்

'காலையும் பகலும் கையறு மாலையும்
ஊர்துஞ்சு யாமமும் விடியலும் என்றுஇப்
பொழுதுஇடை தெரியின் பொய்யே காமம்'.
குறுந். 32

என்னும் குறுந்தொகைப் பாட்டினுள் சிறுபொழுது ஐந்தே கொள்ளப்பட்ட செய்தியையும், 'விடியல் வெங்கதிர்' (கலி. 45) என்பதற்கு விடியற்குப்பின்னர்த்தாகிய வெங்கதிர் என்பதே பொருள் என்ற விளக்கத்தையும் சூத்திரவிருத்தியில் குறிப்பிட்டுள்ளார். நம்பி அகப்பொருள் நூலாரைப் பின் பற்றிச் சிறுபொழுது ஐந்து என்ற சிவஞானமுனிவரைப் பின்பற்றி முத்துவீரிய நூலாரும் சிறுபொழுது ஐந்தே என்றார். இவ்வாசிரியர் தொல்காப்பியனாரை ஒட்டிச் சிறு பொழுது ஆறே எனக் கொண்டுள்ளார்.

'சிறுபொழுது ஐந்து சாலாது; ஆறே' என்ற கருத்தை, திரு கணேசையர் அவர்கள் விரிவாக விளக்கியுள்ளார்கள்.
செந்தமிழ்த் தொகுதி 29- பகுதி 10

ஒத்த நூற்பாக்கள்

'மாலை யாமம் வைகறை எற்படு
காலை வெங்கதிர் காயும்நண் பகலெனக்
கைவகைச் சிறுபொழுது ஐவகைத்து ஆகும்..
ந. அ. 12

'இருள்நிலை உச்சி மாலை வைகறை
பொருள்நிலை அந்தி புணர்க்கும் பொழுதே'.
த. நெ. வி. 5

'பொழுதென மாலைக்கு ஏழுயாமம் வைகறை
எல்தோற்றம் நண்பகல் ஏற்பாடென ஆறே'.
தொ. வி. 173

'மாலைக்கு உரிமை மலர்தல்உற் பலம்புள்
சோலைசேர்ந்து ஒலித்தல் சுரபி கரைதல்
துன்அடைத் தாமரை சுளித்தெனக் கூம்பல்
கன்னடம் காம்போதி கனியப் பாடலே'.
தொ. வி. 173

'யாமத்து உரிமை ஆகரி பாடரி
பூமன் சகோரம் உவரி உவத்தலே
காமம் அறிதகம் கரவுஎன்று இவையே'. ,,

'வைகறைக்கு உரிமை வாரணம் கூவல்
மெய்யெனக் களுஉறல் மீன்ஒளி குன்றல்
வாமமீன் உதித்தல் மாதவர் வாழ்த்தல்
இராம கலியுடன் இந்தோளம் பாடலே'. ,,

'விடியற்கு உரிமை விலங்கொடு மற்றுஉயிர்
குடிமகிழ்ந்து எழுச்சி காஞெடு கமலம்
விரிபூ மலர்தல் வெண்பனி துளித்தல்
தெரிபூ பாளம் தேசாட்சி பாடலே'. ,,

'நண்பகற்கு உரிமை நயத்தல் கோகம்
வெண்தேர் ஓடல் மேதிநீ ராடல்
பண்டுஇசை சாரங்கம் பாடல் என்பவே'. ,,

'ஏற்பாட்டு உரிமை ஏற்பால் நிழல்நீளல்
வானம் சிவத்தல் மறியினம் குதித்தல்
கானமாய்க் காபி கல்யாணி பாடலே'. ,,

'மாலை யாமம் வைகறை ஏற்பாடு
நண்பகல் சிறுபொழுது ஐவகைத்து ஆகும்'.
மு. வீ அக. 13

13

## காலங்களுக்குத் திணைஉரிமை

அவற்றுள்,

376 கூதிர் யாமம் முன்பனி என்றுஇவை
ஓதிய குறிஞ்சிக்கு உரிய ஆதலும்
வேனில் நண்பகல் பின்பனி என்றுஇவை
பான்மையின் உரிய பாலைக்கு ஏற்றலும்
மல்குகார் மாலை முல்லைக்கு வகுத்தலும்
மருதம் நெய்தல் என்றுஇவை இரண்டற்கும்
உரிய பெரும்பொழுது ஆறேடு முறையே
வைகுறு விடியல் மருதத்திற்கு உறுதலும்
வெய்யோன் பாடு நெய்தற்குச் சிறத்தலும்
எய்தும் என்மனார் இயல்புஉணர்ந் தோரே.

இது மேற்கூறிய காலப்பகுதிகள் திணைக்கு உரிய ஆமாறு கூறுகின்றது.

(இ-ள்) மேற்கூறிய காலம் என்னும் முதற்பொருள் பகுதி பன்னிரண்டனுள் கூதிர்க்காலமும் இடையாமமும் முன்பனிக்காலமும் என்று கூறப்பட்ட காலப்பகுதிகள் மேற் கூறிய குறிஞ்சித் திணைக்குச் சிறந்தன ஆதலும், வேனிற் காலமும் நண்பகலும் பின்பனிக்காலமும் என்று கூறப்பட்ட காலப்பகுதிகள் ஊழான் அடுத்த பாலைத்திணைக்குச் சிறந்தன ஆதலும், கருப்பொருள் பொலிதற்குக் காரணம் ஆகிய கார் காலமும் மாலையும் முல்லைத்திணைக்குச் சிறந்தனவாகக் கூறுதலும், மருதமும் நெய்தலும் என்று கூறப்பட்ட இரு திணைக்கும் சிறந்த பெரும்பொழுது ஆறெடும் முறையானே வைகுறுவும் விடியலும் மருதத்திணைக்குச் சிறந்தன ஆதலும், எற்பாடு நெய்தல்திணைக்குச் சிறந்தது ஆதலும் பொருந்தும் என்று கூறுவர் அகப்பொருள் இலக்கணங்களை அறிந்தோர் என்றவாறு.

கூதிர் வேனில் என்பனவற்றோடு முன்பனிபின்பனிகளைச் சாரக் கூறுது பிற்படக்கூறினர், இவை அவைபோலச் சிறந்தன அல்ல என்பது உணர்த்துதற்கு என்க. **14**

**விளக்கம்**

| திணை | பெரும்பொழுது | சிறுபொழுது |
|---|---|---|
| குறிஞ்சி | கூதிர், முன்பனி | யாமம் |
| பாலை | வேனில், பின்பனி | நண்பகல் |
| முல்லை | கார் | மாலை |
| மருதம் | ஆண்டுமுழுதும் | வைகுறு, விடியல் |
| நெய்தல் | ஆண்டுமுழுதும் | எற்பாடு |

**ஒத்த நூற்பாக்கள்**

'காரும் மாலையும் முல்லை குறிஞ்சி
கூதிர் யாமம் என்மனார் புலவர்.' தொ. பொ. 6
'பனிஎதிர் பருவமும் உரித்து எனமொழிப.' ,, 7
'வைகுறு விடியல் மருதம் எற்பாடு
நெய்தல் ஆதல் மெய்பெறத் தோன்றும்.' ,, 8
'நடுவுநிலைத் திணையே நண்பகல் வேனிலொடு
முடிவுநிலை மருங்கின் முன்னிய நெறித்தே.' ,, 9
'பின்பனி தானும் உரித்துஎன மொழிப'. ,, 10
'கூதிர் யாமம் முன்பனி என்றுஇவை
ஓதிய குறிஞ்சிக்கு உரிய ஆகும்'. ந. அ. 13
'வேனில் நண்பகல் பின்பனி என்றுஇவை
பான்மையின் உரிய பாலை தனக்கே'. ,, 14
'மல்குகார் மாலை முல்லைக்கு உரிய'. ,, 15
'இருள்புலர் காலை மருதத்திற்கு உரித்தே'. ,, 16
'வெய்யோன் பாடு நெய்தற்கு உரித்தே'. ,, 17
'மருதம் நெய்தல் என்று இவை இரண்டற்கும்
உரிய பெரும்பொழுது இருமூன் றும்மே'. ,, 18

'கார்காலத்து உரிமை கார்கால் உருட்டிய
வாடையே கோபம் மயிலே கேகயம்
கோடல்செங் காந்தள் கொன்றைகூ தாளம்
தண்டிமில் உயவை தளவுகடப் பஞ்சனி
வெண்குருந்து அலர்தலே வியங்கம் கிளிகுயில்
நீங்கலே நீர்மலர் ஏங்கல் என்ப'. தொ. வி. 167

'கூதிர்க்கு உரிமை கூதிரே குருகே
ஓதிமம் குரண்டம் ஒண்மதிச் சகோரம்
முதுவலே ஞெண்டுஊரும் நத்து வத்தல்
நீரே தெளிதல் நீர்மீன் சனித்தல்
காரே சூல்கொளல் பாரிசா தம்சந்து
ஆரம் பித்திகை அந்தாரம் நாணல்
முற்றவந் துலத்தலே மற்றுயிர் நைதலே'. ,, 168

'முன்பனிக் குரிமை துன்பனிக் கடல்தரும்
கொண்டல் வீசலும் கூண்டசை சிதகன்
மண்டிருள் கூகைகூன் மனம்மலிந்து ஒலித்தலும்
மாந்தரு சாமந்தம் மலர்தலும் இலந்தை
தீங்கனி உதிர்தலும் தீஎனக் குன்றி
காய்த்தலும் நெல்லொடு கரும்புமுற் றலுமாம்'. ,, 169

'பின்பனிக்கு உரிமை பேசுங் காலை
உலவை வீசலே உளபல புறவினம்
வலிதுகூஉய்க் கான வாரணம் களித்தலே
கோங்குஇலவு அலர்தலே குரவம் நெடும்பனை
தீங்கனி உதவலே சிதப்பரி வெடித்தலே'. ,, 170

'வசந்தத்து உரிமை வசந்தன் தேர்எனும்
தென்றலே வண்டினம் சிறுகிளி பூவை
அன்றிலே குயில்இவை அகம்மகிழ்ந்து ஆர்த்தலே

மாங்கனி உதிர்தலே தேங்கய மலரொடு
வகுளம் தாழை வழைசெண் பகம்பிற
முகிழினிது அவிழ்தலே முன்கா ரிடைக்களி
மிகுவன் மயில்முதல் மெலிதலே என்ப'. தொ. வி. 171

'வேனிற்கு உரிமை கானில் தூசுஎழத்
கோடையே வீசக் குறுகப் பேய்த்தேர்
காடையே வலியான் கம்புள் காகம்
சிரவம் ஒலித்தல் பகுண்டி சிந்துரம்
பாடலம் பூத்தல் பாலைக் கனியொடு
கோடரம் நாவல் குலிகம் காய்த்தலும்
நீர்அலகல் மற்றுயிர்சீர் அலசிச் சேறலே'. ,, 172

'காரும் மாலையும் காட்டிற்கு உரிய'. மு. வீ. அக. 14
'கூதிரும் யாமமும் குறிஞ்சிக்கு உரிய'. ,, 15
'பனிஎதிர் பருவமும் உரியது ஆகும்'. ,, 16
'வைகுறு விடியல் மருதக்கு உரிய'. ,, 17
'எற்பாடு நெய்தற்கு உரியது ஆகும்'. ,, 18
'நண்பகல் வேனில் நடுத்திணைக்கு உரிய'. ,, 19
'பின்பனி தானும் உரித்துஎனப் படுமே'. ,, 20
'மருதம் நெய்தல் என்று இவை இரண்டற்கும்
உரிய பெரும்பொழுது இருமூன் றும்மே'. ,, 21

'வாடை அடித்தல் மயில்கே கயப்புள்
இந்திர கோபம் எழுந்துஅகம் மகிழ்தல்
அன்னம் கிளிமயில் அகன்று வருதல்
காந்தள் கொன்றை காயா மலர்தல்
கமலம் ஏங்கல் கார்காலக்கு உரிய'. ,, 22

'கூதிர் உயவை வீசல்கொக் கொடுவால்
அன்னம் சங்கு மகிழ்வுறல் உதகம்
தெளிதல் மீன்இனம் செனித்தல் முகில்குழாம்

சூல்கொளல் சிறுசண் பகம்பாரி சாதம்
மலர்தல் மானவர் வருந்துதல் கூதிர்க்
காலக்கு உரிமையாம் காணுங் காலே'. மு.வீ.அக. 23

'கோடை வீசல் கூகையும் ஆந்தையும்
மகிழ்தல் செவ்வந்தி மாமரம் மலர்தல்
இலந்தை பழுத்தல் இக்குநெல் முதிர்தல்
முன்பனிக்கு உரியவாம் மொழியுங் காலே'. „ 24

'வீங்குஉல வைக்கால் வீசல் கான்கோழி
புறவம் மகிழ்தல் பொங்கரும் கோங்கும்
மலர்தல் பேர்ஈந்து மடல்பனை பழுத்தல்
பின்பனிக்கு உரியவாம் பேசுங் காலே'. „ 25

'தென்றல் அடித்தல் தேன்குயி லோடே
அன்றிலும் மகிழ்தல் மாங்கனி உதிர்தல்
மயில்மகிழ்ந்து ஆடல் மலர்தல் புனலின்
தாழை வசந்தம் தனக்குஉரிய ஆகும்'. „ 26

'கானல் தோன்றல் கால்கோடை வீசல்
வலியான் காடை வான்பாடி மகிழ்தல்
மல்லிகை பாதிரி மலர்தலும் பிறவும்
முதிர்வேனிற்கு உரியன மொழியுங் காலே'. „ 27

'குவளை மலர்தல் குருகுஇனம் ஒலித்தல்
கன்றை உள்ளிக் கறவை போதரல்
வனசம் கூம்பல் மாலைக்கு உரிய'. „ 28

'கூகை சகோரம் குமுமிஉள் மகிழ்தல்
கடல்நீர் பொங்கல் களவுமேம் படுதல்
யாமக்கு உரிமைய ஆகும் என்ப'. „ 29

'வைகறைக்கு உரியவான் மீன்ஒளி மழுங்கல்
வெள்ளி முளைத்தல் வாரணங் கூவுதலே'.
மு. வீ. அக. 30

'விடியற்கு உரிய விலங்குபுள் ளினம்முதல்
மகிழ்தல் தாமரை மலர்தலும் ஆகும்'. மு. வீ. அக. 31

'கானல்நீர் ஓடல் களிப்புறச் சக்கர
வாகம் எருமை மாடுநீர்க் கிடத்தல்
உச்சிக்கு உரியவாம் உணருங் காலே'. ,, 32

14

## கருப்பொருள்களின் வகை

387 ஆரணங்கு உயர்ந்தோர் அல்லோர் புள்விலங்கு
ஊர்நீர் பூமரம் உணப்பறை யாழ்பண்
தொழில்எனக் கருஈ ரேழுவகைத்து ஆகும்.

இது, நிறுத்தமுறையானே கருப்பொருள் இத்துணைப் பகுதித்து என்கின்றது.

(இ-ள்) தெய்வம் முதலாகத் தொழில் ஈறாகச் சொல்லப் பட்ட பதினான்கு வகையினை உடைத்தாம் மேற்கூறிப் போந்த கருப்பொருள் என்றவாறு. 15

### விளக்கம்

நிறுத்தமுறை — 8 ஆம்நூற்பாவில் நிறுத்தியமுறை;
ஆரணங்கு—நிலத்தெய்வம்;
உயர்ந்தோர்—தலைமக்கள்;
அல்லோர்—பொதுமக்கள்;

### ஒத்த நூற்பாக்கள்

'தெய்வம் உணவே மாமரம் புள்பறை
செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ
அவ்வகை பிறவும் கருஎன மொழிப'.

தொல். பொ 18

முழுதும் ந. அ 19

'தெய்வம் மானிடம் செய்தி உணவோடு
எய்திய இசைவிலங்கு இன்னன பிறவும்
பொய்தீர் கருஎனப் புகன்றனர் கொளலே'.

த. நெ. வி. 6

'தெய்வம் செல்வர் சேர்குடி புள்விலங்கு
ஊர்நீர் பூமரம் உணாப்பறை யாழ்பண்
தொழிலெனக் கருஈ ரெழுவகைத் தாகும்'.
தொ, வி. 175. மு. வீ. அக. 33

15

## குறிஞ்சிக் கருப்பொருள்கள்

388 விறற்சேய் பொருப்பன் வெற்பன் சிலம்பன்
குறத்தி கொடிச்சி குறவர் கானவர்
குறத்தியர் கிளிமயில் மறப்புலி குடாவடி
கறையடி சீயம் சிறுகுடி அருவி
நறுஞ்சுனை வேங்கை குறிஞ்சி காந்தள்
ஆரம் தேக்குஅகில் அசோகம் நாகம்
வேரல் ஐவனம் தோரை ஏனல்
கறங்குஇசைத் தொண்டகம் குறிஞ்சியாழ் குறிஞ்சி
வெறிகோள் ஐவனம் வித்தல் செறிகுரல்
பைந்தினை காத்தல் செந்தேன் அழித்தல்
செழுங்கிழங்கு அகழ்தல் முழங்கிவீழ் அருவியோடு
கொழுஞ்சுனை ஆடல் குறிஞ்சிக்கருப் பொருளே.

பொதுவகையால் கூறிய கருப்பொருள்பகுதி பதினான்கினையும் சிறப்புவகையால் திணைக்குஉரிமை எய்துவிப்பான் புகுந்தவற்றுள், இது, முறையானே குறிஞ்சித் திணைக்கு உரிய கருப்பொருள் இவை என்கின்றது.

(இ-ள்) வெற்றியை உடைய முருகவேள் ஆகியதெய்வம் முதலாகச் சுனையாடல் ஆகிய தொழில் ஈறுகச் சொல்லப்பட்ட பதினான்கு பகுதியும் குறிஞ்சித்திணைக்குச் சிறந்த கருப்பொருளாம் என்றவாறு. 16

விளக்கம்

தெய்வம்—முருகன்
தலைமக்களுள் ஆடவர்—பொருப்பன், வெற்பன், சிலம்பன்
தலைமக்களுள் மகளிர்—குறத்தி, கொடிச்சி
பொதுமக்களுள் ஆடவர்—குறவர், கானவர்
பொதுமக்களுள் மகளிர்—குறத்தியர்
பறவைகள்—கிளி, மயில்
விலங்குகள்—புலி, கரடி, யானை, சிங்கம்
ஊர்ப்பெயர்—சிறுகுடி
நீர்நிலை—அருவி, சுனை
பூக்கள்—வேங்கை, குறிஞ்சி, காந்தள்
மரங்கள்—ஆரம், தேக்கு, அகில், அசோகம், நாகம்
உணவுகள்—மூங்கில்நெல், மலைநெல், துவரை, தினை
பறை—தொண்டகம்
யாழ்—குறிஞ்சியாழ்
பண்—குறிஞ்சிப்பண்
தொழில்—வெறியாடல், மலைநெல் விதைத்தல், தினைப் புனம் காத்தல், தேன்கூடுகளை அழித்தல், வள்ளி முதலிய கிழங்குகளை அகழ்ந்துஎடுத்தல், அருவிகளி லும் சுனைகளிலும் நீராடுதல்.

ஒத்த நூற்பாக்கள்

முழுதும் ந. அ. 20, தொ. வி. 176

'மலைஇருள் முன்பனி கூதிர்வெற் பன்கண மூங்கில்மஞ்ஞை
இலைமலி வேங்கைசெங் காந்தள் இலவம் இகல்முருகன்
சிலைமலி குன்றவர் தேனே புணர்தல் தினைசுனையும்
கொலைமலி யானை குறிஞ்சிஎன் று இன்ன குறிஞ்சியிலே'.

வீ. 92

'வேற்கர முருகன் வெற்பன் சிலம்பன்
குறத்தி கொடிச்சி குறவர் கானவர்
குறத்தியர் கிளிமயில் கொல்சினக் களிறு

அரிமாச் சிறுகுடி அருவி அகன்சுனை
ஆரம் தேக்கு அகில் அசோகம் ஐவனம்
உணுத்தொண் டகம்திணை ஓம்பல் குறிஞ்சியாழ்
குறிஞ்சிக் கருப்பொரு ளாம்குறித் திடினே '.

மு. வீ. அக. 34
16

## பாலைக் கருப்பொருள்கள்

389 கன்னி விடலை காளை மீளி
இன்னகை எயிற்றி எயினர் எயிற்றியர்
மறவர் மறத்தியர் புறவுபருந்து எருவை
கழுகு செந்நாய் கல்கெழு குறும்பு
குறிவறுங் கூவல் குராஅ மராஅ
உழிஞை பாலை ஓமை இருப்பை
வழங்குகதிக் கொண்டன செழும்பதிக் கவர்ந்தன
பகைத்துடி பாலையாழ் பஞ்சுரம் வெஞ்சமம்
பகல்சூறை யாடல் பாலைக்கருப் பொருளே.

இது முறையானே பாலைத்திணைக்கு உரிய கருப்பொருள் இவை என்கின்றது.

(இ-ள்) சயமடந்தையாகிய தெய்வம் முதலாகச் சூறை யாடல் ஆகிய தொழில் ஈறுகச் சொல்லப்பட்ட பதினுன்கு பகுதியும் பாலைத்திணைக்குச் சிறந்த கருப்பொருளாம் என்றவாறு. 17

### விளக்கம்

முறை—ஏழாம் நூற்பாவில் நிறுத்திய முறை
தெய்வம்—துர்க்கை
உயர்மக்கள்—விடலை, காளை, மீளி, எயிற்றி
பொதுமக்கள்-எயினர், மறவர், எயிற்றியர், மறத்தியர்
பறவைகள்—புறவு, பருந்து, எருவை, கழுகு
விலங்கு—செந்நாய்
ஊர்ப்பெயர்—குறும்பு

நீர் நிலை—குழிவறண்ட கூவல்
பூக்கள்—குரா, மரா
மரங்கள்—உழிஞை, பாலை, ஓமை, இருப்பை
உணவு—வழிப்பறி, ஊர்களுக்குள் சென்று கொள்ளை யடித்துக் கொணர்ந்தன
பறை—பகைத்துடி
யாழ்—பாலையாழ்
பண்—பஞ்சுரம்
தொழில்—வெஞ்சமம், பகல் சூறையாடல்

ஒத்த நூற்பாக்கள்

முழுதும் ந. அ. 21
சிறிதுதிரித்து முழுதும் தொ. வி. 177

'ஓதிய வேனி லொடுபின் பனிஅகில் வெப்பரலே
தீதியல் வேடர் கலைஒள் விடலைதிண் பாலைஅத்தம்
கோதியல் செந்நாய் பருந்தொடு கொம்பனை யார்ப்பிரிதல்
வாதியல் கன்னி குறும்பர்வெம் பாலை மடவரலே'.
வீ. 94

'விமலை காளை விடலை மீளி
எயினர் எயிற்றியர் மறவர் மறத்தியர்
எருவை பருந்து செந்நாய் குறும்புஉழிஞை
இருப்பை கூவல் இரும்பதி கவர்தல்
பகைத்துடி பாலையாழ் பஞ்சுரம் வெஞ்சமம்
பகற்சூறை யாடல் பாலைக்கருப் பொருளே',
மு. வீ. அக. 35

17

## முல்லைக் கருப்பொருள்கள்

390 நெடுமால் குறும்பொறை நாடன் தோன்றல்
வடுஇல் கற்பின் மனைவி கிழத்தி
இடையர் இடைச்சியர் ஆயர் ஆய்ச்சியர்
கான வாரணம் மான்முயல் பாடி
குறுஞ்சுனை கான்யாறு குல்லை முல்லை

நிறம்கிளர் தோன்றி பிறங்குஅலர்ப் பிடவம்
கொன்றை காயா மன்றல்அம் குருந்தம்
தாற்றுக்கதிர் வரகோடு சாமை முதிரை
ஏற்றுப்பறை முல்லை யாழ்சா தாரி
சாமை வரகு தாம்உடன் வித்தல்
அவைகளை கட்டல் அரிதல் கடாவிடல்
செவிகவர் கொன்றைத் தீங்குழல் ஊதல்
மூஇனம் மேய்த்தல் சேஇனம் தழுவல்
கழுமிய குரவையொடு கான்யாறு என்றுஇவை
முழுதுடன் ஆடல் முல்லைக்கருப் பொருளே.

இது முறையானே முல்லைத்திணைக்கு உரிய கருப் பொருள்கள் இவை என்கின்றது.

(இ-ள்) நெடிய மாயோன் ஆகிய தெய்வம் முதலாகக் கான்யாறுடல் ஆகிய தொழில் ஈறுகச் சொல்லப்பட்ட பதினன்கு பகுதியும் முல்லைத்திணைக்குச் சிறந்த கருப்பொருளாம் என்றவாறு. 18

விளக்கம்

முறை—ஏழாம் நூற்பாவில் நிறுத்தியமுறை
தெய்வம்—திருமால்

தலைமக்கள்-குறும்பொறை நாடன், தோன்றல், மனைவி கிழத்தி;

பொதுமக்கள் — இடையர், ஆயர், இடைச்சியர், ஆய்ச்சியர்;

பறவை—காட்டுக்கோழி
விலங்குகள்—மான், முயல்
ஊர்ப்பெயர்—பாடி
நீர்நிலை—குறுஞ்சுனை, கான்யாறு

பூக்கள்—குல்லை, முல்லை, தோன்றி, பிடவம்
மரங்கள்—கொன்றை, காயா, குருந்து
உணவுகள்—வரகு, சாமை, முதிரை
பறை—ஏறுகோட்பறை
யாழ்—முல்லையாழ்
பண்—சாதாரி

தொழில்—சாமை வரகு இவற்றை விதைத்தல், களை பிடுங்குதல், அரிதல், கடாவிடுதல், குழல் ஊதுதல், ஆன் எருமை ஆடு இவற்றை மேய்த்தல், பாய்ச்சல் காளையைத் தழுவுதல், குரவைக்கூத்தாடுதல், காட்டாற்றில் குளித்தல் என்பன.

ஒத்த நூற்பாக்கள்

முழுதும் ந. அக. 22
சிறிதுதிரிந்து முழுதும் தொ. வி. 178

'காடுகார் மாலை இடையர் முதிரைகான் யாறுமுல்லை
நீடுமால் கொன்றை நிரைமேய்த்த லோடு நெடுங்குருந்தம்
கேடில்கார் தோன்றி சிறுபான் கிழத்தி மனைஇருத்தல்
நீடுசேர் புன்கு பிறவும்முல் லைத்திணை பெண்கொடியே'.
வீ. 94

'திருமால் குறும்பொறை நாடன் செம்மல்
இல்லாள் கிழத்தி இடையர் இடைச்சியர்
ஆயர் ஆய்ச்சியர் அடவி வாரணம்
மான்முயல் பாடி வரும்ஆறு அகன்சுனை
கொன்றை காயா குருந்தம் முல்லை
சாமை வரகு தாம்உடன் விதைத்தல்
ஏற்றுப்பறை முல்லை யாழ்சா தாரி
முல்லைக் கருப்பொருள் ஆமென மொழிப'. மு. வீ. அக. 36
18

## மருதக் கருப்பொருள்கள்

391 இந்திரன் ஊரன் பைந்தார் மகிழ்நன்
கெழுதரு கற்பின் கிழத்தி மனைவி
உழவர் உழத்தியர் கடையர் கடைச்சியர்

மழலை வண்டானம் அகன்றில் நாரை
அன்னம் போதா நன்னிறக் கம்புள்
குருகு தாரா எருமை நீர்நாய்
பெருகிய சிறப்பின் பேரூர் மூதூர்
யாறு மனைக்கிணறு இலஞ்சி தாமரை
நாறுஇதழ்க் கழுநீர் நறுமலர்க் குவளை
காஞ்சி வஞ்சி பூஞ்சினை மருதம்
செந்நெல் வெண்ணெல் அந்நெல் அரிகிணை
மன்றல் முழவம் மருதயாழ் மருதம்
மன்றுஅணி விழாக்கோள் வயல்களை கட்டல்
அரிதல் கடாவிடல் அகன்குளம் குடைதல்
வருபுனல் ஆடல் மருதக்கருப் பொருளே.

இது முறையானே மருதத்திணைக்கு உரியகருப்பொருள் இவை என்கின்றது.

(இ-ள்) இந்திரன் ஆகியதெய்வம் முதலாக யாறு ஆடல் ஆகிய தொழில் ஈருகச் சொல்லப்பட்ட பதினான்கு பகுதியும் மருதத்திணைக்குச் சிறந்த கருப்பொருளாம் என்றவாறு. 19

### விளக்கம்

முறை—ஏழாம் நூற்பாவில் நிறுத்தியமுறை
தெய்வம்—இந்திரன்
தலைமக்கள்—ஊரன், மகிழ்நன், கிழத்தி, மனைவி;

பொதுமக்கள்-உழவர், கடையர், உழத்தியர், கடைச்சியர்; பறவைகள் — வண்டானம், அன்றில், நாரை, அன்னம், போதா; கம்புள், குருகு, தாரா;

விலங்குகள்—எருமை. நீர்நாய்;
ஊர்ப்பெயர்—பேரூர் மூதூர்;
நீர்நிலை—ஆறு, கிணறு, இலஞ்சி;
பூக்கள்—தாமரை, கழுநீர், குவளை;

மரங்கள்—காஞ்சி, வஞ்சி, மருதம்
உணவுகள்—செந்நெல், வெண்ணெல்
பறை—நெல்அரிகிணை, மணமுழவு
யாழ்—மருதயாழ்
பண்—மருதம்

தொழில்—விழா அயர்தல், வயலில் களை நீக்குதல், நெல் அரிதல், கடாவிடல், குளங்களிலும், யாறுகளிலும் முழுகுதல் என்பன;

ஒத்த நூற்பாக்கள்

முழுதும் ந. அ 32
சிறிதுதிரித்து முழுதும் தொ. வி 179
'பொற்று மரைஇந் திரன்பொய்கை பூந்தார் பழனஞ்செந்நெல்
வற்று எருமை வளர்பனி நீர்நாய் வடமகன்றில்
தெற்று மனைஊடல் ஊரன் கடைசியர் செங்கழுநீர்
சுற்று மருதத் திணையிலுண் டாவன தூமொழியே'. வி. 95
'இந்திரன் ஊரன் எழில்மிகு கிழவன்
மனைவி கிழத்தி உழவர் உழத்தியர்
கடையர் கடைச்சியர் கம்புள்வெண் குருகு
எருமை நீர்நாய் எழில்பெரு மூதூர்
ஆறுமனைக் கிணறு இலஞ்சி தாமரை
மன்றல் முழவம் மருதயாழ் மருதம்
செந்நெல் வெண்ணெல் திருவிழா அயர்தல்
மருதக் கருப்பொரு ளாம்வழுத் திடினே'. மு வி. அக 37
19

## நெய்தற் கருப்பொருள்கள்

392 வருணன் சேர்ப்பன் விரிதிரைப் புலம்பன்
பரும அல்குல் பரத்தி நுளைச்சி
நுளையர் நுளைச்சியர் பரதர் பரத்தியர்
அளவர் அளத்தியர் அலைகடல் காக்கை
சுறவம் பாக்கம் பெறல்அரும் பட்டினம்

உவர்நீர்க் கேணி கவர்நீர் நெய்தல்
கண்டகக் கைதை முண்டகம் அடம்பு
கண்டல் புன்னை வண்டுஇமிர் ஞாழல்
புலவுமீன் உப்பு விலைகளில் பெற்றன
நளிமீன் கோட்பறை நாவாய்ப் பம்பை
விளரியாழ் செவ்வழி மீன்உப்புப் படுத்தல்
உணங்கவை விற்றல்மீன் உணக்கல்புள் ஓப்பல்
நெடுங்கடல் ஆடல் நெய்தல்கருப் பொருளே.

இது முறையானே நெய்தல்திணைக்கு உரிய கருப்பொருள் இவை என்கின்றது.

(இ-ள்) வருணன் ஆகிய தெய்வம் முதலாகக் கடல் ஆடுதல் ஆகிய தொழில் ஈறாகச் சொல்லப்பட்ட பதினான்கு பகுதியும் நெய்தல்திணைக்குச் சிறந்த கருப்பொருளாம் என்றவாறு.

முறையானே ஐந்திணைக்கும் இங்ஙனம் எடுத்து ஓதிய பகுதி பதினான்கனுள் எடுத்து ஓதாதனவும் பாடலுள் பயின்றுவருமேல், அவையும் கொள்க. 20

### விளக்கம்

முறை — ஏழாம் நூற்பாவில் நிறுத்திய முறை.
தெய்வம் — வருணன்.
தலைமக்கள் — சேர்ப்பன், புலம்பன்; பரத்தி, நுளைச்சி
பொதுமக்கள் — நுளையர், பரதர், அளவர்; நுளைச்சியர் பரத்தியர், அளத்தியர்.
பறவைகள் — கடற்காக்கை
விலங்கு — சுறு, உமண்பகடு என்பார் நச்சினார்க்கினியர்
ஊர்ப்பெயர் — பாக்கம், பட்டினம்
நீர்நிலை — உவர் நீர்க்கேணி
பூக்கள் — நெய்தல், கைதை, முண்டகம், அடம்பு, கண்டல்;

மரங்கள்—புன்னை, ஞாழல்
உணவுகள்—மீன், உப்பு இவற்றை விற்றுப் பெற்றன
பறை—மீன்கோட்பறை, நாவாய்ப்பறை
யாழ்—விளரியாழ்
பண்—செவ்வழி

தொழில்—மீன் உப்புப்படுத்தல், மீன் உணக்கல், அதனைத்தின்னவரும் பறவைகளை வெருட்டுதல், மீன்உணங்கல் விற்றல், கடலாடுதல் முதலியன;

ஒத்த நூற்பாக்கள்

முழுதும் ந. அ. 24
சிறிது திரித்து முழுதும் தொ. வி. 80
'மீனே கடல்பனி கொண்கன் திமிலம் விளரிநிலாக்
கானே தரும்புன்னை கண்டல் அன்னம்சுறுக் காதல்உப்பு
வானோர் வருணன் முதலைநுளையர் இரங்கல்கைதை
தேனே தருமொழி யாய்அந்தில் நெய்தல் தேர்ந்தறியே'.
வீ. 93

ஐவகை நிலக்கருப்பொருள்களையும் பற்றித் தமிழ்நெறி விளக்கம் கூறுமாறு.

## தெய்வம்

'முருகனும் இரவியும் மாயனும் வேந்தனும்
வருணனும் ஆக வகுத்தனர் கொளலே'. த,நெ.வி. 7

## மக்கள்

'வெற்பன் குறவர், விடலை எயினர்
ஒற்கம்இல் குறும்பொறை நாடன், குடவர்,
மகுணன் உழவர், சேர்ப்பன் பரதவர்,
இனையன பிறவும் மக்கள் பெயரே'. „ 8

## செயல்

‘ நிறைத்தேன் அழித்தலும், நெறிச்சென்று அலைத்தலும்
ஒருக்குஇனம் ஓம்பலும், உழவொடு பயிறலும்,
திரைக்கடல் சேறலோடு இனையன செயலே’. த.நெ.வி. 9

## உணவு

‘ தினையே தருப்பணம் முதிரை செந்நெல்
விலைகோள் இனையன மேவிய உணவே ’. „ 10

## இசை

‘ முருகுஇயம் குறிஞ்சி, துடியே பஞ்சுரம்,
பெருகிய ஏறங் கோட்பறை தாரம்,
பல்லியம் மருதம், அழப்பறை செவ்வழி,
சொல்லிய பிறவும் சொற்றவற்று இசையே ’. „ 11

## மரம் முதலியன

‘ வேங்கை காந்தள் சியம் மயிலே,
பாங்கர் மராமரம் செந்நாய் பருந்தே,
குருந்தே முல்லை இரலை புறவே,
காஞ்சி கழுநீர் மேதி அன்னம்,
கைதை முண்டகம் கராமே கம்புள் என்று,
எய்திய பிறவும் இயம்பிய விலங்கே ’. „ 12

‘ திரைநீர் வருணன் சேர்ப்பன் புலம்பன்
பரத்தி நுளைச்சி பரதர் பரத்தியர்
நுளையர் நுளைச்சியர் அளவர் அளத்தியர்
பாக்கம் பட்டினம் வாயசம் சுறவம்
உவர்நீர்க் கேணி கவர்நீர் நெய்தல்
கண்டகம் கைதை முண்டகம் அடம்பு
மீன்உப்புப் படுத்தல் விளரியாழ் செவ்வழி
நளிமீன் கோட்பறை நாவாய்ப் பம்பை
நெடுநீர் நெய்தல் கருப்பொரு ளாகும்’.
மு. வீ. அக. 38

இனி, கருப்பொருள்பற்றி வீரசோழியவுரை, ஐந்திணைக்கும் பொதுப்படக் குறிப்பிடும் சில செய்திகள் பயனுடையவாதலின், அவை அடுத்த நூற்பா உரை விளக்கத்தில் குறிப்பிடப்படுகின்றன.

20

## உரிப் பொருள்கள்

393 புணர்தலும் பிரிதலும் இருத்தலும் ஊடலும்
இரங்கலும் இவற்றின் நிமித்தமும் எனஆங்கு
எய்திய உரிப்பொருள் ஐஇரு வகைத்துஅவை
ஓர்இரண்டு ஓர்இரண்டு உரைத்தஐந் திணைக்கும்
நேரும் என்மனார் நெறிஉணர்ந் தோரே

இது நிறுத்த முறையானே உரிப்பொருள் இத்துணைப் பகுதித்து என்பதூஉம், அப்பகுதிகள்தாம் இன்னஇன்ன திணைக்கு உரிய என்பதூஉம் உணர்த்துகின்றது.

(இ-ள்) புணர்தலும் பிரிதலும் இருத்தலும் ஊடலும் இரங்கலும் இவற்றின் நிமித்தமும் என மேல் கூறிப்போந்த உரிப்பொருள் பத்துவகையினை உடைத்தாம்; அவைதாம் முறையானே இரண்டிரண்டு முற்கூறிய ஐந்திணைக்கும் சிறந்தனவாம் என்று கூறுவர் பாடல் சான்ற புலனெறி வழக்கினை அறிந்தோர் என்றவாறு.

அகப்பொருளாவது புணர்ச்சி ஆகலானும் அஃது இருவர்க்கும் ஒப்பநிகழ்தலானும் முன்னர்ப்புணர்ச்சியும், புணர்ந்துழிஅல்லது பிரிவு இன்மையானும் அது தலைவன்கண்ணதாகிய சிறப்பானும் அதன்பின்னர்ப்பிரிவும், பிரிந்துழிக் கற்பால் தலைவி ஆற்றியிருத்தல்வேண்டுதலின் அதன் பின்னர் இருத்தலும், பிரிவின்திறனாகிய பரத்தையிற் பிரிந்துழித் தலைவன் தவறு நோக்கித் தலைவி கலாய்த்தல் இயல்பு ஆகலானும் காமத்திற்குச் சிறத்தலானும் அதன் பின்னர் ஊடலும், ஏனைப் பிரிவு நீட்டித்துழிக் காமம் கைம்மிக்கு அழுங்கல் இயல்பாகலின் அதன்பின்னர் இரங்கலும் வைக்கப்பட்டன.

'முதற்பொருள் கருப்பொருள்' (8) என்பது முதல் 'புணர்தலும் பிரிதலும்' (21) என்பது ஈறுகக் கிடந்த சூத்திரங்களால் போந்தன:

பொதுவகையான் முதற்பொருள் முதலிய மூன்றும் கொண்டும் அவற்றுள் சிலகொண்டும் ஐந்திணையும் ஆம் என்பதூஉம்; சிறப்புவகையான் வரையும் வரைசார்ந்த இடனும் ஆகிய நிலனும், இருள் தூங்கித் துளி மிகுதலானும் பனியானும் சேறல் அரிதாகலானும், பாஒள் கங்குலின் பரந்து உடன் வழங்காது மாவும் புள்ளும் துணையுடன் இன்புற்று வதிதலின் காமக்குறிப்புக் கழியவே பெருகுதலானும், காவல்மிகுதி நோக்காது வரும் தலைவனைக் குறிக்கண் எதிர்ப்பட்டுப் புணருங்கால் தலைவிக்கு இன்பம் பெருகுதலானும் கூதிர்க்காலமும், அதனைத் தொடர்ந்த முன்பனிக்காலமும், அவற்றிடை இடையாமமும் என்னும் காலமும் ஆகிய முதற்பொருளும்,

அந்நிலத்து வாழும் குறவர் முதலாயினோர் குழீஇ வேண்டிய வேண்டியாங்கு எய்தும்பொருட்டு வெறி அயர்ப ஆகலின் ஆண்டு வெளிப்படூஉம் முருகவேளும் முதற்பொருள் பற்றித்தோன்றும் ஏனைக் கருப்பொருளும், புணர்தலும் புணர்தல்நிமித்தமும் ஆகிய உரிப்பொருளும், ஒன்றற்கு ஒன்று பொருத்தம் உடையவாய்க் குறிஞ்சித் திணையைச் சிறப்பித்து நிற்றலின் அவை அதற்குச் சிறந்தன என்பதூஉம்;

சுரமும் சுரஞ்சார்ந்த இடனும் ஆகிய நிலனும், காலையும் மாலையும் நண்பகல் அன்ன கடுமை கூரச் சோலை தேம்பிக் கூவல் மாறி நீரும் நிழலுமின்றி நிலம் பயன் துறந்து புள்ளும் மாவும் புலம்புற்று இன்பம் இன்றித் துன்பம் பெருகுவது ஒரு காலம் ஆதலின் இன்பத்திற்கு இடையூறு ஆகிய பிரிவிற்கு முதிர்வேனில்காலமும், அதனிடை நண்பகலும்,

'தெள்அறல் யாற்றுத் திரைமணல் அடைகரை
வண்டுவரி பாடத் தண்போது அலர்ந்து
தாதும் தளிரும் மேதகத் துவன்றிப்
பல்பூஞ் சோலைப் பன்மலர் நாற்றமொடு
செவ்விதின் தென்றல் நொவ்வித் தாகிக்
குயில்கூக் குரலும் பயில்வதன் மேலும்
நிலவும் சாந்தும் பலவுறு முத்தும்
இன்பம் விளைக்கும் நன்பொருள் பிறவும்
பண்டைய போலாது இன்பம் மிகத்தரும்'

இளவேனில் காலத்துப் பொழில் விளையாடியும் புதுப்பூக் கொய்தும் அருவிஆடியும் முன்னர் விளையாட்டின் நிகழ்ந்தமைபற்றிப் பிரிந்த கிழத்தி மெலிந்து உரைக்கும் கிளவி பயின்று வருதலானும், உடன்போக்கின்கண் அக்காலம் இன்பம் பயக்கும் ஆதலானும் இளவேனிற்காலமும் அதனிடை நண்பகலும், அவ்வேனிலைத் தொடர்ந்த பின்பனிக் காலமும் அதனிடை நண்பகலும் என்னும் காலமும் ஆகிய முதற்பொருளும்,

அந்நிலத்து வாழும் மறவர் முதலாயினோர் குழீஇ விறல் மேன்மேல் கிளைப்பப் பெறல்அரும் உயிப்பலி பேணலின் ஆண்டு வெளிப்படூஉம் சயமடந்தையும், முதற்பொருள் பற்றித் தோன்றும் ஏனைக்கருப்பொருளும், பிரிதலும் பிரிதல்நிமித்தமும் ஆகிய உரிப்பொருளும், ஒன்றற்கு ஒன்று பொருத்தம் உடையவாய்ப் பாலைத்திணையைச் சிறப்பித்து நிற்றலின் அவை அதற்குச் சிறந்தன என்பதூஉம்;

காடும் காடு சார்ந்த இடனும் ஆகிய நிலனும், வெப்பமும் தட்பமும் மிகாது இடைநிகர்த்ததாகி ஏவல் செய்து வரும் இளைஞருக்கு நீரும் நிழலும் பயத்தலானும், ஆர்பதம் மிக்கு நீரும் நிழலும் பெறுதலின் கவின்சிறந்து மாவும் புள்ளும் துணையொடு இன்புற்று விளையாடுவன கண்டு, வினைவயின் பிரிந்து பாசறையினின்றும் விரைபரித்தேர்

ஊர்ந்து மீளும் தலைவற்குக் காமக்குறிப்பு மிகுதலானும் கார் காலமும், புல்லைமேய்ந்து கொல்லேற்றோடே புனிற்றுக் கன்றை நினைந்து மன்றில் புகுதரவும், தீங்குழல் இசைப்பவும், பந்தர்முல்லை வந்து மணம் கஞற்றவும் வருகின்ற தலைவற்கும் இருந்த தலைவிக்கும் காமக்குறிப்புச் சிறத்தலின் அக்காலத்து மாலைப்பொழுதும் என்னும் காலமாகிய முதற்பொருளும்,

அந்நிலத்து வாழும் கோவலர் குழீஇ 'ஆகுதி பயக்கும் ஆபல காக்க' எனக் குரவை தழீஇ மடைபல கொடுத்தலின் ஆண்டு வெளிப்படூஉம் நெடுமாலும், முதற்பொருள் பற்றித் தோன்றும் ஏனைக் கருப்பொருளும், ஒன்றற்கு ஒன்று பொருத்தம் உடையவாய் முல்லைத்திணையைச் சிறப்பித்து நிற்றலின் அவை அதற்குச் சிறந்தன என்பதூஉம்;

பழனமும் பழனம் சார்ந்த இடனும் ஆகிய நிலனும், பரத்தையிற் பிரிந்த தலைவன் ஆடலும் பாடலும் கண்டும் கேட்டும் பொழுது கழிப்பிப் பிறருக்குப் புலனாகாமை மீளும் காலம் அது ஆகலானும், தலைவிக்கும் கங்குல்யாமம் கழியாது நெஞ்சுஅழிந்து ஆற்றாமை மிகுதலான் ஊடல் உணர்த்தற்கு எளிதாவதோர் உபகாரமுடைத்து ஆகலானும் வைகுறுவும், இனித்தலைவி விடியற்குக் காலம் சிறுவரைத்தாகலின் அதனால் பெரும்பயன் இன்று என முனிந்து வாயில் அடைத்து ஊடல் நீட்டிப்பவே, அவ்வைகுறுவழித் தோன்றிய விடியற்கண்ணும் இவன் மெய்வேறுபாடு விளங்கக் கண்டு வாயில் புகுத்தல் பயத்தலின் விடியலும் ஆகிய சிறுபொழுதும், பெரும்பொழுது ஆறும் என்னும் காலமும் ஆகிய முதற்பொருளும்,

அந்நிலத்து வாழ்வோர் பலரும் குழீஇ ஊடலும் கூடலும் ஆகிய காமச்சிறப்பு நிகழ்தற்கும் மழை வளம் தருதற்கும் விழா எடுத்தலின் ஆண்டு வெளிப்படூஉம் ஆட

லும் பாடலும் ஊடலும் உணர்த்தலும் உள்ளிட்ட இன்ப விளையாட்டு இனிதின் நுகரும் இமையோர்க்கும் இன்குரல் எழிலிக்கும் இறைவன் ஆகிய இந்திரனும், முதற்பொருள் பற்றித் தோன்றும் ஏனைய கருப்பொருளும், ஊடலும் ஊடல் நிமித்தமும் ஆகிய உரிப்பொருளும், ஒன்றற்கு ஒன்று பொருத்தம் உடையவாய் மருதத்திணையைச் சிறப்பித்து நிற்றலின் அவை அதற்குச் சிறந்தன என்பதூஉம்;

கடலும் கடல் சார்ந்த இடனும் ஆகிய நிலனும், வெஞ்சுடர் வெப்பம் தீரத் தண்ணறுஞ் சோலை தாழ்ந்து நிழல் செய்யவும், தண்பதம்பட்ட தெண்கழி மேய்ந்து பல்வேறு வகைப்பட்ட புள்ளெல்லாம் குடம்பை நோக்கி உடங்கு பெயரவும், புன்னை முதலிய பூவின் நாற்றம் முன் நின்று கஞற்றவும், நெடுந்திரை அழுவத்து நிலாக்கதிர் பரப்பவும், காதல் கைம்மிக்குக் கடற்கானிலும் கானற்கானினும் தன் நிறை கடந்து வேட்கை புலப்பட உரைத்தலின், ஆண்டுக் காமக்குறிப்பு வெளிப்பட்டு இரங்கல் பொருள் சிறத்தலான் எற்பாடாகிய சிறுபொழுதும், பெரும்பொழுது ஆறும் என்னும் காலமாகிய முதற்பொருளும்,

அந்நிலத்து வாழும் நுளையர்க்கு வலைவளம் தப்பின் ஆண்டு வாழும் மகளிர் கிளையுடன் குழீஇச் சுறவுக்கொடி நாட்டிப் (கோடுநட்டு) பரவுக்கடன் கொடுத்தலின் ஆண்டு வெளிப்படும் வருணனும், முதற்பொருள் பற்றித் தோன்றும் ஏனைக்கருப்பொருளும்,

இரங்கலும் இரங்கல் நிமித்தமும் ஆகிய உரிப்பொருளும், ஒன்றற்கு ஒன்று பொருத்தம் உடையவாய் நெய்தல் திணையைச் சிறப்பித்து நிற்றலின் அவை அதற்குச் சிறந்தன என்பதூஉம் ஆயின என்க.

கிளைபா ராட்டும் கடுநடை வயக்களிறு
முளைதருபு ஊட்டி வேண்டுகுளகு அருத்த
வாள்நிற உருவின் ஒளிறுபு மின்னிப்
பரூஉஉரைப் பல்துளி சிதறிவான் நவின்று
பெருவரை நளிர்சிமை அதிர வட்டித்துப்
புயல்ஏறு உரைஇய வியல்இருள் நடுநாள்
விறல்இழைப் பொலிந்த காண்புஇன் சாயல்
தடைஇத் திரண்டநின் தோள்சேர்பு அல்லதைப்
படாஅ ஆகும்எம் கண்என நீயும்
இருள்மயங்கு யாமத்து இயவுக்கெட விலங்கி
வரிவயங்கு இரும்புலி வழங்குநர்ப் பார்க்கும்
பெருமலை விடர்அகம் வரவுஅரிது என்னாய்
வரவுஎளி தாக எண்ணுதி அதனால்
நுண்ணிதின் கூட்டிய படுமாண் ஆரம்
தண்ணிது கமழும் நின்மார்பு ஒருநாள்
அடைய முயங்கேம் ஆயின் யாமும்
விறல்இழை நெகிழச் சாய்தும் அதுவே
அன்னை அறியினும் அறிக அலர்வாய்
அம்பல் மூதூர் கேட்பினும் கேட்க
வண்டுஇறை கொண்ட எரிமருள் தோன்றியொடு
ஒண்பூ வேங்கை கமழும்
தண்பெருஞ் சாரல் பகல்வந் தீமே. அகநா. 218

இது தோழி தலைமகளை இடத்து உய்த்துவந்து பகற்குறி நேர்ந்த வாய்பாட்டானே தலைமகனை வரைவு கடாயது; இம்மணிமிடைபவளத்தும்,

வண்டுபடத் ததைந்த கண்ணி ஒண்கழல்
உருவக் குதிரை மழவர் ஓட்டிய
முருகன் நற்போர் நெடுவேள் ஆவி
அறுகோட்டு யானைப் பொதினி ஆங்கண்
சிறுகா ரோடன் பயினொடு சேர்த்திய

கல்போல் பிரியலம் என்ற சொல்தான்
மறந்தனர் கொல்லோ தோழி சிறந்த
வேய்மருள் பணைத்தோள் நெகிழச் சேய்நாட்டுப்
பொலங்கல வெறுக்கை தருமார் நிலம்பக
அழல்போல் வெங்கதிர் பைதுஅறத் தெறுதலின்
நிழல்தேய்ந்து உலறிய மரத்த அறைகாய்பு
அறுநீர்ப் பைஞ்சுனை ஆம்அறப் புலர்தலின்
உகுநெல் பொரியும் வெம்மைய யாவரும்
வழங்குநர் இன்மையின் வெளவுநர் மடியச்
சுரம்புல் லென்ற ஆற்ற அலங்குசினை
நார்இல் முருங்கை நவிரல் வான்பூச்
சூரல்அம் கடுவளி எடுப்ப ஆர்உற்று
உடைதிரைப் பிதிர்வில் பொங்கிமுன்
கடல்போல் தோன்றல காடுஇறந் தோரே அகநா. 1

இது பிரிவிடை ஆற்றுளாய தலைமகள் தோழிக்குக் கூறியது; இக்களிற்றியானை நிரையுள்ளும், 1

முல்லை வைநுதி தோன்ற இல்லமொடு
பைங்கால் கொன்றை மென்பிணி அவிழ
இரும்புதிரித் தன்ன மாயிரு மருப்பின்
பரல்அவல் அடைய இரலை தெறிப்ப
மலர்ந்த ஞாலம் புலம்புபுறம் கொடுப்பக்
கருவி வானம் கதழ்உறை சிதறிக்
கார்செய் தன்றே கவின்பெறு கானம்
குரங்குஉளைப் பொலிந்த கொய்சுவல் புரவி
நரம்புஆர்ப்பு அன்ன வாங்குவள் பரியப்
பூத்த பொங்கர்த் துணையொடு வதிந்த
தாதுஉண் பறவை பேதுறல் அஞ்சி
மணிநா ஆர்த்த மாண்வினைத் தேரின்
உதுக்காண் தோன்றும் குறும்பொறை நாடன்
கறங்குஇசை விழவின் உறந்தைக் குணஅது

நெடும்பெருங் குன்றத்து அமன்ற காந்தள்
போது அவிழ் அலரின் நாறும்
ஆய்தொடி அரிவை நின் மாண்நலம் படர்ந்தே.
அகநா. 4

இது 'குறித்த காலம் வந்தது; அவரும் வந்தார்' என்று தோழி தலைவியை ஆற்றுவித்தது; இக்களிற்றியானை நிரையுள்ளும், 4

சேற்றுநிலை முனைஇய செங்கண் காரான்
ஊர்மடி கங்குலின் நோன்தளை (ஒண்தளை) பரிந்து
கூர்முள் வேலி கோட்டினின் நீக்கி
நீர்முதிர் பழனத்து மீன்உடன் இரிய
அந்தூம்பு வள்ளை மயக்கித் தாமரை
வண்டுஊது பனிமலர் ஆரும் ஊர
யாரை யோநிற் புலக்கேம் வாருற்று
உறைஇறந்து ஒளிறும் தாழ்இருங் கூந்தல்
பிறழும் ஒருத்தியை எம்மனைத் தந்து
வதுவை அயர்ந்தனை என்ப அஃதுயாம்
கூறேம் வாழியர் எந்தை செறுநர்
களிறுஉடை அருஞ்சமம் ததைய நூறும்
ஒளிறுவாள் தானைக் கொற்கைச் செழியன்
பிண்ட நெல்லின் அள்ளூர் அன்னஎம்
ஒண்தொடி நெகிழினும் நெகிழ்க
சென்றீ பெருமநிற் றகைக்குநர் யாரே. அகநா. 46

இது தலைவற்குத் தோழி வாயில்மறுத்தது; இக்களிற்றியானை நிரையுள்ளும்,

கானல் மாலைக் கழிப்பூக் கூம்ப
நீல்நிறப் பெருங்கடல் பாடுஎழுந்து ஒலிப்ப
மீன்ஆர் குருகின் மென்பறைத் தொழுதி
குவைஇரும் புன்னைக் குடம்பை சேர
அசைவண்டு ஆர்க்கும் அல்குறு காலைத்

தாழை தளரத் தூங்கி மாலை
அழிதக வந்த கொண்டலொடு கழிபடர்
காமர் நெஞ்சம் கைஅறுபு இனையத்
துயரம் செய்துநம் அருளார் ஆயினும்
அறாஅ லியரோ அவருடைக் கேண்மை
அளியின் மையின் அவண்உறைவு முனைஇ
வாரற்க தில்ல தோழி கழனி
வெண்ணெல் அரிநர் பின்றைத் ததும்பும்
தண்ணுமை வெரீஇய தடந்தாள் நாரை
செறிமடை வயிரின் பிளிற்றிப் பெண்ணை
அகமடல் சேக்கும் துறைவன்
இன்துயில் மார்பில் சென்றஎன் நெஞ்சே அகநா. 40

இது தலைவன் பொருட்பிரிவிடைத் தலைவி தோழிக்கு உரைத்தது; இக்களிற்றியானை நிரையுள்ளும் முறையானே குறிஞ்சி முதலிய ஐந்திணைக்கும் முதலும் கருவும் வந்து உரிப்பொருளால் சிறப்பு எய்தி முடிந்தவாறு காண்க. பிறவும் அன்ன.

நறைபரந்த சாந்தம் அறஎறிந்து நாளால்
உறைஎதிர்ந்து வித்தியஊழ் ஏனல்—பிறைஎதிர்ந்த
தாமரைபோல் வாள்முகத்துத் தாழ்குழலீர் காணிரோ
ஏமரை போந்தன ஈண்டு. (திணைமாலை-1)

இது மதிஉடம்படுத்தது; முதற்பொருள்இன்றி வந்த குறிஞ்சி.

முதுக்குறைந் தனளே முதுக்குறைந் தனளே
மலையன் ஒள்வேல் கண்ணி
முலையும் வாரா முதுக்குறைந் தனளே.

இது நாண நாட்டம்; முதலும் கருவும்இன்றி வந்த குறிஞ்சி.

நாளும் நாளும் ஆள்வினை அழுங்க
இல்லிருந்து மகிழ்வோர்க்கு இல்லையால் புகழ்என
ஒண்பொருட்கு அகல்வர் நம் காதலர்
கண்பனி துடைஇனித் தோழி நீயே. (சிற்றெட்டகம்)

இது வற்புறுத்து ஆற்றியது; உரிப்பொருள் ஒன்றுமே வந்த பாலை.

திருநகர் விளங்கும் மாசில் கற்பின்
அரிமதர் மழைக்கண் மாஅ யோளொடு
நின்னுடைக் கேண்மை எவனோ முல்லை
இரும்பல் கூந்தல் நாற்றமும்
முருந்துஏர் வெண்பல் ஒளியும்நீ பெறவே.

இது பொருளிற் பிரிந்தோன் சுரம் நினைந்து உரைத்தது; முதற்பொருள் இன்றி வந்த முல்லை.

கரந்தை விரைஇய தண்ணறுங் கண்ணி
இளையர் ஏவ இயங்குபரி கடைஇப்
பகைமுனை வலிக்கும் தேரொடு
வினைமுடித் தனர்நம் காதலோரே.

இது வந்தார் என்று ஆற்றுவித்தது; முதலும் கருவும் இன்றி வந்த முல்லை.

பூங்கொடி மருங்கின் எங்கை கேண்மை
முன்னும் பின்னு மாகி
இன்னும் பாணன் எம்வயி னோனே.

இது வாயில் மறுத்தது; உரிப்பொருள் ஒன்றுமே வந்த மருதம்.

அங்கண் மதியம் அரவின்வாய்ப் பட்டெனப்
பூசல் வாயாப் புலம்புமனைக் கலங்கி

ஏதின் மாக்களும் நோவர் தோழி
ஒன்றும் நோவார் இல்லைத்
தெண்கடல் சேர்ப்பன் உண்டஎன் நலக்கே.

இது கழிபடர்; பேரானும் உரிப்பொருளானும் நெய்தல் ஆயிற்று, பிறவும் அன்ன. 21

**விளக்கம்**

கூதிர் முன்பனி யாமம் என்பன குறிஞ்சித்திணைக்கு உரியவாதல், வேனில் பின்பனி நண்பகல் என்பன பாலைத் திணைக்கு உரியவாதல், காரும் மாலையும் முல்லைக்கு உரிய வாதல், வைகுறுவும் விடியலும் மருதத்திற்கும், பிற்பகல் நெய்தலுக்கும் உரியவாதல் ஆகியவை பற்றியும், சயமடந்தை நீங்கலான ஏனைய கடவுளர்தம் நிலத்தொடர்பு பற்றியும் இவ்வாசிரியர் வரைந்த செய்திகள் யாவும் நச்சினார்க்கினியர் தொல்காப்பியப் பொருட்படல ஆறும் நூற்பா முதல் பத்தாம் நூற்பா இறுதியானவற்றில் உரைத்தனவே. பாலைக்குச் சயமடந்தை கடவுளாதற்குரிய காரணத்தை இவ்வாசிரியர் தாமே குறிப்பிட்டுள்ளார்.

“ நான்கு நிலத்தும் புணர்ச்சி நிகழுமேனும் முற்பட்ட பணர்ச்சியே புணர்தல்சிறப்பு உடைமையின், குறிஞ்சி என்று அதனை முற்கூறினார். அவை இயற்கைப்புணர்ச்சியும் இடந்தலைப்பாடும் பாங்கற்கூட்டமும் தோழியிற்கூட்டமும் அதன் பகுதியாகிய இருவகைக்குறிக்கண் எதிர்ப்பாடும் போல்வன. தலைவன் தோழியைக் குறையுறும் பகுதியும் ஆண்டுத் தோழி கூறுவனவும் குறைநேர்தலும் மறுத்தலும் முதலியன புணர்ச்சி நிமித்தம்.

இனி, ஓதலும் பகையும் தூதும் அவற்றின் பகுதியும் பொருட்பிரிவும் உடன்போக்கும் பிரிவு. ‘ஒன்றாத் தமரினும் பருவத்தும் சுரத்தும் ஒன்றிய தோழியொடு வலித்தல்’

(தொல். பொ. 41) முதலியன பிரிதல் நிமித்தம். பிரிந்தபின் தலைவி வருந்துவனவும் தோழி ஆற்றுவித்தனவும் பாலை ஆதலின், பின்ஒருகால் பிரிதற்கு நிமித்தமாம்; அவை பின்னர்ப்பிரியும் பிரிவிற்கு முன்நிகழ்தலின்.

இனித் தலைவி பிரிவு உணர்த்தியவழிப் 'பிரியார்' என்று இருத்தலும், பிரிந்துழிக் 'குறித்த பருவம் அன்று' என்று தானே கூறுதலும், பருவம் வருந்துணையும் ஆற்றி இருந்தமை பின்னர்க் கூறுவனவும் போல்வன இருத்தல். அப்பருவம் வருவதற்கு முன்னர்க் கூறுவன 'முல்லை சான்ற கற்பு' அன்மையின் பாலையாம். இனிப் பருவம் கண்டு ஆற்றாது தோழி கூறுவனவும், பருவம் அன்று என்று வற்புறுத்தியனவும், வருவர் என்று வற்புறுத்தியனவும் தலைவன் பாசறைக்கண் இருந்து உரைத்தனவும், அவைபோல்வனவும் நிமித்தம் ஆதலின், இருத்தல் நிமித்தம் எனப்படும்.

இனிக் கடலும் கானலும் கழியும் காண்டொறும், இரங்கலும், தலைவன் எதிர்ப்பட்டு நீங்கியவழி இரங்கலும், பொழுதும் புணர்துணைப்புள்ளும் கண்டு இரங்கலும் போல்வன இரங்கல். அக்கடல் முதலியனவும், தலைவன் நீங்குவனவும் எல்லாம் நிமித்தமாம்.

புலவி முதலியன ஊடலாம். பரத்தையும் பாணனும் முதலியோர் ஊடல் நிமித்தமாம்.

ஏனையவும் வழக்கியலான் நால்வகை நிலத்தும் சிறுபான்மை வருமேனும், பெரும்பான்மையும் இவை உரிய என்றார்.

உரிமை குணமாதலின் உரிப்பொருள் பண்புத்தொகை"

என்று நச்சினார்க்கினியர் தொல். பொ, 14-ஆம் நூற்பாவுரையில் உரைத்தனவே, ஐந்திணை ஒழுக்கங்களையும் அவற்றின் நிமித்தங்களையும் விளக்குவனவாம். புணர்தல் முதலிய

வற்றின் முறைவைப்பாக இவ்வாசிரியர் சொற்றவை பெரும் பாலும் அந்நூற்பாவுரையுள் நச்சினார்க்கினியர் உரைத்தன வேயாம். எடுத்துக்காட்டுக்களும் பெரும்பாலும் நச்சினார்க் கினியர் வரைந்தனவே.

'கிளை பாராட்டும்' என்றபாடல்:

களிறு தன்கிளைகளுக்கு மூங்கில்முளை முதலிய உணவு களை ஊட்ட இடியுடன் மின்னி வானம் மழைபொழியும் இருண்ட நடுயாமத்தில் நின்தோளைச் சேர்ந்தால்ஒழிய எம் கண்கள் உறங்காவாதலின், நீயும், இருளில் புலிகள் வழங் கும் மலைப் பிளப்பகங்களின் அருமையை நோக்காது எளி தாகக் கருதி வருகின்றாய் ஆகவும், ஒருநாள் நின்னைத் தழு வாது ஒழியின் யாம் மெலிகின்றேம் ஆதலின், அன்னை அறி யினும் ஊரவர் அலர்தூற்றினும் அவைபற்றிக் கவலாது, தோன்றியும் வேங்கையும் கமழும் மலைப்பக்கத்தில் பகலில் வருக என்று தோழி தலைமனைக் குறிப்பால் வரைவுகடாய பாடல் இது. இதன்கண், பெருமலை விடர்அகம் என்ற மலைப்பகுதி, புயல்ஏறு உரைஇய வியல்இருள் நடுநாள் என்ற காலம் ஆகிய முதற்பொருள்களும், களிறு—புலி—ஆரம் — தோன்றி-வேங்கை-என்ற கருப்பொருள்களும், தோள்சேர்தல் மார்பு அடைய முயங்குதல் ஆகிய புணர்தல் என்னும் உரிப் பொருளும் அமைந்தமை காண்க.

'வண்டுபடத்ததைந்த' என்ற பாடல்:

"கண்ணியையும் குதிரையும் உடைய மழவர்களை வென்ற, முருகனை ஒத்த போர்ஆற்றலுடைய ஆவி என்ற வேளுக்குச் சொந்தமான யானைகள்மிக்க பொதினி மலையில், சாணைக்கல் செய்வோன் பிசினோடு சேர்த்துச் செய்த கல் லினைப்போலப் பிரித்தல்இயலாத தொடர்பு உடையேம் யாம்' என்ற சொல்லினை, நம் தோள் நெகிழ வெளிநாடு சென்று பொருள்ஈட்டத் திட்டம்இட்டு, பசுமைகெடக் கதிரவன் காய் தலின் மரங்கள் உலரப் பாறைகள் சூடேறச் சுனைகள் வற்றத்

தரையில் இடும் நெல் வெப்பத்தால் பொரிய வழிப்போவார் இன்மையால் கொள்ளையிடும் வாய்ப்பு இன்றி ஆறலைகள்வர் சோம்பிக்கிடப்பச் செல்லும் வழிகள் பொலிவுஇழந்து காணப் பட முருங்கையின் காய்ந்தபூக்கள் சூறைக்காற்றால் அலைகளைப் போன்று காற்றில் சிதறி ஓடக் கடல்போலக் காட்சி வழங் கும் பாலைநிலத்துச் சென்ற தலைவர் மறந்தனர்போலும்" எனப் பிரிவிடை ஆற்றாத தலைமகள் தோழிக்குக் கூறிய பாடல் இது.

இதன்கண், கடல்போல் தோன்றல காடு—அழல்போல் வெங்கதிர் பைது அறத் தெறும் பொழுது—என்ற முதற் பொருள்களும், உலறிய மரம்–காய்ந்து நீர் அற்ற பைஞ்சுனை — முருங்கை — முதலிய கருப்பொருள்களும், காடு இறந் தோர் 'பிரியலம்' என்ற சொல் மறந்தனர் கொல்லோ என்ற உரிப்பொருளும் வந்தவாறு.

'முல்லைவைநுதி' என்ற பாடல்:

'முல்லை மொட்டுவிட, தேற்றாமரமும் கொன்றையும் மலர, புல்லை நினைந்து மான்கள் துள்ளிக்குதித்தோட, வேனி லின் வெப்பத்தை உலகம் மறப்பக் கானம் கார்கால வனப் பினைப் பெற்றது. உறையூரின் கிழக்கின்கண்ணதாகிய சிராப்பள்ளிக்குன்றில் வளர்ந்த காந்தள் மணம் வீசும் உன்னை நினைத்துக் குறும்பொறைநாடன் 'வண்டுகள் அச் சத்தால் துணையைப் பிரியுமோ?' என்று அஞ்சித் தன்தேர் மணிகளின் நாக்களைக் கட்டி ஒலி அவித்துப் புரவியைச் செலுத்தித் தேர்கடாவி அதோ தோன்றுகிறான்' என்று தலைவன்வருகை கூறித் தலைவியைத் தோழி ஆற்றுவித்தது இப்பாடல். இதன்கண், 'கருவிவானம் கதழ்உறை சிதறிக் கார்செய்தன்றே கவின்பெறுகானம்' என்ற 'முதற்பொருள் களும், குறும்பொறை நாடன் —முல்லை—இல்லம்- கொன்றை இரலை—முதலிய கருப்பொருள்களும், குறும்பொறைநாடன் நின் மாண் நலம் படர்ந்து தேரில் உங்கே தோன்றும் என்ற உரிப்பொருளும் வந்தவாறு காண்க.

'சேற்றுநிலை முனைஇய' என்ற பாடல்:

'தானே உண்டாக்கிய சேற்றில் நிற்றலை வெறுத்த எருமை நள்ளிருளில் தன் கயிற்றை அறுத்துக்கொண்டு முள்வேலியைக் கொம்பினால் நீக்கிக் குளத்தில் மீன்கள் அஞ்சி ஓட வள்ளைக் கொடியைக் கலக்கி வண்டுகள் படியும் தாமரைப் பூக்களை உண்ணும் ஊரனே'. உன்னிடம் கோபம்கொள்ள நாங்கள் யாராவோம்? 'இருங்கூந்தலாள் ஒருத்தியை எம் இல்லத்தில் கொணர்ந்து வதுவை செய்தாய்' என்று கூறுகின்றனர் நாங்கள் அதைப்பற்றிப் பேசவில்லை. போரில் பகைவரை அழிக்கும் கொற்கைச்செழியருக்கு உடைமையான நெல்வளம்சான்ற அள்ளூரைஒத்த இயற்கை வனப்புடைய எங்கள் தொடி நெகிழ்ந்தாலும் நெகிழட்டும். உன்னைத் தடுப்பார் இலர் நீ செல்க' எனத்தலைவன் பரத்தைமை குறித்துத் தோழி வாயில் மறுத்த பாடல் இது.

இதன்கண், பழனம், ஊர்-தாமரையை வண்டு ஊதுதற்குரிய விடியற்காலம்—என்ற முதற்பொருள்களும், காரான்—வள்ளை-தாமரை—என்ற கருப்பொருள்களும், 'பிறழும் ஒருத்தியை எம்மனைத் தந்து வதுவை அயர்ந்தனை; அஃது யாம் கூறேம்' என ஊடலைக் குறிப்பிடும் உரிப்பொருளும் அமைந்தமை காண்க.

'கானல் மாலை' என்ற பாடல்:

கடற்கரைச் சோலையின் பக்கலில் மாலை நேரத்தில் கழிப் பூக்கள் மூடிக்கொள்ள, கடல்ஒலிப்ப, மீன்உண்ணும் பறவைகள் குடம்பைநோக்கிப் புன்னைமரத்தை அடைய, வண்டுகள் ஒலிக்கும் அந்நேரத்தில் தாழைகள் தளருமாறு கொண்டல் காற்றுவீச. நெஞ்சம் வருந்தத் துயரம்செய்து நமக்கு அருளார் ஆயினும், அவர்நட்பு நீங்காது தொடர்வதாகுக வெண்ணெல் அரிவார் கொட்டும் தண்ணுமைப்பறைஒலியை வெறுத்த நாரை ஊதுகொம்பு போல ஒலித்துப் பனைமடலில் தங்கும் கடல்துறையை உடைய தலைவனுடைய மார்பை

நோக்கிச்சென்ற என்நெஞ்சு, அவன் கருணைகாட்டவில்லை என்ற காரணத்தால் அவன்பக்கல் இருப்பதை வெறுத்து என்னிடம் மீண்டு வாராது ஒழிக' என்று தலைவன் பொருட் பிரிவிடைத் தலைவி இரங்கி உரைத்த பாடல் இது. இதன்கண் கானல்மாலை — நீல்நிறப்பெருங்கடல் — புள்குடம்பைசேர வண்டு ஆர்க்கும் காலை—என முதற்பொருள்களும், கழிப்பூ- புன்னை —தாழை— பெண்ணை —முதலிய கருப்பொருள்களும், நெஞ்சம் இனைய அருளார் ஆயினும் அவர்கேண்மை அரு அலியர், நெஞ்சம் வாரற்க என இரங்கும் உரிப்பொருளும் வந்தவாறு காண்க

'நறை பரந்த' என்றபாடல்:

'சந்தன மரங்களை வெட்டிச் சீர்திருத்தி விதைத்த தினைக்கொல்லையில் அம்புபட்ட மான்கள் வந்தனவா? என்ற கருத்துடைய இப்பாடலில், சாந்தம்—ஏனல் – என்ற கருப்பொருள்களும், தலைவன், தலைவி தோழி இருவரும் நின்ற இடத்து மதிஉடன்படுத்தலாகிய புணர்தல்நிமித்தமாம் உரிப்பொருளும் வர முதற்பொருள் வாராமை காண்க.

'முதுக்குறைந்தனளே' என்றபாடல்:

மலைநாட்டுத் தலைவன்மகள் முலைகள் முகிழ்க்காத பிள்ளைப் பிராயத்திலேயே பேரறிவு படைத்தாள் — என்ற கருத்தமைந்த இப்பாடலில், தலைவி காமப் பொருட்கண் சிறிது அறிவு படைத்தாள் என்ற உரிப்பொருள் ஒன்றுமே கொண்டு ஏனைய முதலும் கருவும் இன்றிக் குறிஞ்சித்திணை வந்தவாறு காண்க.

'நாளும் நாளும்' என்றபாடல் :

"நாடோறும் முயற்சி இன்றி வீட்டிலேயே அக இன்பம் நுகர்பவர் புகழ் எய்தார் என்று நம் தலைவர் பொருள் தேடப் பிரிந்துள்ளார் ஆதலின், நீ கண்ணீரைத் துடைத்துக்கொள்க" என்று தோழி தலைவியை வற்புறுத்தி

ஆற்றும் இப்பாடலில், தலைவர் பொருட்கு அகல்வர் என்ற பாலை உரிப்பொருளாகிய பிரிதல் ஒன்றுமே வர, ஏனை முதற் பொருளும் கருப்பொருளும் வாராமை காண்க.

'திருநகர்' என்ற பாடல்:

''முல்லையே' என் இல்லத்தில் உறையும் குற்றமற்ற கற்பினளாகிய என் மனைவியின் கூந்தலுடைய மணமும் பற்களின் ஒளியும் நீ பெற்றிருப்பதற்கு அவளோடு நினக்கு என்ன உறவு உள்ளது?" என்ற இப்பாடலில் பொருள்வயின் பிரிந்து மீண்டு வந்து இல்லறம் நடத்துவோன், மீண்டும் பொருட்பிரிவு கருதி அதனினும் தலைவியின் கூட்டமே சிறந்தது என்ற கருத்தில் அவளைப் புகழும் வாயிலாகப் பேசும் பேச்சில், கற்பின் மாயோள்—முல்லை என்ற கருப்பொருள்களும், 'திருநகர் விளங்கும் மாசில் கற்பு' என இருத்தலாகிய உரிப்பொருளும் வர, முதற்பொருள் சுட்டப்படாமை காண்க.

"கரந்தை வீரைஇய'' என்ற பாடல்:

"கரந்தைமாலை சூடி இளையர் தம் ஏவலைக் கேட்கப் பரியைச் செலுத்தித் தேரொடு சென்று பகைவரை அழித்து நம் காதலர் வினைமுடித்து மீண்டார்'' என்று தோழி தலைவியை ஆற்றுவிக்கும் இப்பாடலில், தலைவர் வந்தார் என்ற முல்லைத் திணைக்கு உரிய உரிப்பொருள் ஒன்றுமே வர, முதலும் கருவும் வாராமை காண்க.

' பூங்கொடி மருங்கின் ' என்றபாடல்:

'கொடி இடையாள் ஆகிய பரத்தையின் நட்புத்தொடர் கையினாலே பாணன் தொடர்ந்து நம்பக்கல் உள்ளான்' என்ற இப்பாடலில், 'எங்கை கேண்மை முன்னும் பின்னுமாகி' என்ற மருதத்தின் உரிப்பொருளாகிய ஊடல் ஒன்றுமே வர, மருதத்தின் முதற்பொருளும் கருப்பொருளும் வாராமை காண்க.

'அங்கண் மதியம்' என்றபாடல்:

'மதியம் பாம்பால் மறைக்கப்பட்டதைக் கண்டு சான்றோர் வருந்துவதுபோல, நாம் தனிப்படர் உழக்கும் மனைக் கண் கலங்கி அயலாரும் நோவவும், நலனுண்ட சேர்ப்பன் ஒருவனே நம்மைப்பற்றி நோதல் இன்றி உள்ளான்' என்ற இப்பாடலில், 'ஏதில்மாக்களும் நோவர்' 'எனத் தலைவியின் நிலைகுறித்துப் பிறரும் இரங்கத்தக்க இரக்கமாகிய உரிப் பொருளும், நெய்தல் நிலத்தலைவன் பெயராகிய சேர்ப்பன் என்ற கருப்பொருளும்வர, முதற்பொருள் வாராமை காண்க.

இவற்றால், ஒவ்வொரு பாடற்கண்ணும் முதல்கருஉரி என்ற திணைக்குரிய முப்பொருளும் வருதல்வேண்டும் என்ற வரையறை இன்று என்பது உணரப்படும்.

ஒத்த நூற்பாக்கள்

'புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல்
ஊடல் இவற்றின் நிமித்தம் என்றிவை
தேருங் காலைத் திணைக்குஉரிப் பொருளே.'
தொல். பொ. 14, மு, வீ. அக. 40

'புணர்தலும் பிரிதலும் இருத்தலும் ஊடலும்
இரங்கலும் இவற்றின் நிமித்தமும் என ஆங்கு
எய்திய உரிப்பொருள் ஐயிரு வகைத்தே'. ந. அ. 25

'புணர்தலும் பிரிதலும் இருத்தலும் ஊடலும்
அனைவயின் இரங்கலும் அவற்றின் நிமித்தமும்
களவொடு கற்பெனக் கவைநர் கூறிய
அளவின் உரிப்பொருள் ஆகும் என்மனார்'.
த. நெ. வி. 13

'குடவரைக் குறிஞ்சியும் குணகடல் நெய்தலும்
கடவது ஆகும் களவிற்கு உரித்தே,' மு. வீ. அக. 41

'நன்னில மருதமும் தொன்னில முல்லையும்
துன்னருங் கற்பொடு தோன்றும் தொடர்ந்தே,'
மு. வீ. அக. 42

ஐந்திணைபற்றி வீரசோழியஉரை (சூ. 92-96) கூறுவன பின்வருமாறு :

## குறிஞ்சி நடையியல்

அறிந்தோர் ஆய்ந்த அன்புதரு வகையின்
குறிஞ்சி நடைஇயல் கூறுங் காலை
அரிவைக்கு ஆகிய இறைவியை வர்க்கம்
தெரிமணிப் பூணன் தெரியச் செப்பலும்
நன்னலம் புகழ்தலும் நாணினம் அழுங்கலும்
பொன்அவிர் பூவையைப் புணர்ப்பது உரைத்தலும்
பிரிவுநனி கருதலும் பிரிவின்மை பேசலும்
பெருமை செய்தலும் பெறற்கரிது என்றலும்
ஊழ்வினை வலித்தலும் உறுதெய்வம் பேணலும்
தோழனை நினைத்தலும் அகறலும் அணுகலும்.
இடத்தொடு புலம்பலும் ஏழையை வினவலும்
மடத்தகு சாயல் மாதரைக் காண்டலும்
அனம்புலம்பு அகற்றலும் ஆர்வ நோக்கமும்
குவளைஉண் கண்புதைத்துத் தலைவி இறைஞ்சலும்
ஆற்றான் மொழிதலும் அஞ்சியல் நோக்கமும்
ஏற்ற உவகையோடு இனியவள் முறுவலும்
ஆங்கவன் புணர்தலும் அவ்வயின் புணர்ச்சியைப்
பாங்கற்கு உணர்த்தலும் பழிஎனக் கூறலும்
தேங்கமழ் தாரோன் தெரியான் செப்பலும்
கிளைஞன் கழறலும் கேடெனக் கூறலும்
இளையவன் வடிவும் இடமும் ஈதலும்
அண்ணல் கவற்சிக்கு அவள்வடிவும் இடனும்
திண்ணிதின் செப்பலும் சென்றுஅவன் காண்டலும்
வெறிகமழ் கோதை மிகுநலம் புணர்தலும்
அறிவும் நிறையும் அண்ணலை எய்தலும்
வேறிடம் காட்டலும் இலங்கிழை உணர்தலும்
ஊறன்று முடிவில்தன் பாங்கற் கூட்டமும்,
தையல் தளர்ச்சியை நோக்கித் தோழி

ஐயுறு நிலைமை அறிய உரைத்தலும்
மனைவி போல அல்லவை மொழிதலும்
விழுப்பம் பேசலும் வேண்டா என்றலும்
பழித்தகவு உணர்த்தலும் பார்த்துஉறவு உரைத்தலும்
பொருந்தா என்றலும் பொய்யுரை புரிதலும்
வருந்தும் என்றலும் வடிவிது என்றலும்
நின்குறை நீயே சென்றுரை என்றலும்
சீர்மலர்க் கோதைக்குச் செவ்வியன்று என்றலும்
நீர்மையன்று என்றலும் நீங்குமின் என்றலும்
மூரல் முறுவலோடு முகம்மலர்ந்து உரைத்தலும்
இரங்கி மொழிதலும் ஏத்தி மொழிதலும்
கலங்கி மொழிதலும் கழறி மொழிதலும்
வள்ளல் தளர்ச்சியும் மடலேற்று மொழிதலும்
உள்ளம் குளிர்ப்பித்து ஒண்தழை என்றலும்
நெஞ்சத்து அடங்கிய நின்றுகுறை ஏற்றலும்
இன்சொல் இரக்கமும் வன்சொலின் மயக்கமும்
புகழ்தலும் மயங்கி உரைத்தலும்
கயற்கண் ஏழையைக் கவற்சி தீர்த்தலும்
பகற்குறி நேர்தலும் அக்குறி உரைத்தலும்
பகல்இடம் காட்டலும் சொல்பல உரைத்தலும்
இற்செறிவு உரைத்தலும் வரைவு கடாவலும்
இரவரவு இசைத்தலும் வரவு விலக்கலும்
மற்றவள் தளர்ச்சியும் இரவுக்குறி நேர்தலும்
எய்துகுறி வினவலும் ஏந்திழை மகிழ்வுடன்
குறியுரைத்தலும் அதுகேட்டு உணர்த்தலும்
மெய்க்குறி உரைத்தலும் மிகுதியில் கொண்டலும்
ஏந்திழை எடுப்பலும் இடப்புறத்து அகற்றலும்
பூந்தண் சிலம்பன் புணர்ச்சியது குறியும்
செவிலியது சேறலும் சென்றெதிர் கோடலும்
கவ்வை பெரிதுஇவண் கண்டுஅறி என்றலும்
அம்பலும் அலரும் ஆயின என்றலும்
வம்புஅலர் கோதை வாட்டம் கூறலும்

நற்ருய் செவிலி என்றிவர் நன்னுதற்கு
உற்றதை அறியாது நற்றிறம் படர்தலும்
கட்டுரை கூட்டலும் கேட்டவள் கூற்றும்
ஒட்டிவெறி அயர்தலும் ஒண்ணுதல் அழுங்கலும்
இவ்வியல் அன்னைக்கு உணர்த்துக என்றலும்
அவ்வியல் ஒட்டாள் மொழிதலும் ஆயிடைப்
பூத்தரு புணர்ச்சியும் புனல்தரு புணர்ச்சியும்
காப்பரும் புனத்துக் களிறுதரு புணர்ச்சியும்
தாய்தரு புணர்ச்சியும்
கூறிய தாயது குறிப்புவழீ மொழிதலும்
வரைந்துநனி புகுதலும் வரைவுஅவர் மறுத்தலும்
கரைந்ததற்கு இரங்கலும் கவற்சி தீர்தலும்
எதிர்கொளல் மொழிதலும் ஏற்றுமகள் மொழிதலும்
நிரவிய இயற்கையோடு இன்னவை பொருளே.

## பாலை நடையியல்

நூல்இயல் முறைமை நுண்ணிதின் உணர்ந்தோர்
பாலை நடையது பகருங் காலை
உடன்போக்கு உணர்த்தலும் அப்போக்கு உரைத்தலும்
மடவோள் தன்திறம் மாண்புற நோக்கலும்
கற்பியல் காட்டலும் கைஉய்த்து மொழிதலும்
வெற்பிடைப் போதலும் மெல்லியல் தளர்தலும்
தளர்ந்தோள் ஓம்பலும் தம்முள்நேர் என்றலும்
எதிர்ந்தோர் மொழிதலும் எதிர்கொளத் தவிர்தலும்
கண்டோர் ஏத்திய கற்புடை ஒழுக்கமும்
தண்தளிர் மாடம் தனக்குஉரை மாற்றமும்
தாங்கரும் பூசல் தன்னையர் எழுச்சியும்
ஆங்கவள் வலித்தலும் அமைந்தோர் திருத்தலும்
மதியுடன் படுத்தலும் பண்பெய்த மொழிதலும்
ஈன்ருேள் இரங்கலும் எதிர்ந்தோர் கூறலும்
அம்பலும் அலரும் ஆதலும் அயலோர்

தோன்றக் கூறிய தோம்அறு கற்பும்
அன்புறு செவிலி பின்செல வலித்தலும்
சென்றவள் வினவலும் கண்டோர் தெருட்டலும்
ஒன்றிய உள்ளமொடு உவந்து அவள் மீண்டலும்
வறுஞ்சுரம் கடந்தவர் வள நாடு புகுதலும்
பிறங்குபுகழ்ப் புதல்வரைப் பெறுதலும் பெற்றோள்
இருங்கிளை மருங்கின் தூது விடுத்தலும்
ஒருங்க வருந்தலும் உவந்துடன் சென்றலும்
மாதரைக் கொண்டுதன் வாழ்பதி புகுதலும்
ஓதிய அனைத்தும் உரியவை புக்கபின்
பொருள்வயின் பிரிதலும் அப்பிரிவு உணர்த்தலும்
இருள்புரி கூந்தல் இற்றுஎன மொழிதலும்
ஆற்றுன் ஆதலும் அதுகேட்டு மொழிதலும்
கூற்றம் கொளீஇய உலகியல் உரைத்தலும்
பின்னைப் பிரிதலும் பெருஞ்சுரத்து அழுங்கலும்
நனிபகர் பள்ளியின் நயந்துசெலவு அழுங்கலும்
பரத்தையின் பிரிவொழித்து எல்லாப் பிரிவும்
உரைக்குங் காலை உணர்ந்தனன் நோக்கே.

## முல்லை நடையியல்

இறைச்சிப் பெருமையோடு இறைவழிப் பட்டுக்
கற்புக்கடம் பூண்டு கடப்பாடு ஆற்றும்
முல்லைத் திணை நடை சொல்லுங் காலை
இறைவன் பிரிய இல்லிருந்து ஆற்றி
நினைவுநனி காத்தல் நீர்மையின் மொழிதல்
மாழைஅம் கண்ணி வருந்தினள் பெரிதுஎனத்
தோழி கவறல் கவன்ற தோழிக்கு
ஆற்றுவன் என்றல் அவள்பயம் உரைத்தல்
வேற்றுமை கூறல் வெய்துஉயிர்த்து இரங்கல்
மின்மலி கார்கண்டு மெலிந்தவள் மொழிதல்
தொன்மலி தோழி காலம் மறுத்தல்

காதல் பெயர்பு கார்அன்று இதுஎனத்
தாதுஅவிழ் கோதை தானே கூறல்
பருவம் காட்டிப் பிரிவுஒழி என்றல்
வருவர் நமர்என வாய்மொழி வலித்தல்
அந்தியும் ஆம்பலும் மாலையும் மணியும்
தென்றலும் திங்களும் பிறவும் அன்னவை
புகன்றுஅற ஆற்ருள் அகன்று அவண்மொழிதல்
என்குறை இதுஎன இரந்துகுறை கூறல்
பொருள்வயின் நிற்றல் அவ்வயின் நிலையும்
இயல்வளி முற்றுதல்
கார்கண்டு உரைத்தல் கனவின் அரற்றல்
போர்வேல் கண்ணி புலம்புமென்று இரங்குதல்
தூது விடுதல் தூதுஎதிர் கோடல்
போதுஅவிழ் கோதை புலம்புநனி தீர்த்தல்
கோஒரூஉ மொழிதல் தேர் அவண் வருதல்
ஆர்மலி தேரை அமர்ந்துஅவன் ஏறல்
பாகனைக் கடாவுஎனப் பன்மணி நெடுந்தேர்
வேக நிலைமையின் விரைந்துநனி கடாவுதல்
இல்லியல் மடந்தையர் இயல்புஉளம் கேட்டல்
நல்லியல் நெடுங்கொடி நன்னகர் காட்டல்
இறைமனை சேருதல் எதிர்கொண்டு வணங்குதல்
பொறைமலி மடந்தையைப் புலவித்தலை அளித்தல்
பருநாண் நோக்கிப் பயன்கண்டு மொழிதல்
செருவேல் கண்ணி சேக்கையின் களித்தல்
முல்லை நல்லியாழ் முறைமையில் கேட்டல்எனச்
சொல்லிய பிறவும் சொன்னதன் பொருளே.

## மருத நடையியல்

கருதற்கு அமைந்த கற்ரோர் பூண்ட
மருத நடையது மாண்புஉறக் கூறின்
விழவு விரும்புதல்

பொழில்மகிழ்ந்து இருத்தல் புனலாட்டு அயர்தல்
இல்லிடைப் பரத்தையர் இயல்இடைப் பரத்தையர்
கல்வியொடு பழகிய காதல் பரத்தையர்
நல்லியல் நிலைமை நயப்புப் பரத்தையர்
சொல்லிய பரத்தையர் நால்வரும் கூற
ஆங்கவர்ப் புணர்தல் அவர்க்கண் அகறல்
வீங்குமுலைப் பரத்தையர் உழைநின்று விடற்குப்
பாங்கன் தோழி பாணன் என்னும்
ஆங்கவர் முதலியர் இரந்துகுறை உறுதல்
அவர்சென்று இரக்கல் அணியிழை மறுத்தல்
புகர்அறு கோதை பொறுத்தற்குறை இரத்தல்
ஊரன் புகுதல் உவந்துஎதிர் கோடல்
பேராச் சீற்றமொடு பெருமுனிவு பேசல்
விருந்தொடு புகுதல் புதல்வரொடு புகுதல்
திருந்திழை அரிவையைத் திரிந்துஎதிர் கோடல்
செந்நிறக் கோலச் சிறுமி புகுதல்
அந்நிறம் நன்னாள் அருங்கவின் உறைதல்
உள்நிறை உவகையோடு ஒண்ணுதல் உவத்தல்
வெண்ணிறக் கோலத்து மேதக உணர்தல்
பண்அமை கிளவியொடு பள்ளியுள் மகிழ்தல்
அலைபுனல் ஊரன் ஆற்றான் புகுதல்
புலவிகற்பு ஒன்றால் நண்ணிச் சீறல்
ஆற்றான் ஆகி அவள்எதிர் ஊடல்
தேற்றேன் என்றல் தெளித்து வழிபடுதல்
வளவயல் ஊரன் வதுவை கேட்டுஉளே
உளம்நனி அடக்கி உவந்தோள் போறல்
பண்ணி வீடுதல் பான்மையின் மொழிதல்
எண்ணிய சிறப்பின் எங்கைஎன்று இசைத்தல்
மனைச்செல் பரத்தையை மகிழ்ந்துஎதிர் கோடல்
முனித்தகவு இன்மை முயன்று பண்பு எய்தல்
ஆயிடை அவர்கள் அமர்ந்துஎதிர் கோடல்
போய்அஃது ஈண்டல் புகழ்தல் ஏத்தல்

பள்ளியுள் மகிழ்தல் பாங்குறப் புணர்தல்
எள்ளருந் தோழி ஏற்பக் கூறல்எனச்
சொன்னவை போல அன்னவும் எல்லாம்
பன்னுங் காலை அவ்வயின் படுமே.

## நெய்தல் நடையியல்

கையறு புலம்பும் கலவியும் தலைதரும்
நெய்தல் நடையியல் நேருங் காலைக்
கடலும் கழியும் கைதையும் கானலும்
மடல்இரும் பெண்ணையும் வான்சிறைப் புள்ளும்
கழுமிய இருளும் கதிர்ஒளி மதியும்
பொழுதும் காற்றும் என்றிவை முதலாம்
எவ்வகைப் பொருளும் இரந்துகுறை உறுதலும்
அவ்வகைப் பொருளுக்கு ஆற்றாது உரைத்தலும்
விரைமலர்த் தாரோன் விழுப்பம் கூறலும்
இரவுக்குறி நேர்தலும் பகர்குறி மறுத்தலும்
இரவிடம் காட்டலும் பகலிடம் காட்டலும்
வரவுஅறி வுறுத்தலும் வான்துயில் கோடலும்
இறைவனைத் தோளியை இன்துயில் எடுப்பலும்
துறைவனின் துயில்எழீஇத் துன்னுதல் பொருட்டால்
ஏதில கூறலும் இடத்துய்த்து அகற்றலும்
மேதகு கிளவியின் மீண்டுஎதிர் கோடலும்
சிறப்புறக் கிளத்தலும்
அம்பலும் அலரும் ஆயின என்றலும்
வம்பலர் தாரோய் வருந்தினள் என்றலும்
குறிவழிப் படுத்தலும் கொண்கன் தோன்றலும்
அறியக் கூறலும் அருங்காப்பு மிகுதலும்
தாம்பிழைப்பு இன்மையும் தவச்செலவு அருமையும்
வன்பழிக்கு அஞ்சலும் வாரலை என்றலும்
இரவுவரல் என்றலும் பகல்வரல் என்றலும்
இரவும் பகலும் வாரல் என்றலும்
அவ்விரு பொழுதும் ஆய்ந்துவரல் என்றலும்

கவ்வை உரைத்தலும் கனவுஅவள் உரைத்தலும்
வரைதல் வேட்கையொடு வந்தவும் பிறவும்
உரைதரு பெருமையோடு உரைத்தனர் பலரே.

இறைச்சிப் பொருள்வகை திறப்படத் தெரியின்
அங்கியல் பொருளே திணைநிலைப் பொருளே
வன்புலப் பொதுப்பொருள் மென்புலப் பொதுப்பொருள்
பெருமைப் பொதுப்பொருள் விருந்துப்பொதுப் பொருளென
இருமூன்று என்பர் தெரிநூற் புலவர்'.

அவற்றுள், அங்கியற் பொருளாவது அந்நிலத்தின் அங்கமாம் பொருள் எனக்கொள்க. அவையாவன: குறிஞ்சி நிலத்துச் சந்தனமும் பொன்னும் வெள்ளியும் முதலிய; நெய்தல் நிலத்து உப்பும் இப்பியும் நந்தும் அலவனும் வலையும் முதலிய; பாலைநிலத்துச் சீழ்குநாயும் குருவியும் சிள் வீடும் அறுபுள்ளியும் கோம்பியும் முதலாயுள்ளன; மருத நிலத்துக் கரும்பு வாழை தெங்கு முதலாயுள்ளன; முல்லை நிலத்துப் பூவையும் பூனையும் தும்பியும் காவளையும் கார் போகியும் முதலாயுள்ளன.

திணைநிலைப்பொருள் 92-96 நூற்பாக்களில் சொல்லப் பட்டன. இனி, வன்புலப் பொதுப்பொருளும் மென்புலப் பொதுப்பொருளும் பெருமைப்பொதுப்பொருளும் விருந்துப் பொதுப்பொருளும் ஆமாறு :

'ஆரே புன்கை அரசு உழிஞ்சில்
காரை பருத்தி கரும்பே முதலா
வன்புலப் பொருள்என நன்குஉரைத் தனரே'.
'கீரை வழுதுணை கிடையே சணப்பே
வேரிதணக்கு அந்தம் மருதம் முதலன
மென்புலப் பொருள்என நன்குஉரைத் தனரே'.
'தாளியும் பூவலும் நாவலும் கழஞ்சும்

வேலியும் மாறும் பதடியும் கோரையும்
தூரையும் சுரையும் சுரும்பும் வண்டும்
துவரையும் அகத்தியும் ஐம்பெரு முதிரையும்
காணுங் காலைத் திணைதொறும் காணப்
பேணினர் என்மனார் பெருமைப் பொதுப்பொருளே'.
'ஒருதிணைக்கு உரியன ஒருதிணைச் சேரின்
விரிநூல் புலவர் விருந்துஎன் றனரே'. 29

இத்துணையும் ஐந்திணைபற்றி வீரசோழிய உரை விளம்புவன.

இனி, இவ்வைந்திணைக் கருப்பொருள்பற்றித் தொல்காப்பியப் பொருட்படல 20ஆம் நூற்பா உரையில் உரையாசிரியர் கூறுவன :

குறிஞ்சிக்குத் தெய்வம் முருகவேள். மைவரை உலகமும் கூதிர்க்காலமும் அதனிடை நள்ளிருளும் கூறினமையான், அந்நிலத்தினும் காலத்தினும் நிகழ்பவை கொள்க. உணவு-தினையும் ஐவனமும் வெதிர்நெல்லும். மா-யானையும் புலியும் பன்றியும் கரடியும். மரம்-வேங்கையும் கோங்கும். புள்-மயிலும் கிளியும். பறை-வெறியாட்டுப்பறையும் தொண்டகப் பறையும். செய்தி-தேன் அழித்தல். பண்-குறிஞ்சி 'பிறவும்' என்றதனால், பூ-வேங்கைப் பூவும் காந்தட்பூவும் குறிஞ்சிப் பூவும்; நீர் சுனை நீரும் அருவி நீரும். பிறவும் அன்ன.

பாலைக்குத் தெய்வம் கொற்றவை. உணவு-ஆறலைத்தலான் வரும் பொருள், விளைபொருள் இன்மையான். மா—வலி அழிந்த யானையும், வலி அழிந்த புலியும், வலி அழிந்த செந்நாயும். மரம்-பாலை, இருப்பை, கள்ளி, சூரை. புள்-எருவையும் பருந்தும், பறை-ஆறலைப் பறையும் சூறை கொண்ட பறையும். செய்தி-ஆறலைத்தல். பண்-பாலை. 'பிறவும்' என்றதனால், பூ-மராம்பூ; நீர்-அறுநீர்க் கூவலும் அறுநீர்ச் சுனையும். பிறவும் இந்நிகரன கொள்க.

மருதத்திற்குத் தெய்வம் இந்திரன், 'தீம்புனல் உலகம்' (தொல். பொ. 5) எனவும் 'வைகறைவிடியல்' (தொ. பொ. 9) எனவும் ஓதினமையால், அவ்விடத்தினும் காலத்தினும் நிகழ்பவை கொள்க. உணவு-நெல். மா-எருமையும் நீர்நாயும். மரம்-மருதும் காஞ்சியும். புள்-அன்னமும் அன்றிலும். பறை-நெல்லரி பறை. செய்தி-உழவு. பண்-மருதம். 'பிறவும்' என்றதனால், பூ-தாமரையும் கழுநீரும்; நீர்-ஆற்றுநீரும் பொய்கைநீரும். பிறவும் அன்ன.

முல்லைக்குத் தெய்வம் கண்ணன். 'காடுறை உலகம்' (தொல். பொ. 5) என்றதனானும் 'காரும் மாலையும் முல்லை' (தொல்.பொ.6) என்றதனானும், காட்டினும் கார்காலத்தினும் மாலைப்பொழுதினும் நிகழ்பவை கொள்க. உணவு-வரகும் முதிரையும். மா-மானும் முயலும். மரம்-கொன்றையும் குருந்தும் புதலும். புள்—கானங்கோழி. பறை-ஏறுகோட்பறை. செய்தி-நிரைமேய்த்தல். யாழின்பகுதி என்பது பண்; அது சாதாரி. 'பிறவும்' என்றதனால். பூ முல்லையும் பிடவும் தளவும்; நீர்-கான்யாறு. பிறவும் இந்நிகரன கொள்க.

உரையாசிரியர் தொல்காப்பியப் பொருட்படல 23, 24ஆம் நூற்பாக்களில் நிலமக்கள் பெயர்களைக் குறிப்பிட்டுள்ளார்:

குறிஞ்சிக்கு மக்கட்பெயர் குறவன், குறத்தி என்பன; தலைமக்கள் பெயர் மலைநாடன், வெற்பன் என்பன.

பாலைக்கு மக்கள் பெயர் எயினர், எயிற்றியர் என்பன; தலைமக்கள்பெயர் மீளி, விடலை என்பன.

முல்லைக்கு மக்கள் பெயர் பொதுவன், ஆயன் என்பன; தலைமக்கள்பெயர் குறும்பொறைநாடன் என்பது போல்வன.

மருதத்திற்கு மக்கள்பெயர் உழவர்உழத்தியர் என்பன; தலைமக்கள் பெயர் ஊரன், மகிழ்நன் என்பன.

நெய்தற்குமக்கள்பெயர் நுளையர், நுளைச்சியர் என்பன; அவருள் தலைமக்கள் பெயர் சேர்ப்பன், துறைவன்' கொண்கன் என்பன. பிறவும் அன்ன.

இனி, நச்சினார்க்கினியர் தொல்காப்பியப் பொருட்படல 18, 20ஆம் நூற்பாக்களில் உரைப்பன பின்வருமாறு:

முல்லைக்கு உணா வரகும் சாமையும் முதிரையும். மா-உழையும் புல்வாயும் முயலும். மரம்—கொன்றையும் குருந்தும். புள்—கானங்கோழியும் சிவலும். பறை—ஏறு கோட்பறை. செய்தி—நிரைமேய்த்தலும் வரகு முதலிய களை கட்டலும் கடாவிடுதலும். யாழ் - முல்லையாழ். 'பிறவும்' என்றதனால் பூ - முல்லையும் பிடவும் தளவும் தோன்றியும்; நீர் - கான்யாறு; ஊர் - பாடியும் சேரியும் பள்ளியும்.

குறிஞ்சிக்கு உணா ஐவன நெல்லும் தினையும் மூங்கில் அரிசியும். மா - புலியும் யானையும் பன்றியும். மரம் - அகிலும் ஆரமும் தேக்கும் திமிசும் வேங்கையும். புள் - கிளியும் மயிலும். பறை – முருகியமும் தொண்டகப் பறையும். செய்தி - தேன் அழித்தலும் கிழங்கு அகழ்தலும் தினை முதலிய விதைத்தலும் கிளிகடிதலும். யாழ் - குறிஞ்சி யாழ். 'பிறவும்' என்றதனால், பூ - காந்தளும் வேங்கையும் சுனைக்குவளையும்; நீர் - அருவியும் சுனையும்; ஊர் சிறு குடியும் குறிஞ்சியும்.

பாலைக்கு உணா ஆறு அலைத்தனவும் சூறை கொண்டனவும். மா - வலி அழிந்த யானையும் புலியும் செந்நாயும். மரம் – வற்றின இருப்பையும் ஓமையும் உழிஞையும் ஞெமையும். புள் - கழுகும் பருந்தும் புறவும். பறை - சூறைகோட்பறையும் நிரைகோட்பறையும். செய்தி - ஆறலைத்தலும் சூறைகோடலும். யாழ் - பாலையாழ். 'பிறவும்' என்றதனால், பூ - மராவும் குராவும் பாதிரியும்; நீர் - அறுநீர்க் கூவலும் சுனையும்; ஊர் பறந்தலை.

மருதத்திற்கு உணா செந்நெல்லும் வெண்ணெல்லும். மா - எருமையும் நீர்நாயும். மரம் - வஞ்சியும் காஞ்சியும் மருதமும். புள் - தாராவும் நீர்க்கோழியும். பறை - மண முழவும் நெல்லரிகிணையும். செய்தி - நடுதலும் களை கட்டலும் அரிதலும் கடாவிடுதலும். யாழ் - மருதயாழ். 'பிறவும்' என்றதனால், பூ - தாமரையும் கழுநீரும்; நீர் - யாற்றுநீரும் மனைக்கிணறும் பொய்கையும்; ஊர் - ஊர்கள் என்பனவேயாம்.

நெய்தற்கு உணா மீன்விலையும் உப்புவிலையும். மா - உமண்பகடு போல்வன; முதலையும் சுறவும் மீன் ஆதலின், மா என்றல் மரபு அன்று. மரம் - புன்னையும் ஞாழலும் கண்டலும். புள் அன்னமும் அன்றிலும் முதலியன. பறை-மீன்கோட்பறை. செய்தி - மீன்படுத்தலும் உப்பு விளைத்தலும் அவை விற்றலும். யாழ் - நெய்தல்யாழ். 'பிறவும்' என்றதனால், பூ - கைதையும் நெய்தலும்; நீர் - மணற்கிணறும் உவர்க்குழியும்; ஊர் - பட்டினமும் பாக்கமும்.

ஐவகை நிலத்தும் மருவிய குலப்பெயர் ஆவன :

குறிஞ்சிக்குக் கானவர் வேட்டுவர் குறவர் இறவுளர் குன்றுவர், வேட்டுவித்தியர் குறத்தியர் குன்றுவித்தியர். ஏனைப் பெயர் வருமேனும் உணர்க.

பாலைக்கு எயினர் எயிற்றியர் மறவர் மறத்தியர். பிறவருமேனும் கொள்க.

முல்லைக்குக் கோவலர் இடையர் ஆயர் பொதுவர் இடைத்தியர் கோவித்தியர் ஆய்த்தியர் பொதுவியர். பிற வருமேனும் கொள்க.

மருதத்திற்குக் களமர் உழவர் கடையர் உழத்தியர் கடைச்சியர். ஏனைப் பெண் பெயர் வருமேனும் உணர்க.

நெய்தற்கு நுளையர் திமிலர் பரதவர் நுளைத்தியர் பரத்தியர், ஏனைப் பெண்பெயர் வருமேனும் உணர்க.

உரிப்பொருட்கு உரிய தலைமக்கள் பெயராவன, பெயர்ப் பெயரும் நாட்டாட்சிபற்றி வரும் பெயருமாம். குறிஞ்சிக்கு வெற்பன் சிலம்பன் பொருப்பன் கொடிச்சி. பாலைக்கு மீளி விடலைகாளை. முல்லைக்கு அண்ணல் தோன்றல் குறும்பொறை நாடன் மனைவி. நெய்தற்குக் கொண்கன் துறைவன் சேர்ப் பன் மெல்லம்புலம்பன். மருதத்திற்கு மகிழ்நன் ஊரன் மனை யோள். 21

## திணை மயக்கம்

393 முத்திறப் பொருளும் தத்தம் திணையொடு
மரபின் வாராது மயங்கலும் உரிய.

இது முதற்பொருள் முதலிய மூன்றற்கும் ஆவது ஒரு புறனடை கூறுகின்றது, தமக்கு உரியவற்றோடன்றிப் பிற வற்றோடும் மயங்கும் என்றலின்.

(இ-ள்) முதல் கரு உரி என்னும் மூன்று கூற்றவாகிய பொருளும் தமக்குத்தமக்கு உரிய திணையொடுகூடி இலக்கண முறையானே வாராது பிறவற்றிற்கு உரிய திணையொடு கூடி மயங்கி வருதலும் உரியவாம் எ-று.

'மரபின் வாராது' என்ற மிகையானே, நிலம் என்னும் முதற்பொருள் ஒழித்து ஏனையவே மயங்கி வரும் எனக் கொள்க.

வரலாறு :

கருங்கால் வேங்கை வீஉகு துறுகல்
இருபுலிக் குருளையின் தோன்றும் காட்டிடை
எல்லி வருநர் களவிற்கு
நல்லை அல்லை நெடுவெண் நிலவே. (குறுந். 47)

இக் குறுந்தொகையுள் பாலைக்கு உரிய வேனில் வந்த தூஉம்,

தாமரைக் கண்ணியை தண்ணருஞ் சாந்தினை
நேர் இதழ்க் கோதையாள் செய்குறி நீவரின்
மணம்கமழ் நாற்றத்த மலைநின்று பலிபெறூஉம்
அணங்குஎன அஞ்சுவர் சிறுகுடி யோரே. (கலி. 52)

இப்பாட்டினுள் மருதத்திணைக்கு உரிய தாமரைப்பூ வந்ததூஉம்,

அறியேம் அல்லேம் அறிந்தனம் மாதோ
பொறிவரிச் சிறைய வண்டினம் மொய்ப்பச்
சாந்தம் நாறும் நறியோள்
கூந்தல் நாறும்நின் மார்பே தெய்யோ. (ஐங். 240)

எனப் 'புறத்துஒழுக்கம் இன்று' என்றற்குத் தோழி கூறிய இவ்வைங்குறுநூற்றுள் ஊடல் வந்ததூஉம்முறையே குறிஞ்சித் திணையோடு முதற்பொருள் முதலியமூன்றும் மயங்கி வந்தன.

அம்ம வாழி தோழி சிறியிலைக்
குறுஞ்சினை வேம்பின் நறும்பழம் உணீஇய
வாவல் உகக்கும் மாலையும்
இன்றுகொல் காதலர் சென்ற நாட்டே. (ஐங் 339)

என இவ்வைங்குறுநூற்றுள் முல்லைத்திணைக்கு உரிய மாலை வந்ததூஉம்,

கல்மிசை மயில்ஆலக் கறங்கிஊர் அலர்தூற்றத்
தொன்னலம் நனிசாய நம்மையோ மறந்தைக்க
ஒன்னாதார்க் கடந்துஅடூஉம் உரவுநீர் மாகொன்ற
வெண்வேலான் குன்றின்மேல்விளையாட்டும் விரும்பார்கொல்
(கலி–27)

என இப்பாலைக்கலியுள் குறிஞ்சித்திணைக்கு உரிய மயில் வந்ததூஉம்,

உடைஇவள் உயிர்வாழாள் நீநீப்பின் எனப்பல
இடைகொண்டுயாம் இரப்பவும் எமகொள்ளாய் ஆயினை
கடைஇய ஆற்றிடை நீர்நீத்த வறுஞ்சுனை
அடையொடு வாடிய அணிமலர் தகைப்பன. (கலி-3)

என இப்பாலைக்கலியுள் மருதத்திணைக்கு உரிய பூ வந்ததூஉம்'

அன்னாய் வாழிவேண்டு அன்னைஎன் தோழி
பசந்தனள் பெரிதுஎனச் சிவந்த கண்ணை
கொன்னே கடவுதி ஆயின் என்னதூஉம்
அறிய ஆகுமோ மற்றே
முறிஇணர்க் கோங்கம் பயந்த மார்பே. (ஐங்-366)

என 'இவ்வேறுபாடு என்' என்ற செவிலிக்குத் தோழி பூத் தரு புணர்ச்சியால் அறத்தொடு நின்ற இதனுள் புணர்ச்சி வந்ததூஉம்,

வண்சினைக் கோங்கின் தண்கமழ் படலை
இருஞ்சிறை வண்டின் பெருங்கிளை மொய்ப்ப
நீநயந்து உறையப் பட்டோள்
யாவ ளோஎம் மறையா தீமே. (ஐங். 370)

எனப் பரத்தையருக்குப் பூ அணிந்தமை கேட்ட தலைவி, 'அஃது இன்று' என்றாற்குக் கூறிய இதனுள் ஊடல் வந்ததூஉம் முறையே பாலைத்திணையொடு முதற்பொருள் முதலிய மூன்றும் மயங்கி வந்தன.

மழைஇல் வானம் மீன்அணிந் தன்ன
குழைஅமல் மூசுண்டை வாலிய மலர
வரிவெண் கோடல் வாங்குகுலை வான்பூப்
பெரிய சூடிய கவர்தார்க் கோவலர்
எல்லுப்பெயல் உழந்த பல்ஆ நிரையொடு
நீர்திகழ் கண்ணியர் ஊர்வயின் பெயர்தர

நனிசேண் பட்ட மாரி தளிசிறந்து
ஏர்தரு கடுநீர் தெருவுதொறு ஒழுகப்
பேரிசை முழக்கமொடு சிறந்துநனி மயங்கிக்
கூதிர் நின் றற்றுல் பொழுதே காதலர்
நம்நிலை அறியார் ஆயினும் தம்நிலை
அறிந்தனர் கொல்லோ தாமே ஓங்குநடைக்
காய்சின யானை கங்குல் சூழ
அஞ்சுவர இறுத்த தானை
வெஞ்சின வேந்தன் பாசறை யோரே. (அகநா 264)

எனப் பருவம் கண்டு வன்புறை எதிர்அழிந்து தலைவி தோழிக்குக் கூறிய இம்மணிமிடைபவளத்துள் கூதிர் வந்த தூஉம்,

மங்குல் மாமழை விண்அதிர்ப்பு முழங்கித்
துள்ளுப்பெயல் கழிந்த பின்றைப் புகையுறப்
புள்ளிநுண் துவலை பூஅகம் நிறையக்
காதலர்ப் பிரிந்த கையறு மகளிர்
நீர்வார் கண்ணில் கருவிளை மலரத்
துய்த்தலைப் பூவின் புதல்இவர் ஈங்கை
நெய்த்தோய்த் தன்ன நீர்நனை அந்தளிர்
இருவகிர் ஈருளின் ஈரிய துயல்வர
அவரைப் பைம்பூப் பயில அகல்வயல்
கதிர்வார் காய்நெல் கட்குஇனிது இறைஞ்சச்
சிதர்சினைத் தூங்கும் அற்சிர அரைநாள்
காய்சின வேந்தன் பாசறை நீடி
நம்நோய் அறியா அறனி லாளர்
இந்நிலை களைய வருகுவர் கொல்என
ஆனாது எறிதரும் வாடையொடு
நோனேன் தோழிஎன் தனிமை யானே. (அகநா. 294)

எனப்பருவவரவின்கண் வற்புறுத்தும் தோழிக்குத் தலைவி கூறிய இம் மணிமிடைபவளத்துள் முன்பனி வந்த தூஉம் முல்லைத் திணையொடு மயங்கி வந்தன.

கருங்கோட்டு எருமைச் செங்கண் புனிற்றுக்
காதல் குழவிக்கு ஊறுமுலை மடுக்கும்
நுந்தை நும்மூர் வருதும்
ஒண்தொடி மடந்தை நின்னையாம் பெறினே.(ஐங்.92)

என 'நின்தமர் வாராமையின் எமர் வரைவு நேர்ந்திலர்' என்று தோழி கூறக் கேட்ட தலைவன், தலைவிக்குக் கூறிய இவ்வைங்குறுநூற்றுள், குறிஞ்சித் திணைக்கு உரிய புணர்தல் மருதத்திணையோடு மயங்கி வந்தது.

தொல்லூழி தடுமாறித் தொகல்வேண்டும் பருவத்தான்
பல்வயின் உயிர்எல்லாம் படைத்தான்கண்
[பெயர்ப்பான்போல்
எல்லுறு தெறுகதிர் மடங்கித்தன் கதிர்மாய
நல்லற நெறிநிறீஇ உலகுஆண்ட அரசன்பின்
அல்லது மலைந்திருந்து அறநெறி நிறுக்கல்லா
மெல்லியான் பருவம்போல் மயங்குஇருள் தலைவர
எல்லைக்கு வரம்பாய இடும்பைகூர் மருள்மாலை
* * * *
பனிஇருள் சூழ்தரப் பைதல்அஞ் சிறுகுழல்
இனிவரின் உயரும்மன் பழிஎனக் கலங்கிய
தனியவர் இடும்பைகண்டு இனைதியோ எம்போல
இனிய செய்து அகன்றுரை உடையை யோநீ (கலி 129)

என இக்கலியுள், கங்குலும் மாலையும் முன்பனியும் வந்ததூஉம்,

கண்டிகும் அல்லமோ கொண்கநின் கேளே
ஒள்ளிழை உயர்மணல் வீழ்ந்தென
வெள்ளாங் குருகை வினவு வோளே. (ஐங்கு-122)

என இவ்வைங்குறுநூற்றுள், பெதும்பைப் பருவத்தாள் ஒரு தலைவியொடு வேட்கை நிகழ்ந்தமையைத் தலைவி கூறித் தலைவன் குறிப்பு உணர்ந்ததூஉம் முறையே நெய்தல் திணையொடு முதலும் உரிப்பொருளும் மயங்கி வந்தன,

ஒழிந்தனவும் இவ்வாறே மயங்குமாறு வந்துழிக் காண்க.22

**விளக்கம்**

' கருங்கால்வேங்கை' —

'வேங்கைப் பூக்கள் விழுந்த பாறை புலிக்குட்டி போலக் காட்சி வழங்கும் காட்டுவழியே இரவுக்குறிக்கு வரும் தலைவன்திறத்தில் நெடிய வெள்ளிய நிலவே! நீ நல்லை அல்லை' என்ற தோழி முன்னிலைப் புறமொழியாக உரைத்த பாடலில், வேங்கை பூத்து உகும் காலம் வேனில் ஆதலின், புணர்ச்சியைக் கூறும் குறிஞ்சிக்கண் பாலைக்கு உரிய வேனில் வந்தவாறு.

' தாமரைக்கண்ணியை'—

'தாமரைக்கண்ணி சூடித் தண்ணறுஞ்சாந்தணிந்து தலைவியின் குறியிடத்து இரவு வருவையாயின், மணம் வீசும் மலையில் இருந்து பலிபெறும் கடவுள் என்று நின்னைக் கண்டோர் அஞ்சுவர்' என்று 'தோழி தலைவனை இரவுக்குறி விலக்கும் குறிஞ்சிக்கலித்தாழிசையில், மருதத்திற்கு உரிய தாமரைப்பூக் குறிஞ்சிக்கண் வந்தவாறு.

' அறியேம் அல்லேம்'—

'வண்டினம் மொய்க்குமாறு சந்தனமணம் கமழும் நின் மார்பு, பரத்தை தலையிற்சூடிய பூக்களின் நறுமணம் கமழ்தலால், நின் புறத்தொழுக்கத்தினை அறிந்தோம்' என்று கூறிய இக் குறிஞ்சிக்குறுநூற்றுப் பாடலில், புறத்தொழுக்கிற்குரிய மருதநிலமும், நறியோள் வண்டு முதலிய கருப்பொருள்களும்' தலைவி ஊடலாகிய உரிப்பொருளும் மயங்கி வந்தவாறு.

'அம்மவாழி தோழி' —

'தோழி வேம்பின் பழத்தை உண்ண வெளவால் பறக்கும் மாலைக்காலமும் தலைவர் பிரிந்து சென்ற தேயத்து இல்லை போலும்' என்று பிரிவிடை ஆற்றாளாய தலைவி தோழிக்குக் கூறிய பாலைக்குறுநூற்றுள், முல்லைக்கு உரிய மாலைக்காலம் மயங்கிவந்தது.

'கல்மிசை மயில்ஆல' —

'மலையில் மயில் ஆடவும், ஊரவர் அலர் தூற்றவும், இவற்றால் நம் பண்டை அழகு நுணுகவும், நம்மை மறந்தாலும்மறக்க; பரங்குன்றில் விளையாடுதலையும் நம் தலைவர் மறந்தாரே !'

என்று பிரிவிடை ஆற்றாளாய தலைவி தோழிக்குக்கூறும் இப் பாலைக்கலியில், குறிஞ்சித்திணைக்கு உரிய மயில் என்னும் கருப்பொருள் மயங்கியவாறு.

'உடை இவள் உயிர் வாழாள்' —

'நின்னையே பற்றுக்கோடாக உடைய தலைவி நீ பிரியின் உயிர்வாழாள் என்று யாம் இரந்து கூறும் சொற்கேளாது பிரிந்துபோகக் கூடிய நின்னை, நீ செல்லும் வழியில் வறண்ட சுனைகளில் இலையோடு வாடிக்கிடக்கும் மலர்கள் செலவைத் தடுத்து மீளச்செய்யும்'' என்று தோழி தலைவன் பிரிவை அழுங்குவிக்கும் பாலைக்கலியில், தாமரை முதலிய நீர்ப்பூக்கள் ஆகிய மருதநிலக் கருப்பொருள்கள் மயங்கியவாறு.

'அன்னாய் வாழிவேண்டு'—

'அன்னையே ! தலைவியின் நிறவேறுபாடு கண்டு வெகுண்டு என்னை வீணாக வினவி என்ன பயன் ? இவட்குக், கோங்கம்பூக்கொத்து அளித்த தலைவனுடைய மார்பு பற்றிய செய்தியை யான் எளிமையில் அறிதல் இயலுமோ?' என்று

தோழி அறத்தொடு நின்ற இப் பாலைக்குறுநூற்றுள், கோங்கம் என்ற கருப்பொருளால் பாலைத்திணை அமைந்த தாயினும், பூத்தரு புணர்ச்சி சுட்டிய வகையான் குறிஞ்சி மயங்கியவாறு.

'வண்சினைக் கோங்கின்'—

'வண்டினம் மொய்ப்பக் கோங்கம்பூ மாலையை அணி வித்து நின்னால் விரும்பி நுகரப்பட்டாள் யாவள் என்பதனை எமக்கு மறையாது உரைப்பாயாக' என்று தலைவன் புறத் தொழுக்கம் கூறும் இப் பாலைக்குறுநூற்றுப் பாடலில், கோங்கம் என்ற கருப்பொருளால் பாலை வந்ததாயினும், புறத்தொழுக்கத்தால் மருதநிலமும், கருப்பொருளாகிய பரத் தையும், உரிப்பொருளாகிய ஊடலும் ஆகிய மருதம் மயங்கியவாறு.

'மழையில் வானம்'—

'வானமீன்கள்போல முசுண்டை வெள்ளிய பூக்களை மலர, வெண்கோடல் பூக்களை மிகுதியாகச் சூடிய கோவலர், பகலில் மழையால் வருந்திய ஆன்நிரையோடு நீர்விளங்கும் மாலையினராய் ஊருக்கு மீளுமாறு, இடியொடு கூடிய மேகம் பெய்த நீர் தெருவில் விரைந்து ஓடும்வண்ணம் கூதிர்ப் பொழுது நிலைபெற்றது. பகைவரை அஞ்சுவிக்கும் சேனையை உடைய அரசனுடைய யானைகள் இரவில் சூழ்ந்து நிற்கும் பாசறைக்கண் தங்கியிருக்கும் நம் தலைவர், நம் நிலையை அறியாவிடினும் தம் நிலையையாவது அறிந்தாரா?' என்று பருவம் கண்டு வன்புறை எதிர்அழிந்து தோழியிடம் தலைவி கூறும் இம் முல்லைப்பாடலில், முல்லைக்குரிய கார்காலம் வாராது குறிஞ்சிக்குரிய கூதிர்க்காலம் 'கூதிர் நின்றன்றால் பொழுதே' என மயங்கி வந்தவாறு.

'மங்குல் மாமழை'—

'மழைபெய்து முடிந்த பிறகு புகைபோன்ற பனிநீர்த் துளி பூக்களின் உள்ளே நிறையவும், பிரிந்த மகளிர் நீர்

நிறைந்த கண்களைப்போலக் கருவிளை மலரவும், ஈங்கைப் புதரின் நெய்யில் தோய்த்து எடுத்தாற் போன்ற தளிர்கள் இருபிளவாகிய ஈரல்போல அசையவும், அவரை பூப்பவும், நெற்கதிர் முற்றிச் சாயவும், வண்டுகள் கிளைகளில் அசையும் முன்பனிக்கால நள்ளிருளில், 'நம் துயரை அறியாது மன்னன் பாசறையில் இருக்கும் நம்தலைவர் வருவாரோ?' என்று எண்ணி வாடைக்காற்று வீசுதலால் என் தனிமைத்துயர் பொருது நலிகின்றேன்' என்று தலைவி தோழியிடம் கூறும் இப்பாடலில், முல்லைக்கண் 'சிதர்சினை தூங்கும் அற்சிர அரை நாள்' எனக் குறிஞ்சிக்கு உரிய முன்பனி மயங்கி வந்தவாறு.

'கருங்கோட்டு எருமை'—

'எருமை தன் கன்றுக்குப் பால் சுரந்து அளிக்கும் வளம் சான்ற நும்தந்தையார் இருக்கும் நுப் ஊருக்கு, நம்வரைவு மாட்சிமைப்படின் யானே வருகின்றேன்' என்று தலைமகன் தலைவிக்குக் கூறும் இம் மருதக்குறுநூறு, கருப்பொருளாகிய எருமையால் மருதத்திணை ஆயினும், வரைவு மாட்சிமைப் படுதலாகிய குறிஞ்சி உரிப்பொருள் இதன்கண் மயங்கி வந்தவாறு.

'தொல்லூழி தடுமாறி'—

'பல உலகங்களில் உயிர்எல்லாம் பழையதாகிய ஊழிக் காலத்தே பிறந்து இறந்து தடுமாறித் திரியும்படி அயனைப் படைத்தவன் அரனாய் ஊழிமுடிவில் தன்னிடத்தில் ஒடுக்கிக் கொள்ளுமாறுபோல, கதிரவன் தான் வெளிவிட்ட கிரணங் களை மீண்டும் தன்னிடத்து ஒடுக்கிக்கொண்டு மறைதலால், செங்கோல் மன்னன் இறந்தபின் அவன் இடத்திற்கு வந்த அறநெறி தப்பிய குறுநிலமன்னன் ஆட்சிக்காலம் போல, மயங்குஇருள் சூழப் பகற்பொழுதிற்கு எல்லையாகிய துயர் மிகுக்கும் மருள்மாலையில், வருத்தத்தினையுடைய அழகிய சிறிய வேய்ங்குழலே! 'இப்பொழுது தலைவர்வரின் அவர்பழி

மிகுந்துவிடும்' என்று கருதிப் பனியோடு கூடிய இருள் சூழ்ந்து வருகையினாலே, கலங்கிய தனியவர் வருத்தம் கண்டு நீ வருந்துகின்றாயா ? அல்லது முன்பு இனியசெய்து, பின் நீங்கினாரை எம்மைப்போல நீயும் உடையையாய் வருந்து கிறாயா ?'' என்ற தலைவி கூற்றாக அமைந்துள்ள நெய்தற் கலியில், நெய்தற்குரிய எற்பாடு வாராமல், 'இடும்பைகூர் மருள்மாலை' 'பனி இருள்' என மாலையும் இருளும் முன் பனியும் மயங்கிவந்தன.

'கண்டிகும் அல்லமோ'—

'நெய்தல் நிலத்தலைவனே ! நின் உறவினள் தன் அணி கலன் மணலில் வீழ்ந்து மறைந்ததாக, அதுகுறித்து வெள் ளாங்குருகுடன் உசாவிக் கொண்டிருக்கிறாள்' என்ற தலைவி கூற்றாகிய நெய்தல்குறுநூற்றுள் முதற்பொருளும் தலைமகன் பெயரும் நெய்தல் திணை ஆயினும், தலைவி தலைவனொடு ஊடு தலை உரிப்பொருளாகக் கொண்ட மருதம் மயங்கியவாறு.

எடுத்துக்காட்டுக்கள் யாவும் பெரும்பாலும் நச்சினார்க் கினியர் தொல்காப்பியப் பொருட்படல 12-ஆம் நூற்பா உரையுள் சொற்றனவே.

ஒத்த நூற்பாக்கள்

'திணைமயக்கு உறுதலும் கடிநிலை இலவே
நிலன்ஒருங்கு மயங்குதல் இன்றுஎன மொழிப
புலன்நன்கு உணர்ந்த புலமை யோரே'.

தொல். பொ. 12

'இருதிணைத் தொழிலும் இயன்று தம்முள்
ஒருதிணைக்கு ஓதல் ஒழிந்தன இயல்பே'.

வீ. உரை. 96

முழுதும் ந. அ. 251

(22)

## ஐந்திணையோடு ஏனைத்திணை உரிப்பொருள் மயக்கம்

395 ஒருதலைக் காமமும் ஒவ்வாக் காமமும்
விரவியும் வரூஉம் மரபின என்ப

இஃது எய்தாதது எய்துவிக்கின்றது, கைக்கிளை பெருந் திணைக்கு உரிய உரிப்பொருளும் இவற்றோடு மயங்கும் என்றலின்,

(இ-ள்) கைக்கிளைத்திணைக்கு உரிய ஒருதலைக்காமம் என்னும் உரிப்பொருளும், பெருந்திணைக்கு உரிய பொருந் தாக்காமம் என்னும் உரிப்பொருளும் குறிஞ்சித்திணை முதலிய ஐந்திணையோடும் மயங்கியும் வரும் இயல்பை உடையன என்று கூறுவர் ஆசிரியர் என்றவாறு.

வரலாறு : 'ஊர்க்கால் நிவந்த' (கலி 56) என்னும் குறிஞ்சிக் கலியுள்,

'ஆய்தூவி அனமென அணிமயில் பெடையெனத்
தூதுஉண்அம் புறவுஎனத் துதைந்தநின் எழில்நலம்
மாதர்கொள் மான்நோக்கின் மடநல்லாய் நிற்கண்டார்ப்
பேதுறாஉம் என்பதை அறிதியோ அறியாயோ'.

எனக் குறிஞ்சித்திணையோடு கைக்கிளையும்,

'எழில்மருப்பு எழில்வேழம் இகுதரு கடாத்தால்
தொழில்மாறித் தலைவைத்த தோட்டிகை நிமிர்ந்தாங்கு
அறிவும்நம் அறிவுஆய்ந்த அடக்கமும் நாணொடு
வறிதாகப் பிறர்என்னை நகுபவும் நகுபுஉடன்
மின்அவிர் நுடக்கமும் கனவும்போல் மெய்காட்டி
என்நெஞ்சம் என்னோடு நில்லாமை நனிவௌவித்
தன்நலம் கரந்தாளைத் தலைப்படுமாறு எவன்கொலோ
மணிப்பீலி சூட்டிய நூலொடு மற்றை

அணிப்பூளை ஆவிரை எருக்கொடு பிணித்தியாத்து
மல்லலூர் மறுகின்கண் இவட்பாடும் இஃதுஒத்தன்
எல்லீரும் கேட்டீமின் என்று. கலி. 138

இக்கலியுள் நெய்தல் திணையோடு பெருந்திணையும் மயங்கி வந்தன. ஒழிந்தனவற்றோடும் இவ்வாறே மயங்குமாறு வந்துழிக்காண்க. பிறவும் அன்ன. 23

விளக்கம்

எய்தாதது—கைக்கிளை பெருந்திணைகளுக்கு நிலம் வகுக்காதது; எய்துவித்தல்—அவை ஐந்திணையுள் ஏற்றபெற்றி வரும் என்பது.

'உரிப்பொருள் அல்லன மயங்கவும் பெறுமே.'
தொல். பொ. 13

என்ற நூற்பாவிற்கு நச்சினார்க்கினியர் தந்த விளக்கமும் எடுத்துக்காட்டுக்கள் சிலவும் இவரால் கொள்ளப் பட்டன.

'ஆய்தூவி அனமென'—

'காமம் சாலா இளமையோன்வயின் ஏமம் சாலா இடும்பை எய்திய' முதியோனாகிய கைக்கிளைத் தலைவன், உள்ளத்தால் அவள் புணர்ச்சி கருதி அவளைத்தான் விரும்புதல் தோன்ற, அன்னம் போலவும், மயில் போலவும் புறாப் போலவும் அமைந்த அவள் எழில் நலம் அவனைக்கண்ட தன்னை மயக்குவதாகக் கூறும் இக்கைக்கிளைச் செய்தி, குறிஞ்சித்திணையில் இடம் பெற்றவாறு.

'எழில் மருப்பு'—

'மதவேழம் அடங்குதல் தவிர்ந்து பாகனது அங்குசத்திற்கு அடங்காது போவது போல, அறிவும் அடக்கமும்

நாணமும் என் வயத்த அன்றி நீங்கப் பிறர் என்னை ஏளனம் செய்யுமாறு விடுத்து, மின்னலைப் போலவும் கனவினைப் போலவும் தன் மெய் நலன் காட்டி என் உள்ளம் கவர்ந்து மறைந்த கள்வியை அடைவதற்காக, அழகிய நீலப் பீலி சூட்டிய மடல் மாவிலே பூளைப் பூவையும் ஆவிரம் பூவையும் எருக்கம் பூவொடு தொடுத்துக் கட்டி ஊர்த்தெருவில் யான் பாடும் பாட்டை எல்லீரும் கேளுங்கள்' என்று தலைவன் மட லேறுதல் கூறும் பெருந்திணை, அகத்திணையுள் நெய்தல் திணையின்பாற்பட்டவாறு.

ஒத்த நூற்பா

'உரிப்பொருள் அல்லன மயங்கவும் பெறுமே'

தொல். பொ. 13. நச்.

23

## கைகோள் வகை

396 அளவுஇல் இன்பத்து ஐந்திணை மருங்கின்
களவுகற்பு எனஇரு கைகோள் வழங்கும்.

இது மேல் கூறிப்போந்த ஐந்திணைக்கு உரிய கைகோள் வரையறை கூறுகின்றது.

(இ-ள்) வரம்பு இல் இன்பத்தை உடைய ஐந்திணை இடத்துக் களவும் கற்பும் என இரண்டு ஒழுக்கம் நிகழும் என்றவாறு. 24

விளக்கம்

கைகோள்—ஒழுக்கத்தைக் கொள்ளுதல்.

களவிற்குக் குறிஞ்சியும் நெய்தலும் சிறந்தன; கற்பிற்கு முல்லையும் மருதமும் சிறந்தன. இச்செய்தி,

'குடவரைக் குறிஞ்சியும் குணகடல் நெய்தலும்
கடவ தாகும் களவின் நீர்மைக்கே'. மு. வீ. அக. 41

'நன்னில மருதமும் தென்னில முல்லையும்
துன்னிய கற்பொடு தோன்றும் என்ப'.

மு. வீ. அக 42

என்பனவற்றால் போதரும்.

ஒத்த நூற்பாக்கள்

'களவும் கற்பும் கைகோளாக
அளவில் அன்பினது அகம்எனப் படுமே.

வீ. 105 மேற்.

முழுதும் ந. அ. 26, மு. வீ. அக. 41

24

## களவின் புணர்ச்சி வகை

397 இயற்கைப் புணர்ச்சி இடந்தலைப் பாடு
பாங்கற் கூட்டம் பாங்கியிற் கூட்டம் என்று
உணர்த்திய களவின் புணர்ச்சிநால் வகைத்தே.

இது, நிறுத்த முறையானே களவில் புணரும் புணர்ச்சி இத்துணைத்து என்கின்றது.

(இ-ள்) இயற்கைப் புணர்ச்சியும் அப்புணர்ச்சி நிகழ்ந்த நிலைக்களத்தைப் பின்னர்த் தலைப்பெய்து புணரும் புணர்ச்சியும் பாங்கனால் புணரும் புணர்ச்சியும் பாங்கியால் புணரும் புணர்ச்சியும் என முற்கூறிய களவு என்னும் கைகோளின் புணர்ச்சி நான்கு வகையினை உடைத்தாம் என்றவாறு. 25

ஒத்த நூற்பாக்கள்

'காமப் புணர்ச்சியும் இடந்தலைப் பாடும்
பாங்கொடு தழாஅலும் தோழியிற் புணர்வும் என்று
ஆங்கநால் வகையினும் அடைந்த சார்பொடு
மறைஎன மொழிதல் மறையோர் ஆறே'.'

தொல். பொ. 494

முழுதும் ந. அ. 27

25

## கைக்கிளை நிகழும் இடன்.

398 மெய்க்கிளை யாழோர் வேண்டும் புணர்ச்சிமுன்
கைக்கிளை நிகழ்தல் கடனென மொழிப.

இஃது ஆசுரமும் இராக்கதமும் பைசாசமும் ஆகிய சிறப்பில்லாக் கைக்கிளை போலன்றிக் காமஞ்சாலா இளமையோள் வயின் கைக்கிளைபோலச் சிறந்தகாமம் சான்ற இளமையோள் வயின் கைக்கிளை இன்னுழி நிகழும் என்கின்றது.

(இ-ள்) பொருள்படு கிளைநரம்பினைப் பொருந்திய யாழினை உடைய கந்தருவர் விரும்பும் இயற்கைப்புணர்ச்சி முன் காட்சிமுதலாக மேல் கூறப்படும் நால்வகைக் குறிப்பிற்று ஆகிய கைக்கிளை நற்காமத்திற்கு இன்றியமையாமையின் வருதல் முறைமை என்றவாறு.

இது, தலைவி வேட்கைக்குறிப்பு தன்மேல் நிகழ்வதனைத் தலைவன் அறிவதற்கு முன்னே, தன் காதல் மிகுதியால் கூறும் கூற்றது ஆகலின் கைக்கிளை ஆயிற்று. இது தலைமகற்கே உரியது என்பது. 'மடமான் நோக்கி' (117) என்னும் சூத்திரத்துக் கூறுதும்.

இவை, புணர்ச்சி நிமித்தமாய்க் குறிஞ்சித்திணை ஆகா-வோ எனின், காட்சிப்பின் தோன்றிய ஐயமும் துணிவும் குறிப்புஅறிதலும் நன்று எனக் கோடற்கும் அன்று எனக் கோடற்கும் பொது ஆகலின், அவை ஒருதலையாக நிமித்தம் ஆகா. வழிநிலைக்காட்சியே நிமித்தமாம் என்று உணர்க. 26

### விளக்கம்

கைக்கிளை ஐந்திணையாய்த் தொடர்தல் வேண்டும் என்னும் வரையறையின்று. கைக்கிளை கைக்கிளையாகவே அழிதலும் உண்டு. தலைவி தலைவனிடம் மனம் ஒன்றிக் காணும் காட்சியே மேல் ஐந்திணை ஒழுக்கத்திற்கு வழிகோலுவதாகும் என்பது.

வழிநிலைக்காட்சி—குறிப்பு அறிதல்.

ஒத்த நூற்பாக்கள்

'முன்னைய நான்கும் முன்னதற் கென்ப'

தொ. பொ. 52

முழுதும் ந. அ. 28

26

## கைக்கிளையின் இலக்கணம்

அதுவே.

399 காமம் சான்ற இளமை யோள்வயின்
குறிப்புஅறி காறும் குறுகாது நின்று
குறிப்பு அடு நெஞ்சொடு கூற லாகும்.

இது கைக்கிளையது இலக்கணம் கூறுகின்றது.

(இ-ள்) மேல் கூறிப்போந்த கைக்கிளையாவது, காமம் நுகர்தற்கு அமைந்த இளமைப்பருவத்தாள் ஆகிய தலைமகளிடத்து உண்டாகிய குறிப்பினைத் தான்அறியும் அளவும் அவளைத் தலைமகன் அடாது நின்று, தன் வழித்தாகிய நெஞ்சினோடு சொல்லுதலாம் என்றவாறு. 27

ஒத்த நூற்பா

முழுதும் ந. அ. 29

27

## கைக்கிளைக்கு உரியார்

400 மறையோர் மன்னர் வணிகர்சூத் திரர்எனும்
இறையோர் தத்தமக்கு எய்தும்மற்று அதுவே
மொழிந்தோர் நால்வரும் ஒழிந்தஐந் நிலத்துஉறை
இழிந்தோர் தம்முள் உயர்தோரும் எய்துப.

இது கைக்கிளைக்கு உரியார் இவர் என்கின்றது,

(இ-ள்) மேல் கூறிய கைக்கிளை அந்தணரும் அரசரும் வணிகரும் சூத்திரரும் என்னும் நால்வகை வருணத்துத் தலைமக்கள் தமக்குத் தமக்குப் பொருந்துவதாம். அக்கைக்கிளையை மேல்கூறிய நால்வகைத் தலைமக்களும் அன்றி ஐவகை நிலத்தும் உறையும் நிலமக்களுள் தலைமக்களும் பெறுவர் என்றவாறு.

உம்மை இழிவு சிறப்பு ஆதலின், சிறுபான்மை நோக்கி நின்றது.

### விளக்கம்

நால்வகை வருணத்தார் மருதநிலத்தில் பெரும்பாலும் உறைவாராவார். நிலமக்களுள் தலைமக்கள் பொருப்பன், காளை, குறும்பொறைநாடன், ஊரன், சேர்ப்பன் போல்வார்.

ஒத்த நூற்பா

முழுதும் ந அ. 30, 31

28

### இயற்கைப் புணர்ச்சியின் வகை.

401 தெய்வம் தன்னின் எய்தவும் கிழத்தியின்
எய்தவும் படூஉம் இயற்கைப் புணர்ச்சி.

அஃது இயற்கைப்புணர்ச்சி இத்துணைப் பகுதித்து என்கின்றது.

(இ-ள்) மேல்கூறிய நால்வகைப் புணர்ச்சியுள்ளும், இயற்கைப் புணர்ச்சியாவது தெய்வத்தால் பெறவும் தலைமகளால் பெறவும் படும் என்றவாறு.

படும் என்பதனை இரண்டு இடத்தும் கூட்டுக. 29

### விளக்கம்

இயற்கைப் புணர்ச்சி, தெய்வப் புணர்ச்சி, முன்னுறு புணர்ச்சி, காமப் புணர்ச்சி என்பன ஒரு பொருளன.

இயற்கைப்புணர்ச்சி—புலவரால் கூறப்பட்ட இயல்பினு னும், கந்தருவ வழக்கத்தோடு ஒத்த இயல்பினுனும் புணரும் புணர்ச்சி.

தெய்வப் புணர்ச்சி—தெய்வ அருளால், முயற்சியும் உளப்பாடும் இன்றிப் புணரும் புணர்ச்சி.

முன்னுறு புணர்ச்சி—இவள் நலம் இவனாலே முன்னுற எய்தப் பெற்றமையாலும், இவன் நலன் இவளால் முன்னுற எய்தப் பட்டமையாலும் நிகழும் புணர்ச்சி.

காமப்புணர்ச்சி—தலைவனுக்குப் பெருமையும் உரனும், தலைவிக்கு நாணும் மடனும் அச்சமும் நுணுகக் காமத்தால் புணரும் புணர்ச்சி.

ஒத்த நூற்பா

முழுதும் ந. அ. 32, 29

## தெய்வப்புணர்ச்சி

402 இயற்கைப் புணர்ச்சி தெய்வத்தின் எய்துழி
முயற்சி இன்றி முடிவது ஆகும்,

இது, மேற்கூறிய இயற்கைப் புணர்ச்சி இரண்டனுள் தெய்வப் புணர்ச்சியது இலக்கணம் உணர்த்துகின்றது.

(இ-ள்) இயற்கைப் புணர்ச்சி தெய்வத்தால் பெறுங் காலத்து முயற்சியின்றித் தானே முடிவதாம் என்றவாறு

எனவே, இயற்கைப் புணர்ச்சி தலைமகளால் பெறுங் காலத்து முயற்சியாளே முடிவதாம் என்றவாறு. 30

ஒத்த நூற்பா

முழுதும் ந. அ. 33 30

## களவிற் புணர்ச்சிக்கு ஒழிபு

403 உள்ளப் புணர்ச்சியும் மெய்உறு புணர்ச்சியும்
கள்ளப் புணர்ச்சியுள் காதலர்க்கு உரிய.

இது, மேல்கூறிப்போந்த களவிற் புணர்ச்சிக்கு எய்தியது ஓர்ஒழிபு கூறுகின்றது.

(இ-ள்) உள்ளத்தால் புணரும் புணர்ச்சியும் மெய்யுற்றுப் புணரும் புணர்ச்சியும் என்னும் இருகூற்றுப் புணர்ச்சியும் களவு என்னும் கைகோளின்கண் புணரும் புணர்ச்சிக்கண் காதலை உடைய தலைவற்கும் தலைவிக்கும் உரியவாம் என்றவாறு. 31

### விளக்கம்

மேற்கூறிப்போந்த 29 ஆம் நூற்பாச் செய்தி.

ஒத்த நூற்பா

முழுதும் ந. அ 34
31

## உள்ளப்புணர்ச்சிக்கு ஏது

404 பொருஇறந் தோற்குப் பெருமையும் உரனும்
நன்னுதற்கு அச்சமும் நாணும் மடனும்
மன்னிய குணங்கள் ஆதலின் முன்னர்
உள்ளப் புணர்ச்சி உரியது ஆகும்.

மேற்கூறிய இருகூற்றுப் புணர்ச்சியுள் இஃது உள்ளப் புணர்ச்சி முன் நிகழ்தற்கு ஏது கூறுகின்றது.

(இ–ள்) நிகர்இல்லாத தலைமகற்குப் பெருமையும் உரனும் நன்னுதலை உடையள் ஆகிய தலைமகட்கு அச்சமும் நாணும் மடனும் நிலைபெற்ற குணங்கள் ஆதலின், மேல் கூறிப்போந்த இருகூற்றுப் புணர்ச்சியுள்ளும் உள்ளப் புணர்ச்சி முன் நிகழ்வதற்கு உரித்தாம் என்றவாறு.

பெருமையாவது அறிவும் ஆற்றலும் புகழும் கொடையும் ஆராய்தலும் பண்பும் நண்பும் பழிபாவம் அஞ்சுதலும் முதலியவற்றின் மேம்பாடு. உரனுவது கடைப்பிடியும் நிறையும் கலங்காது துணிதலும் முதலியவற்றின் திண்மை. அச்சமாவது தன் அன்பு காரணத்தால் தோன்றிய உட்கு. நாணுவது காமக்குறிப்பு நிகழ்ந்தவழிப் படுவதோர் உள்ள ஒடுக்கம். மடமாவது செவிலியர் கொளுத்தக் கொண்டு கொண்டது விடாமை.

இனி, ஒன்று என முடித்தலால் கண்டறியாதன கண்டுழி மனம் கொள்ளாத பயிர்ப்பும், செயத்தகுவது அறியாத பேதைமையும், நிறுப்பதற்கு நெஞ்சு உண்டாம் நிறையும் கொள்க. மடம் குடிப்பிறந்தோரது செய்கை ஆதலின், அச்சமும் நாணும் போல மெய்யுறு புணர்ச்சியை விலக்குவதாம்.

இவை இருவர்க்கும் மன்னிய குணங்கள் ஆதலின் மெய்யுறு புணர்ச்சிக்கு உரியர் அல்லர் ஆயினும், இவ்விலக்கணத்தில் திரியாது நின்றே மெய்யுறுபுணர்ச்சிக்கு உரியர் ஆவர் என்பார், 'முன்னர் உள்ளப் புணர்ச்சி உரியது ஆகும்' என்றூர். அங்ஙனம் ஆதல் மேல் கூறுமாற்றானும் உணர்க. 32

## விளக்கம்

இந் நூற்பா விளக்கம் தொல்காப்பியப் பொருட்படலத்து 98, 99 ஆம் நூற்பாக்களின் உரையில் நச்சினார்க்கினியர் வரைந்தனவே. உரன்—அறிவின் வலிமை. கடைப்பிடி—உறுதியாகப் பிடித்தல். "பெருமை உரன் எனபவற்றுனே, உள்ளப் புணர்ச்சியே நிகழ்ந்து வரைந்துகொள்ளும் உலக வழக்கும், மெய்யுறு புணர்ச்சி நிகழ்ந்துழியும் களவு நீட்டியாது வரைந்துகோடலும், உள்ளம் சென்றுழிஎல்லாம் நெகிழ்ந்து ஓடாது ஆராய்ந்து ஒன்று செய்தலும், மெலிந்த உள்ளத்தானுயும் தோன்றுமல் மறைத்தலும், தீவினை

ஆற்றிய பகுதியில் சென்ற உள்ளம் மீட்டலும் மேப்பட்ட தலைவற்கு உரிய எனக்கொள்க. தலைவி அச்சமும் நாணும் மடனும் உடையள் எனவே, தலைவன் பெருமையும் உரனும் உடையனாய் வேட்கை மிகுதூரவும் பெறுமாயிற்று இவை இவட்கு என்றும் உரியவாயின் இயற்கைப்புணர்ச்சிக்கு உரியள் அல்லளாம் ஆயினும், இவ்விலக்கணத்துள் திரியாது நின்றேயும் புணர்ச்சிக்குஉரியளாம் என்றற்குப் பன்னிரண்டு மெய்ப்பாடும் கூறினர்' என்றும் நச்சினார்க்கினியர் குறிப்பிட்டுள்ளார்.

## ஒத்த நூற்பாக்கள்

'பெருமையும் உரனும் ஆடூஉ மேன'. தொல் பொ 98
முு. வீ. கள. 3

'அச்சமும் நாணும் மடனும் முந்துறுத்த
நிச்சமும் பெண்பாற்கு உரிய என்ப'. தொ. பொ. 99
மு. வீ. கள. 4

முழுதும் ந. அ. 35

32

## மெய்யுறுபுணர்ச்சி நிகழும் காலம்

405 காட்சி வேட்கை உள்ளுதல் மெலிதல்
ஆக்கம் செப்பல் நாணுவரை இறத்தல்
நோக்குவ எல்லாம் அவையே போறல்
மறத்தல் மயக்கம் சாக்காடு என்ற
ஐயிரண்டு அவத்தையும் பெய்கழல் காளையும்
புகுமுகம் புரிதல் முதல ஆகிக்
காட்சிமுதல் முன்றையும் கருதிநந் நான்காய்
ஆட்சியின் அமைந்தா ராறுமெய்ப் பாடும்
மூருந்துஇள முறுவலும் பொருந்துதல் உறினே
மெய்யுறு புணர்ச்சி எய்துதற்கு உரித்தே.

இது மெய்யுறு புணர்ச்சி நிகழும் காலம் உணர்த்துகின்றது.

(இ-ள்) காண்டலும், பெறல்வேண்டும் என்னும்உள்ள நிகழ்ச்சியும், இடைவிடாது, நினைத்தலும், அங்ஙனம் நினைத்தல் காரணமாக உடம்பு வாடுதலும், வாடியபின் தன்நெஞ்சின் வருத்தம் மிகுகின்றபடியைப் பிறர்க்கு உரைத்தலும், நாணத்தின் எல்லையைக் கடத்தலும், தன்னால் காணப்பட்டனஎல்லாம் தான்கண்ட உறுப்புப் போலுதலும், பித்தாதலும், மோகித்தலும், இறந்துபடுதலும் எனக் கூறப்பட்ட பத்து அவத்தையும் ஒருங்கு நிகழும் அளவாயின் தலைமகனும், புகுமுகம்புரிதல் முதலியனவாகிக் காட்சி முதலிய மூன்று அவத்தையினையும் பற்றி ஒரோ அவத்தைக்கு நந்நான்காய் ஆட்சியான் அமைவு பெற்ற பன்னிரண்டு மெய்ப்பாடும் தலைமகளும் பொருந்துதல் உற்றாலே, அவ்விருவருக்கும் மெய்யுறு புணர்ச்சி பொருந்துதற்கு உரித்தாம் என்றவாறு.

நான்காம் அவத்தை தொடங்கி ஆறும் அவத்தைகாறும் பற்றி வரும் பாராட்டுஎடுத்தல் முதலாகக் கையறவு உரைத்தல் ஈறுகக் கிடந்த பன்னிரண்டு மெய்ப்பாடும் புணர்ச்சிப் பின்னர் நிகழ்வன ஆகலானும், ஏழாம் அவத்தை தொடங்கிப் பத்தாம் அவத்தைகாறும் பற்றி வரும் மெய்ப்பாடு எல்லாம் அகன் ஐந்திணைக்கு ஆகாது பெருந்திணைப்பாற்படுவன ஆகலானும், புகுமுகம் புரிதல் முதலிய பன்னிரண்டு மெய்ப்பாடுமே ஈண்டைக்கு இயைவன என்பார் '' ஆட்சியின் அமைந்த ' என்றார்.

வரலாறு :

உள்ளிக் காண்பென் போல்வென் முள்எயிற்று
அமிழ்தம் ஊறும் செவ்வாய்க் கமழ்அகில்
ஆரம் நாறும் அறல்போல் கூந்தல்
பேர்அமர் மழைக்கண் கொடிச்சி
மூரல் முறுவலொடு மதைஇய நோக்கே'. (குறுந் 286)

இஃது ஒருதலை உள்ளுதற்கும்,

‘ ஒண்தொடி அரிவை கொண்டனள் நெஞ்சே
வண்டுஇமிர் பனித்துறைத் தொண்டி ஆங்கண்
உரவுக்கடல் ஒலிதிரை போல
இரவி னானும் துயில்அறி யேனே .’ ஐங்குறு. 172

இஃது ஆக்கம் செப்புதற்கும்,

‘ காமம் விடுஒன்றோ நாண்விடு நன்னெஞ்சே
யானோ பொறேன்இவ் விரண்டு ’. குறள் 1247

இது நாணுவரை இறத்தற்கும்,

‘ ஓங்குஎழில் கொம்பர் நடுஇதுஎனப் புல்லும்
காந்தட்கு இவரும் கருவிளம் பூக்கொள்ளும்
மாந்தளிர்க் கையில் தடவரும் மாமயில்
பூம்பொழில் நோக்கிப் புகுவன பின்செல்லும்
தோள்எனச் சென்று துளங்குஒளி வேய்தொடும்
நீள்கதுப்பு இஃதுஎன நீர்அற லுள்புகும் ’.
உரை.மேற் தொல். பொ . 97

என்றாற் போல்வன எல்லாம் நோக்குவ எல்லாம் அவையே போறற்கும் உதாரணமாம். பிறவும் வந்தவழிக் காண்க. புகுமுகம் புரிதல் முதலியவற்றிற்குப் பொருளும் உதாரணமும் மெய்ப்பாடு கூறும்வழிப் பெறப்படும். அவை ஆண்டு உணர்க.

இனி, இவற்றின்வழித் தோன்றும் மெய்யுறு புணர்ச்சிக்கு உதாரணம் :

கோடல் எதிர்முகை பசுவீ முல்லை
நாறுஇதழ்க் குவளையோடு இடைஇடுபு விரைஇ
ஐதுதொடை மாண்ட கோதை போல
நறிய நல்லோள் மேனி
முறியினும் வாயது முயங்கற்கும் இனிதே. (குறுந். 62)

எனவரும்.

## விளக்கம்

மோகித்தல்—மயங்கல். சாக்காடு—மடலேறுதல், வரை பாய்தல். தலைவனுக்குப் பத்து அவத்தையும் நிகழ்தல் வேண்டும். தலைவிக்குக் காட்சி வேட்கை உள்ளுதல் என்ற மூன்று அவத்தையே புணர்ச்சிக்குமுன் நிகழ்தல் வேண்டும். தலைவிக்கு நான்காம் அவத்தை முதல் ஆறும் அவத்தை காறும் புணர்ச்சிக்குப் பின் நிகழும். ஏழாம் அவத்தை தொடங்கி நிகழ்வன, தலைவி மன்றத்து இருந்த சான்றவர் அறியத் தன் துணைவன் பெயரும் பெற்றியும் பிறவும் கூறியும் பொழுதொடு புலம்பியும் ஞாயிறு முதலியவற்றெடு கூறத் தகாதன கூறுதல் ஆகிய 'தேறுதல் ஒழிந்த காமத்து மிகு திறம்' (219) ஆகியபெருந்திணைச்செய்தி ஆதலின், அகன் ஐந் திணைக்கு அந்நான்கு அவத்தைகளும் தலைவிபால் நிகழா என்பது.

முதல்அவத்தை—புகுமுகம் புரிதல், பொறி நுதல் வியர்த்தல், நகுநயம் மறைத்தல், சிதைவு பிறர்க்கு இன்மை என்பன.

இரண்டாம் அவத்தை— கூழை விரித்தல், காதுஒன்று களைதல், ஊழ்அணி தைவரல், உடைபெயர்த்து உடுத்தல் என்பன.

மூன்றும் அவத்தை.— அல்குல் தைவரல், அணிந்தவை திருத்தல், இல்வலி உறுத்தல், இருகையும் எடுத்தல் என்பன.

'உள்ளிக்காண்பென்'—

'முள்போன்ற பற்கள், அமிழ்தம் ஊறும் செவ்வாய், அகிலும் ஆரமும்நாறும் அறல்போன்ற கூந்தல், மழைக்கண் இவற்றைஉடைய தலைமகளின் முறுவலையும் அன்புப்பார் வையையும் நினைக்குந்தொறும் மகிழ்வேன்' என்று தலை மகன் தலைமகளை இடைவிடாது நினைத்தவாறு.

'ஒண்டொடி அரிவை' —

'தலைவி என் உள்ளத்தைக் கைப்பற்றிக்கொண்டதனால், தொண்டி என்ற ஊரின் கடல்துறையில் உள்ள அலைகளைப் போல, யான் இரவிலும் உறக்கத்தைத் துறந்துவிட்டேன்' என்று தலைவன் தனக்கு ஏற்பட்ட வேறுபாட்டைப் பாங்க னிடம் சொற்றவாறு.

'காமம் விடு' —

'நெஞ்சே ! ஒன்று காமத்தை விட்டுவிடு; இன்றேல் கருமத்தால் நாணும் நாணத்தை விட்டுவிடு. இருவேறு பட்ட பண்புகளாகிய இரண்டையும் யான் தாங்கும் ஆற்றல் இலேன்' என்று தலைவன் நெஞ்சிடம் நாணத்தைக் கடந்து சொற்றவாறு.

'ஓங்கு எழில் கொம்பர்' —

கொடியை இடை எனக் கருதித் தழுவும்; காந்தளைக் கை எனக் கொண்டு விரும்பும்; கருவிளையைக் கண்ணெனக் கருதிப் பற்றும்; மாந்தளிரைத் தலைவி மேனியாகக் கொண்டு தடவும்; பொழில் நோக்கிச் செல்லும் மயிலின் சாயல் கண்டு தலைவியாகவே கொண்டு பின்தொடரும்; மூங்கிலைத் தோள் என்று கருதித் தொடும்; கருமணலைத் தலைமயிராகக் கருதி நெருங்கும் என்றஇச்செய்தியில் நோக்குவ எல்லாம் அவையே போறல் பற்றித் தலைமகனுக்கு அவத்தை நிகழ்ந்தவாறு.

'கோடல் எதிர்முகை' —

'காந்தள்மொட்டு, முல்லைமலர், குவளைப்பூ இவற்றை இடையிடையே கலந்து அழகாகத்தொடுத்த மாலையைப் போலத் தலைவி மேனி தளிரினும் மேம்பட்டதாய்த் தழுவு தற்கு இனிதாய் உள்ளது' என்பது மெய்யுறு புணர்ச்சியை நுகர்ந்து அதனை வியந்த தலைமகன் சொற்றவாறு.

எடுத்துக்காட்டுக்கள் உரையாசிரியரைப் பின்பற்றிச் சொற்றவை. (தொல். பொ. 97 உரை)

ஒத்த நூற்பாக்கள்

'வேட்கை ஒருதலை உள்ளுதல் மெலிதல்
ஆக்கம் செப்பல் நாணுவரை இறத்தல்
நோக்குவ எல்லாம் அவையே போறல்
மறத்தல் மயக்கம் சாக்காடு என்றச்
சிறப்புடை மரபினவை களவுஎன மொழிப'.
தொல். பொ. 100, மு. வீ. கள. 5

'காட்சி முதலாச் சாக்காடு ஈறுக்
காட்டிய பத்தும் கைவரும் எனினே
மெய்யுறு புணர்ச்சி எய்துதற்கு உரித்தே'. ந. அ. 36
33

## குறிகள்

406 பகற்குறி இரவுக் குறியெனும் பான்மைய
புகற்சியின் அமைந்தோர் புணர்ச்சிநிகழ் இடன்அவற்று
இல்வரை இகந்தது பகற்குறி இரவுக்குறி
இல்வரை இகவா இயல்பிற்று ஆகும்.

இது, மேல் கூறிப்போந்த புணர்ச்சி நிகழும் இடம் இத்துணைப் பகுதித்து எனவும், அப்பகுதிகள் இவ்வியல்பின எனவும் கூறுகின்றது.

(இ–ள்) பகற்குறியும் இரவுக்குறியும் என்னும் பகுதியை உடையவாம், அன்பான் அமைந்தோர் புணர்ச்சி நிகழும் இடங்கள். அவற்றுள், இல்லின் எல்லையைக் கடந்தது பகற்குறியாம்; இரவுக்குறி அதனைக் கடவாத இயல்பினை உடைத்தாம் என்றவாறு.

ஒத்த நூற்பாக்கள்

'அவன்வரம்பு இறத்தல் அறம்தனக்கு இன்மையின்
களஞ்சுட்டுக் கிளவி கிழவியது ஆகும்
தான்செலற்கு உரியவழி ஆக லான' தொல் பொ. 120
'தோழியின் முடியும் இடனுமா ருண்டே.' ,, ,, 121
'குறிஎனப் படுவது இரவினும் பகலினும்
அறியத் தோன்றும் ஆற்றது என்ப'. ,, ,, 130
'இரவுக் குறியே இல்லகத் துள்ளும்
மனையோர் கிளவி கேட்கும்வழி யதுவே
மனையகம் புகா அக் காலை யான.' ,, ,, 131
'பகல்புணர் களனே புறன்என மொழிப
அவள்அறிவு உணர வருவழி யான.' ,, ,, 132
குறிஎனப் படுவது இரவினும் பகலினும்
அறியக் கிளந்த இடம்என மொழிப.' இறை. கள. 18
'இரவுக் குறியே இல்வரை இகவாது.' ,, ,, 19
'பகற்குறி தானே இகப்பினும் வரையார்.',, ,, 20
'இரவுமனை இகந்த குறியிடத்து அல்லது
கிழவோற் சேர்தல் கிழத்திக்கு இல்லை.' ,, ,, 21
முழுதும் — ந. அ. 37, 38
34

## களவிடைப் பிரிவுகள்

407 ஒருவழித் தணத்தல் வரைவுஇடை வைத்துப்
பொருள்வயின் பிரிதல்என்று இருவகைத்து ஆகும்
நிறைதரு காதல் மறையினில் பிரிவே.

இது, நிறுத்தமுறையானே களவு என்னும் கைகோள் இடத்துப் பிரியும் பிரிவு இத்துணைப் பகுதித்து என்கின்றது.

(இ-ள்) ஒருவழித்தணத்தலும் வரைவு இடைவைத்துப் பொருள்வயின் பிரிதலும் என இரண்டு பகுதியினை உடைத்தாம், நிறைந்த காதலை உடைய களவின்கண் பிரியும் பிரிவு என்றவாறு.

அவற்றுள், ஒருவழித்தணத்தலாவது ஓர்ஊரின்கண்ணும் ஒருநாட்டின்கண்ணும் பிரிதல்; வரைவு இடைவைத்துப் பொருள்வயின் பிரிதலாவது காடுஇடையிட்டும் நாடு இடையிட்டும் பிரிதல். 35

விளக்கம்

இவ்விருவகைப் பிரிவுகளையும் தொல்காப்பியனார் ' இட்டுப் பிரிதல் ' எனவும், 'அருமை செய்து அயர்த்தல் ' எனவும் கூறுவர்.

ஒத்த நூற்பாக்கள்

' முந்நாள் அல்லது துணையின்று கழியாது
அந்நாள் அகத்தும் அதுவரைவு இன்றே '.

தொல். பொ. 122

' களவினுள் தவிர்ச்சி காப்புமிகின் உரித்தே
வரைவு இடை வைத்த காலை யான '. இறை. கள. 16

முழுதும் ந. அ. 39

35

## ஒருவழித் தணத்தல்

அவற்றுள்,

408 ஒருவழித் தணத்தற்குப் பருவம் கூறார்.

இஃது அப்பிரிவு இரண்டனுள் காலவரையறை கூறப்படாதது இது என்கின்றது.

(இ-ள்) மேல் கூறிய பிரிவு இரண்டனுள் ஒருவழித் தணத்தல் காடு இடையிட்டும் நாடு இடையிட்டும் பிரியப்படாமையின் அதற்குக் காலவரையறை சொல்லார் ஆசிரியர் என்றவாறு. 36

ஒத்த நூற்பா

முழுதும் — ந. அ. 40

36

## வரைவு இடைவைத்துப் பொருள்வயின் பிரிதல்

409 வரைவுஇடை வைத்துப் பொருள்வயின் பிரிதல்ஓர்
இருதுவின் எல்லைத்து என்மனார் புலவர்.

இது காலவரையறை கூறப்படுவது இது என்கின்றது.

(இ-ள்) வரைவு இடைவைத்துப் பொருள்வயின் பிரிதல் காடு இடையிட்டும் நாடு இடையிட்டும் பிரிதலின், அஃது இரண்டு திங்களின் வரம்பை உடைத்து என்று சொல்லுவர் அறிவுடையோர் என்றவாறு. 37

ஒத்த நூற்பாக்கள்

'களவினுள் தவிர்ச்சி வரைவின் நீட்டம்
திங்கள் இரண்டின் அகம்என மொழிப.' இறை. கள. 32
முழுதும் — ந. அ. 41
37

## வரைவு நிகழிடன்

410 களவு வெளிப்படா முன்னும் பின்னும்
வினையும் நெறித்துஎன விளம்பினர் வரைவே.

இது மேலைச் சூத்திரத்துள் தோற்றுவாய் செய்யப்பட்ட வரைவு நிகழும் இடம் கூறுகின்றது.

(இ-ள்) களவு வெளிப்படா முன்னும் களவு வெளிப் பட்ட பின்னும் வரைவு நிகழும் நெறியினை உடைத்தாம் என்று சொல்லுவர் அறிவுடையோர் என்றவாறு.

வெளிப்படாமுன்னும் என்பதனால் வெளிப்பட்டபின் னும் எனத் தந்து உரைக்கப்பட்டது. 38

ஒத்த நூற்பா

முழுதும் — ந. அ. 42
38

## களவு வெளிப்படாமுன் வரைதல்

411 நான்குவகைப் புணர்வினும் தான்தெருண்டு வரைதலும்
பாங்கனின் பாங்கியின் தெருள்உற்று வரைதலும்
களவுவெளிப் படாமுன் வரைதல் ஆகும்.

இது களவு வெளிப்படாமுன் நிகழும் வரைவுக்கு இலக்கணம் கூறுகின்றது.

(இ-ள்) மேல் சொல்லப்பட்ட இயற்கைப்புணர்ச்சி முதலாகிய நான்குவகைப் புணர்ச்சிக்கண்ணும் தலைமகன் தானே தெருண்டு வரைதலும், பாங்கனுன் ஆதல் பாங்கியான் ஆதல் தெருட்டப்பட்டு வரைதலும் ஆகிய இவை களவு வெளிப்படாமுன் வரைவாம் என்றவாறு. 39

### விளக்கம்

இயற்கைப் புணர்ச்சியின் பின்னரோ இடந்தலைப்பாட்டின் பின்னரோ தலைவன் தானே 'களவு கூடாது' என்று தெளிந்து வரைதலும், பாங்கற்கூட்டத்தின் பின் தானே தெளிந்தோ பாங்கன் தெளிவித்தோ வரைதலும், பாங்கியிற் கூட்டத்தின் பின் தானே தெளிந்தோ பாங்கி தெளிவித்தோ வரைதலும் களவு வெளிப்படாமுன் வரைதலாம்.

ஒத்த நூற்பா

முழுதும் — ந. அ. 43
39

## களவு வெளிப்பட்டபின் வரைதல்

412 உடன்போய் வரைதலும் மீண்டு வரைதலும்
உடன்போக்கு இடையீடு உற்று வரைதலும்
களவுவெளிப் பட்டபின் வரைதல் ஆகும்.

இது, களவு வெளிப்பட்டபின் நிகழும் வரைவுக்கு இலக்கணம் கூறுகின்றது.

(இ-ள்) புணர்ந்து உடன்போய்த் தலைமகன் தன் ஊரின்கண்ணே வரைதலும், மீண்டுவந்து தம் ஊரின் கண்ணே வரைதலும், உடன்போக்கு இடையீடு உற்றுத் தலைமகன் தலைமகள்தமரை வழிபட்டு வரைதலும் ஆகிய இவை களவு வெளிப்பட்டபின் வரைதலாம் என்றவாறு. 40

விளக்கம்

தலைவனும் தலைவியும் ஒரே ஊரினராகவும் வேற்று வேற்று ஊரினராகவும் இருத்தல் கூடும்.

ஒத்த நூற்பா

முழுதும் — ந. அ. 44
40

## உடன்போய் வரைதல்

அவற்றுள்,

413 உடன்போய் வரைதல் ஒருவகைத்து ஆகும்.

இஃது உடன்போய் வரைதலின் வகை உணர்த்துகின்றது.

(இ-ள்) மேல்சொல்லப்பட்ட மூவகை வரைவினுள் உடன்போய்த் தன்ஊரின்கண்ணே வரைதல் ஒருவகையினை உடைத்தாம் என்றவாறு. 41

விளக்கம்

தன் ஊர் என்பது தலைவன்தமர் ஊரையும் சுட்டும்.

ஒத்த நூற்பா

முழுதும் — ந. அ. 45
41

## மீண்டு வரைதல்

414 அவள்மனை வரைதலும் தன்மனை வரைதலும்
எனமீண்டு வரைதல் இருவகைத்து ஆகும்.

இது மீண்டுவரைதலின் வகை உணர்த்துகின்றது.

(இ-ள்) தலைமகள்மனையின்கண்ணே வரைதலும் தலைமகன்மனையின்கண்ணே வரைதலும் என இரண்டு வகையினை உடைத்தாம், உடன்போய் மீண்டு தம் ஊரின் கண்ணே வரைதல் என்றவாறு. 42

ஒத்த நூற்பா

முழுதும் — ந. அ. 46

42

## அறத்தொடுநிலை தோன்றும் இடம்

415 ஆற்றுஊறு அஞ்சினும் அவன்வரைவு மறுப்பினும்
வேற்றுவரைவு நேரினும் காப்புக் கைமிகினும்
ஆற்றுறத் தோன்றும் அறத்தொடு நிலையே.

இது மேல்கூறிய வரைவிற்கு நிமித்தம் கூறுகின்றது.

(இ-ள்) தலைமகன் வருவழி ஏதத்தினை அஞ்சிய இடத்தும், தமர் அவன்வரைவு எதிர்கொள்ளாத இடத்தும், பிறர் வரைவு நேரும் இடத்தும், காவல் கைமிகுந்த இடத்தும் நெறிப்படப் புலப்படும் அறத்தொடுநிலை என்றவாறு.

அறத்தொடுநிலை — அறத்தொடு மாறுகொள்ளாத நிலை.

43

விளக்கம்

அறத்தொடுநிலை — தக்கதனைச் சொல்லிநிற்றல். கற்பின் தலை நிற்றல் என்பதும்ஆம்.

ஒத்த நூற்பாக்கள்

'காப்புக்கை மிக்குக் காமம் பெருகினும்,
நொதுமலர் வரையும் பருவம் ஆயினும்,
வரைவுஎதிர் கொள்ளாது தமர்அவண் மறுப்பினும்,
அவன்ஊறு அஞ்சும் காலம் ஆயினும்,

அந்நாலிடத்தும் மெய்ந்நாண் ஒரீஇ,
அறத்தொடு நிற்றல் தோழிக்கும் உரித்தே.'

இறை. கள. 29

முழுதும் — ந. அ. 47

43

## அறத்தொடு நிற்கும் முறை.

416 தலைவி பாங்கிக்கு அறத்தொடு நிற்கும்
பாங்கி செவிலிக்கு அறத்தொடு நிற்கும்
செவிலி நற்றாய்க்கு அறத்தொடு நிற்கும்
நற்றாய் தந்தை தன்னையர்க்கு அறத்தொடு
நிற்கும் என்ப நெறிஉணர்ந் தோரே.

இஃது இவர் இவர்க்கு அறத்தொடுநிற்றற்கு உரியர் என்கின்றது.

(இ-ள்) தலைவி முதலிய நால்வரும் பாங்கி முதலிய நான்கு திறத்தார்க்கும் முறையே அறத்தொடுநிற்றற்கு உரியர் என்று சொல்லுவர் அகப்பொருள் இலக்கணம் அறிந்தோர் என்றவாறு. 44

ஒத்த நூற்பாக்கள்

முழுதும் — ந. அ. 48

44

## தலைவி அறத்தொடு நிற்கும் காலம்

417 ஒருபுணர் ஒழிந்தவற்று ஒருவழித் தணப்பவும்
வரைவுஇடை வைத்துப் பொருள்வயின் பிரியவும்
இறைவனைச் செவிலி குறிவயின் காணவும்
மனைவயின் செறிப்பவும் வருத்தம் கூறின்
வினவியக் கண்ணும் வினவாக் கண்ணும்
அனநடைக் கிழத்தி அறத்தொடு நிற்கும்.

இது தலைவி அறத்தொடு நிற்கும் காலம் உணர்த்து கின்றது.

(இ-ள்) பாங்கியிற்கூட்டம் ஆகியஒன்று நீங்கியஏனை இயற்கைப்புணர்ச்சி முதலாய மூன்று புணர்ச்சிக்கண்ணும் தலைவன் ஒருவழித்தணத்தலானும், வரைவு இடைவைத்துப் பொருள்வயின் பிரிதலானும், தலைவனைச் செவிலி குறியிடத் துக் காண்டலானும், மனையிடத்துச் செறித்தலானும், தனக்கு வருத்தம் மிகுமாயின், தன்னைப் பாங்கி வினவிய இடத்தும் வினவாத இடத்தும் தலைவி அவட்கு அறத்தொடு நிற்கும் என்றவாறு.

பாங்கி என்பது அதிகாரத்தான் வந்தது.

45

ஒத்த நூற்பாக்கள்

‘ வரைவுஇடை வைத்த காலத்து வருந்தினும்
வரையா நாளிடை வந்தோன் முட்டினும்
உரைஎனத் தோழிக்கு உரைத்தற் கண்ணும்
தானே கூறும் காலமும் உளவே’. தொல். பொ. 112

‘ பன்னூறு வகையினும் தன்வயின் வருஉம்
நன்னயம் மருங்கின் நாட்டம் வேண்டலின்
துணைச்சுட்டுக் கிளவி கிழவியது ஆகும்
துணையோர் கருமம் ஆக லான ’. ,, 123

‘ காமத் திணையின் கண்நின்று வருஉம்
நாணும் மடனும் பெண்மைய ஆதலின்
குறிப்பினும் இடத்தினும் அல்லது வேட்கை
நெறிப்பட வாரா அவள்வயி னான ’. ,, 108

‘ காமம் சொல்லா நாட்டம் இன்மையின்
ஏமுற இரண்டும் உளவென மொழிப ’. 109

'சொல்லெதிர் மொழிதல் அருமைத்து ஆகலின்
அல்ல கூற்றுமொழி அவள்வயி ருன'. „ 110

இம்மூன்று நூற்பாவானும் தலைவி தோழியிடத்து நாணம் நீங்கிக் கூற்று நிகழ்த்துதற்கு உரியளாமாறு உணரப்படும்.

முழுதும் — ந. அ. 49

45

## பாங்கி அறத்தொடு நிற்கும் திறன்.

418 முன்னிலைப் புறமொழி முன்னிலை மொழிகளின்
சின்மொழிப் பாங்கி செவிலிக்கு உணர்த்தும்.

இது பாங்கி அறத்தொடுநிற்கும் திறம் கூறுகின்றது.

(இ-ள்) முன்னிலைப்புறமொழியும் முன்னிலை மொழியும் ஆகிய இரண்டினானும் பாங்கி செவிலிக்கு அறத்தொடு நிற்கும் என்றவாறு. 46

'அறத்தொடு நிற்கும் காலத்து அன்றி
அறத்தியல் மரபுஇலள் தோழி என்ப'.

தொல். பொ. 206

'எளித்தல் ஏத்தல் வேட்கை உரைத்தல்
கூறுதல் உசாதல் ஏதீடு தலைப்பாடு
உண்மை செப்பும் கிளவியொடு தொகைஇ
அவ்வெழு வகைய என்மனார் புலவர்'. „ 207

'உற்றுழி அல்லது சொல்லல் இன்மையின்
அப்பொருள் வேட்கை கிழவியின் உணர்ப'. „ 208

'தோழிக்கு உரியவை கோடாய் தேஎத்து
மாறுகோள் இல்லா மொழியுமார் உளவே'.

இறை. கள. 14

முழுதும் — ந. அ. 50

46

## செவிலி அறத்தொடு நிற்குமாறு

419 செவிலி நற்றுய்க்குக் கவலையின்று உணர்த்தும்.

இது செவிலி அறத்தொடு நிற்கும் திறம் கூறுகின்றது.

(இ-ள்) செவிலி அறத்தொடு நிற்கும் காலத்து நற்றுய்க்கு விளங்க அறிவிக்கும் என்றவாறு. 47

ஒத்த நூற்பா

' தாய்அறி வுறுதல் செவிலியோடு ஒக்கும்.'

தொல். பொ. 138

முழுதும் — ந. அ. 51

47

## நற்றுய் அறத்தொடு நிற்றல்

420 நற்றுய் அறத்தோடு நிற்குங் காலைக்
கூரவனும் தன்னையும் குறிப்பின் உணர்ப.

இது நற்றுய் அறத்தொடுநிற்கும் திறம் கூறுகின்றது.

(இ-ள்) நற்றுய் அறத்தொடு நிற்குங் காலத்துச் சொல்லாடப் பெறுள் ஆகலின், தலைமகள்தந்தையும் தன்னையும் அவள் குறிப்பினுனே அறிவர் என்றவாறு. 48

ஒத்த நூற்பாக்கள்

' தந்தையும் தன்னையும் முன்னத்தின் உணர்ப.'

தொல். பொ. 137

முழுதும் — ந அ. 52

48

## அறத்தொடு நிற்பார் வினவுமிடம்

421 பாங்கி தலைவியை வினவும் செவிலி
பாங்கியை வினவும் பாங்கி தன்னையும்
நற்றாய் தானும் வினவும் செவிலியின்
பொற்றொடிக் கிழத்தியை உற்று நோக்கின்.

இஃது அறத்தொடு நிற்பார்க்கு வினா நிகழும் இடம் கூறுகின்றது.

(இ-ள்) தலைமகள்மாட்டு வேறுபாடு கண்டுழிப் பாங்கி முதலாகிய மூவரும் இவ்வாறு வினவப் பெறுவர் என்றவாறு.

'பாங்கி தன்னையும் நற்றாய் தானும்' என்ற உம்மைகள் முறையே 'நற்றாய் செவிலியை வினவுதலும் பாங்கியைச் செவிலி வினவுதலும் அன்றி' என்னும் பொருள்பட நின்றன. இவ்வாறு நற்றாய் வினவுவது செவிலியைப் போலத் தலைமகளை உற்றுப்பார்த்த இடத்து எனக்கொள்க. 49

ஒத்த நூற்பா

முழுதும் — ந. அ. 53
49

## உடன்போயவழி அறத்தொடுநிலை

422 ஆங்குஉடன் போயுழி அறத்தொடு நிற்ப
பாங்கியும் செவிலியும் பயந்த தாயும்.

இஃது அறத்தொடுநிலை முறையான் அன்றி ஒருங்கு நிகழும் இடம் கூறுகின்றது.

(இ-ள்) தலைமகளும் தலைமகனும் புணர்ந்து உடன் போய காலத்து அறத்தொடுநிற்பர் தோழியும் செவிலியும் நற்றாயும் என்றவாறு.

ஆங்க என்னும் உரையசை ஈண்டு அகரம் தொக்கு நின்றது. 50

ஒத்த நூற்பா

முழுதும் — ந. அ. 54
50

## கற்பின் வகை

423 களவின் வழிவந்த கற்பும் பொற்புஅமை
களவின்வழி வாராக் கற்பும் என்றாங்கு
முற்படக் கிளந்த கற்புஇரு வகைத்தே.

இது நிறுத்த முறையானே கற்பின் பாகுபாடு கூறுகின்றது.

(இ-ள்) மேல் கூறிப் போந்த கற்பு களவிற்புணர்ச்சி வழியான் வந்த கற்பும், களவிற்புணர்ச்சிவழியான் வாராக் கற்பும் என இரண்டு பகுதியினை உடைத்தாம் என்றவாறு.

களவின் வழிவந்த கற்பினை முற்கூறினார், அதனது சிறப்பு நோக்கி. 51

## விளக்கம்

நிறுத்தமுறை—இவ்வியல் 24-ஆம் நூற்பா

ஒத்த நூற்பா

முழுதும் — ந. அ. 55
51

## கற்பின் புணர்ச்சி வகை

424 சுரவின் புணர்ச்சி வாயிலின் கூட்டம்என்று
இருவகைத்து ஆகும் கற்பின் புணர்ச்சி.

இது கற்பின்புணர்ச்சி இத்துணைத்து என்கின்றது.

(இ-ள்) கற்பு என்னும் கைகோள்இடத்துப் புணரும் புணர்ச்சி குரவரால் புணரும் புணர்ச்சியும், வாயில்களால் புணரும் புணர்ச்சியும்என இரண்டு பகுதியினை உடைத்து என்றவாறு.

குரவரின் புணர்ச்சி வதுவை கூட்டிப்புணரும் புணர்ச்சி; வாயிலின் கூட்டம் புலவி தீர்த்துப் புணரும் புணர்ச்சி.

ஒத்த நூற்பா

முழுதும் — ந. அ. 56

52

## களவின்வழிவரு கற்பிற்குச் சிறப்புவிதி

அவற்றுள்,

425 களவின் வழிவந்த கற்பின் புணர்ச்சி
கிளைஞரின் எய்தாக் கேண்மையும் உடைத்தே
உடன்போய் வரைதலும் உண்மை யான.

இது களவின்வழி வந்த கற்பின்புணர்ச்சிக்கு எய்துவது ஒரு வேறுபாடு உணர்த்துகின்றது.

(இ-ள்) மேல் சொல்லப்பட்ட இருவகைக் கற்பினுள்ளும் களவின் வழிவந்த கற்பினுள் புணரும் புணர்ச்சி, தலைமகள் சுற்றத்தாரால் பெறப்படாத கோட்பாட்டினையும் உடைத்தாம், புணர்ந்து உடன்போய்த் தலைமகன் தன் ஊரின் கண்ணே வரைந்துகோடலும் உண்டு ஆதலான் என்றவாறு.

'கொடுப்போர் இன்றியும் கரணம் உண்டே
புணர்ந்துஉடன் போகிய காலை யான'.

தொல் பொ. 143

என்ப ஆகலின். 53

ஒத்த நூற்பா

'கொடுப்போர் .... .... .... காலையான' ,, 143

முழுதும் — ந. அ. 57

53

## இருவகைப் புணர்ச்சி

426 மறையின் புணர்ச்சியும் மன்றல் புணர்ச்சியும்
இறைவற்கு எய்தல்உண்டு இருவகைக் கற்பினும்.

இது தலைமகற்குக் கற்புக்காலத்து நிகழும் புணர்ச்சி வேறுபாடு கூறுகின்றது.

(இ-ள்) மேல் சொல்லிய இருவகைக் கற்பின்கண்ணும் தலைமகற்குக் களவிற்புணர்ச்சியும் வதுவைப் புணர்ச்சியும் பொருந்துதல் உண்டு என்றவாறு. 54

ஒத்த நூற்பா

முழுதும் — ந. அ. 58
54

## இருவகைப் புணர்ச்சிக்கும் உரிய மகளிர்

427 காதற் பரத்தையர் காமக் கிழத்தியர்
பின்முறை வதுவைப் பெருங்குலக் கிழத்திஎன்று
அன்னவர் உரியர் அவைஇரண் டற்கும்,

இஃது அவ் விருவகைப் புணர்ச்சிக்கும் உரிய மகளிர் இவர் என்கின்றது.

(இ-ள்) காதற்பரத்தையர் முதலாகிய மூவகையோரும் தலைமகன் அவ்வாறு புணரும் புணர்ச்சி இரண்டற்கும் உரியர் என்றவாறு. 55

விளக்கம்

தலைவன் பலரை முறையே வரைதல் அக்கால மரபாதல் 'பின்முறை ஆக்கிய .பெரும்பெயர் வதுவை' (தொல். பொ· 172) என்பதனானும் பெறப்படும்.

ஒத்த நூற்பா

முழுதும் — ந. அ 59
55

## களவிற்கு உரியார்

அவருள்,

428 காலல் பரத்தையர் களவிற்கு உரியர்.

இது களவிற்கு உரிய மகளிர் இவர் என்கின்றது

(இ-ள்) மேல் சொல்லப்பட்ட மூவகையோருள்ளும் காதல் பரத்தையர் களவின்புணர்ச்சிக்கு உரியர் என்றவாறு. 56

ஒத்த நூற்பா

முழுதும் — ந. அ. 60
56

## திருமணத்திற்கு உரியார்

429 ஒழிந்தோர் மன்றல் புணர்ச்சிக்கு உரியர்.

இது வதுவைப் புணர்ச்சிக்கு உரிய மகளிர் இவர் என்கின்றது,

(இ-ள்) காமக்கிழத்தியும் பின்முறை வதுவைப் பெருங்குலக் கிழத்தியும் ஆகிய இருதிறத்தோரும் வதுவைப்புணர்ச்சிக்கு உரியர் என்றவாறு. 57

ஒத்த நூற்பா

முழுதும் — ந. அ. 61
57

## கற்புக்காலப் பிரிவுகள்

430 பரத்தையின் பிரிதல் ஓதற்குப் படர்தல்
அருள்தரு காவலோடு தூதிற்கு அகறல்
உதவிக்கு ஏகல் நிதியிற்கு இகத்தல்என்று
உரைபெறு கற்பின் பிரிவுஅறு வகைத்தே.

இது கற்பின் பிரியும் பிரிவுவரையறை உணர்த்துகின்றது.

(இ-ள்) பரத்தையிற் பிரிதல் முதலாக நிதியிற்கு இகத்தல் ஈறாக அறுவகையினை உடைத்தாம் கற்பின்கண் பிரியும் பிரிவு என்றவாறு. 58

ஒத்த நூற்பாக்கள்

'ஓதல் பகையே தூதுஇவை பிரிவே'. தொல் பொ. 25

'கற்பினுள் துறவே கடிவரை இன்றே'. இறை. கள. 34

'ஓதல் காவல் பகைதணி வினையே
வேந்தர்க்கு உற்றுழி பொருட்பிணி பரத்தைஎன்று
ஆங்க ஆறே அவ்வயின் பிரிவே'. இறை. கள. 35

முழுதும் ந. அ. 62

'பெருகும்இல் வாழ்க்கை பரத்தையில் பிரிதல்
செருவினுக்கு உற்றுழிச் செல்வ துடனே
பொருவில் புரத்தலின் பொருள்வயின் பிரிதல்
தூதில் பிரிதல் சுருதி முதலிய
ஓதப் பிரிதலோடு ஓரேழ் என்ப
கிளந்த கற்பின் கிளவித் தொகையே.' மாறன். அக. 98

தொல்காப்பிய அகத்திணையியலுள் தலைவன் கூற்றில் இவ்வறுவகைப் பிரிவும் இடம் பெறும். (41 ஆம் நூற்பா)

'வாயினும் கையினும் வகுத்த பக்கமொடு
ஊதியம் கருதிய ஒருதிறத்தானும்' — ஓதல்

'காவற்பாங்கின் ஆங்கோர் பக்கமும்' — காவல்

'தூதுஇடை யிட்ட வகையி னானும்' — தூது

'புகழும் மானமும் எடுத்துவற் புறுப்பினும் — பகை
தோன்றல் சான்ற மாற்றோர் மேன்மையும் — ,,
ஆகித் தோன்றும் பாங்கோர் பாங்கினும்' - ,,

'ஒன்றாப் பொருள்வயின் ஊக்கியபாலினும்' –பொருள்

'மூன்றன்பகுதியும்' — ,,

'பரத்தையின் அகற்சியின் பரிந்தோட் குறுகி
இரத்தலும் தெளித்தலும்' — பரத்தை

## பரத்தையின் பிரிவில் பிரியும் இடங்கள்

431 அயல்மனைப் பிரிவு அயல்சேரியின் அகற்சி
புறநகர்ப் போக்குஇவை புரவலற்கு உரிய
பரத்தையின் பிரியும் பருவத் தான.

இது தலைமகன் பரத்தையின் பிரியும் காலத்து இவ் விடங்களில் பிரியும் என்கின்றது.

அயல் மனை முதலிய மூன்று இடத்துப் பிரிவும் தலைவற்கு உரியவாம் பரத்தையின் பிரியுங் காலத்து என்றவாறு. 59

ஒத்த நூற்பா

முழுதும் ந. அ. 63
59

## அயல்மனைப் பிரிவு

432 கெழீஇய காமக் கிழத்தியர் பொருட்டாய்த்
தழீஇய அயன்மனைத் தலைவன் பிரியும்.

இது நிறுத்தமுறையானே அயல்மனைப்பிரிவுக்கு ஏது கூறுகின்றது.

(இ-ள்) பொருந்திய காமக்கிழத்தியர் காரணமாகத் தலைமகன் தோள்தோய்ந்த அயல்மனைக்கண்ணே பிரியும் என்றவாறு. 60

விளக்கம்

காமக்கிழத்தியைப் பக்கத்து மனையிலேயே அமர்த்திக் கொள்வான் என்பது. நிறுத்தமுறை சென்ற நூற்பாவில் நிறுத்தியமுறை.

ஒத்த நூற்பா

முழுதும் — ந. அ. 64
60

## அயற்சேரிக்குப் பிரிவு

433 பின்னர் வரைந்த பெதும்பையும் பரத்தையும்
இன்னியல் விழவும் ஏது வாக
அவன்அயல் சேரியில் அகலும் என்ப.

இஃது அயல்சேரியில் பிரிவுக்கு ஏது உணர்த்துகின்றது.

(இ-ள்) இரண்டாவது வரைந்து கொள்ளப்பட்ட பெதும்பைப்பருவக் கிழத்தியும் காதல்பரத்தையும் விழவும் காரணமாகத் தலைமகன் அயல்சேரியின்கண்ணே பிரியும் என்றவாறு. 61

### விளக்கம்

தலைமகன் ஆதலின், விழாவினை முன்இருந்து நடத்தும் கடப்பாடு உடையன் என்பது.

ஒத்த நூற்பா

'பரத்தையின் பிரிவே நிலத்திரிபு இன்றே.' இறை. கள. 42
முழுதும் ந. அ. 65
61

## புறநகர்க்குப் பிரிதல்

434 விருந்துஇயல் பரத்தையைப் பெருந்தேர் மிசைக்கொண்டு
இளமரக் காவில் விளையா டற்கும்
புனலா டற்கும் புறநகர்ப் போகும்.

இது புறநகர்ப் போக்கிற்கு ஏது உணர்த்துகின்றது.

(இ-ள்) இளமரக்காவின்கண்ணே விளையாடுதல் காரண மாகவும் புனலாடுதல் காரணமாகவும் தலைமகன் புதியள் ஆகிய பரத்தையைத் தேர்மேல் ஏற்றிக்கொண்டு நகர்ப்புறத் திலே போம் என்றவாறு.

புனல் ஆடல் கூறவே, அதற்கு ஏதுவாகிய புதுப்புனல் வரவும் கொள்ளப்படும். அதற்குச் செய்யுள் :

ஏராடு சிந்துர இந்திர சாபம் இறைஞ்சு நுதல்
வேராட நீல விழிசிவப் பாட விளங்கிழையார்
தாராடு பைங்குழல் பின்னகம் ஆடத் தழூஉச்சிவிறிப்
போராட வந்தது தண்புனல் ஆடல் புரவலற்கே.

எனவரும். (அம்பி. 474)

புனலாடற்குச் செய்யுள் :

குருகோடு கம்புள் குலம்இரிந் தார்ப்பக் கொடுந்திரைசூழ்
இருகோடு மள்ளர் எறிபறை ஆர்ப்ப இடுமணற்குன்று
அருகோடு தண்புனல் வண்புனல் ஊரனொ டாடுதற்கு
வருகோடி அன்புடை யார்ஒரு கோடி மடந்தையரே.

எனவரும். இளமரக்காவில் விளையாடற்கு உதாரணம் வந்துழிக் காண்க. 62

விளக்கம்

தலைவியும் தலைவனோடு புனலாடற்கும் பொழிலில் விளையாடற்கும் சேறலும் உண்டேனும், அஃது ஒரோவழி நிகழ்வது; பரத்தையுடன் புனலாடலும் பொழில் விளையாடலுமே பெரும்பான்மை என்பது அறிக.

‘ ஏராடு சிந்துர ’—

தலைவன் பரத்தையருடன் அவர்தம் அழகிய சிந்துரத் திலகமிட்ட நுதல் வேர்வை துளிப்பவும், கண்கள் சிவப்பவும் அவன் அணிந்த மாலையைச் சூடிய அவர்கள் கூந்தல் ஆடவும், அவனோடு குரவையாடிப் பின் சிவிறியால் நீரைத்தூவி விளையாடற்கு யாற்றில் புதுப்புனல் வந்தது என்றவாறு.

‘ குருகோடு கம்புள் ’—

குருகுகளும் கம்புள்களும் ஆகிய பறவைகள் ஆரவாரித்து நீங்கவும், யாற்றின் இருகரைகளிலும் மள்ளர்

பறை ஒலிக்கவும், மணல்மேட்டின் அருகில் ஓடிவரும் தண் புனலில் தலைவனோடு நீர்விளையாட்டு நிகழ்த்த விருப்பம்மிக்க பரத்தையர் பலராகக் கூடினர் என்றவாறு.

ஒத்த நூற்பா

முழுதும் — ந. அ. 66

62

### ஊடல் நிகழ் இடன்

435 ஊடல் அவ்வழிக் கூடும் கிழத்திக்கு.

இது தலைவிக்கு ஊடல் நிகழும் இடம் கூறுகின்றது.

(இ—ள்) அம்மூன்று பிரிவின்கண்ணும் தலைமகட்கு ஊடல் பொருந்தும் என்றவாறு. 63

விளக்கம்

மூன்று பிரிவு 61 ஆம் நூற்பாவில் சொற்றவை.

ஒத்த நூற்பா

முழுதும் ந. அ. 67

63

### வாயில்கள்

436 கோளைவல பாணன் பாடினி கூத்தர்
இளையோர் கண்டோர் இருவகைப் பாங்கர்
பாகன் பாங்கி சேவிலி அறிவர்
காமக் கிழத்தியர் காதல் புதல்வன்
விருந்துஆற் றுமை என்றுஇவை ஊடல்
மருந்தாய்த் தீர்க்கும் வாயில்கள் தாமே.

இது, மேல் சொல்லப்பட்ட வாயில்கள் ஆவன இவை என்கின்றது.

(இ ள்) பாணன் முதலாக ஆற்றுமை ஈறுகச்சொல்லப் பட்ட இவை அனைத்தும் தலைமகள் ஊடலை மருந்தாய்த் தீர்க்கும் வாயில்களாம் என்றவாறு.

ஒத்த நூற்பாக்கள்

' தோழி தாயே பார்ப்பான் பாங்கன்
பாணன் பாடினி இளையர் விருந்தினர்
கூத்தர் விறலியர் அறிவர் கண்டோர்
யாத்த சிறப்பின் வாயில்கள் என்பர் '.

தொல். பொ. 193

முழுதும் ந. அ. 68

64

## ஓதற் பிரிவு

437 ஓதல் தொழில்உரித்து உயர்ந்தோர் மூவர்க்கும்.

இஃது ஓதல்தொழிலுக்கு உரியது ஒருசிறப்பு உணர்த்துகின்றது.

(இ-ள்) வேதம்ஓதல் என்னும் தொழில் அந்தணர் அரசர் வணிகர் என்கின்ற மூவர்க்கும் உரித்து என்றவாறு.

65

ஒத்த நூற்பாக்கள்

' ஓதலும் தூதும் உயர்ந்தோர் மேன '.

தொல். பொ. 26

' ஓதலும் காவலும் உயர்ந்தோர்க்கு உரிய '.

இறை. கள. 36

முழுதும் — ந. அ. 69, தொ. வி. 173

' மறையோர் மன்னர் வணிகர்வே ளாளருள்
ஓதல் தொழில்உரித்து உயர்ந்தோர் மேன.'

மு. வீ. அக. 43

(65)

## கல்விப் பிரிவு

438 அல்லாக் கல்வி எல்லார்க்கும் உரித்தே.

இஃது ஒழிந்த கல்வியது தன்மை உணர்த்துகின்றது.

(இ-ள்) வேதம் அல்லாத கல்வி நால்வருக்கும் உரித்து என்றவாறு.

'உயர்ந்தோர்க்கு உரிய ஓத்தி னை', தொல். பொ. 31
முழுதும் ந. அ. 70, தொ. வி. 173

'எல்லார்க்கும் உரியன இவைஅல பிறவே'.
மு. வீ. அக. 44

(66)

## தொழிற் கல்வி

439 படைக்கலம் பயிறலும் பகடுபிற ஊர்தலும்
உடைத்தொழில் அவற்குஎன உரைத்திசி னோரே.

இது நாவினுல் கற்கும் தொழில் அல்லாத கல்வித் தொழில் உரிமை உணர்த்துகின்றது.

(இ-ள்) படைக்கலன்களைக் கற்றலும், யானையும் தேரும் குதிரையும் முதலாயின ஊர்தலும் உரிமை ஆகிய தொழில் எனக் கூறினுர் புலவர் என்றவாறு.

'பிற' என்றதனுல் தேரும் குதிரையும் முதலாயின கொள்ளப்பட்டன. பகடுபிற என்பது உம்மைத்தொகை. 67

ஒத்த நூற்பாக்கள்

'வேந்து வினை இயற்கை வேந்தனின் ஒரீஇய
ஏனேர் மருங்கினும் எய்து இடன் உடைத்தே.'
தொல். பொ. 32
முழுதும் — ந. அ. 71, தொ. வி. 174

'அயில்வேல் அத்திரம் அவாவொடு பயிறல்
கலினவாம் புரவி கலிதேர் ஊர்தல்
உடைத்தொழில் அவர்க்குஎன உரைத்திசி னேரே'
மு. வீ. அக. 45

67

### காவற்பிரிவின் வகை

440 அறப்புறம் காவல் நாடு காவல்எனச்
சிறப்புஉறு காவல் திறம்இரு வகைத்தே.

இது காவல்பிரிவு இத்துணைத்து என்கின்றது.

(இ-ள்) அறப்புறம் காத்தற்குப் பிரியும் பிரிவும், நாடு காத்தற்குப் பிரியும் பிரிவும்என மேம்பாடு உற்ற காவற்குப் பிரியும் பிரிவு இருவகையினை உடைத்தாம் என்றவாறு. 68

### ஒத்த நூற்பா

முழுதும் — ந. அ. 72

'காவல் அறப்புறங் காவலும் நாடு
காவலும் என இரு வகைப்படும் எனலே.'
மு. வீ. அக. 46

68

### அறப்புறம் காவல்

441 அவற்றுள்,
அறப்புறம் காவல் அனைவர்க்கும் உரித்தே.

இது நிறுத்த முறையானே முன்னையதற்கு உரிமை கூறுகின்றது.

(இ-ள்) மேல் சொல்லிய இரண்டனுள் அறப்புறம் காத்தற்குப் பிரியும் பிரிவு அந்தணர் முதலிய நால்வர்க்கும் உரித்து என்றவாறு. 69

### ஒத்த நூற்பாக்கள்

முழுதும் — ந. அ. 73, தொ. வி. 185 மு. வீ அக. 47

70

## நாடு காவல்

442 மற்றைக் காவல் கொற்றவர்க்கு உரித்தே.

இது பின்னையதற்கு உரிமை கூறுகின்றது.

(இ-ள்) ஏனை நாடுகாத்தற்குப் பிரியும் பிரிவு அரசர்க்கு உரித்து என்றவாறு. 70

### ஒத்த நூற்பாக்கள்

'மேவிய சிறப்பின் ஏனோர் படிமைய
முல்லை முதலாச் சொல்லிய முறையால்
பிழைத்தது பிழையா தாகல் வேண்டியும்
இழைத்த ஒண்பொருள் முடியவும் பிரிவே.'

தொல். பொ. 28

'மன்னர் பாங்கில் பின்னோரும் ஆகுப.' ,, ,, 30

'ஏனைக் காவல் இறைவர்க் குரிய' மூ. வீ. அக. 48

'அரசர் அல்லா ஏனை யோர்க்கும்
புரைவது என்ப ஓரிடத் தான.' இறை. கள 38

70

## தூதிற்கு உரிமை

443 வேத மாந்தர் வேந்தர்என்று இருவர்க்கும்
தூது போதல் தொழில்உரித்து ஆகும்,

இது, நிறுத்த முறையானே தூதிற்குப் பிரியும் பிரிவுக்கு உரியார் இவர் என்கின்றது.

(இ-ள்) அந்தணரும் அரசரும் என்னும் இருதிறத்தாருக்கும் தூதுநிமித்தம் பிரியும் பிரிவுதொழில் உரித்து என்றவாறு.

வரலாறு :

வயலைக் கொடியின் வாடிய மருங்குல்
உயவல் ஊர்திப் பயலைப் பார்ப்பான்
எல்லி வந்து நில்லாது புக்குச்

சொல்லிய சொல்லோ சிலவே அதற்கே
ஏணியும் சிப்பும் மாற்றி
மாண்வினை யானையும் மணிகளைந் தனவே.

(புறநா. 305)

என்பதனானும்,

மடந்தாழும் நெஞ்சத்துக் கஞ்சனார் வஞ்சம்
கடந்தானை நூற்றுவர்பால் நால்திசையும் போற்றத்
தொடர்ந்து ஆரணம்முழங்கப் பஞ்சவர்க்குத் தூது
நடந்தானை ஏத்தாத நாஎன்ன நாவே
நாராய ணாஎன்னா நாஎன்ன நாவே.

(சிலப். ஆய். குரவை)

என்பதனானும் முறையே அவ்விருவருக்கும் தூதுநிமித்தம் பிரியும் பிரிவுதொழில் உரித்தாயவாறு காண்க. 71

விளக்கம்

‘ வயலைக்கொடியின் ’ —

வயலைக்கொடி போன்ற வாடிய இடுப்பினையும் வருந்து தலை உடைய ஊர்ந்து செல்லுகின்ற நடையினையும் உடைய இளைய அந்தணன் இரவுக்காலத்தில் வந்து வாயில்காவலனால் சொல்லிவிடாமல் நேரே அரசனிடம் போய்க் கூறிய தூதுச்சொற்கள் சிலவற்றால் ஏணியும் கதவுகளில் இடும் தாழும் நீக்கப்பட்டு யானைகள் மணி களையப்பட்டுப் போர் ஆயத்தம் நிறுத்தப்பட்டது என்றவாறு.

‘ மடந்தாழும் ’ —

அறியாமை தங்கிய உள்ளத்தைஉடைய கம்சன் வஞ்சனையை அழித்தவன், பாண்டவர்க்காகத் தன்பின்னர் வேதங்கள் முழங்கவும் உலகம் துதிக்கவும் கவுரவர்பக்கல் தூது போனவன் ஆகிய திருமாலை ஏத்தி ‘ நாராயணா ’ என்று அவன் திருநாமம் கூறாத நா பயனுடைய நா அன்று என்றவாறு.

ஒத்த நூற்பாக்கள்

'ஓதலும் தூதும் உயர்ந்தோர் மேன'.

தொல். பொ. 26

'வேந்துவினை இயற்கை பார்ப்பார்க்கு உரித்தே'.

இறை. கள. 37

முழுதும் — ந. அ. 75 தொ. வி. 186

'இருபிறப் பாளர் இறைவர்என்று இருவர்க்கும்
தூது போதல் தொழில்உரித்து ஆகும்'.

மு வீ. அக. 49

71

## நாடு காவற்கும் தூதிற்கும் புறனடை

444 சிறப்புப் பெயர்பெறின் செப்பிய இரண்டும்
உறற்குஉரி மரபின ஒழிந்தோர் இருவர்க்கும்.

இது மேலனவற்றிற்கு ஒரு புறனடை கூறுகின்றது.

(இ-ள்) அரசனால் சிறப்புப்பெயர் பெற்றாராயின், மேல் கூறிய நாடுகாவல் பிரிவும் தூதில் பிரிவும் பொருந்துதற்கு உரிய மரபினவாம், ஏனை வணிகரும் சூத்திரரும் என்னும் இருதிறத்தாருக்கும் என்றவாறு.

உரியமரபு 'உரிமரபு' என விகாரம் ஆயிற்று. 72

ஒத்த நூற்பாக்கள்

'மன்னர் பாங்கின் பின்னோரும் ஆகுப'

தொல். பொ. 30

'வேந்துவினை இயற்கை வேந்தனின் ஒரீஇய
ஏனோர் மருங்கினும் எய்துஇடன் உடைத்தே' ,, 32

முழுதும் — ந. அ. 76, தொ. வி. 187

'பெருமா ணுற்சிறப் புப்பெயர் பெறினே
மொழிந்தோர் இருவர்க்கும் உரிய ஆகும்'

மு. வீ. அக. 50

72

## பகைவயின் பிரிவு

445 உதவி அந்தணர் ஒழிந்தோர்க்கு உரித்தே.

இது நிறுத்த முறையானே உதவிநிமித்தம் பிரியும் பிரிவிற்கு உரியார் இவர் என்கின்றது.

(இ-ள்) அரசர்க்குப் பகைவரான் ஊறு உற்றுழி உதவிக்குப் பிரியும் பிரிவு அந்தணர் ஒழிந்த மூவர்க்கும் உரித்தாம் என்றவாறு. 73

ஒத்த நூற்பாக்கள்

'தானே சேறலும் தன்னொடு சிவணிய
ஏனோர் சேறலும் வேந்தன் மேற்றே.'

தொல். பொ. 27

முழுதும் — ந. அ. 77

73

## பரத்தையிற்பிரிவும் பொருட்பிரிவும்

446 பரத்தையின் பிரிவும் பொருள்வயின் பிரிவும்
உரைத்த நால்வர்க்கும் உரிய வாகும்.

இது நிறுத்த முறையானே பரத்தையின் பிரிவிற்கும் பொருள்வயின் பிரிவிற்கும் உரியார் இவர் என்கின்றது.

(இ-ள்) பரத்தையின் பிரிவும் பொருள்வயின் பிரிவும் ஆகிய இரண்டும் மேல் சொல்லப்பட்ட நால்வர்க்கும் உரியவாம் என்றவாறு.

ஒத்த நூற்பாக்கள்

'மேலோர் முறைமை நால்வர்க்கும் உரித்தே'.

தொல். பொ. 29

'பொருள்வயின் பிரிதலும் அவர்வயின் உரித்தே'.
தொல். பொ 33

'பரத்தை வாயில் நால்வர்க்கும் உரித்தே
நிலத்திரிபு இன்று அஃது என்மனார் புலவர்'. ,, 224

'வேந்தர்க்கு உற்றுழிப் பொருட்பிணிப் பிரிவென்று
ஆங்க இரண்டும் இழிந்தோர்க்கு உரிய'.
இறை. கள, 39

'காதல் பரத்தை நால்வர்க்கும் உரித்தே'. தொல். பொ. 40

முழுதும் — ந அ. 78

74

## திணை மக்கட்குரிய பிரிவுகள்

447 இழிந்தோர் தமக்கும் இவற்றுள்மேம் பட்டவை
ஒழிந்தன வாம்என மொழிந்தனர் புலவர்.

இது நிலமக்களுள் தலைமக்கட்கு உரியன கூறுகின்றது.

(இ-ள்) இவ்வறுவகைப் பிரிவுள்ளும் மேம்பட்டன வாகிய ஓதலும் நாடு காவலும் தூதுபோதலும் ஆகிய மூன்றும் ஒழித்து அல்லாதன எல்லாம் ஒழிந்தோர்ஆகிய நில மக்களுள் தலைமக்கட்கு உரியவாம் எனச் சொல்லுவர் அறிவோர் என்றவாறு. 75

விளக்கம்

நிலமக்களுள் தலைமக்கள்— பொருப்பன், வீடலை, குறும்பொறைநாடன், ஊரன், சேர்ப்பன் போல்வார். செய்யுளுள் இவர்களே பெரும்பாலும் தலைவராக வருதலைக் காண்கிறோம்.

ஒத்த நூற்பா

'முழுதும் — ந. அ. 79

75

## தலைமகன் பிரியும் திறன்

448 கல்வி முதலா எல்லா வினைக்கும்
சொல்லி அகறலும் சொல்லாது அகறலும்
உரியன் கிழவோன் பெருமனைக் கிழத்திக்கு.

இது பிரியும் தலைமகற்கு உரியதுஓர் இலக்கணம் உணர்த்துகின்றது.

(இ-ள்) கல்வி முதலாகிய ஐந்து வினைக்கும் தலைமகன் தலைமகட்குச் சொல்லிப் பிரிதலும் சொல்லாது பிரிதலும் உரியன் என்றவாறு 76

### விளக்கம்

ஐந்து என்றது, பரத்தையிற்பிரிவு ஒழித்த ஏனைய பிரிவுகளை.

ஒத்த நூற்பா

முழுதும் — ந அ. 80

76

## தோழியிடம் கூறிப் பிரிதல்

449 சொல்லாது அகலினும் சொல்லும் பாங்கிக்கு.

இதுவும் அது,

(இ-ள்) தலைமகன் தலைமகட்குச் சொல்லாது பிரியுமாயினும், தோழிக்குச் சொல்லியே பிரியும் என்றவாறு 77

### விளக்கம்

பரத்தையிற் பிரிவு ஒழித்து ஏனையனவே தலைவன் கூறுவன் என்பது.

ஒத்த நூற்பா

'முழுதும் — ந. அ. 81

77

## தலைவியிடம் குறிப்பான் பிரிவுஉணர்த்தல்

450 குறிப்பின் உணர்த்தும் பெறல்அருங் கிழத்திக்கு,

இதுவும் அது.

(இ-ள்) தலைமகன் சொல்லாது பிரியும் ஆயினும் குறிப்பினுல் உணர்த்தும் தலைமகட்கு என்றவாறு. 78

ஒத்த நூற்பாக்கள்

‘செய்பொருள் அச்சமும் வினைவயின் பிரிவும்
எய்த உணர்த்தும் கிழவிபா ராட்டே’. தொல். பொ. 232
முழுதும் — ந. அ. 82
78

## பிரிதற்கண் பொதுஇயல்பு

451 காலில் சேறலும் கலத்தில் சேறலும்
ஊர்தியில் சேறலும் நீதி ஆகும்.

இது பிரியுங்காலத்து நால்வர்க்கும் பொதுஆவது ஓர் இயல்பு உணர்த்துகின்றது.

(இ-ள்) காலிற்போதல் முதலாகிய மூன்றும் எல்லாப் பிரிவின்கண்ணும் எல்லார்க்கும் இயல்பாம் என்றவாறு. 79

ஒத்த நூற்பா
முழுதும் — ந. அ. 83
79

## அந்தணர்க்கு ஆகாத பிரிவு

452 புலத்தில் சிறந்த புரிநூல் முதல்வர்க்குக்
கலத்தில் சேறல் கடன்அன்று என்ப.

இஃது அந்தணர்க்கு ஆகாதது ஓர்இயல்பு கூறுகின்றது.

(இ-ள்) காலில்சேறல் முதலாகிய மூன்றனுள்ளும், கலத்தில்சேறல் அறிவினுன்மிக்க அந்தணர்க்கு முறைமை அன்று என்று சொல்லுவர் புலவர் என்றவாறு. 80

### விளக்கம்

கலத்தில் போங்கால் செலவு பன்னாட்கு ஆகும். ஆதலின், நாடோறும் செய்யும் இறைவழிபாடு முட்டுப்படுதலின் கலத்தில்சேறல் அந்தணர்க்கு ஆகாது என்றவாறு.

ஒத்த நூற்பா

முழுதும் — ந. அ. 84

80

## அரசர் முதலியோர்க்கு ஆகாத இயல்பு

453 வலன்உயர் சிறப்பின் மற்றைமூ வர்க்கும்
குலமட மாதரோடு கலமிசைச் சேறலும்
பாசறைச் சேறலும் பழுதுஎன மொழிப.

இஃது அரசர் முதலாகிய மூவர்க்கும் ஆகாதது ஓர் இயல்பு கூறுகின்றது.

(இ-ள்) குலமட மாதரொடு கூடக் கலம்மிசைச் சேறலும் பாசறைக்கண் சேறலும் ஆகிய இரண்டும் வெற்றிஉயர் சிறப்பினை உடைய வேந்தர் முதலாகிய மூவர்க்கும் குற்றம் என்று சொல்லுவர் கற்றுவல்லோர் என்றவாறு.

மணம்மலி பூங்கானல் வருகலன்கள் நோக்கிக்
கணவன் வரக் கல்லுருவம் நீத்தாள். (சிலப். வஞ்சின67)

எனவும்,

பனிஇருங் கங்குலும் தமியள் நீந்தித்
தம்மூ ரோளே நன்னுதல் யாமே . . .
இரவுத்துயில் மடிந்த தானை
உரவுச்சின வேந்தன் பாசறை யேமே. (அகநா-24)

எனவும் வருவனவற்றான், முறையே குலமடமாதரொடு கலம் மிசைச் செல்லாமையும் பாசறைக்கண் செல்லாமையும் அறிக. 'குலமடமாதரொடு செல்லார்' எனவே, பரத்தையரோடு செல்வார் என்பதுபெற்றும்.

துயில்இன்றி யாம்நீந்தத் தொழுவையம் புனல்ஆடி
மயில்இயலார் மருவுண்டு மறந்துஅமைகு வான்மன்னோ
வெயில்ஒளி அறியாத விரிமலர்த் தண்காவில்
குயில்ஆலும் பொழுதுஎன்னக் கூறுநர் உளராயின்,
(கலி. 30)

என்பதனால் பரத்தையரொடு பாசறைக்கண் சென்றவாறு அறிக. ஏனையது வந்துழிக் காண்க. 81

## விளக்கம்

'மணமலி' —

'கடற்கரையை நோக்கி வரும் மரக்கலங்களை நோக்கியவாறு கல்லுருவில் தங்கியிருந்த கற்பினள் ஒருத்தி தன் கணவன் ஒரு கலத்தில் வந்து சேர்ந்த அளவில் கல்லுருவை விடுத்துத் தொல்லுருவு கொண்டாள் எனவே, அவள் கணவனோடு கடற்செலவில் உடன் செல்லவில்லை என்பதாம்.

'பனியிருங் கங்குலும்' —

'என் தலைவி பனிமிக்க இரவைத் தனியளாய்க் கழித்தவாறே தன் ஊரில் இருக்கவும், யான் பலரும் இரவில் துயிலும் பாசறையில் தனித்து வருந்துகிறேன்' என்ற தலைவன் கூற்றில், தன் மனையாளோடு பாசறைக்குச் செல்லாமை பெறப்பட்டவாறு.

'துயிலின்றி' —

'வெயில் ஒளி அறியாத சோலையிலே குயில் கூவும் இளவேனிற் காலம் இது' என்று தலைவனிடம் கூறுவார் உளராயின், யாம் துயிலின்றி யாமக் கடலை நீந்தவும், அவன் பரத்தையரொடு மடுக்களில் நீராடி அவரைக கூடி நம்மை மறந்து அவரிடமே தங்குவானோ?" என்ற தலைவி கூற்றைப் பாணன் பாசறைக்கண் சென்று தலைவனிடம் சொற்றவாறு.

## ஒத்த நூற்பாக்கள்

'முந்நீர் வழக்கம் மகடூஉவோடு இல்லை.'
தொல். பொ. 34
'எண்ணரும் பாசறை பெண்ணொடு புணரார்.' ,, 75
'புறத்தோர் ஆங்கண் புரைவது என்ப.' ,, 76
முழுதும் — ந. அ. 85
81

## தலைவன் செலவு அழுங்கல்

454 ஓதல் முதலா ஓதிய ஐந்தினும்
பிரிவோன் அழுங்கற்கும் உரியன் ஆகும்.

இதுவும் தலைமகற்குப் பிரிவிடத்து உரியதொரு வேறுபாடு கூறுகின்றது.

(இ-ள்) ஓதல் முதலாகச் சொல்லப்பட்ட ஐந்தன்கண்ணும் பிரியும் தலைமகன் போதற்கே அன்றிப் போதாமைக்கும் உரியன் என்றவாறு. 82

### விளக்கம்

ஈண்டும் பரத்தையிற்பிரிவு ஒழித்து ஏனையவே கொள்க.

### ஒத்த நூற்பா

முழுதும் — த. அ. 86
82

## தலைவன் அழுங்கும் இடம்

455 இல்லத்து அழுங்கலும் இடைச்சுரத்து அழுங்கலும்
ஒல்லும் அவற்குஎன உரைத்திசி னோரே.

இதுவும் அது.

(இ-ள்) பிரியக்கருதிய தலைமகன் இல்லின்கண்ணே செலவு அழுங்குதலும், இடைச்சுரத்தின்கண்ணே செலவு அழுங்குதலும் என இரண்டற்கும் உரியன் எனக் கூறுவர் புலவர் என்றவாறு.

புணரின் புணராது பொருளே பொருள்வயின்
பிரியின் புணராது புணர்வே ஆயிடைச்
செல்லினும் செல்லாய் ஆயினும்
நல்லதற்கு உரியை வாழிய நெஞ்சே. நற் 16

எனவும்,

தொழுது வணங்கி மணங்கமழ்தார் பெய்து தொய்யில்மெய்யில்
எழுதி முயங்கி மயங்கினம் ஆக இருங்கயற்கண்
அழுது சிவந்து பசந்தது நாம்இங்(கு) அகலுவமேல்
பழுது சிறந்து வீடும்தனி ஆவிப் பணிமொழிக்கே.
(அம்பி. 548)

எனவும்,

சென்றே வினைமுற்றி மீளுவது அன்றெனில் தேர்ந்திதனை
அன்றே தவிர்தல் அன்றேஅறி வோர்தொழில் ஆரழல்திண்
குன்றே நெருங்கும் கொடுஞ்சுரத்து என்னையும் கொண்டுவந்து
நின்றே வருந்தும்நெஞ் சேஎன்செய் வேன்இந் நிலைதனக்கே. [அம்பி. 550

எனவும் இவைமுறையே ஒருங்குவருதலும் தனித்தனி வருதலும் காண்க. 83

விளக்கம்

'புணரின் புணராது' —

தலைமகளோடு உடன் உறைந்திருப்பின் செல்வம்கிட்டாது; செல்வம் கிட்டின் தலைமகள் புணர்வு நிகழாது; மனமே! நீ பொருள்வயிற் பிரிதலைக்கருதி வரினும், அன்றேல் பிரிவைத் தவிர்ப்பினும் நன்றாகிய ஒன்றையே பற்றி அமைதியாக இரு என்றவாறு.

'தொழுது வணங்கி' —

தலைவியிடம் பணிவன்புகாட்டிப் பூச்சூட்டித் தொய்யில் எழுதி அவளழகில் ஈடுபட்டுத்தழுவிய அளவில், அவள் கண்கள் அழுது பசந்து சிவந்தன. ஆகவே, நாம் பிரியின் அவள் இறந்துபடுதல் திண்ணம் என்றவாறு.

'சென்றே வினைமுற்றி' —

பாலை நிலத்தே என்னையும் அழைத்து வந்து இப்பொழுது வருந்தும் மனமே! ஒன்று, போய்ச் செயலை முடித்

துப் பின் மீளுதல் வேண்டும். இன்றேல் அன்றே பிரிவைத் தவிர்ந்து இருத்தல்வேண்டும்; இப்பொழுது இடைச்சுரத்து நீ வருந்தும் நிலைக்கு என் செய்வேன் என்றவாறு.

முதற் பாடல் பொது. இரண்டாம் பாடல் இல்லத்து அழுங்கல். மூன்றும் பாடல் இடைச்சுரத்து அழுங்கல்.

ஒத்த நூற்பா

முழுதும் — ந. அ. 87

83

## தலைவன் அழுங்கலின் கருத்து

456 தலைவி தன்னையும் தன்மனம் தன்னையும்
அலமரல் ஒழித்தற்கு அழுங்குவது அல்லது
செல்வத் தோன்றல் செல்லான் அல்லன்.

இஃது எய்தியது விலக்குகின்றது.

(இ–ள்) இல்லத்துத் தலைமகளையும் தன்நெஞ்சினையும் தேற்றுதல் காரணமாகவும், இடைச்சுரத்துத் தன் நெஞ்சினைத் தேற்றுதல் காரணமாகவும் அழுங்கும் மாத்திரம் அல்லது, தலைமகன் போகான் அல்லன் என்றவாறு

இல்லத்துத் தலைமகளைத் தேற்றியதற்குச் செய்யுள் :

பொன்னும் மணியும் போலும் யாழநின்
நன்னர் மேனியும் நாறுஇருங் கதுப்பும்
போதும் பணையும் போலும் யாழநின்
மாதர்உண் கண்ணும் வனப்பின் தோளும்
இவைகாண் தோறும் அகம்மெலிந்து யானும்
அறநிலை பெற்றோர் அனையேன் அதன்தலைப்
பொலந்தொடிப் புதல்வனும் பொய்தல் கற்றனன்
வினையும் வேறுபுலத்து இலனே நினையின்
யாதனின் பிரிகோ மடந்தை
காதல் தானும் கடலினும் பெரிதே. (நற். 166)

எனவரும். பிறவும் அன்ன. 84

எய்தியது—செலவு அழுங்குதல்; விலக்குதல்-அழுங்கல் தவிர்ந்து சேறல்.

'பொன்னும் மணியும்' —

'தலைவியே! நின்மேனி பொன்போலவும், கூந்தல் நீல மணிபோலவும், கண்கள் குவளைபோலவும், தோள்கள் மூங்கில்போலவும் உள இவற்றைக் காணும்தோறும் நான் இவற்றைப் பிரிதற்கு அகம் மெலிந்து, இவற்றை நுகர்தலால் நல்வினை நிலைபெற்றுரைப் போல உளேன். மேலும் என்னை மகிழ்விக்க என்புதல்வனும் விளையாடல் கற்றுவிட்டான். இவற்றை விடுத்து எனக்கு வேற்றிடத்தில் வேலைஇல்லை. உன்னிப்பார்க்கின், காதலே கடலினும் பெரிது ஆதலின் எதற்காகப் பிரியப் போகிறேன்? என்று தலைவன் தலைவி அலமரல் தவிர்த்தவாறு.

ஒத்த நூற்பாக்கள்

'துன்புறு பொழுதினும் எல்லாம் கிழவன்
வற்புறுத் தல்லது சேற வில்லை'. தொல். பொ. 184
'செலவிடை அழுங்கல் செல்லாமை அன்றே
வன்புறை குறித்த தவிர்ச்சி ஆகும்'. ,, 185
முழுதும் — ந. அ. 88

84

## ஓதற்பிரிவின் காலவரையறை

அவற்றுள்,

457 ஓதல் பிரிவுஉடைத்து ஒருமூன்று யாண்டே.

இஃது ஓதல் பிரிவுக்குக் காலவரையறை உணர்த்துகின்றது.

(இ-ள்) மேல் சொல்லப்பட்ட பிரிவுள், ஓதற்குப் பிரியும் பிரிவு மூன்றுயாண்டு எல்லை உடைத்து என்றவாறு. 85

ஒத்த நூற்பாக்கள்

'வேண்டிய கல்வி யாண்டுமூன் று இறவாது.'
தொல். பொ. 188
முழுதும் — ந. அ. 89
85

## தூது துணை பொருள்-பிரிவுகளின் காலவரையறை

458 தூதின் பிரிவும் துணைவயின் பிரிவும்
பொருள்வயின் பிரிவும் ஓர்யாண்டு உடைய.

இது தூதிற்பிரிவு முதலாகிய மூன்று பிரிவிற்கும் கால வரையறை உணர்த்துகின்றது.

(இ-ள்) தூது காரணமாகப் பிரியும் பிரிவும், துணை இடமாகப் பிரியும் பிரிவும், பொருள் காரணமாகப் பிரியும் பிரிவும் ஓர் யாண்டின் எல்லையினை உடையவாம் என்றவாறு.

பரத்தையிற் பிரிவுக்கும் காவல் பிரிவுக்கும் கால வரையறை கூறுர் ஆயினுர், அவை காடு இடையிட்டும் நாடு இடையிட்டும் பிரியப்படாமையின். 86

ஒத்த நூற்பாக்கள்

'வேந்துறு தொழிலே யாண்டினது அகமே.'
தொல். பொ. 189
'ஏனைய பிரிவும் அவ்வயின் நிலையும்.' ,, ,, 190
'பிரிவின் நீட்டம் நிலம்பெயர்ந்து உறைவோர்க்கு
உரியது அன்றே யாண்டுவரை யறுத்தல்.'
இறை. கள. 41
86

## பூப்பும் கூட்டமும்

459 பூத்த காலைப் புனைஇழை மனைவியை
நீர்ஆ டியபின் ஈராறு நாளும்

கருவயிற்று உறூஉம் காலம் ஆதலின்
பிரியப் பெறுஅன் பரத்தையின் பிரிவோன்.

இது பரத்தையின் பிரியும் தலைவற்கு உரியது ஓர் இயல்பு உணர்த்துகின்றது.

(இ-ள்) நீராடியபின் பன்னிருநாளும் கரு வயிற்றின் கண் படும்காலம் ஆதலான், பரத்தையின் பிரியும் தலைவன் அப்பன்னிருநாளும் தலைவியைப் பிரியப் பெறான், பூப்பு நிகழும் காலத்து என்றவாறு.

தீண்டா நாள் முந்நாளும் நோக்கார் நீர் ஆடியபின்
ஈராறு நாளும் இகவற்க என்பதே
பேரறி வாளர் துணிபு. (ஆசாரக்கோவை 42)

என்றார் பெருவாயில் முள்ளியாரும் என்க. 87

விளக்கம்

பூப்புப் புறப்பட்டஞான்று நின்றகரு வயிற்றில் அழியும்; இரண்டாம்நாள் நின்ற கரு வயிற்றிலே சாம்; மூன்றாம் நாள் நின்ற கரு குறுவாழ்க்கைத்தாம்; வாழினும் திருவின்றாம்; ஆதலின் கூட்டம் தக்கதன்று என்பது.

இறை. சூ. 43 உரை

ஒத்த நூற்பாக்கள்

'பூப்பின் புறப்பாடு ஈராறு நாளும்
நீத்தகன்று உறையார் என்மனார் புலவர்
பரத்தையின் பிரியும் காலை யான'. தொல்.பொ. 187

'பரத்தையிற் பிரிந்த கிழவோன் மனைவி
பூப்பின் புறப்பாடு ஈராறு நாளும்
நீத்தகன்று உறைதல் அறத்தாறு அன்றே'.
இறை. சூ. 43

‘ பூப்புமுதல் முந்நாள் புணரார் புணரின்
யாப்புறு மரபின் ஐயரும் அமரரும்
யாத்த கரணம் அழியும் என்ப ’. ,, 43 உரை

முழுதும் ந. அ 91

87

## ஓதற்பிரிவுக்குச் சிறப்பு விதி

460 ஓதற்கு அகன்றோன் ஒழிந்து இடைமீண்டு
போதற்கு இயையவும் புலம்பவும் பெறுஅன்

இஃது ஓதற்குப் பிரியும் தலைமகனால் நிகழ்த்துதற்கு ஆகாத செய்தி கூறுகின்றது.

(இ-ள்) ஓதற்குப் பிரிந்த தலைமகன் ஏனையோர் போல அவ்வோதலை ஒழிந்து இடையே மீண்டு வருதற்கு உடன்படவும், அவ்விடத்துத் தலைமகளை நினைந்து புலம்பவும் தகான் என்றவாறு. 88

ஒத்த நூற்பா

முழுதும் — ந. அ. 92 88

## தூது-துணை வயின்பிரிவு-இவற்றிற்குச் சிறப்பு விதி

461 தூதும் துணையும் ஏது வாகச்
சென்றோன் அவ்வினை நின்றுநீட் டிப்புழிப்
புலந்து பாசறைப் புலம்பவும் பெறுமே

இது தூதும் துணையும் காரணமாகப் பிரிந்த தலைவற்கு ஆவது ஒரு வேறுபாடு கூறுகின்றது.

(இ-ள்) தூது காரணமாகவும் உதவி காரணமாகவும் பிரிந்த தலைவன் அத்தொழில்கள் அப்பிரிவிற்கு உரிய ஓர் யாண்டின்கண் முடியாது நீட்டித்த காலத்து, பாசறைக் கண்ணே இருந்து வெறுத்துப் புலம்புதல் செய்யவும் பெறும் என்றவாறு.

உம்மையால் புலம்பல் ஒருதலை அன்று என்க. 89

ஒத்த நூற்பா

'பாசறைப் புலம்பலும்' தொல். பொ. 41

முழுதும் — ந அ. 93

89

## தலைவியின் கற்புக்காலத்து ஒழுகலாறுகள்

462 பூத்தமை சேடியின் புரவலர்க்கு உணர்த்தலும்
நீத்தமை பொருஅது நின்றுகிழ வோனைப்
பழிக்கும் காமக் கிழத்தியைக் கழறலும்
கிழவோற் கழறலும் வழிமுறை மனைவியைக்
கொழுநனோடு உவந்துஎதிர் கோடலும் அவனோடும்
பாங்கொடும் பரத்தையைப் பழித்தலும் நீங்கிப்
புறநகர்க் கணவனொடு போகிச் செறிமலர்ச்
சோலையும் காவும் மாலைஅங் கழனியும்
மாலைவெள் ளருவியும் மலையும் கானமும்
கண்டுவிளை யாடலும் கடும்புனல் யாறும்
வண்டுஇமிர் கமல வாவியும் குளனும்
ஆடிவிளை யாடலும் கூடும் கிழத்திக்கு.

இது தலைவிக்குக் கற்புக்காலத்துக்கு உரிய ஒழுகலாறு எல்லாம் தொகுத்து உணர்த்துகின்றது.

(இ-ள்) பூத்தமை சேடியின் புரவலர்க்கு உணர்த்தல் முதலாகக் குளன்ஆடல் ஈருகச் சொல்லப்பட்டன எல்லாம் கற்புக்காலத்துத் தலைமகட்குப் பொருந்தும் என்றவாறு.

கற்பு என்பது அதிகாரத்தான் வந்தது.
இவற்றுள், தலைவி புனல்ஆடற்குச் செய்யுள் :

அடங்கா அசுரர் குலம்அறுத் தோர்அத்தி ஊரர்வென்றி
மடங்காதநேமி வரதர்தன் நாட்டில்தன் மைந்தனுடன்
முடங்காமல் அந்த மனைவியும் போய்முயன்று ஊரனுடன்
தடங்காவும் யாறும் குளனும்சென்று ஆடவும் தக்கதுவே.

(அத்தியூர்க்கோவை)

எனவும்,

பரத்தையைப் பழித்தற்குச் செய்யுள் :

முருகார் முளரியும் முள்ளியும் முண்டக மூரிஅரம்
பொருகார் இரும்பும் கனகமும் பொன்பொங்கு தாரகையும்
குருகார் குறுங்கழிக் கெண்டையும் நேர்எம் குரிசிலுக்கு
வருகாதல் நல்கிய எங்கையும் யானும் மடந்தையரே.
(அம்பி 481)

எனவும் வரும்.

ஏனையவற்றிற்கு உதாரணம் மேல் வந்துழிக் காண்க 90

விளக்கம்

தலைவி தான் பூப்பு எய்திய செயலைச் செவ்வணி அணிந்த சேடி வாயிலாகத் தலைவனுக்கு உணர்த்தலும், உடனே தலைவன் பிரிந்துவிடுவான் ஆதலின் அதனைப்பொருது பழிக்கும் காமக்கிழத்தியைப் பழித்தலும், பரத்தைமை கொண்ட கிழவனை இடித்து உரைத்தலும், தலைவன் பின்னர்வரைந்த தலைவியை அவனோடு எதிர்கொண்டு அழைத்தலும், அவளொடும் தோழியரொடும் சேர்ந்துகொண்டு பரத்தையைப் பழித்தலும், தலைவனோடு ஊருக்கு வெளியே புறப்பட்டு மலர்ச்சோலைகள் தோட்டங்கள் வயல்கள் அருவிகள் மலைகள் காடுகள் இவற்றைக் கண்டு விளையாடலும் ஆறும் ஓடையும் குளனும் ஆடி விளையாடலும் கற்புக்காலத்தில் தலைவிக்கு நிகழ்வனவாம் என்றவாறு.

‘ அடங்கா அசுரர் ’ —

பகைவரை அழித்துச் சக்கரப்படை ஏந்திய அத்தி ஊரர் ஆகிய வரதர்நாட்டிலே தன் மைந்தனையும் அழைத்துக் கொண்டு வீட்டை விடுத்துத் தலைவி தலைவனுடன் போய்க் காவும் யாறும் குளனும் ஆடத்தக்க பருவம் வந்தது என்றவாறு.

'முருகார் முளரியும்' —

தலைவி, 'யானும் பரத்தையும் மன்மதன் போன்ற என் தலைவனுக்கு முறையே தாமரையும் முள்ளியும், பொன்னும் இரும்பும், விண்மீனும் கெண்டை மீனும் போல்வேம்' என்று தன்னோடு ஒப்பிட்டுப் பரத்தையைப் பழித்தவாறு.

'யாறும் குளமும் காவும் ஆடிப்
பதிஇகந்து வருதலும் உரித்துஎன மொழிப.'
தொல். பொ. 191

முழுதும் — ந. அ. 94 90

## பாணன் தொழில்கள்

463 வாயில் வேண்டலும் வாயில்நேர் வித்தலும்
சேயிழை ஊடல் தீர்த்தலும் போயுழி
அவள்நலம் தொலைவுகண்டு அழுங்கலும் அவன்வயின்
செல்ல விரும்பலும் சென்றுஅவற்கு உணர்த்தலும்
சொல்லிய கூற்றுஎனச் சொல்லும் கிழவோன்
வரவு மீண்டுவந்து அரிவைக்கு உணர்த்தலும்
அணிநலம் பெற்றமை அறியான்போன்று அவட்
பணிவொடு வினாதலும் பாணற்கு உரிய.

இது மேல் கூறிப்போந்த வாயில்களுள் பாணற்கு உரியன எல்லாம் தொகுத்து உணர்த்துகின்றது.

(இ-ள்) வாயில்வேண்டல் முதலாகச் சொல்லப்பட்டன எல்லாம் பாணற்கு உரியனவாம் என்றவாறு. 91

## விளக்கம்

மேற்கூறிப்போந்த — 64ஆம் நூற்பாவில் கூறிய.

தலைவியை வாயில்வேண்டி உடன்படச்செய்தலும், அவள் ஊடலை நீக்குதலும், தலைவன் தலைவியைப் பிரிந்து சென்ற

வழி அவள் அழகுஅழிவு கண்டு வருந்தலும், தலைவன் பிரிந்து சென்ற இடம் நோக்கிச் செல்லுதலை விரும்பலும், தலைவனிடம் தலைவிநிலையை உரைத்தலும், தன்னிடம் உரையாடிய தலைவன் மீண்டுவரும் நாளினைத் தலைவிக்குக் கூறலும், தலைவன் வந்தபின் தலைவி மகிழ்ச்சியால் திளைக்கும் போது தான் வந்து தலைவன்வருகையை அறியாதான்போல அதுபற்றித் தலைவியை வினவுதலும் பாணனுக்கு உரிய தொழில்களாம்என்றவாறு.

ஒத்த நூற்பாக்கள்

வாயில்களுக்குப் போது இலக்கணம்

'கற்புறு காமமும் நற்பால் ஒழுக்கமும்
மெல்லியல் பொறையும் நிறையும் வல்லிதின்
விருந்துபுறந் தருதலும் சுற்றம் ஓம்பலும்
பிறவும் அன்ன கிழவோள் மாண்புகள்
முகம்புகல் முறைமையின் கிழவோற்கு உரைத்தல்
அகம்புகல் மரபின் வாயில்கட்கு உரிய.'
தொல். பொ. 152

'மனைவி தலைத்தாள் கிழவோன் கொடுமை
தம்முள ஆதல் வாயில்கட்கு இல்லை.' ,, 165

'மனைவி முன்னர்க் கையறு கிளவி
மனைவிக்கு உறுதி உள்வழி உண்டே.' ,, 166

'முன்னிலைப் புறமொழி எல்லா வாயிற்கும்
பின்னிலைத் தோன்றும் என்மனார் புலவர்.' ,, 167

, எல்லா வாயிலும் இருவர் தேஎத்தும்
புல்லிய மகிழ்ச்சிப் பொருள என்ப.' ,, 178

அன்புதலைப் பிரிந்த கிளவி தோன்றின்
சிறைப்புறம் குறித்தன்று என்மனார் புலவர்.' ,, 179

'தொல்லவை உரைத்தலும் நுகர்ச்சி ஏற்றலும்
பல்லாற்றானும் ஊடலில் தணித்தலும்

உறுதி காட்டலும் அறிவுமெய் நிறுத்தலும்
ஏதுவின் உணர்த்தலும் துணிவு காட்டலும்
அணிநிலை உரைத்தலும் கூத்தர் மேன.' ,, 168

' நிலம்பெயர்ந்து உறைதல் வரைநிலை உரைத்தல்
கூத்தர்க்கும் பாணர்க்கும் யாத்தவை உரிய '
தொல். பொ. 169

முழுதும் — ந. அ. 95 91

## விறலி தொழில்கள்

464 செலவில் தேற்றலும் புலவியில் தணித்தலும்
வாயில் வேண்டலும் வாயில்நேர் வித்தலும்
தேரிஇழை விறலிக்கு உரிய ஆகும்.

இது விறலிக்கு உரியனஎல்லாம் தொகுத்து உணர்த்து கின்றது.

(இ-ள்) செலவின் தேற்றல் முதலாகச் சொல்லப்பட்டன எல்லாம் விறலிக்கு உரியனவாம் என்றவாறு. 92

### விளக்கம்

தலைவனுடைய கல்விமுதலிய பிரிவின்கண் தலைவிக்கு ஆறுதல்மொழி கூறுதலும், தலைவனுடைய பரத்தையிற் பிரிவின்கண் தலைவியினுடைய புலவியைத்தீர்த்தலும், தலைவனுடைய வாயிலாகச் சென்று தலைவியின் ஊடல் தீருமாறு வேண்டலும், ஊடல் தீர்த்து இருவரையும் கூட்டுவித்தலும் விறலியின் தொழில்களாம்.

காண்பாருக்கு மெய்ப்பாடு தோன்றுமாறு ஆடுதலின் கூத்தி விறலி எனப்பட்டாள். விறல்—மெய்ப்பாடு.

ஒத்த நூற்பா

முழுதும் — ந. அ. 96
92

## கூத்தன் தொழில்கள்

465 செல்வம் வாழ்த்தலும் நல்லறிவு கொளுத்தலும்
கலன்அணிபு உணர்த்தலும் காமநுகர்பு உணர்த்தலும்
புலவிமுதிர் காலைப் புலம்கொள ஏதுவின்
தேற்றலும் செய்மை செப்பலும் பாசறை
மேல்சென்று உரைத்தலும் மீண்டுவரவு உரைத்தலும்
கூற்றுஅரு மரபின் கூத்தற்கு உரிய.

இது கூத்தற்கு உரியன எல்லாம் தொகுத்து உணர்த்துகின்றது.

(இ-ள்) செல்வம் வாழ்த்தல் முதலாகச் சொல்லப்பட்டன எல்லாம் கூத்தற்கு உரியனவாம் என்றவாறு. 93

### விளக்கம்

தலைவனுடைய செல்வத்தை வாழ்த்தலும், இல்லறத்தை இனிது நடத்தற்குரிய வாய்ப்புக்களைக் கூறலும், அணிகலன்களை நலனுற அணியும் முறைமைகளை உணர்த்தலும், இன்பம் துய்க்கும் வாய்ப்புக்களை விளக்கலும், தலைவிக்கு ஊடல் ஏற்படுங்காலை அவள் புலவி தீர்ந்து தலைவனோடு கூடும் வகையில் காரணங்கள் பல காட்டி அவள் உள்ளத்தைத் தெளிவித்தலும், தலைவன் பிரியக் கருதுங்காலை அவன் செல்ல இருக்கும் தேயத்தின் சேய்மைபற்றிக் கூறலும், தலைவன் போர்வயின் பிரிந்தகாலைத் தலைவி நிலையை அவன் தங்கியிருந்த பாசறைக்குச் சென்று உணர்த்தலும், தலைவன் மீண்டு வரும் நாளைத் தலைவிக்கு உணர்த்தலும் கூத்தன் தொழில்களாம்.

ஒத்த நூற்பா

'தொல்லவை உரைத்தலும் .... .... .... கூத்தர்மேன'.
தொல். பொ. 168

முழுதும் — ந. அ. 97

93

## இளையோர் தொழில்கள்

466 மடந்தையை வாயில் வேண்டலும் வாயில்
உடன்படுத் தலும்அவள் ஊடல் தீர்த்தலும்
கோற்றவற் காத்தலும் குற்றேவல் செய்தலும்
சென்றுமுன் வரவு செப்பலும் பாசறை
ஒன்றிநின்று உரைத்தலும் வினைமுடிபு உரைத்தலும்
வழிஇயல்பு கூறலும் வழியிடைக் கண்டன
மொழிதலும் இளையோர் தொழில்என மொழிப.

இஃது இளையோர்க்கு உரியன எல்லாம் தொகுத்து உணர்த்துகின்றது.

(இ-ள்) மடந்தையை வாயில்வேண்டல் முதலாகச் சொல்லப்பட்டன எல்லாம் இளையோர்க்கு உரிய தொழில்களாம் எனக் கூறுவர் என்றவாறு. 94

### விளக்கம்

தலைவன் பரத்தையிற் பிரிந்தவழித் தலைவியை வாயில் வேண்டலும், தலைவியைத் தலைவன் ஏற்றுக்கோடற்கு உடன்படச்செய்தலும், மீண்டும் ஊடல் நிகழாதவாறு அமைதி உறச்செய்தலும், தலைவனை உடன்இருந்து காத்தலும், அவற்குக் குற்றேவல் செய்தலும், தலைவன் பகைவயின் பிரிவு முதலியவற்றிலிருந்து மீண்டு வரும்முன் தாம் வந்து அவன் வரும் நாளினைத் தலைவியிடம் கூறலும், அவன் செய்த செயற்கருஞ் செயல்களை அவன்பக்கல் நின்று தலைவிக்கு உரைத்தலும், எடுத்துக்கொண்ட வினையின் வெற்றி முடிபை உணர்த்தலும் அவன் மீண்டு வரும் வழி இயல்பினையும் அவ்வழியில் தாம் கண்டனவற்றையும் கூறுதலும் இளையோர் தொழில்களாம் என்றவாறு.

### ஒத்த நூற்பாக்கள்

'ஆற்றது பண்பும் கருமத்து விளைவும்,
ஏவல் முடிவும் வினாவும் செப்பும்

ஆற்றிடைக் கண்ட பொருளும் இறைச்சியும்
தோற்றம் சான்ற அன்னவை பிறவும்
இளையோர்க்கு உரிய கிளவி என்ப.' தொல். பொ. 170

'உழைக்குறுந் தொழிலும் காப்பும்உயர்ந் தோர்க்கு.
நடக்கை எல்லாம் அவர்கண் படுமே.'
தொல். பொ. 171

முழுதும் — ந. அ. 98 94

## கண்டோர் தொழில்கள்

467 நீதுடைப் புலவி தீர்த்தலும் அவன்வரல்
காதலிக்கு உரைத்தலும் கண்டோர்க்கு உரிய.

இது கண்டோர்க்கு உரியன எல்லாம் தொகுத்து உணர்த்துகின்றது.

(இ-ள்) புலவி தீர்த்தல் முதலாகிய எல்லாம் கண்டோர்க்கு உரியனவாம் என்றவாறு. 95

### விளக்கம்

தலைவியின் புலவியை ஊடற்காலத்துத் தீர்த்தலும், பரத்தையின்பிரிவு ஒழித்து ஏனைய பிரிவுகளில் தலைவன் மீண்டு வருதலைத் தலைவிக்கு உணர்த்தலும் கண்டோர்க்கு உரிய செயல்களாம் என்றவாறு.

ஒத்த நூற்பா

முழுதும் — ந. அ. 99 96

## பார்ப்பனப் பாங்கன் தொழில்

468 இளமையும் யாக்கையும் வளமையும் ஏனவும்
நிலையாத் தன்மை நிலைஎடுத்து உரைத்தலும்
செலவுஅழுங்கு வித்தலும் செலவுஉடன் படுத்தலும்
பிறவும் எல்லாம் மறையோர்க்கு உரிய,

இஃது இருவகைப் பாங்கருள் பார்ப்பனப் பாங்கற்கு உரியன எல்லாம் தொகுத்து உணர்த்துகின்றது.

(இ-ள்) இளமை முதலாயினவும் அவைபோல்வன பிறவும் நிலையாத இயல்பின் நிலைமையை எடுத்துக்கூறலும், செலவு அழுங்குவித்தலும், செலவு உடன்படுத்தலும், பிறவும் எல்லாம் பார்ப்பனப் பாங்கற்கு உரியவையாம் என்றவாறு.
96

ஒத்த நூற்பாக்கள்

'காமநிலை உரைத்தலும் தேர்நிலை உரைத்தலும்
கிழவோன் குறிப்பினை எடுத்தனர் மொழிதலும்
மாவொடு பட்ட நிமித்தம் கூறலும்
செலவுறு கிளவியும் செலவு அழுங்கு கிளவியும்
அன்னவை பிறவும் பார்ப்பார்க்கு உரிய'.

தொல். பொ. 177

'மொழிஎதிர் மொழிதல் பாங்கற்கு உரித்தே'. ,, 182

'குறித்துஎதிர் மொழிதல் அஃகித் தோன்றும்'. ,, 183

முழுதும் — ந. அ. 100
96

## வேளாளப்பாங்கன் தொழில்

469 நன்மையின் நிறுத்தலும் தீமையின் அகற்றலும்
சொன்னவை பிறவும் சூத்திரற்கு உரிய.

இது சூத்திரப்பாங்கற்கு உரியன எல்லாம் தொகுத்து உணர்த்துகின்றது.

(இ-ள்) நன்மையின் நிறுத்தலும், தீமையின் விலக்கலும், மேற்கூறிப்போந்த பிறவும் சூத்திரப்பாங்கற்கு உரியனவாம் என்றவாறு.

சொன்னவையும் பிறவும் என்க. பிறவாவன வாயில் வேண்டல் முதலாயின.
97

### விளக்கம்

'பாங்கனோரின்' (இறை களா. 3) என்றதொடரால், முதல்முதல் இருவகைப்பாங்கர் இறையனார்களவியல் உரையிலேயே சுட்டப்படுகின்றனர்.

ஒத்த நூற்பா

முழுதும் — ந. அ. 101

97

## பாகன் தொழில்கள்

470 சேயிழைக் கிழத்தியை வாயில் வேண்டலும்
வாயில்நேர் வித்தலும் வயங்குதுனி தீர்த்தலும்
வினைமுடித் ததன்பின் வியன்பதி சேய்த்துஎன
இனையோற் றேற்றலும் பாகற்கு இயல்பே.

இது பாகற்கு உரியனஎல்லாம் தொகுத்து உணர்த்துகின்றது.

(இ–ள்) தலைமகனை வாயில்வேண்டல் முதலாகச் சொல்லப்பட்டன எல்லாம் பாகற்கு இயல்பாம் என்றவாறு. 98

### விளக்கம்

'கிழவி நிலையே வினைஇடத்து உரையார்
வென்றிக் காலத்து விளங்கித் தோன்றும்.'
தொல். பொ. 186

'வினைவயின் பிரிந்தோன் மீண்டுவரு காலை
இடைச்சுர மருங்கின் தவிர்தல் இல்லை.' ,, 194

இவ்விதிகளால் தலைவன் வினைமுற்றிய பிறகே தலைவியின் நினைவு மேலிட்டுச் சுரத்திடைக் காலம் தாழ்த்தாது மீண்டு வருதலை விரும்புவான் என்பதும், மீட்சிக்குப் பாகன் மிகவும் உதவுவான் என்பதும் கொள்க.

ஒத்த நூற்பா

முழுதும் — ந. அ. 102 98

## பாங்கி தொழில்கள்

471 பிரிவுழி விலக்கலும் பிரிவுஉடன் படுத்தலும்
பிரிவுழித் தேற்றலும் பிரிவுழி அழுங்கலும்
பிறவும் உரிய இறைவனைப் பாங்கிக்கு.

இது பாங்கிக்கு உரியன எல்லாம் தொகுத்து உணர்த்து கின்றது.

(இ-ள்) பிரிவுழிக்கலங்கல் முதலாகச் சொல்லப்பட்டன வும் பிறவும் எல்லாம் பாங்கிக்கு உரியனவாம் என்றவாறு.

பிற ஆவன வாயில்வேண்டல் முதலாயின. 99

விளக்கம்

தலைவிநலன் குறித்த எல்லாச் செயல்களும் தோழிக்கே முதற்கண் உரியன என்பது.

ஒத்த நூற்பா

முழுதும் — ந. அ 103
99

## செவிலி - அறிவர் - தொழில்கள்

472 முன்வரு நீதியும் முயங்கியல் முறையும்
பின்வரும் பெற்றியும் பிறவும் எல்லாம்
தேற்றெனக் கூறல் செவிலித் தாய்க்கும்
உற்ற அறிவர்க்கும் உரிய ஆகும்.

இது செவிலித்தாய்க்கும் அறிவர்க்கும் உரியன எல்லாம் தொகுத்து உணர்த்துகின்றது.

(இ-ள்) முன்வருநீதி முதலாகச் சொல்லப்பட்டனவும் பிறவும் எல்லாம் தெளியச்சொல்லுதல் செவிலித்தாய்க்கும் பொருந்திய அறிவர்க்கும் உரியனவாம் என்றவாறு.

பிறஆவன வாயில்வேண்டல் முதலாயின. 100

## விளக்கம்

இல்லற நெறிமுறை, தலைவியைக் கூடுதற்குரிய நன்னாட்கள், அதனால் பினனர் இல்வாழ்க்கை சிறக்கும் பெற்றி—முதலியகூறல், வாயில்வேண்டல் ஆகிய பலவும் செவிலித்தாய்க்கும் அறிவர்க்கும் உரியவாம் என்றவாறு.

## ஒத்த நூற்பாக்கள்

‘ கழிவினும் வரவினும் நிகழ்வினும் வழிகொள
நல்லவை உரைத்தலும் அல்லவை கடிதலும்
செவிலிக்கு உரிய ஆகும் என்ப ’. தொல். பொ. 153

‘ செவிலி கிளவி அறிவர்க்கும் உரிய ’. ,, 154

‘ இடித்துவரை நிறுத்தலும் அவரது ஆகும்
கிழவனும் கிழத்தியும் அவர்வரை நிற்றலின்’. ,, 155

‘ வருத்தம் மிகுதி சுட்டுங் காலை
உரித்துஎன மொழிப வாழ்க்கையுள் இரக்கம் ’. ,, 226

முழுதும் — ந. அ. 104

100

## காமக் கிழத்தியர் தொழில்கள்

473 குடிப்பிறந் தோரை வடுப்படுத்து உரைத்தலும்
மனைவியைப் பழித்தலும் வாடா ஊடலுள்
அனையவட் கழறலும் மனைவிக்கு அமைந்த
ஒழுக்கமும் காமக் கிழத்தியர்க்கு உரிய.

இது காமக்கிழத்தியர்க்கு உரியன எல்லாம் தொகுத்து உணர்த்துகின்றது.

(இ-ள்) குடிப்பிறந்தோரை வடுப்படுத்து உரைத்தல் முதலாகச் சொல்லப்பட்டன எல்லாம் காமக்கிழத்தியருக்கு உரியனவாம் என்றவாறு. 101

## விளக்கம்

நற்குடிமகளிரைக் குறைகூறுதலும், தலைவியைப் பழித்தலும், தலைவி ஊடல்கேட்டு அவளை இடித்து உரைத்தலும், மனைவிக்கு அமைந்த நற்பண்புகள் கோடலும் காமக்கிழத்தியர்க்கு உரியனவாம்.

## ஒத்த நூற்பாக்கள்

'புல்லுதல் மயக்கும் புலவிக் கண்ணும்
இல்லோர் செய்வினை இகழ்ச்சிக் கண்ணும்
பல்வேறு புதல்வர்க் கண்டுநனி உவப்பினும்
மறையின் தந்த மனையோள் செய்வினை
பொறையின்று பெருகிய பருவரற் கண்ணும்
காதல் சோர்வின் கடப்பாடு ஆண்மையின்
தாய்போல் தழீஇக் கழறிஅம் மனைவியைக்
காய்வின்று அவன்வயின் பொருத்தற் கண்ணும்
இன்னகைப் புதல்வனைத் தழீஇ இழைஅணிந்து
பின்னர் வந்த வாயிற் கண்ணும்
மனையோள் ஒத்தலின் தன்னோர் அன்னோர்
மிகைபடக் குறித்த கொள்கைக் கண்ணும்
எண்ணிய பண்ணைஎன்று இவற்றொடு பிறவும்
கண்ணிய காமக் கிழத்தியர் மேன'. தொல்.பொ 151
முழுதும் — ந. அ. 105
101

## பரத்தையர் தொழில்

474 கிழவோன் தன்னையும் கிழத்தி தன்னையும்
இகழ்தலும் தம்மைப் புகழ்தலும் நிகழ்பொருள்
காத்தலும் பரத்தையர் கடன்என மொழிப.

இது பரத்தையர்க்கு உரியன எல்லாம் தொகுத்து உணர்த்துகின்றது.

(இ-ள்) தலைமகனையும் தலைமகளையும் இகழ்தல் முதலாகச் சொல்லப்பட்டன எல்லாம் பரத்தையர் முறைமை என்று கூறுவர் ஆசிரியர் என்றவாறு.

இவற்றுள், கிழவோற் பழித்தலுக்குச் செய்யுள் :

கோடலஞ் செங்கைகால் லார்கொங்கை ஏற்றமென் கொங்கினுடன்
பாடலங் காவும் பருமணல் குன்றும் பயின்று நம்பால்
ஆடலும் பாடலுங் கண்டுங்கொண் டாடுவ தன்றியன்பின்
ஊடலும் கூடலும் உண்டுகொல்லோ பொய்கை ஊரனுக்கே.

அம்பி. 482

எனவும்,

தலைவியை இகழ்தற்குச் செய்யுள் :

தேமே குவளையுஞ் செந்நெலுங் கன்னலுஞ் சேரநன்னர்
ஆமேய் கழனி அகன்புனல் ஊரன் அகலமெல்லாம்
யாமே விரும்பினம் என்றெம்மை ஏசுவர்போலத் தம்மைத்
தாமே பழிப்பர் தலைவியர் தாமும் தனம்படைத்தே.

எனவும்,

பரத்தையர் தம்மைப் புகழ்தற்குச் செய்யுள் :

அரியார் விழிவஞ்சி ஆயமும் தானும் அகன்துறைவாய்
விரியார் நறுந்தொடை மன்புறம் காப்பினும் என்புறமே
புரியா தொழிகுவ னேலழி யாத புகழ்படையாக்
கரியார் திருவில் தரியாது உடைகளன் கைச்சங்கமே.

அம்பி. 476

எனவும் வரும்.

நிகழ்பொருள்காத்தற்கு உதாரணம் வந்துழிக் காண்க. 102

விளக்கம்

'கோடலஞ்செங்கை' — 'தலைவியரோடு கூடிய சுவட்டுடனே பாதிரிமரச் சோலைகளிலும் மணற்குன்றங்களிலும் பழகி நம்மிடையே ஆடலும் பாடலும் கண்டு பாராட்டுவதைத் தவிர, நம்மிடம் அன்போடு ஊடலும் கூடலும் நிகழ்த்துபவன் அல்லன் தலைவன்' என்றவாறு.

'தேமேகுவளையும்' —

'தலைவியர் தலைவரைக் கவர்ச்சி செய்வதற்குரிய தனங்களை உடையவராய் இருந்தும், செந்நெல்லையும் கரும்பையும் குவளையுடன் இடைதெரிபு இன்றி மாடுகள் மேயும் வயல்களை உடைய ஊரனுடைய மார்பினை யாமே விரும்பிக் கைப்பற்றினேம் என்று ஏசுவது தம்மைத்தாமே ஏசிக்கொள்வதேயாம்' என்றவாறு.

'அரியார்விழி' —

'தலைவி தலைவனைத் தன் ஆயத்தாரோடு புறம்போகாது காப்பினும், அவளைவிடுத்து என்னிடம் அவன் வாராது ஒழியின், கீழ்மக்கள் செல்வம்போல என் கை வளையல்கள் உடைபட்டுச் சிதைவன ஆகுக' என்றவாறு.

ஒத்த நூற்பா

முழுதும் — ந. அ. 106
102

## பரத்தையருக்கு உரிய வேறுபாடு

475 பரத்தையர் காதல் பரத்தையைப் புகழ்தலும்
தம்மை இகழ்தலும் தம்முளும் கூறுப.

இது பரத்தையர்க்கு உரியது ஒரு வேறுபாடு கூறுகின்றது.

(இ-ள்) காதல் பரத்தையைப் புகழ்தலும் தம்மை இகழ்தலும் தம்முள்ளேயும் கூறுவர் பரத்தையர் என்றவாறு.

பரத்தையர் காதல் பரத்தையைப் புகழ்ந்து தம்மை இகழ்தற்குச் செய்யுள் :

'திணைகாணும் நன்னிதி அன்னனைத் தன்வசம் செய்தவஞ்சி
துணைகாணும் மாமூலைத் தோற்றங்கண் டீர்அந்தத் தோன்றலம்பொன்
பணைகாணும் திண்புயம் புல்லாது வீணில் பருத்தகொங்கை
இணைகாள் உமக்கிந்த மேப்பா டுறுவ(து) இயல்பல்லவே.
எனவரும். 103

விளக்கம்

'திணைகாணும்' —

'தன் தனங்களால் தலைவனைத் தன்பக்கல் கவர்ச்சி செய்த காதல் பரத்தையின் தனங்களைக்கண்டும், அவன் மார்பினைக் கைப்பற்றித் தழுவும் ஆற்றல் அற்ற என் கொங்கைகளே! உமக்குக் கச்சினாலும் அணிகலன்களாலும் சிறப்புச் செய்து வைத்தேமாக அந்நலன்களால் நீயிர் மேம்படுவது தக்கதன்று' என்று சேரிப்பரத்தை தன் கொங்கைகளைப் பழித்தவாறு.

ஒத்த நூற்பா

முழுதும் — ந அ. 107
103

இளையர் இயல்

476 இளையர் கிழவோற்கு இரவும் பகலும்
களைதல் இல்லாக் கவயம் போல்வர்.

இது மேற்கூறிப்போந்த இளையர் ஆவார் இவர் என்கின்றது.

(இ-ள்) இளையர் ஆவார் தலைமகற்கு நீங்காக் கவசம் போலும் தன்மையர் இரவும் பகலும் என்றவாறு. 104

ஒத்த நூற்பா

முழுதும் — ந அ. 108

## பாங்கர் இயல்

477 இருவகைப் பாங்கரும் ஒருபெருங் குரிசிற்கு
இன்னுயிர்த் துணையாய் இருபெருங் குரவரும்
தம்வசப் படுத்த தன்மை யோரே.

இது பாங்கர் ஆவார் இவர் என்கின்றது.

(இ-ள்) பார்ப்பனப் பாங்கரும் சூத்திரப் பாங்கரும் எனும் இருதிறத்தோரும், தலைமகற்கு இனிய உயிர்துணை யாக அவன்தாயும் தந்தையும் அவனை அடைக்கலமாகக் கொடுக்கப்பட்ட தன்மையோர் என்றவாறு. 105

### விளக்கம்

இருமுது குரவராலும் 'இவனை எம்போலக் கொண்டு ஒழுகு' என்று தலைமகற்குக் காட்டிக் கொடுக்கப்பட்டான் பாங்கன் என்பதூஉம், 'நீயும் எம்போலத் தீயன கண்டு பண்பான இடத்து அடக்குவாயாக' என்று பாங்கற்குக் காட்டிக் கொடுக்கப்பட்டான் தலைவன் என்பதூஉம் கொள்க. இறை. கள. 3 உரை.

ஒத்த நூற்பா

முழுதும் — ந. அ. 109
105

## தோழி இயல்

478 தோழி செவிலி மகளாய்ச் சூழ்தலோடு
உசாத்துணை ஆகி அசாத்தணி வித்தற்கு
உரிய காதல் மருவிய துணையே.

இது தோழி ஆவாள் இவள் என்கின்றது.

(இ-ள்) தோழி என்பாள் செவிலிக்கு மகளாய் நன்மையும் தீமையும் ஆராய்தலுடனே தலைமகட்கு உசாத்துணையாய் அவளது வருத்தம் தீர்த்தற்கு உரிய அன்புபொருந்திய துணையாம் என்றவாறு. 106

ஒத்த நூற்பாக்கள்

‘தோழி தானே செவிலி மகளே.’ தொல். பொ. 125
‘சூழ்தலும் உசாத்துணை நிலைமையின் பொலிமே.’ 126
‘உறுகண் ஓம்பல் தன்இயல்பு ஆகலின்
உரியது ஆகும் தோழிகண் உரனே.’ 239
‘உயர்மொழிக் கிளவியும் உரியவால் அவட்கே.’ 240
‘வாயில் கிளவி வெளிப்படக் கிளத்தல்
தாவின்று உரிய தத்தம் கூற்றே.’ 241
முழுதும் — ந. அ. 110

106

## செவிலி இயல்

479 செவிலி நற்றாய் தோழி ஆகி
அவலம் நீக்கி அறிவும்ஆ சாரமும்
கொளுத்தித் தலைவியை வளர்த்த தாயே.

இது செவிலிஆவாள் இவள் என்கின்றது.

(இ-ள்) செவிலி என்பாள் தலைமகளுடைய நற்றாய்க்குத் தோழியாய்த் தலைமகட்கு வரும் குற்றங்களைக் களைந்து நல்லறிவும் ஆசாரமும் கொளுத்தித் தலைமகளை வளர்த்த தாய் என்றவாறு. 107

ஒத்த நூற்பாக்கள்

‘ஆய்பெருஞ் சிறப்பின் அருமறை கிளத்தலின்
தாய்எனப் படுவோள் செவிலி ஆகும்.’
தொல். பொ. 124
முழுதும் — ந. அ. 111

107

## அறிவர் இயல்

480 அறிவர் கிழவோன் கிழத்திஎன்று இருவர்க்கும்
உறுதி மொழிந்த ஒருபெருங் குரவர்.

இஃது அறிவர் ஆவார் இவர் என்கின்றது.

(இ-ள்) அறிவர் என்பார் தலைமகற்கும் தலைமகட்கும் உறுதியைப் பயக்கும் உபதேசங்களைச் சொன்ன மேம்பட்ட குரவர் ஆவார் என்றவாறு. 108

விளக்கம்

'மறுவில் செய்தி மூவகைக் காலமும், நெறியின் ஆற்றிய அறிவர்' எனவே அவரே குரவர் ஆதற்கு உரியார் என்பதாம்.

ஒத்த நூற்பா

முழுதும் — ந. அ 112
108

## காமக்கிழத்தியர் இயல்

481 ஒருவன் தனக்கே உரிமை பூண்டு
வருகுலப் பரத்தையர் மகளிர் ஆகிக்
காமக்கு வரைந்தோர் காமக் கிழத்தியர்.

இது காமக்கிழத்தியர் ஆவார் இவர் என்கின்றது.

(இ-ள்) காமக்கிழத்தியர் என்பார் சேரிப்பரத்தையர் போலப் பலருக்கும் உரியர் அன்றி, ஒருவற்கே உரிமைபூண்டு வருகுலப்பரத்தையர் மகளிர் ஆகி, காமம் காரணமாகத் தலைமகனால் வரைந்து கொள்ளப்பட்டார் என்றவாறு. 109

ஒத்த நூற்பா

முழுதும் — ந. அ. 113
109

## காதற் பரத்தையர் இயல்

482 யாரையும் நயவா இயல்பில் சிறந்த
சேரிப் பரத்தையர் மகளிர் ஆகிக்
காதலில் புணர்வோர் காதல் பரத்தையர்.

இது காதல் பரத்தையர் ஆவார் இவர் என்கின்றது.

(இ-ள்) காதல் பரத்தையர் என்பார் யாரையும் விரும்பாத இயல்பினுன் மிக்க சேரிப் பரத்தையருடைய மகளிராய்த் தம் விருப்பினுல் தலைமகனோடு கூடுவார் என்றவாறு. 110

விளக்கம்

பொருளை அன்றிப் பொருள்தருவாரைச் சேரிப்பரத்தையர் மனம் ஒன்றி விரும்பார் என்பதாம். சேரிப்பரத்தையர் மரபில் சிறந்தாள் தலைவற்குக் காமப்பரத்தை ஆவாள்.

ஒத்த நூற்பா

முழுதும் — ந அ. 114
110

## காதற்பரத்தையர் சிறப்பியல்

483 அவருளும் வரைதற்கு உரியோர் உளரே.

இது பரத்தையர்க்கு உரியதொரு சிறப்பு உணர்த்துகின்றது.

(இ-ள்) காதல் பரத்தையருள்ளும் உளர் தலைமகனுல் வரைந்து கோடற்கு உரியர் என்றவாறு. 111

விளக்கம்

எனவே, எல்லாக் காதற்பரத்தையரும் மணம்செய்து கோடற்கு ஏற்றவர் அல்லர் என்பதாம்.

கோவலற்கு அமைந்த மாதவி போல்வார் சிலரே என்பது.

ஒத்த நூற்பா

முழுதும் — ந. அ. 115 111

## துறவறம்காக்கும் காலம்

484 மக்களோடு மகிழ்ந்து மனைஅறம் காத்து
மிக்க காம வேட்கை தீர்ந்துழித்
தலைவனும் தலைவியும் தம்பதி நீங்கித்
தொலைவுஇல் சுற்றமொடு துறவறம் காப்ப.

இது தலைவனும் தலைவியும் துறவறம் காக்கும் காலம் உணர்த்துகின்றது.

(இ-ள்) மக்களொடு மகிழ்ந்து இல்லறத்தினைக் காத்துத் தமக்குப் பொருந்திய காமவேட்கை எல்லாம் தீர்ந்த காலத்துத் தலைமகனும் தலைமகளும் தம் ஊரின் நீங்கி வனத்தின்கண் சென்று எல்லைஇல்லாச் சுற்றத்தாரோடும் துறவறம் காப்பர் என்றவாறு. 112

### விளக்கம்

தலைவன் மனைவியோடு இருந்தே போகம் எல்லாம் துறந்து அனைத்துயிர்க்கும் செய்ய ஒண்ணுப் பெருந்தவங்கள் மிகப்புரிதற்கும் உரியனும் என்பது. எனவே, இல்லறத்தான் வானப்பிரத்தனுய்ப் பின் துறவியாய் வீடுபேற்றின்கண் முயறலே வாழ்க்கையின் முடிந்த முடிபு என்பதாம்.

### ஒத்த நூற்பாக்கள்

‘ காமம் சான்ற கடைக்கோட் காலை
ஏமம் சான்ற மக்களொடு துவன்றி
அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்
சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே.’
தொல். பொ, 192

இதனை ‘ அருளொடு புணர்ந்த அகற்சியானும்’

எனவும்,

‘ காமம் நீத்த பாலினும் ’

எனவும்,

அறவெற்றிகளுள் சிறந்த வெற்றிகளாகத் தொல்காப்பியனுர் புறத்திணையியல் வாகைத் துறைபற்றிய நூற்பாவின் இறுதியில் சுட்டியுள்ளார். தொல். பொ. 76 112

இதுகாறும் அகத்திணை பற்றிய பொதுச்செய்திகள் கூறப்பட்டன. இனி, களவு என்ற கைகோள் பற்றிய செய்தி விரித்துரைக்கப்படும்.

களவியற்செய்தி இவ்வியல் 113ஆம் நூற்பா முதல் 155ஆம் நூற்பா முடியக் கூறப்படுவது காண்க.

---

# களவியற் செய்தி

## களவு எனப்படுவது

485 அன்பின் ஐந்திணைக் களவுஎனப் படுவது
அந்தணர் அருமறை மன்றல் எட்டினுள்
கந்தருவ வழக்கம் என்மனார் புலவர்.

மேல் கூறிப்போந்த கைகோள் இரண்டனையும் விரித்து உணர்த்துவான் தொடங்கினவற்றுள், இது நிறுத்தமுறை யானே களவு என்னும் கைகோளது இலக்கணம் உணர்த்து கின்றது.

(இ-ள்) அன்பினுடைய ஐந்திணையுள் களவு எனப்பட்ட கைகோளாவது, பார்ப்பாரது அரிய வேத நூலிடத்து மகட் கோடலாறு எட்டனுள் கந்தருவநெறியோடு ஒப்பது என்று கூறுவர் அறிந்தோர் என்றவாறு.

அன்பாவது —

அடுமரம் துஞ்சுதோள் ஆடவரும் ஆய்ந்த
படுமணிப் பைம்பூ ணவரும் — தடுமாறிக்
கண்ணெதிர்நோக்கு ஒத்துஅவண் காரிகையில் கைகலந்து
உள்நெகிழச் சேர்வதாம் அன்பு. தொல். பொ. 92 ந.

என்பதனான் அறிக.

பிறர்க்கு உரியபொருள் என்று இருமுதுகுரவர் கொடை எதிர்ந்த தலைவியை அவர் கொடுப்பக் கொள்ளாது இருவரும் கரந்த உள்ளத்தொடு எதிர்ப்பட்டுப் புணர்ந்த களவு ஆதலின் பிறருக்கு உரியபொருளை மறையில் கொண்டு கைகுறைக்கவும் கால்குறைக்கவும் கழுஏற்றவும் பட்டுப் பழியும் பாவமும் ஆக்கி நரகத்தின் உய்க்கும் ஏனை உலகத்துக் களவுபோலாது, இது மேன்மக்களானும் புகழப்பட்டு ஞானஒழுக்கத்தோடு

ஒத்த இயல்பிற்றாய்த் துறக்கவிடுகளை முடிக்கும் என்பார் அச் சிறப்புத் தோன்றக் ‘களவு எனப்படுவது’ என்றார்; பிற ஊரி னும் சிறந்தது இவ்வூர் என்பார், ‘ஊர் எனப்படுவது உறை யூர்’ என்றாற்போல. அதனானே, ஈண்டுக் களவு என்றது வேதத்தை மறைநூல் என்றதுபோல நின்றது ஆயிற்று.

**வேதமாவன இருக்கு முதலியனவாம்.**

மன்றல் எட்டாவன, பிரமம் பிரசாபத்தியம் ஆரிடம் தெய்வம் காந்தருவம் அசுரம் இராக்கதம் பைசாசம் என் பனவாம்;

அறநிலை ஒப்பே பொருள்கோள் தெய்வம்
யாழோர் கூட்டம் அரும்பொருள் வினையே
இராக்கதம் பேய்நிலை என்றுஇக் கூறிய
மறையோர் மன்றல் எட்டுஇவை அவற்றுள்
துறைஅமை நல்லியாழ்த் துணைமையோர் இயல்புஇதன்
பொருண்மை என்மனார் புலமை யோரே. இறை. 1உரை

என்ப ஆகலின்.

அவற்றுள் பிரமமாவது- ஒத்த கோத்திரத்தானாய், நாற்பத் தெட்டு யாண்டு பிரமசரியம் காத்தாற்குப் பன்னிராட்டைப் பிராயத்தாளாய்ப் பூப்பு எய்தியவளைப் பெயர்த்து இரண்டாம் பூப்பு எய்தாமை அணிகலன் அணிந்து தானமாகக் கொடுப்பது,

கயல்ஏர் மலர்உண்கண் கன்னிப்பூப்பு எய்தி
அயல்பேர் அணிகலன்கள் சேர்த்தி — இயலின்
நிரல்ஒத்த அத்தணற்கு நீரில் கொடுப்பதே
பிரமமணம் என்னும் பெயர்த்து. தொல். பொ. 92 ந.

என்ப ஆகலின்.

[கன்னி பூப்பு எய்திப் போகத்துக்கு உரியாள் ஆக, அவ ளுக்கு அணிகலன்கள் அணிவித்து, மறைமொழிந்த ஆற்

ருனே, மகட்கோடற்கு ஏற்றவனுகிய அந்தணனுக்கு நீர் வார்த்து அவளைத் தானம் செய்து கொடுக்கும் மணம் பிரமமணம் ஆகும். இதனை அறநிலை என்று கூறுவர்.)

பிரசாபத்தியமாவது—மகட்கோடற்கு உரிய கோத்திரத்தார் கொடுத்த பரிசத்து இரட்டித் தம் மகட்கு ஈந்து கொடுப்பது;

அரிமலர் உண்கண் ஆயிழை எய்துதற்கு
உரியவன் கொடுத்த ஒண்பொருள் இரட்டி
திருவின் தந்தை திண்ணிதின் சேர்த்தி
அரியதன் கிளையோடு அமைவரக் கொடுத்தல்
பிரிதல் இல்லாப் பிரசா பத்தியம். தொல். பொ. 92. ந.

என்ப ஆகலின் .

[தன்மகளை மணம்செய்துகோடற்கு உரிய உறவினன் கொடுத்த பரிசத்தைப்போன்று இருமடங்குப் பொருளைப் பெண்ணின் தந்தை மகிழ்ச்சியோடு வழங்கித் தன் உறவினர் சூழ முறைப்படி மணம்செய்து கொடுப்பதே பிரசாபத்தியம். இஃது ஒப்பு எனவும் படும் ]

ஆரிடமாவது—தக்கோன் ஒருவற்கு ஆவும் ஆனேறும் பொற்கோட்டுப் பொற்குளம்பினவாகச் செய்து, அவற்றிடை நிறீஇப் பொன்அணிந்து நீரும் இவை போலப் பொலிந்து வாழ்வீர் என நீரில் கொடுப்பது;

தனக்குஒத்த ஒண்பொருள் தன்மகளைச் சேர்த்தி
மனைக்குஒத்த மாண்புஉடையாற் பேணி—இனக்குஒத்த
ஈரிடத்து ஆவை நிறீஇ,இடை ஈவதே
ஆரிடத்தார் கண்ட மணம். தொ. பொ. 92 ந.

என்ப ஆகலின்.

[தன் தகுதிக்கு ஏற்பத் தன்மகளுக்கு வரிசைகள் நல்கித் தகுதியான் ஏற்றவனை மணமகனுகத் தேர்ந்து, ஆவினுக்கும் ஆனேற்றினுக்கும் இடையே தன்மகளையும் மருமகன் ஆகற்

பாலனையும் நிறுத்தி அவனுக்குத் தன்மகளை நீர்வார்த்துத் தானம் செய்து கொடுப்பதே ஆரிட மணம் ஆகும். இது பொருள்கோள் எனவும்படும்.]

தெய்வமாவது—பெருவேள்வி வேட்பிக்கின்றுழி பலருள் ஒத்த ஒருவற்கு அவ்வேள்வித் தீ முன்னர்த் தக்கிணையாகக் கொடுப்பது;

நீளி நெடுநகர் நெய்பெய்து பாரித்த
வேள்வி விளங்கழல் முன்நிறீஇக் — கேள்வியால்
கைவைத்தாம் பூணுளைக் காமுற்றாற்கு ஈவதே
தெய்வ மணத்தார் திறம் தொல். பொ. 92 ந.

என்ப ஆகலின்,

[வேள்விக்கூடத்தில் நெய்யால் சுடர்விட்டு எரியும் வேள்வித் தீ முன்னர்த் தன்மகளை நிறுத்தித் தான்விரும்பிய தக்கோனுக்கு அவளை அவ்வேள்வித் தீ முன்னர்த் தானமாக வழங்குவதே தெய்வமணம் ஆகும்.]

அசுரமாவது—கொல்லேறு கோடல், திரிபன்றி எய்தல், வில்லேற்றுதல் முதலியன செய்துகோடல்;

முகைஅவிழ் கோதையை முள்எயிற்று அரிவையைத்
தகைநலம் கருதும் தருக்கினர் உளர்எனின்
இவைஇவை செய்தாற்கு எளியள்மற்று இவள்எனத்
தொகைநிலை உரைத்த பின்றைப் பகைவலித்து
அன்னவை ஆற்றிய அளவையின்
தொன்னிலை அசுரம் துணிந்த ஆறே
தொல். பொ. 92 ந.

என்ப ஆகலின்,

[இவ்வனப்புடைய மகளை மணந்துகோடற்கு விரும்புவார் இவ்விச்செயல்களைச் செய்து வெற்றி காண்டல் வேண்டும் என்று போட்டிஅமைத்த பின்னர், மற்றவர்கள் தோற்று

ஓட அவ்வீரச்செயலைப் புரிந்தார்க்கு அம்மகளை மணம்செய்து கொடுப்பதே அசுரம் ஆகும். இஃது அரும்பொருள்வினை எனவும் படும் ]

இராக்கதமாவது — தலைமகள் தன்னினும் தமரினும் பெருது வலிதிற் கொள்வது;

மலிபொற்பைம் பூணுளை மாலுற்ற மைந்தர்
வலிதிற்கொண்டு ஆள்வதே என்ப — வலிதின்
பராக்கதம் செய்துஉழலும் பாழி நிமிர்தோள்
இராக்கதத்தார் மன்றல் இயல்பு. தொ. பொ. 92 ந.

[பொற்பூண் அணிந்த நங்கையைக்கண்டு காம மயக்கம் கொண்ட ஆடவர் அவள் இசைவும் பெருது அவளை வலிதின் கைப்பற்றிக் கொண்டு சேறல், பிறர்பொருளைத் தம் தோள்வலிமையால் கைப்பற்றித்திரியும் இராக்கதர் தம் மணம் ஆகும்.]

பைசாசமாவது — மூத்தோர் களித்தோர் துயின்றோர் புணர்ச்சியும், இழிந்தோளை மணம்செய்தலும், ஆடை மாறுதலும் பிறவும் ஆம்;

எச்சார்க்கு எளியர் இயைந்த காவலர்
பொச்சாப்பு எய்திய பொழுதுகொள் அமையத்து
மெய்ச்சார்பு எய்திப, மிகுபுகழ் நண்பின்
உசாவார்க்கு உதவாக் கேண்மைப்
பிசாசர் பேணிய பெருமைசால் இயல்பே.
தொல். பொ. 92. ந

எனவும்,

இடைமயக்கம் செய்யா இயல்பினின் நீங்கி
உடைமயக்கி உட்கறுத்தல் என்ப — உடையது

உசாவார்க்கு உதவாத ஊனிலா யாக்கைப்
பிசாசத்தார் கண்ட மணப் பேறு. தொல். பொ. 92. ந.

எனவும் கூறுப ஆகலின்.

[பொருந்திய காதலினாலே எத்தகைய சார்தலுக்கும் எளியோராகித் தாம் விரும்பிய மகளிர் அயர்ந்த செவ்வி பார்த்து அவர் மெய் தீண்டி இன்புறும், நண்பரையும் கலந்து ஆலோசியாத காமத்தொடர்பு பிசாசர் மணம் ஆகும்.

ஆடவருக்கு உரிய பெருமையும் உரனும் ஆகிய இயல் பின் நீங்கி, இடையே மனமயக்கம் கொண்டு, தீயன செய் தற்கண் அஞ்சுதலைத் தவிர்ந்து, பெண் உடைகண்ட அளவில் மயக்கம்கோடல், தம்மிடத்துள்ளதை நண்பர்களின் தேவைக்கு உதவாத, என்புடம்பு உடைய பசாசம் போல் வார் கைக்கொள்ளும் பசாசமணம் ஆகும்.]

இனிக் கந்தர்வமாவது, கந்தர்வகுமாரரும் கன்னியரும் தம்முள் எதிர்ப்பட்டுப் புணர்வது;

அதிர்ப்பில்பைம் பூணாரும் ஆடவரும் தம்முள்
எதிர்ப்பட்டுக் கண்டியைதல் என்ப – கதிர்ப்பொன்யாழ்
முந்துஇருவர் கண்ட முனிவுஅறு தண்காட்சிக்
கந்தருவர் கண்ட கலப்பு தொல். பொ. 92 ந.

என்ப ஆகலின்.

[மகளிரும் மைந்தரும் தம்மில் எதிர்ப்பட்ட அளவில் உள்ளப்புணர்ச்சி உற்றுப் பின் மெய்யுறு புணர்ச்சி கோடல் யாழினை உடைய கந்தருவர் கண்ட வெறுப்பற்ற மேதக்க காட்சியினை உடைய கந்தருவர் கண்ட மணம் ஆகும்.]

மாலைசூட்டல் யாதனுள் அடங்கும் எனின், அதுவும் ஒத்த அன்பினராய் நிகழ்தலின் கந்தருவப்பாற்படும்.

இவற்றுள், அசுரம் முதலிய மூன்றும் கைக்கிளைக்கு உரியவாம்; பிரமம் முதலிய நான்கும் பெருந்திணைக்கு உரியவாம்;

'முன்னைய மூன்றும் கைக்கிளைக் குறிப்பே
பின்னைய நான்கும் பெருந்திணை பெறுமே'
தொல். பொ. 105

என்ப ஆகலின்.

களவொழுக்கம் பொதுஆகலின் நான்கு வருணத்தார்க்கும் ஆயர் முதலியோர்க்கும் உரித்து. வில்லேற்றுதல் முதலியன பெரும்பான்மை அரசர்க்கு உரித்து; அவற்றுள் ஏறு தழுவல் ஆயர்க்கே சிறந்தது. இராக்கதமணம் அந்தணர் ஒழிந்தோர்க்கு உரித்து; வலிதின்பற்றிப் புணர்தலின் அரசர்க்கும் இது பெருவரவிற்று அன்று. பேய்நிலை இழிந்தோர்க்கே உரித்து. இக்களவுஒழுக்கம் வேதமுடிபு என்பார்,

'அந்தணர் அருமறை மன்றல் எட்டினுள்
கந்தருவ வழக்கம்' என்றார்.

கந்தருவ வழக்கத்தோடு ஒத்த வழக்கினைக் கந்தருவ வழக்கம் என்றது உபசார வழக்கு. 113

விளக்கம்

மேல் கூறிப்போந்த என்பது ''அளவுஇல் இன்பத்து' இ. வி. பொ. 24 என்ற நூற்பாவினைச் சுட்டுகிறது.

மறை ஆகிய வேதம் பிறரால் எளிதின் அறியப்படாதது. அதுபோலப் பிறரால் எளிதின் அறியப்படாது நிகழ்ந்த புணர்ச்சி களவு எனப்பட்டது.

'அடுமரம் துஞ்சுதோள்' —

வலிய தோள்களை உடைய ஆடவரும் நல்லணி அணிந்த மகளிரும் மனம் தடுமாறி இருவர் நோக்கமும்

அவரவர் உள்ளத்துப் புணர்ச்சி விழையும் குறிப்பினை உணர்த்தவே, மனம் நெகிழ்ந்து தலைவன் தலைவியைக் கூடுதலே அன்பாகும் என்பது.

ஏனைய உலகத்துக் களவுகள் ஒறுத்தலைப் பயப்பவும், இது, மேன்மக்களானும் புகழப்பட்டு வானோர் உலகமும் வானோர்க்கு உயர்ந்த உலகமும் வழங்கும் என்பது கருதிக் 'களவு எனப்படுவது' என முதல் வேற்றுமைச் சொல்லுருபு பெய்து கூறப்பட்டது.

'களவு எனப்படுவது' என்பதன் விளக்கம் இறையனார் அகப்பொருள் முதல்நூற்பா உரைகொண்டு வரையப்பட்டது.

எண்வகை மணங்களின் விளக்கம் தொல்காப்பியப் பொருட்படல 9.-ஆம் நூற்பாவில் நச்சினார்க்கினியர் வரைந்தனவே.

அசுரம் இராக்கதம் பைசாசம் மூன்றும் கைக்கிளை ஆமாறு— 'வில்லேற்றியாயினும் கொல்லேறு தழீஇ யாயினும் கொளவன்' என்னும் உள்ளத்தன் ஆலான் தலைவனே ஆதலின், அதனை முற்படப்பிறந்த அன்பு முறைபற்றி ஒரு தலைக்காமம் ஆகிய கைக்கிளை என்றார். இராக்கதம் வலிதின் மணம் செய்தலாகலின், அதுவும் அப்பாற்படும்; பேயும் அப்பாற்படும்.

பிரமம் முதலிய நான்கும் ஒருதலைக்காமம் பற்றி நிகழாமையானும், ஒருவனோடு ஒருத்தியை எதிர்நிறீஇ அவர் உடன்பாட்டோடு புணர்க்கும் கந்தருவம் அன்மையானும் அவற்றின் வேறாகிய பெருந்திணையாம்.

கந்தருவ வழக்கமாவது நேர்ந்தவழிக் கூடித் தீர்ந்தவழி மறப்பதாம்; இக்களவோ பிரியாது உடன்வாழ்தல் இன்றேல் தரியாது உயிர்நீத்தல் என்னும் இயல்பிற்றாகலின், தாமே தனியிடத்து உளம்ஒன்றிக் கூடுதலாகிய ஒருபுடை ஒப்புமையேபற்றிக் கந்தருவ வழக்கத்தை ஒப்பதாம் என்பது.

ஒத்த நூற்பாக்கள்

'இன்பமும் பொருளும் அறமும் என்றாங்கு
அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கின்
காமக் கூட்டம் காணுங் காலை
மறையோர் தேஎத்து மன்றல் எட்டனுள்
துறைஅமை நல்லியாழ்த் துணைமையோர் இயல்பே'.
தொல். பொ. 92

'களவு எனப் படுவது யாதுஎன வினவின்
வளைகெழு முன்கை வளம்கெழு கூந்தல்
முளைஎயிற்று அமர்நகை மடநல் லோளொடு
தளைஅவிழ் தண்தார்க் காமன் அன்னோன்
விளையாட்டு இடம்என வேறுமலைச் சாரல்
மான்இனம் குருவியொடு கடிந்துவிளை யாடும்
ஆயமும் தோழியும் மருவிநன்கு அறியா
மாயப் புணர்ச்சி என்மனார் புலவர்'. ,, 92 நச். மேற்.

முழுதும் — இறை. அக. 1

'உளம்மலி காதல் களவுஎனப் படுவது
ஒருநான்கு வேதத்து இருநான்கு மன்றலுள்
யாழோர் கூட்டத்து இயல்பினது என்ப'. ந. அ. 117

'முந்திய நூலோர் மொழிந்தஎண் மணத்தினும்
கந்திருவ முறைமை களவுஎனப் படுமே'.
த நெ. வி. 14

'அவற்றுள், களவுஅந் தணர்மறை மன்றல்
எட்டனுள் யாழோர் இயல்பினது ஆகும்'.
மு. வீ. கள. 2

113

கைக்கிளை வகை

486 காட்சி ஐயம் துணிவுகுறிப்பு அறிவுஎன
மாட்சியின் நான்கு வகைத்தே கைக்கிளை.

இது மெய்க்கிளை யாழோர் வேண்டும் புணர்ச்சி முன் நிகழ்வதாகிய மேற்கூறிய கைக்கிளைப்பகுதி கூறுகின்றது.

இ-ள்: காட்சி முதலாகச் சொல்லப்பட்ட மாட்சியை உடைய நான்கு வகையினை உடைத்து, நற்காமத்திற்கு உரிய கைக்கிளை என்றவாறு. 114

ஒத்த நூற்பாக்கள்

'முன்னைய நான்கும் முன்னதற்கு என்ப.'

தொல். பொ. 52

முழுதும் — ந அ. 118

'காண்டல் சந்தயம் தெளிதல் கருத்துஉறல் என்று
ஆண்ட நால் வகைத்தே அழகுஉடைக் கைக்கிளை'.

மா. அ. 6

'காட்சி ஐயம் தெளிதல் நயப்பே
உட்கோள் தெய்வம் துணிதல் கைக்கிளை.' மு.வீ.கள.7

114

காட்சி இலக்கணம்

487 ஒன்றே வேறே என்றுஇரு பால்வயின்
ஒன்றி உயர்ந்த பாலது ஆணையின்
ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப
மிக்கோன் ஆயினும் கடிவரை யின்றே.

இது மேற்கூறிய கைக்கிளைப் பகுதியுள் நிறுத்த முறையானே காட்சியது இலக்கணம் உணர்த்துகின்றது.

(இ-ள்) உம்மைப் பிறப்பினும் காழும்நுகர்ந்தார் இருவரையும் மறுபிறப்பினும் ஒன்றுவித்தலும் வேருக்கலுமாகிய இருவகை ஊழினுள், இருவரையும் ஒன்றுவித்து உயர்தற்கு ஏதுவாகிய ஊழினது ஆணையாலே மேல் கூறும் பிறப்பு முதலாயின பத்தும் ஒத்த தலைவனும் தலைவியும் எதிர்ப்படு

வர், அவ்வாறு எவ்வாற்ருனும் ஒவ்வாது பிறப்புக் கல்வி பருவம் முதலிய சிலவற்ருல் தலைவன் மிகுந்தான் ஆயினும் அம்மிகுதி பற்றிக் கடிதல் கடிதலின்று என்றவாறு.

எனவே, இவற்றுள் யாதொன்ருயினும் தலைவி மிக்காள் ஆயின் அம்மிகுதிபற்றி அவனைக் கடிதல் கடிதலுடைத்து என்றவாரும். 'உயர்ந்தபால்' என்பது நோய்தீர்ந்த மருந்துபோல உயர்ந்ததன் மேல் செல்லும் மனநிகழ்ச்சிக்கு ஏதுவாய் இருந்த பால் என ஏதுப்பொருட்டாய் நின்றது, அதனது ஆணையால் இழிந்ததன்மேல் சேறல் இன்ருகலின்.

கிழவன் கிழத்தி எனவே, பலபிறப்பினும் ஒருவர்க்கு ஒருவர் உரிமைபூண்டு நின்றமையும் பெற்ரும்.

'காண்ப' எனப்பொதுப்படக் கூறிய அதனனே, இரு வர்க்கும் பொதுவாகிய ஒருநிலத்தும் ஒருவர்க்குச் சிறந்த வேற்று நிலத்தும் காண்பர் எனக்கொள்க. ஈண்டு நிலம் என்றது, அவ்வொழுக்கத்திற்குச் சிறந்த குறிஞ்சித்திணைக்கு உரிய வரையும் வரைசார்ந்த இடமும் எனக்கொள்க.

இவன் இவள் ஐம்பால் பற்றவும் அவள்இவன்
புன்தலை ஓரி வாங்குநள் பரியவும்
காதல் செவிலியர் தவிர்ப்பவும் தவிராது
ஏதில் சிறுசெரு உறுப மன்னே
நல்லைமன்ற அம்ம பாலே! மெல்லியல்
துணைமலர்ப் பிணையல் அன்ன இவர்
மனம்மகிழ் இயற்கை காட்டி யோயே'.

குறுந், 229

இஃது ஓர்ஊர் என்பதாம்.

'இலங்கும் அருவித்தே இலங்கும் அருவித்தே
வானின் இலங்கும் அருவித்தே தான்உற்ற
சூள்பேணுன் பொய்த்தான் மலை. கலி-41

என்புழிப் பொய்த்தவன் மலையும் இலங்கும் அருவித்து என வியந்து கூறித் தம்மலைக்கு நன்றி இயல்பு என்றலின், இது வரை வேறு என்பதாம். பிறவாறு வருவன உளவேல், அவையும் ஈண்டே அமைத்துக்கொள்க.

விளக்கம்

[இந்நூற்பா தொல்காப்பியப் பொருட்படலத்து 93ஆம் நூற்பா. இதன் உரை பெரும்பான்மையும் நச்சினார்க்கினியத்தையும் சிறுபான்மை உரையாசிரியத்தையும் ஒட்டி வரையப்பட்டுள்ளது.

தலைவன் தலைவியரை மறுபிறப்பினும் ஒன்றுவிக்கும் ஊழ் எனவும், வேறாக்கும் ஊழ் எனவும் இருவகைப்படும் ஊழினுள் ஒன்றுவிக்கும் ஊழே ஈண்டுக் கொள்ளப்படுவது.

உயர்ந்தபால்—உயர்தற்குக் காரணம் ஆகிய பால் எனப் பெயரெச்சம் காரணப் பொருட்டாய் நின்றது; நோய் தீர்ந்த மருந்து – நோய்தீர்தற்குக் காரணம் ஆகிய மருந்து என்று பொருள்படுமாறுபோல.

'இவன் இவள்' —

குழந்தைப்பருவத்தில் செவிலியர் விலக்கவும் விலகாது கலாய்த்துத் தலைமயிரைப் பிடித்துக்கொண்டு சிறு கலாம் விளைத்தார் இருவர், இரட்டைமலர்கள் பிணைத்துக் கட்டப்பட்ட மாலைபோல மனம் மகிழ்ந்த தலைவன் தலைவியர் ஆயினர் என்று கூறலின், இருவரும் ஒரே நிலத்தவர் ஆதல் பெறப்படுகிறது.

சூள்பொய்த்த தலைவன்மலையில் அருவிநீர் ஓடுகிறது என அவுன் மலையை வேறுபடுத்திக் கூறியமையின், இருவரும் வெவ்வேறு இடத்தவர் ஆதல் பெறப்படுகிறது.

நச்சினார்க்கினியர் உரை :

' தலைவன் மிக்கோன் ஆயினும் கடிவரையின்றே '.

என்ற கூற்றை விளக்கும்.]

இக்களவொழுக்கம் கொடுப்போரும் அடுப்போரும் இன்றித் தாமே தனிஇடத்து எதிர்ப்பட்டுப் புணரும் கந்தருவத்தோடு ஒக்கும் என்றலின், இருவரும் அவ்வாறு ஓரிடத்தும் வேறுஇடத்தும் காண்புழித் தனித்துக்காண்பர் என்பதூஉம் பெற்றும்.

பெறவே, இருவரும் முட்டில் செல்வத்தர் ஆதலின் தலைவனும் கறங்கும் கந்துகத்தேர்ஏறி எறிபோத்தும் கருங்கண்யானையும் தறுகட்பன்றியும் கருவரையும் இருநிலனும் பெருவிசும்பும் அனையார், ஆளிமொய்ம்பினர் அரிமான்துப்பினர், பற்பல் நூருயிரவர் கூர்வேல் இளைஞர் தற்சூழ, வேட்டை விருப்பால் செல்வான் என்பது முடிந்தது.

தலைவியும் உடன்பிறந்து உடன்வளர்ந்து நீர்உடன் ஆடிச் சீர்உடன்பெருகி ஓல்உடன் ஆட்டப் பால்உடன் உண்டு பல்உடன்எழுந்து சொல்உடன் கற்றுப் பழைமையும் பயிற்சியும் பண்பும் நண்பும் விழுப்பமும் ஒழுக்கமும் மாட்சியும் உடையார் பற்பல் நூருயிரவர், கண்ணும் மனனும் கவரும் ஒள்நுதல் மகளிர் தற்சூழ, தாரகை நடுவண் தண்மதிபோலப் பொழில்விளையாட்டு விருப்பால் செல்வாள் என்பது முடிந்தது.

முடியவே, தனித்துக் காண்டல் முடியாது எனின், முடியும்; என்னை ? அவள் ஆயங்களும் பொழில்இடம் புகுதலும், விளையாட்டு விருப்பினால் ஒவ்வொருவரின் முன்னம் ' தழை விழைந்தன கொடுத்தும் ' என்றும், ' கண்ணரி தண்ணறு நாற்றத்தன செய்தும் ' என்றும், ' போது மேதக்கன

கொய்தும்' என்றும், 'மயிலொடு மாறு ஆடுதும்' என்றும், 'குயிலொடு மாறு கூறுதும்' என்றும், 'அருவிஆடி அம் சுனை குடைகுதும்' என்றும், 'வாசமலர்க் கொடியின் ஊசல் ஆடுதும்' என்றும் பரந்து அப்பாலார் இப்பால் உள்ளாள் கொல்லோ ?' என்றும், இப்பாலார் 'அப்பால் உள்ளாள் கொல்லோ ?' என்றும் இவ்வகை நினைத்துப் பிரிவர் என்க.

இவ்வகைத் தமியளாகப் பிரிவரோ எனின், எட்டியும் சுட்டியும் காட்டப்படும் குலத்து உள்ளாள் அல்லாள் ஆத லானும், பான்மை அவ்வகைத்து ஆதலானும் பிறவாறு நினையார் பிரிவர் என்க.

ஆயின், இவ்வகைப்பட்ட ஆயத்திடை மேனாள் பிரிந்து அறியாதாள் தமியளாய் நிற்குமோ எனின், நிற்கும்; தான் பயின்ற இடமும் தன்ஆயத்தோடு ஒக்கும் ஆகலான். யாங் கனம் நிற்குமோ எனின், சந்தனமும் சண்பகமும் தேமாவும் தீம்பலாவும் ஆசினியும் அசோகமும் கோங்கமும் வேங்கை யும் குரவமும் விரிந்து, நாகமும் திலகமும் நறவும் நந்தியும் மாதவியும் மல்லிகையும் மௌவலொடு மணம் கமழ்ந்து, பாதிரியும் பாவைஞாழலும் பைங்கொன்றையொடு பிணி அவிழ்ந்து, பொரிப்புன்கும் புன்னாகமும் முருக்கினொடு முகை திறந்து, வண்டுஅறைந்து .தேன்ஆர்த்து, வரிக்குயிலினம் வரிபாடச் சிறுதென்றல் இடைவிராய்த் தனியவரை முனிவு செய்யும்பொழில்துன்றி, அவணதோர் மாணிக்கச் செய்குன் றின்மேல் விசும்புதுடைத்துப் பசும்பொன் பூத்து வண்டு துவைப்பத் தண்தேன் துளிப்பதொரு வெறியுறும் நறுமலர் வேங்கைகண்டாள்; கண்டு, பெரியதொரு காதல் களிகூரத் தன்செம்மலர்ச் சீறடிமேல் சிலம்புகிடந்து சிலம்பு புடைப்ப அம்மலர் அணிகொம்பர் நடைகற்பது என நடந்துசென்று, நறுவிய வேங்கை நாள்மலர் கொய்தாள்; கொய்தஇடத்து, மரகதவிளிம்பு அடுத்த மாணிக்கச்சுனை மருங்கின் ஒருமாதவி வல்லிமண்டபத்தில் போதுவேய்ந்த பூநாறு பொழில் நிழற் றக் கடிக்குருக்கத்திக் கொடிப் பிடித்துத் தகடுபடு பசும்

பொன் சிகரங்களின் முகடுதொறும் ஞான்றுவந்து இழியும் மணிஅருவி பொன்கொழித்து மணிவரன்றி மாணிக்கத்தோடு வயிரம் உந்தி அணிகிளர் அருவி ஆடகப் பாறைமேல் அதிர் குரல் முரசின் இரட்ட, வண்டும் தேனும் யாழ் முரல, வரிக் குயிலும் கிளியும்பாட, தண்தாது தவிசுபடப் போர்த்த தொரு பளிக்குப்பாறை மணித்தலத்துமிசை ஆலவட்டம் விரித்தாற்போலத் தன்கோலக் கலாபம் விரித்து, இளஞாயிற் றின் எறிகதிர் எறிப்ப, ஓர் இளமயில் ஆடுவதுகண்டு நின் றுள் என்க.

அப்பால், தலைவனும் பற்பல் நூறுயிரவர் கூர்வேல் இளைஞரொடு குளிர்மலைச்சாரல் வேட்டம்போய் விளையாடு கின்றான், ஆண்டு எழுந்தவொரு கடமானின் பின் ஓடிக் காவல் இளைஞரைக் கையகன்று, நெடுமான் தேரொடு பாகனை நிலவுமணல் கான்யாற்றில் நிற்கச்செய்து, தொடுகழல் அடி அதிரச் சுருள்இருங்குஞ்சி பொன் நாணில் பிணித்துக்கட்டிக் கமழ் நறுங் கண்ணிக்கண் வண்டு மணம் அயர, அஞ்சாற் றின் நறுநாற்றம் தண்பொழிலிடைப் பரந்து நாற, வரிசிலை எதிர்கணை ஏந்தி வடிவுகொண்ட காமன்போலச் சென்று அவள் நின்ற இரும்பொழில் புகும். அஃது யாங்கனமோ எனின், வடகடல்இட்ட ஒருநுக ஒருதுளை தென்கடல்இட்ட ஒருகழிசென்று கோத்தாற்போலவும், வெங்கதிர்க் கனலியும் தண்கதிர் மதியமும் தம்கதி வழூவித் தலைப்பெய்தாற்போல வும் புகும் என்க. அதனால் ஒருவர் ஒருவரைத் தலைப்பெய்து காண்பர் என்பது.

' அதுவே,
தானே அவளே தமியர் காணக்
காமப் புணர்ச்சி இருவயின் ஒத்தல்'. இறை. அக. 2

என்றார் ஆசிரியர் இறையனாரும் எனக்கொள்க.

[தலைவனுடைய தோழர் இயல்பு, தலைவியின் தோழியர் இயல்பு, தலைவன் வேட்டை புகுதல், தலைவி தோழியருடன் சோலைபுகுதல், தோழியர்தம்செயல், தலைவி தனித்து இருத்

தல், சோலைவளம், தலைவி மலர்கொய்தல், தலைவன் வேட்டைக்கண் தோழரைப் பிரிந்து தனியன் ஆதல், தலைவி இருந்த பொழில் புகுதல் பற்றிய இச்செய்திகள் இறையனார் அகப்பொருள் இரண்டாம் நூற்பா உரையில் உள்ளன. இப்பண்டைய உரைநடை சுவைத்து இன்புறத்தக்கது.

'தெண்கடல் இட்டதோர் திருமணி வான்கழி
வடகடல் நுகத்துளை வந்துபட் டாஅங்கு
.... .... .... .... .... ....
மதியமும் ஞாயிறும் கதிதிரிந்து ஓடிக்
கடல்நிற விசும்பின் உடன்நின் றாஅங்கு'.

பெருங். உஞ். 32

என்ற பெருங்கதை அடிகள் உளம்கொளத் தக்கன.

இங்ஙனம் கூறிப்போந்த காட்சிக்குச் செய்யுள் :

'திருவளர் தாமரை சீர்வளர் காவிகள் ஈசர்தில்லைக்
குருவளர் பூங்குமிழ் கோங்குபைங் காந்தள்கொண்டு ஓங்குதெய்வ
மருவளர் மாலைஓர் வல்லியின் ஒல்கி அனநடைவாய்ந்து
உருவளர் காமன்தன் வென்றிக் கொடிபோன்று ஒளிர்கின்றதே'.

திருக்கோவை-1

எனவரும்.

இக்காட்சிக்கண் தலைவனைப் போலத் தலைவியும் அவனை வியந்து கூறுதல் வேண்டுமால் எனின், அது புலனெறி வழக்கு அன்று எனமறுக்க. 115

விளக்கம்

'திருவளர் தாமரை'—

'தாமரை காவிகள் குமிழ் கோங்கு காந்தள் என்ற ஐந்து நிலப்பூக்களாலும் தொடுக்கப்பட்ட மாலைபோன்ற நங்கை, கொடிபோல அசைந்து அன்னம்போல நடந்து காமன் வெற்றிக்கொடி போலக் காட்சி வழங்குகிறாள்' என்று தலைவியைக் கண்ட தலைவன் சொற்றது.

தலைவனைப் போலத் தலைவி வியத்தல் புலனெறி வழக்கு அன்று எனினும் உலகியலில் நிகழும் என்பது,

‘ முன்னேவந்து எதிர்தோன்றும் முருகனோ பெருகுஒளியால்
தன்நேர்இல் மாரனோ தார்மார்பின் விஞ்சையனோ ’

என்று சுந்தரரைப் பரவையார் கண்டு வியந்த திருத்தொண்டர் புராணச் செய்தியான் அறிக.

‘நம்பி, எண்ணின் மற்று யாவன் ஆங்கொல்’ என்று காந்தருவதத்தை சீவகனை வியந்து ஐயுற்றதும் உலகியலாம். இவை கந்தருவத்துட்பட்டு வழுவிய உலகியலாம் என்பது அறிக.

ஒத்த நூற்பாக்கள்

‘ முதலொடு புணர்ந்த யாழோர் மேன
தவல்அருஞ் சிறப்பின் ஐந்நிலம் பெறுமே ’.
தொல். பொ. 106

‘ கிழவோன் அறியா அறிவினள் இவள்என
மையறு சிறப்பின் உயர்ந்தோர் பாங்கின்
ஐயக் கிளவி அறிதலும் உரித்தே ’. „ 117

‘ முழுதும் — „ 93

‘ தானே அவளே தமியர் காணக்
காமப் புணர்ச்சி இருவயின் ஒத்தல் ’. இறை. அக 2

‘ புணர்ப்பதும் பிரிப்பதும் ஆகிய பால்களுள்
புணர்க்கும் பாலின் பொருஇறந்து ஒத்த
கறைவேல் காளையும் கன்னியும் காண்ப
இறையோன் உயரினும் குறைவுஇன்று என்மனார் ’.
ந. அ. 119

‘ நிலம்வேறு ஒன்றுஎனும் நிலைமையர் ஆகி
குலன்நலன் திருஉரு குறிக்கொளின் ஒன்று
இறைவனும் இறைவியும் இருமையும் தொடர்ந்த

முறைபயில் பான்மை மூதுடை முதல்வன்
ஏவலின் கண்ணுறும் இயற்கை காட்சி
காவலன் உயரினும் கடிநிலை இலவே'. மா. அ. 7
118

## பத்துவகை ஒப்புக்கள்

488 பிறப்பே குடிமை ஆண்மை ஆண்டோடு
உருவு நிறுத்த காம வாயில்
நிறையே அருளே உணர்வோடு திருஎன
முறையுறக் கிளந்த ஒப்பினது வகையே.

மேல் ஒத்த கிழவனும் கிழத்தியும் என்றார், இஃது அவ் வொப்பின் பாகுபாடு கூறுகின்றது.

(இ-ள்) ஒத்த பிறப்பு முதலிய பத்துவகையினை உடைய; மேல் நெறிப்படக்கூறிய ஒப்பினது பாகுபாடு என்றவாறு.

பிறப்பு—குடிப்பிறத்தல்; குடிமை—அதற்குத்தக்க ஒழுக்க முடைமை; ஆண்மை—ஆள்வினை; ஆண்டு—பெண்மையும் ஆண்மையும் பிறக்கும் பன்னீராண்டும் பதினாறாண்டும் ஆகிய பருவம்; உருவு-பெண்மைவடிவும் ஆண்மை வடிவும் பிறழ்ச்சி யின்றி அமைந்த வனப்பு; நிறுத்த காமவாயில்-நிலைநிறுத் தப்பட்ட புணர்ச்சிக்கு வாயிலாகிய அன்பு; நிறை — மறை பிறர் அறியாமை நெஞ்சினை நிறுத்துதல்; அருள் — பிறர் வருத்தத்திற்குப் பரியும் கருணை; உணர்வு—உலகியலால் செய்யத் தகுவது அறிதல்; திரு—செல்வம். 116

## விளக்கம்

உரை இந்நூற்பாவிற்குப் பேராசிரியர் வரைந்த உரை யையே பெரும்பான்மையும் தழுவியுள்ளது.

அவர், திரு என்பதற்குப் 'பொருள் உடைமையும் பொருள்கொண்டு துய்த்தலும்இன்றி, எஞ்ஞான்றும் திருத் தகவிற்று ஆயது ஓர் உள்ள நிகழ்ச்சி' என்று கூறியஉரையை

இவர் விடுத்தது வியப்பைத் தருகிறது. இல்லறத்திற்கு இத்தகைய திரு இன்றியமையாதது என்பது,

‘ கொண்ட கொழுநன் குடிவறன் உற்றெனக்
கொடுத்த தந்தை கொழுஞ்சோறு உள்ளாள்
ஒழுகுநீர் நுணங்கு அறல் போலப்
பொழுதுமறுத்து உண்ணும் சிறுமது கையளே ’.
நற். 110

என்ற பழம்பாடலானும் உணரப்படும்.

ஒத்த நூற்பா
‘ முழுதும் ’— தொல். பொ. 273

116

## ஐயம் ஏற்படும் இடம்

489 மடமான் நோக்கி வடிவும் கண்ட
இடமும் சிறந்துழி எய்துவது ஐயம்.

இஃது ஐயம் நிகழும் இடம் உணர்த்திய முகத்தான் அதன் இலக்கணம் உணர்த்துகின்றது.

(இ-ள்) தலைமகள் வடிவும் அவளைத் தான் கண்ட இடமும் சிறந்த காலத்துத் ‘தெய்வமோ? மக்களுள் உள்ளாளோ?’ என ஐயுறுவது யாம் மேற் கூறிய ஐயமாம் என்றவாறு.

எனவே, அவை சிறப்புடைய அல்லாக் காலத்து இழிபு சுட்டப்படுதலான், ஐயம் நிகழாது என்பதாம்;
என்னை ?

‘ சிறந்துழி ஐயம் சிறந்தது என்ப
இழிந்துழி இழிபே சுட்ட லான ’ தொல். பொ. 94

என்ப ஆதலின்.

அதற்குச் செய்யுள் :

போதோ விசும்போ புனலோ பணிகளது பதியோ
யாதோ அறிகுவது ஏதும் அரிது யமன் விடுத்த

தூதோ அனங்கன் துணையோ இணையிலி தொல்லைத்தில்லை
மாதோ மடமயி லோஎன நின்றவர் வாழ்பதியே. திரு-2

எனவரும்.

ஏற்புழிக் கோடலான் இங்ஙனம் ஐயுறுதல் தலைமகன் மேற்றே எனக் கொள்க. தலைவற்குத் தெய்வமோ என ஐயம் நிகழ்ந்தவழி அதனை நீக்கி நூல் முதலியவற்றான் தெய்வம் அன்மை உணர்தற்கு அறிவுடையன் ஆதலானும் தலைவிக்கு முருகனோ இயக்கனோ என ஐயம் நிகழின் அதனை நீக்கி உணர்தற்குக் கருவியிலள் ஆகலான் அவட்கு அச்சமே அன்றிக் காமக்குறிப்பு நிகழாது ஆதலானும் என்பது. 117

விளக்கம்

'போதோ விசும்போ'—

'ஒப்பற்ற தில்லையான் இடத்துக் காணப்படும் இம்மாது வாழ்பதி அவ்வூரோ தாமரையோ வான்உலகமோ நீரோ நாகர்உலகமோ என்று அறிவது அரிது. இம்மயில் அன்ன சாயலாள் இயமன் விடுத்த தூதோ மன்மதன் துணைவியோ என்பதும் அறிகிலம்' என்று தலைவன் தலைவியின் வனப்புக் கண்டு ஐயுற்றவாறு.

தலைவன் தலைவிக்கு உரிய பத்து ஒப்புமைகளில் கல்வி ஒன்றாகக் கூறப்படவில்லை. சங்க இலக்கியத்தலைவி கல்வி கற்றாள் என்று அறிதற்கும் வாய்ப்பு இல்லை. ஆதலின் அவட்கு ஐயம் நிகழின் அதனைப் போக்கிக்கொள்ளும் கருவி அவளுக்கு இன்று என்பது கூறப்பட்டது.

ஒத்த நூற்பாக்கள்

'சிறந்துழி .... ... சுட்டலான'. தொ. பொ. 94
'முழுதும்' ந. அ. 120
'எய்திய இருவருள் சிறந்தஇறை வன்மேற்று
ஐயுறல் என்ப அறிவுடை யோரே.' மா. அ. 8
117

## ஐயம் அறுக்கும் திறம்

490 எழுதிய வல்லியும் தொழில்புனை கலனும்
வாடிய மலரும் கூடிய வண்டும்
நடைபயில் அடியும் புடைபெயர் கண்ணும்
அச்சமும் பிறவும் அவன்பால் நிகழும்
கச்சம்இல் ஐயம் கடிவன ஆகும்.

இஃது ஐயம் கடியும் கருவி கூறும் முகத்தான் துணிவு இலக்கணம் கூறுகின்றது.

(இ-ள்) முலையினும் தோளினும் வரித்த தொய்யில் கொடியும், ஒருவரால் இழைக்கப்பட்ட அணிகலன்களும், கைக் கொண்டு மோந்து உயிர்த்தலானும் சூடித் துவளுதலானும் வாடிய பூவும், தாது ஊதப் படிந்த வண்டும், நிலம் தோய்ந்து நடத்தல் தொழிலோடு பயின்ற அடியும், பக்கத்தே பெயர்ந்து பிறழும் கண்ணும், ஆண்மகனைக் கண்டுழி மனத்துப் பிறந்த அச்சமும், அவைபோல்வன பிறவும் மேல் அங்ஙனம் ஐயுற்ற தலைவன்மாட்டு நிகழாநின்ற எண்ணிலா ஐயங்களைப் போக்குவனவாம் என்றவாறு.

பிறவாவன நிழலீடும் வியர்த்தலும் கூறை மாசுணலும் முதலாயின. இவை தெய்வமகளிர்க்கு இல்லாதன ஆதலான் ஐயம் கடிவன ஆயின என்க.

இதற்குச் செய்யுள் :

‘ பாயும் விடை அரன் தில்லையன் னாள்படைக் கண்இமைக்கும்
தோயும் நிலத்துஅடி தூய்மலர் வாடும் துயரம்எய்தி
ஆயும் மனனே அணங்குஅல்லள் அம்மா முலைசுமந்து
தேயும் மருங்குல் பெரும்பணைத் தோளிச் சிறுநுதலே ’.

திருக்கோவை. 3

118

எனவரும்.

விளக்கம்

உரை பெரும்பாலும் நச்சினார்க்கினியர் உரைத்தனவே.
தொ. பொ. 95

'பாயும் விடை' —

'தெய்வமகளோ மானிடமகளோ என்று ஐயுறவோடு துயருற்று ஆராயும் மனனே! இச்சிறுநுதலாள் ஆகிய தில்லை அன்னாளின் கண் இமைக்கும்; அடி நிலம் தோயும்;மலர்வாடும்; ஆதலின் இவள் அணங்கு அல்லள்' என்று தலைவன் மனத்தைத் தெளிவித்தவாறு.

ஒத்த நூற்பாக்கள்

' வண்டே இழையே வள்ளி பூவே
கண்ணே அலமரல் இமைப்பே அச்சம்என்று
அன்னவை பிறவும் ஆங்குஅவண் நிகழ
நின்றவை களையும் கருவி என்ப '. தொ. பொ. 95

முழுதும் — ந. அ. 121

' அலம்வரல் கண்இமைப்பு அச்சம் உகக்கும்
மலர்உயிர்ப்பு அதனில் வாடுதல் வெயர்த்தல்
ஒளிர்கலன் வள்ளி வண்டுடன் நிழலிடுதல்
அடிநிலம் தோய்தல் அவண் நிகழ் ஐயம்
கடிவன ஆகும் காவலன் தனக்கே '. மா. அ. 9
118

குறிப்பறிதல்

491 அரிவை நாட்டம் அகத்துநிகழ் வேட்கை
தெரிய உணர்த்தும் குரிசிற்கு என்ப.

இது குறிப்பு அறிதற்கு ஏதுக்கூறும் முகத்தான் அதற்கு இலக்கணம் உணர்த்துகின்றது.

(இ-ள்) தலைமகள் கண்ணானது அவள்உள்ளத்து நிகழா நின்ற வேட்கையினை விளங்க அறிவிக்கும் தலைமகற்கு;

அவன் அவட்கு அவ்வாறு தன் குறிப்பினை விளங்க உணர்த்தல், உற்றுநோக்கும் நோக்கிற்கு எதிர்நோக்கி என்று கூறுவர் ஆசிரியர் என்றவாறு.

இக்குறிப்புஅறிதலே வழிநிலைக்காட்சியாய்ப் புகுமுகம் புரிதல் என்னும் மெய்ப்பாடு கூறிய தூஉம் ஆயிற்று.

இதற்குச் செய்யுள் :

'நோக்கினாள் நோக்கெதிர் நோக்குதல் தாக்கணங்கு
தானைக் கொண்டன்ன(து) உடைத்து'. குறள். 1082

என வரும்.

'அணியும் அமிழ்தும்என் ஆவியும் ஆயவன் தில்லைச்சிந்தா
மணிஉம் பரார்அறி யாமறை யோன்அடி வாழ்த்தலரின்
பிணியும் அதற்கு மருந்தும் பிறழப் பிறழமின்னும்
பணியும் புரைமருங் குல்பெருந் தோளி படைக்கண்களே'.
திருக்கோவை. 5

இதுவும் அது.

இன்னும், மேல் 'மாட்சி' (இ. வி. 486) என்ற மிகையானே, துணிந்தவழி வியத்தலும், குறிப்பு அறிந்த வழித் தெய்வத்தை மகிழ்ந்து உரைத்தலும், அதன்வழித் தெய்வப் புணர்ச்சி துணிதலும் வரவும் பெறும்.

துணிந்தவழி வியத்தல் :

'அகல்கின்ற அல்குல் தடம்அது கொங்கை அவைஅவம்நீ
புகல்கின்றது என்னைநெஞ்சு உண்டே இடைஅடை யார்புரங்கள்
இகல் குன்ற வில்வில் செற்றோன்தில்லை ஈசன் எம் மான்எதிர்ந்த
பகல்குன்றப் பல்உகுத் தோன்பழ னம்அன்ன பல்வளைக்கே'.
திருக்கோவை. 4

எனவும்,

குறிப்பு அறிந்தவழித் தெய்வத்தை மகிழ்ந்து உரைத்த லுக்குச் செய்யுள் :

'வளைபயில் கீழ்கடல் நின்றிட மேல்கடல் வான்நுகத்தின்
துளைவழி நேர்கழி கோத்தென, தில்லைத்தொல் லோன்கயிலை
கிளைவயின் நீக்கிஇக் கொண்டைஅம் கண்ணியைக் கொண்டுதந்த
விளைவைஅல் லால்விய வேன்நய வேன்தெய்வம் மிக்கனவே'

திருக்கோவை 6

எனவும்,

தெய்வப் புணர்ச்சி துணிதற்குச் செய்யுள் :

' ஏழ்உடை யான்பொழில் எட்டுஉடை யான்புயம் என்னைமுன்னாள்
ஊழ்உடை யான்புலி யூர்அன்ன பொன்இவ் வுயர்பொழில்வாய்ச்
சூழ்உடை ஆயத்தை நீக்கும் விதிதுணை யாமனனே
யாழ்உடை யார்மணம் காண்அணங் காய்வந்து அகப்பட்டதே '.

எனவும் வரும்.

இவை ஒருதலைக்காமம் அல்லவேனும் புணர்ச்சி நிகழா மையின் கைக்கிளைப்பாற்படும். 119

## விளக்கம்

கண் ஆனது என்பதற்குப் பார்வை ஆனது என்று பொருள்கொள்க, கண் என்று தனித்துக் கூறியவழி அது பன்மைச்சொல் ஆகலான், வழிநிலைக்காட்சி — தலைவியைக் கண்டவழி நிகழும் குறிப்புஅறிதல். புகுமுகம் புரிதல் — தலைமகன் நோக்கிய நோக்குஎதிர்த் தலைவி தான்சென்று புகுதல்.

' நோக்கினாள் நோக்கு ' —

பெருவனப்பினை உடைய தலைவி தலைவன் நோக்கிய நோக்கிற்கு எதிர்த் தான் நோக்கிய நோக்கம், தானேயும் தீண்டி வருத்தும் தெய்வம் படையோடு வந்து வருத்திய தனை ஒக்கும் என்றவாறு.

‘ அணியும் அமிழ்தும் ’ —

மின்னலையும் பாம்பினையும் ஒக்கும் இடையினள் ஆகிய இப்பெருந்தோளியின் படைக்கண்கள், பிறழுந்தோறும், பொது நோக்கத்தான் தில்லையானை வாழ்த்தாதவரைப் போல உறும் பிணியும், உள்ளக்கருத்து வெளிப்படுக்கும் நோக்கத்தான் அதற்கு மருந்தும் ஆகும் என்றவாறு.

‘ அகல்கின்ற ’ —

‘ திரிபுரத்தை, மலையை வில்லாகக் கொண்டு அழித்தவனும், எதிர்த்த பகலவனைப் பல் உகுத்தவனும் ஆகிய தில்லையான் திருப்பழன நகரை ஒத்த தலைவிக்கு அல்குலும் கொங்கையும் உண்மையான் இடை உருவு நுணுகினும் உண்டு ’ என்று தலைவன் தலைவியின் வனப்பைப் புகழ்ந்தவாறு’

‘ வளைபயில் ’ —

‘ தில்லையான் கயிலையில் இக்கெண்டைவிழியாளை, கீழ்க் கடலில் இட்ட கழி மேல்கடலில் இட்ட நுகத்தின் துளைக்கண் கோத்தாற்போல, கைக்கொண்டு எனக்குத்தந்த தெய்வத்தை அன்றிப் பிறவற்றை வியவேன்; நயவேன்; ’ என்று தலைவன் தெய்வத்தை மகிழ்ந்தவாறு.

‘ ஏழுடை யான் பொழில் ’

‘ மனமே! ஏழுலகிற்கும் உரியனாய் எண் தோளனாய் என்னை ஆண்ட இறைவனது புலியூரை ஒத்த இவள் இச் சோலையில் தன் ஆயத்தை நீத்தலுக்குத் துணையான விதியான் நமக்குக் கந்தருவ மணம் கிடைத்துள்ளது ’ என்று தலைவன் தெய்வச்செயல் கூறி மனத்தை ஒருப்படுத்தியவாறு.

முத்துவீரியநூலார் இவ்வேழனையும் கைக்கிளைத்துறையாகக் கொண்டது காண்க. [பக்கம் 262]

ஒத்த நூற்பாக்கள்

‘ நாட்டம் இரண்டும் அறிவு உடன் படுத்தற்குக்
கூட்டி உரைக்கும் குறிப்புரை ஆகும் ’. தொ. பொ. 96

'குறிப்பே குறித்தது கொள்ளுமாயின்
ஆங்கவை நிகழும் என்மனார் புலவர்'. தொ. பொ. 97

'முழுதும்' — ந. அ. 122

'கண் இணை புகுமுகம் புரிதலின் காரிகை
உள்நிகழ் வேட்கை உரவோற்கு உணர்த்தும்.' மா. அ. 10

'வழிநிலைக் காட்சியும் உள்ளப் புணர்ச்சி என்று
எழில்பெறுமேனும் இணைவிழைச்சு இன்றால்
கைக்கிளை என்பதம் கடன்எனத் தகுமே'. மா. அ. 11

119

## களவிற்குரிய கிளவித்தொகை

492 இயற்கைப் புணர்ச்சி[1] வன்புறை[2] தெளிவே[3]
பிரிவுழி மகிழ்ச்சி[4] பிரிவுழிக் கலங்கல்[5]
இடந்தலைப் பாடு[6] பாங்கற் கூட்டம்[7]
பாங்கிமதி உடன்பாடு[8] பாங்கியிற் கூட்டம்[9]
பாங்குஅமை பகற்குறி[10] பகற்குறி இடையீடு[11]
இரவுக் குறியே[12] இரவுக்குறி இடையீடு[13]
வரைவு வேட்கை[14] வரைவு கடாதல்[15]
ஒருவழித் தணத்தல்[16] வரைவுஇடை வைத்துப்
பொருள்வயின் பிரிதல்[17] என்று ஒருபதி னேழும்
களவிற்கு உரிய கிளவித் தொகையே.

இது களவு என்னும் கைகோளிற்கு உரிய கிளவித் தொகை இத்துணைப்பகுதித்து என்கின்றது.

(இ-ள்) இயற்கைப்புணர்ச்சி முதலாக வரைவுஇடை வைத்துப் பொருள்வயின் பிரிதல் ஈறுகச் சொல்லப்பட்ட பதி னேழும் களவு என்னும் கைகோளிற்கு உரிய கிளவிகளின் தொகையாம் என்றவாறு. 120

### விளக்கம்

கிளவி—நிகழ்ச்சியை விளக்கும் தலைப்பு; கருமநிகழ்ச்சி ஆகிய இடம்.

ஒத்த நூற்பாக்கள்

' காமப் புணர்ச்சியும் இடந்தலைப் பாடும்
பாங்கொடு தழாஅலும் தோழியின் புணர்வும்என்று
ஆங்கநால் வகையினும் அமைந்த சார்பொடு
மறைஎன மொழிதல் மறையோர் ஆறே '.

தொ. பொ. 498

' இயற்கை பாங்கன் இடந்தலை மதியுடன்
இருவரும் உள்வழி அவன்வரவு உணர்தல்
மூன்உறவு உணர்தல் குறைஉற உணர்தல்
நன்னிலை நாணம் நடுங்க நாடல்
மடல்குறை நயப்பு வழிச்சேட் படுத்தல்
இடம்மிகு பகற்குறி இரவுக் குறியோடு
ஒருவழித் தணத்தல் உடன்கொண்டு ஏகல்
வரைவு முடுக்கம் வரைபொருள் பிரிதல்
.... .... .... இவை என மொழிப '.

திருக்கோவை, மு. வீ. கள. 6

' முழுதும் ந. அ. 123

' கைகோள் இரண்டுஎனக் காட்டிய வற்றுள்
களவிற்கு உரிய கிளவித் தொகைதான்
இயற்கைப் புணர்ச்சி வன்புறை தெளிவே
பிரிவுழி மகிழ்ச்சி பிரிவுழிக் கலங்கல்என்று
ஒருவகை ஐந்துஎன உணர்த்தினர் புலவர் '.

மா. அ. 12

' இடந்தலை பாங்கற் கூட்டம் பாங்கிமதி
உடன்படுதல் மூன்றினொடு ஒருவகை ஐந்தே '. „ 13

' பாங்கியிற் கூட்டம் பகற்குறி பகற்குறி
இடையீடு இரவிற் குறிஇர விற்குறி
இடையீடு என்ன இவையும்ஓர் ஐந்தே '. „ 14

' வரைவு வேட்கை வரைவு கடாதல்
ஒருவழித் தணத்தல் வரைபொருள் பிரிவுஎன
இருநிலம் ஒன்றுஒழி இருபான் என்ப '. „ 15

120

## தெய்வப் புணர்ச்சியின் விரி

493 கலந்துழி மகிழ்தலும்[1] நலம்பா ராட்டலும்[2]
ஏற்புற அணிதலும்[3] என்னும்இம் மூன்றும்
போற்றிய தெய்வப் புணர்ச்சியின் விரியே.

நிறுத்த முறையானே இயற்கைப் புணர்ச்சிக்கு உரிய வகையும் விரியும் கூறுவனவற்றுள் இஃது அதன் பகுதியாக மேற் கூறிப் போந்த தெய்வப் புணர்ச்சிக்கு வகையின்று ஆகலின் அதன் விரி கூறுகின்றது.

(இ-ள்) தெய்வப்புணர்ச்சி துணிந்த பின் வேட்கைமிக அதனால் அவள் இன்றியமையாமையின் புணரும் அன்றே? புணர்ந்துழி அப்புணர்ச்சி இன்பத்தை மகிழ்ந்து உரைத் தலும், புணர்ச்சிதான் புணராதமுன் நின்ற வேட்கை புணர்ந்த பின்னும் மிகுதலான் அந்நலத்தைப் புகழ்ந்து உரைத்தலும், புணர்ச்சியால் சிதைந்தவற்றைப் பண்டுபோலப் பொருந்த அணிதலும் என்னும் இம்மூன்று கிளவியும் மேல் போற்றப்பட்ட தெய்வப்புணர்ச்சியின் விரியாம் என்றவாறு.

மேல் போற்றப்பட்டவாறு என்னை எனின்,

‘தெய்வம் தன்னின் எய்தவும் கிழத்தியின்
எய்தவும் படுஉம் இயற்கைப் புணர்ச்சி’ 29

எனவும்,

‘இயற்கைப் புணர்ச்சி தெய்வத்தின் எய்துழி
முயற்சி இன்றி முடிவது ஆகும்’ 30

எனவும் கூறிப்போந்தமையாம் என்க.

‘போற்றிய’ என்ற மிகையானே இங்ஙனம் புணர்ச்சி இன்பத்தை மகிழ்ந்து சொல்லக் கேட்ட தலைமகள் நாணம் மிக்குச் சொல்லாடாள் அன்றே? அவள் உறுப்புக் கண்டு சொல்கேட்க விரும்புதலும், அங்ஙனம் விரும்புதலான் அன்பு

மீதூரப்பட்ட தலைமகன் 'இவள் வாய்போல நாறும் ஆம்பல் மலர்கள் உளவோ?' என வண்டிற்கு உரைப்பானாய் அவ்விருப்பம் கூறிச் சொல்கேளாத அயர்வு நீங்குதலும் நலம் பாராட்டலின்பின் வரவும் பெறும்.

கலந்துழி மகிழ்தல் :

'சொற்பால் அமுதுஇவள் யான்சுவை என்னத் துணிந்திங்ஙனே
நற்பால் வினைத்தெய்வம் தந்தின்று நான்இவ ளாம்பகுதிப்
பொற்பு ஆர் அறிவார் புலியூர்ப் புனிதன் பொதியில்வெற்பின்
கற்பா வியவரை வாய்க்கடி தோட்ட களவகத்தே'.

திருக்கோவை. 8

எனவும்,

[சிவபெருமானது பொதியமலையில் கல் பரந்த தாழ்வரையில் ஆயத்தின் காவல் நீங்கிய இக்களவில், அமுதும் அதன்சுவையும் போலப் பிரித்தல் இயலா நிலையினேமாகி, யாம், இக் காம இன்பம் நுகரத் தலைவன் எனவும் தலைவி எனவும் ஆயினேமாகத் தெய்வம் இவ்வாய்ப்பை அருளி உள்ளது.]

நலம் பாராட்டல் :

'உணர்ந்தார்க்கு உணர்வு அரி யோன்தில்லைச் சிற்றம் பலத்து ஒருத்தன்
குணந்தான் வெளிப்பட்ட கொவ்வைச்செவ் வாய்இக் கொடிஇடைதோள்
புணர்ந்தால் புணருந் தொறும்பெரும் போகம்பின் னும்புதிதாய்
மணம்தநழ் புரிகுழ லாள்அல்குல் போல வளர்கின்றதே'.

திருக்கோவை. 9

[சிவபெருமானுடைய குணமாகிய ஆனந்தம் வெளிப்பட்டாற் போல்வாளாகிய இக் கொடியிடையாள் தோள்களைப் புல்லுந்தோறும் பேரின்பம் முன்பு போலப் பின்னும் புதிதாய், இவள் அல்குல் போல வளர்ந்து, என்றும் ஒரே படியதாய் நிறைவுறுகின்றது.]

சொல் கேட்க விரும்புதல் :

' அளவியை யார்க்கும் அறிவுஅரி யோன்தில்லை அம்பலம்போல்
வளவிய வான்கொங்கை வாள்தடங் கண்நுதல் மாமதியின்
பிளவுஇயல் மின்இடை பேர்அமை தோள்இது பெற்றிஎன்றால்
கிளவியை என்னோ இனிக்கிள்ளை யார்வாயில் கேட்கின்றதே '.

திருக்கோவை, 10

எனவும்,

[' அளத்தற்கரிய சிறப்பினனாகிய சிவபெருமான் தில்லை அம்பலம் போலக் கொங்கைகள் வளவியன; கண்கள் வாள் போன்றன; நுதல் பிறை போன்றது; இடை மின்னல் போன்றது; தோள் அமை போன்றன; இவள் மொழி கிளிமொழி போலும்; இவள் பேச்சைக் கேட்க விரும்புவது என்னோ ?' என்று தலைவன் தன்மனத்திடம் சொற்றது.]

சொல் கேளாத அயர்வு நீங்கியது ;

' கூம்பல்அம் கைத்தலத்து அன்பர்என்பு ஊடுஉரு கக்குனிக்கும்
பாம்புஅலங் காரப் பரன்தில்லை அம்பலம் பாடலரின்
தேம்பல்அம் சிற்றிடை ஈங்குஇவள் தீங்கனி வாய்கமழும்
ஆம்பல்அம் போதுஉள வோஅளி காள்நும் அகன்பணையே '.

திருக்கோவை. 11

எனவும்,

[வண்டுகளே ! நும் அகன்ற மருத நிலத்தில், சிவபெருமானுடைய அம்பலத்தைப் பாடாதரைப் போல வாடும் இச் சிற்றிடையாளது வாய்போல, நறுமணம் வீசும் ஆம்பற் பூக்கள் உளவோ ?]

ஏற்புற அணிதல் :

' தூசும் கலையும் தொலையா அழகுஎறிக் கும்தொடியும்
வாசம் கமழும் மதுமலர் ஓதியும் வண்களபம்
பூசும் கனதனம் பூணும் முத்தாரமும் பூங்குழையும்
ஆசும் பழுதில்பொன் னேபண்டு போல அணிந்தனமே'.

அம்பி. 7

எனவும் வரும்.

[பழுதற்ற பொன்னே! தூசு, கலை, தொடி, மலர்சூடிய ஓதி, மார்பில் பூணும் முத்தாரம், குழை, ஆசுகள் இவற்றைப் பண்டுபோல ஒப்பனை செய்துவிட்டேன் ஆதலில், கவலையும் நாணமும் வேண்டா.]

ஒத்த நூற்பாக்கள்

'தெய்வம் புணர்ப்பச் சிந்தைவேறு ஆகி
எய்தும் கிழத்தியை இறையோன் என்ப'. ந. அ. **124**

முழுதும் — ந. அ. **125**

'தன்னயம் தெளிதலும் தலைப்பிரிவு அச்சமும்
இன்னியல் வன்பொறை எய்துதல் அருமையும்
உயிர்எனக் கூறலும் ஆற்றினன் பெயர்தலும்
செயிர்தபு காதல் தெய்வப் புணர்ச்சி'. த. நெ. வி. **15**

'கடவுளது ஆணையின் கருத்துநிலை திரிந்து
மடவரல் நங்கையை மன்னவன் எய்தும்'. மா. அ. **16**

'புதுவது வாகப் புணர்ந்துழி மகிழ்தலும்
அதுபொழுது அவள்நலம் அவன்பா ராட்டலும்
அடல்புனை வேலோன ஏற்புற அணிதலும்
கடவுளின் எய்தும் காலையின் விரியே'. மா. அ. **17**

***121***

## தலைவியின் புணர்ச்சியின் வகை

494 **வேட்கை உரைத்தல் மறுத்தல் உடன்படல்**
**கூட்டம்என்று இறைவியின் கூட்டம்நால் வகைத்தே.**

இது நிறுத்த முறையானே தலைவியின் புணர்ச்சிவகை இத்துணைப் பகுதித்து என்கின்றது.

(இ-ள்) வேட்கை உரைத்தல் முதலாகக் கூட்டம் ஈறுகச் சொல்லப்பட்ட நான்கு பகுதியினை உடைத்து; தலைமகளால் புணரும் புணர்ச்சி என்றவாறு. ***122***

ஒத்த நூற்பாக்கள்

'முன்னிலை ஆக்கல் சொல்வழிப் படுத்தல்
நன்னயம் உரைத்தல் நகைநனி உறூஉ அது
அந்நிலை உரைத்தல் மெலிவுவிளக் குறுத்தல்
தன்நிலை உரைத்தல் தெளிவுஅகப் படுத்தல்
இன்னவை நிகழும் என்மனார் புலவர்.'

தொல். பொ. 101

'மெய்தொட்டுப் பயிறல் பொய்பா ராட்டல்
இடம்பெற்றுத் தழாஅல் இடையூறு கிளத்தல்
நீடுநினைந்து இரங்கல் கூடுதல் உறுதல்
சொல்லிய நுகர்ச்சி வல்லே பெற்றுழித்
தீராத் தேற்றம் உளப்படத் தொகைஇப்
பேராச் சிறப்பின் இருநான்கு கிளவியும்'. 102

முழுதும் — ந. அ. 126

'உவகை உரைத்தல் மறுத்தல் உடன்படல்
புணர்தல்என்று இறைவியின் புணர்ச்சிநால் வகைத்தே.

மா. அ. 18

122

## தலைவியின் புணர்ச்சியின்விரி

495 இரந்துபின் நிற்றற்கு எண்ணலும்[1] இரந்து
பின்னிலை நிற்றலும்[2] முன்னிலை ஆக்கலும்[3]
மெய்தொட்டுப் பயிறலும்[4] பொய்பா ராட்டலும்[5]
இடம்பெற்றுத் தழாஅலும்[6] வழிபாடு மறுத்தலும்[7]
இடையூறு கிளத்தலும்[8] நீடுநினைந்து இரங்கலும்[9]
மறுத்துஎதிர் கோடலும்[10] வறிதுநகை தோற்றலும்[11]
முறுவல்குறிப்பு உணர்தலும்[12] முயங்குதல் உறுத்தலும்[13]
புணர்ச்சியின் மகிழ்தலும்[14] புகழ்தலும்[15] பிறவும்
உணர்த்திய தலைவியின் புணர்ச்சியின் விரியே.

இது தலைவியின் புணர்ச்சியின் விரி இத்துணைப் பகுதித்து என்கின்றது.

(இ-ள்) இரந்து பின்நிற்றற்கு எண்ணல் முதலாகப் புகழ்தல் ஈறாகச் சொல்லப்பட்ட பதினைந்து கிளவியும், பிறவும் மேல் சொல்லப்பட்ட தலைமகளால் புணரும் புணர்ச்சியின் விரியாம் என்றவாறு.

'உணர்த்திய தலைவியிற் புணர்ச்சி' என்றதற்குப் 'போற்றிய தெய்வப் புணர்ச்சி' என்றதற்கு உரைத்தாங்கு உரைக்க.

'பிற' என்ற மிகையானே, முன்னிலை ஆக்கலின் பின்னர் மருங்கு அணைதலும், புகழ்தற்குப் பின் ஏற்புற அணிதலும் வரவும் பெறும்.

## விளக்கம்

[1 தன்குறைகளைச் சொல்லித் தலைவியின் பின்னே இரந்து நிற்றற்குத் தலைவன் எண்ணுதல்.

2 இரந்து தலைவியின்பின்னே நின்ற தலைவன் வழிபாடு செய்தற்கு முயன்று நிலைநிற்றல்.

3 தலைவியைத் தனக்கு முற்படுத்தித் தலைவன் கூறுதல்.

4 தலைவியின் மெய்யைத் தீண்டித் தலைவன் நெருங்குதல்.

5 தலைவியின் அழகைத் தலைவன் புனைந்து கூறல்.

6 உரிய இடத்தைப்பெற்றுத் தழுவுதலைத் தலைவன் விரும்பிக் கூறுதல்.

7 தலைவன் செய்யும் வழிபாட்டை நாணினால் மறுத்த தலைவி, தான் மறைந்து கொள்ளுதற்பொருட்டு ஒரு கொடியைச் சார்தல்.

8 அதன்பால் சென்ற தலைவி நாணினால் தன் விழிகளைப் புதைத்துக்கொள்ள, அதனால் தனக்கு உண்டாகும் துன்பத்தைத் தலைவன் கூறுதல்.

9 தலைவியின் செய்கையால் காலம் நீட்டித்தலை அறிந்து தலைவன் கூறுதல்.

10 தன் நாணத்தை மறுத்துத் தலைவனைத் தலைவி ஏற்றுக் கோடல்.

11 தலைவி புன்னகை செய்தல். வறிது—சிறிது.

12 தலைவியின் புன்னகையால் பெற்ற உடன்பாட்டுக் குறிப்பினைத் தலைவன் அறிதல்.

13 தலைவியைத் தழுவுதல்.

14 புணர்ச்சியின் மகிழ்தல்.

15 தலைவியின் நலத்தைத் தலைவன் பாராட்டுதல்.

நாணினால் வருந்தும் தலைவியின் பக்கத்தை அடைந்த தலைவன், அவள் கூந்தலில் கூடிய மாலையில் மொய்த்திருக்கும் வண்டுகளை ஓட்டுவான்போல் அவளை நெருங்குதல் வண்டு ஓச்சி மருங்கு அணைதல் ஆகும்.

நிலைகுலைந்த அணிகளை முன்போலவே தலைவன் தலைவிக்கு அணிவித்தல் ஏற்புற அணிதலாகும்.

இயற்கைப்புணர்ச்சி தெய்வத்தின் முடிந்தவழி முயற்சி இன்றி முடிவதுபோல, தலைவியின் முடிந்தவழித் தலைவனுடைய முயற்சியாலேயே நடைபெறுவதாம் என்றவாறு.

இதன்கண்ணும் நலம் பாராட்டலின்பின் தலைவன் தலைவியின் சொல் கேட்க விரும்புதலும், சொல் கேளாத அயர்வு நீங்குதலும் கொள்ளப்படும் ]

இரந்து பின் நிற்றற்கு எண்ணல் :

‘மருந்தின் தீராது மணியின் ஆகாது
அருந்தவ முயற்சியின் அகறலும் அரிதே
தான்செய் நோய்க்குத் தான்மருந்து ஆகிய

தேன்இமிர் நறவின் தேறல் போல
நீதர வந்த நிறைஅழி துயரம்
ஆடுகொடி மருங்குல்நின் அருளின் அல்லது
பிறிதில் தீராது என்பது பின்நின்று
அறியக் கூறுகம் எழுமோ நெஞ்சே
நாடுவிளங்கு ஒண்புகழ் நடுதல் வேண்டித்தன்
ஆடுமழைத் தடக்கை அறுத்துமுறை நிறுத்த
பொற்கை நறுந்தார்ப் புனைதேர்ப் பாண்டியன்
கொற்கை அம் பெருந்துறைக் குனிதிரை தொகுத்த
விளங்குமுத்து உறைக்கும் வெண்பல்
பன்மாண் சாயல் பரதவர் மகட்கே. (குண நாற்பது)

எனவரும்,

ஆடு கொடி மருங்குல் என்பது அண்மை விளி.

ஆடு கொடி மருங்குலாய்! நீ தரவந்த நிறைஅழிதுயரம் நின் அருளின் அல்லது தீராது எனப் பொருள் உரைத்துக் கொள்க. இதனைத் தலைவன் தோழியை இரந்து பின் நிற்றற்கு இயைந்து கூறுதலாகவும் உரைப்ப.

[ நெஞ்சே! நாட்டில் நிலைபெற்ற புகழை நாட்டுதற்காகத் தன் மழை போன்ற வண்மையை உடைய கையினை அறுத்து நீதியை நிலைபெறச் செய்த பொற்கைப் பாண்டியனுக்கு உரியதான கொற்கைத் துறைக்கண்ணே வளைந்த அலைகளால் கொண்டு சேர்க்கப்பட்ட ஒளிமிக்க முத்துப் போன்ற வெள்ளிய பற்களையும் பல மாட்சிமைப்பட்ட மென்மையையும் உடைய செம்படவப் பெண்ணை நோக்கி, 'அசையும் கொடிபோன்ற மருங்குலாய்'! கள் உண்ணுமையால் வந்த நோயைத் தீர்ப்பதற்கு ஏனைய மருந்துகளோ நோய் தீர்க்கும் மணிகளோ தவமுயற்சியானாகிய மந்திரங்களோ போக்குதல் இயலாமல் அக்கள்ளே அந்நோய் தீர்க்கும் மருந்து ஆமாறுபோல, உன்னால் ஏற்பட்ட நிறை அழிதற்குக் காரணமாகிய நோய், மருந்து மணி மந்திரங்களால்

நீங்காது நின் அருளினாலேயே நீக்கப்படல் வேண்டியதாகும் என்று கூறிச் செல்வோம்' என்று தலைவன் தலைவியை இரந்து பின் நிற்றற்கு எண்ணியவாறு. இனி, தலைவிக்கு உயிரனையாள் தோழியாக, அவளை இரந்து பின் நிற்றற்குத் தலைவன் தோழியிற் கூட்டத்தின்கண் இங்ஙனம் கூறினான் ஆதலும் அமையும். ]

இரந்து பின்னிலை நிற்றல் :

'செறிவேழ வெஞ்சிலை வேள்தஞ்சை வாணன் திருந்தலர்மேல்
எறிவேலை வென்றகண் என்உயிர்க்கு ஏவி இருண்டு அறல்போல்
நெறிவேய் அலங்கல் முடித்தலை சாய்த்து இங்ஙன் நிற்பதுதான்
அறிவே அறிந்த உனக்குஅலர் மாளிகை ஆரணங்கே'.

தஞ்சை. 6

எனவும்,

['தாமரைவாழ் திருவே! கருப்பு வில்லியாகிய மன்மதனை ஒத்துப் பிறர்மாதரை விரும்பாத தஞ்சைவாணன் பகைவர்மேல் செலுத்திய வேலைவென்ற கண்களை என் உயிர் போமாறு பாய்ச்சி, கருமணல் போன்ற நெறிப்பை உடைய மயிர்வேய்ந்த கூந்தலை உடைய தலையைச் சாய்த்துக் கொண்டு இவ்வாறு நிற்பது உனக்கு ஏற்புடையது ஆகுமா?' என்று தலைவியை நோக்கித் தலைவன் சொற்றது.]

முன்னிலை ஆக்கல் :

'வழுதியர் நாமம் வளர்க்கின்ற வாணன்தென் மாறைவண்டு
தொழுதியல் ஆர்செய் குழல்மட வீர்நும்குற் றேவல்செய்து
தொழுதுஇயல் ஆயத்தொகுதியொடு ஆடிச் சுனைகுடையாது
எழுதிய பாவையைப் போல்நின்ற வாறுஎன் இயம்புமினே'.

தஞ்சை. 7

எனவும்,

['பாண்டியர் புகழை வளர்க்கும் வாணனுடைய தென் மாறையில் வண்டினம் தங்கும் குழல் மடவாய்! உன் குற்றேவல் செய்து தொழிற்படும் தோழியர் குழாத்துடன்

விளையாடிச் சுனையில் படியாது பொம்மையைப் போல இடம் பெயராது நிற்பதன் காரணத்தைக் கூறுவாயாக' என்று தலைவன் தலைவியை வினயது.]

மருங்கு அணைதல்:

'கோலத் தனிக்கொம்பர் உம்பர்புக்கு அஃதே குறைப்பவர்தம்
சீலத் தன கொங்கை தேற்றகி லேம்சிவன் தில்லையன்னாள்
நூல்ஒத்த நேர்இடை நொய்மைஎண் ணாது நுண் தேன்நசையால்
சாலத் தகாது கண் டீர் வண்டு காள் கொண்டை சார்வதுவே'.

எனவும், திருகோவை – 45

['வண்டுகளே! அழகிய தனிக்கிளைமேல் அமர்ந்து அதனையே வெட்டுவாரைப்போன்ற பண்புடைய கொங்கைகள் என் அறிவுரைகளை ஏலா; சிவபெருமானுடைய தில்லையை ஒத்த இந்நங்கையின் நூல்போன்ற இடையின் நொய்மையைக் கருதாமல், மயிர்முடிமேல் அமர்ந்து பாரத்தை மிகுவிப்பது உங்களுக்கு ஏற்றது அன்று' என்று தலைவன் வண்டினங்களிடம் சொற்றது.]

மெய்தொட்டுப் பயிறல்:

'உறுதோறு உயிர்தளிர்ப்பத் தீண்டலால் பேதைக்கு
அமிழ்தின் இயன்றன தோள்'. குறள் 1106

எனவும் வரும்.

'அளகம் திருத்தி, மதிநுதல் நீவி, அளிஅகற்றிப்,
புளகம்செய் தோளில் புரிவளை ஏற்றிப் புதியதென்றல்
கிளரும் கொழுந்தளிர் மெல்லடி தைவந்த இன்பம்உறக்,
களபம் செறிதனத் தாய்!பெற்ற வாஎன் காதலமே'.

இதுவும் அது. அம்மி - 31

[யான் தழுவும் தோறும் என் உயிர் புதுக்கிளர்ச்சி பெறுமாறு செய்வதால், இத்தலைவியின் தோள்கள் அமிர்தத்தால் இயன்றனவாம்.

'சந்தனம் பூசிய தனங்களை உடையாய்! என் கைகள் நின் மயிர்முடியைத்திருத்தி, நுதலைத் தடவி, வண்டுகளை ஓட்டி, தோள்வளைகளைத் திருத்தம் செய்து நின்தளிர் மெல்லடிகளைத் தடவி இன்பம் உறும் வாய்ப்புப் பெற்றனவே.]

பொய் பாராட்டல் —

'மாதர் முகம்போல் ஒளிவிட வல்லையேல்
காதலை வாழி மதி'. குறள். 1118

எனவரும்,

'பருந்துஒன்று கூர்இலை வேல்படை வாணன் பரிமளப்பூஞ்
செருந்துஒன்று சோலைத்தென் மாறைஅன் னீர்செழுந் திங்கள் உங்கள்
முருந்து ஒன்று கோப முகம்கண்டு நாணி முயல்மறுத்தீர்
மருந்துஒன்று தேடிஅன் றோமக மேரு வலம்கொள்வதே'.

தஞ்சை. 9

இதுவும் அது.

[என் தலைவியின் முகம்போல ஒளிவிடும் ஆற்றல் உடையையாயின், மதியே! நீ என்னால் காதலிக்கப்படுவாய். அஃது இன்மையால் என்னால் காதலிக்கப் படாய்.

பருந்து பின்தொடரும் வேற்படை வாணனுடைய மணம்மிக்க செருந்திமரம் செறிந்த சோலையை உடைய மாறை அன்னாய்! சந்திரன். உன்னுடைய மயில் இறகின் அடிபோன்ற வெள்ளிய பற்கள், இந்திரகோபம் போன்ற இதழ், ஒளிமுகம் இவற்றைக் கண்டு நாணித் தன்இடத்துள்ள முயற்களங்கத்தைத் தீர்க்க மருந்து தேடியே, மேரு மலையைச் சுற்றி வருகிறான்.]

இடம் பெற்றுத் தழாஅல்;

'மடைக்கண் தரளம் சொரிவையை நாடுஅன்ன வையம்ஒரு
குடைக்கண் தனிபுரப் பார்சொக்க நாயகர் கூடல்அன்னார்
கடைக்கண் கருணை உண்டு ஆரும்இல் லாதபொற் காவும்உண்டு
புடைக்கும் தருண வனமுலை யாய்இன்று புல்லுவமே'.

மதுரை. 39

எனவும்,

[நீர்மடையில் முத்துச் சொரியும் வையை நாடுபோல உலகம் முழுதையும் தம் குடைக்கண் வைத்துக் காக்கும் சொக்கநாயகருடைய கூடல்நகர் போன்ற இயற்கை அழகுடைய தலைவியின் கடைக்கண் தரும் அருளும், ஒருவரும் இல்லாத சோலையும் உண்டு ஆதலின், தலைவன் புணர்ச்சியைத் துணிந்து 'இவளை விளித்து இன்று தழுவுவோம்' என்று கருதியவாறு ]

வழிபாடு மறுத்தல் —

'அகல்இடம் தாவிய வானோன் அறிந்துஇறைஞ்சு அம்பலத்தின்
இகல்இடம் தாவிடை ஈசன் தொழாரின்இன் னற்குஇடமாய்
உகல்இடம் தான்சென்று எனதுஉயிர் வையா வகைஒதுங்கப்
புகல்இடம் தாபொழில் வாய்எழில் வாய்தரு பூங்கொடியே'.

திருக்கோவை. 42

எனவும் வரும்.

வழிபாடு மறுத்தல் — இடம்பெற்றுத் தழுவியபின் தலைவி வேட்கைக் குறிப்புக் கண்டு தலைவன் சார்தல் உற்றவழி, அவள் அதற்கு உடன்படாது மறுத்தல்.

[உலகத்தை அளந்த திருமால் அறிந்து வணங்கும் அம்பலத்தில் உள்ள விடைஏறியாகிய சிவபெருமானைத் தொழாதவரைப் போலத் துன்பத்துக்கு இருப்பிடமாய் அழிவை அடைந்து என் உயிர் வருந்தாதபடி, சோலையில் எழில்வாய்ந்த பூங்கொடியே! யான் ஒதுங்குவதற்கு இடம் தருவாயாக.]

இடையூறு கிளத்தல் —

'தாழச்செய் தார்முடி தன்அடிக் கீழ்வைத்து அவரைவிண்ணோர்
சூழச்செய் தான்அம் பலம்கை தொழாரின்உள் ளம்துளங்கப்
போழச்செய் யாமல்வை வேல்கண் புதைத்துப்பொன் னேஎன்னைநீ
வாழச்செய் தாய்சுற்றும் முற்றும் புதைகின்ற வான்நுதலே..'

திருக்கோவை. 43

எனவும்,

[தன்னை வணங்கினவர் முடிகளைத் திருவடிக்கண் கொண்டு அவரைத் தேவரும் வணங்குமாறு செய்யும் 'சிவபெருமானுடைய அம்பலத்தை வணங்காதவர்களைப் போல மனம் வருந்துமாறு அதனைப் பிளக்காமல், கண்களைப் பொத்திக் கொண்ட நீ உடல் முழுவதையும் மறைத்துக்கொள்; அப்போது என் துளக்கம் தீர்த்து என்னை வாழச் செய்தாய் ஆவாய்.]

நீடு நினைந்து இரங்கல் :

'காதல் மடந்தையர் கைஅகல் காலையும் மெய்அகலா
மேதகு நாணும் மெலியஅன் றேவிழி போலும்நெய்தல்
போதுஅவிழ் மென்மலர்ப் புன்னையங் கானல் பொருந்துமிந்த
மாதவி பெற்ற மணிமே கலைநம்மை வாழ்விப்பதே'.

அம்பி. 36

எனவும்,

['விழி போன்ற நெய்தல் மலரும் புன்னையங்கானலில் பொருந்திய மாதவியாம் கொடியைச் சார்ந்த மணிமேகலை அணிந்த தலைவி, மகளிர்க்குச் செயலற்ற காலத்தும் உடலை விட்டு நீங்காத நாணம் மெலிதலினால், நம்மை வாழவைப்பவள் ஆவாள்' என்று தலைவன் சிறிதுஆறுதல் உற்றவாறு ]

மறுத்து எதிர்கோடல் :

'குருநாள் மலர்ப்பொழில் சூழ்தில்லைக் கூத்தனை ஏத்தலர்போல்
வருநாள் பிறவற்க வாழிய ரோமற்றுஎன் கண்மணிபோல்
ஒருநாள் பிரியாது உயிரின் பழகி உடன்வளர்ந்த
அருநாண் அளிய அழல்சேர் மெழுகுஒத்து அழிகின்றதே'.

திருக்கோவை 44

எனவும்,

[என் கண்மணிபோன்று சிறந்ததாய் ஒருநாளும் என்னை விட்டு நீங்காது உயிர்போல அரியதாய் என்னுடன் வளர்ந்த அருமையான நாணம், இப்பொழுது நெருப்பைச் சார்ந்த

மெழுகுபோல உருகி ஓடுகின்றது. சிவபெருமானை வழிபடாதவர் மீண்டும் பிறப்பார் அல்லரோ? அவர்களைப்போல, எதிர்காலத்தில் நான் இவ்வாறு நாணத்தை விடும் பிறப்பு எடுக்கும் நிலையைப் பெறுது ஒழிவேனாக.]

வறிதுநகை தோற்றல் :

‘பூணும் தரள நிரைஅவிர் தோற்றமும் பூந்தளவின்
சேணும் கமழும் முகையும் தகையும் செழுஞ்சிலம்பின்
காணும்கலப மயில்நெடும் பீலியின் காலும் சிந்தை
நாணும் கெடவறி தேநகைசெய் தாள்மதி வாள் நுதலே’.
அம்பி. 38

எனவும்.

[பிறைநுதலினாள், முத்தும் முல்லைமுகையும் மலையிற் காணும் மயில் இறகின் அடியும் வெண்ணிறம்கண்டு தோற்குமாறு புன்முறுவல் செய்தாள்.]

முறுவல் குறிப்பு உணர்தல் :

‘முகைமொக்குள் உள்ளது நாற்றம்போல் பேதை
நகைமொக்குள் உள்ளதுஒன்று உண்டு’.
குறள் 1274

எனவும் வரும்.

‘மிகலே ஒழியக் குறைவுஅற நீடிய வெம்துயர்க்குழர்
புகல்ஏதும் இன்றிப் புலம்பல்நெஞ் சேபொருந் தார்வருந்த
இகலே செயும்அயில் அன்னகண் ணாள்முகத்து எல்லிஅன்றிப்
பகலே நிலவும் பவளத்துள் ளேவந்து பாரித்ததே’.
அம்பி. 39

இதுவும் அது,

[மொட்டிற்குள் மணம் பொதிந்து இருப்பதுபோல, இவள் புன்முறுவலுள்ளும் உடன்பாட்டுக்குறிப்பு மறைந்து நிற்கின்றது.

கணந்தோறும் மிக்குக் குறைதல் அறியாத துயர்தீரப் போக்குவிடு இன்றி, நெஞ்சே! நீ தனிமைத் துயர் உருதே; வேற்கண்ணுளாகிய தலைவியின் முகமாகிய சந்திரனில் இரவில் அன்றிப் பகற்பொழுதும் பவளவாய்வழியே பற்களின் ஒளியாகிய நிலவும் வெளிப்பட்டுவிட்டது ]

முயங்குதல் உறுத்தல் :

‘ வானக் கதிரவன் மண்ணக மாதை மணந்தது ஒக்கும்
நானக் குழலியை நான்இன்று பெற்றது நாவலர்க்குத்
தானக் களிறு தரும்புயல் வாணன் தமிழ்த்தஞ்சைசூழ்
கானக் கடிவரை வாய்விரை நாள்மலர்க் காவகத்தே ’.
தஞ்சை. 17

எனவும்,

[புலவருக்கு யானைகளைப் பரிசில் நல்கும் கார்மேகம் போன்ற கொடை உடைய வாணனுடைய தஞ்சையைச் சூழ்ந்த மலைச்சோலையில் இத்தலைவியை நான் இன்று பெற்ற செயல், வானத்திலுள்ள சூரியன் பூமியிலுள்ள பெண்ஒருத்தியை அடைவது போன்ற செயற்கரிய செயலாகும்.]

புணர்ச்சியின் மகிழ்தல் :

‘ கண்டுகேட்டு உண்டுஉயிர்த்து உற்றுஅறியும் ஐம்புலனும்
ஒண்தொடி கண்ணேஉள ’. குறள். 1101

[ஐம்பொறிகளுக்கும் உரிய ஐம்புல இன்பங்களும் இத்தலைவியிடத்து ஒருசேர நுகரக் கிடைப்பனவாய் உள்ளன ]

புகழ்தல் :

‘ திரள்மா மரகதச் செய்குன்று காள்என்றும் செவ்வனம்நீர்
முரண்மா தவங்கள் முயன்றுசெய் தாலும் முளரிமங்கை
சரண்மா மறை வாணன் தமிழ்த்தஞ்சை நாட்டுஎன் தனிஉயிர்க்குஓர்
அரண்மான் அனையகண் ணாள்கொங்கை போறல் அரிதுஉமக்கே
தஞ்சை. 19

எனவும் வரும்.

[செய்குன்றுகளே! நீங்கள் கடுந்தவம் புரியினும் வாணன் தஞ்சை நாட்டில் என் உயிருக்குப் பாதுகாவலாகிய இம்மான் அனையாளின் கொங்கைகளைப் போன்ற வனப் பினைப் பெறுதல் நுங்கட்கு இயலாது.]

ஏற்புற அணிதலுக்குச் செய்யுள் 'தூசும் கலையும்' (அம்பி. 7) என மேல்காட்டியதனையே ஈண்டும் உய்த்து உரைத்துக் கொள்க.

இவற்றுள், இரந்து பின்நிற்றற்கு எண்ணல் முதலாக நீடு நினைந்து இரங்கல ஈறுகச் சொல்லப்பட்ட ஒன்பதனுள் ளும், வழிபாடு மறுத்தல் ஒன்று ஒழித்து அல்லாதன வேட்கை உணர்த்தற்கும், வழிபாடு மறுத்தலாகிய ஒன்றும் தலைமகள் மறுத்தற்கும், மறுத்து எதிர்கோடலும் வறிது நகை தோற்றலும் என்னும் இரண்டும் தலைமகள் உடன்பாட் டிற்கும், முறுவல் குறிப்பு உணர்தலும் முயங்குதல் உறுத் தலும் என்னும் இரண்டும் தலைமகன் உடன்பாட்டிற்கும், புணர்ச்சியின் மகிழ்தலும் புகழ்தலும் என்னும் இரண்டும் தலைமகன் கூட்டத்திற்கும் உரியவாம் என்று கொள்க. 123

ஒத்த நூற்பாக்கள்

'முன்னிலை .... .... ... புலவர்' தொ. பொ. 101

'மெய்தொட்டுப் .... .... கிளவியும்'. தொல். பொ. 102

'முழுதும் — ந அ. 127

'இரந்துகொண்டு உறுதற்கு எண்ணல் இரந்து
பின்நிலை நிற்றல் முன்னிலை ஆக்கல்
மெய்தொட்டுப் பயிறல் பொய்பா ராட்டல்
இடம்பெற்றுத் தழாஅல் வழிபாடு மறுத்தல்
இடையூறு அதனை இயல்புஉறக் கிளத்தல்
நீட்டம்நினைந்து இரங்கல் கூட்டம்மறுத்து எதிர்கொளல்
குறுநகை உணர்தல் உறுநகை வியத்தல்

மொழிபெற விரும்பல் முயங்குதல் உறுதல்
கலவியின் மகிழ்தல் புகழ்தல்எண் ணிரண்டும்
குலம்மலி தலைவியின் கூட்டத்து விரியே'.மா. அ. 19

'கலவி உரைத்தலும் இருவயின் ஒத்தலும்
கிளவி வேட்டலும் நலம்புனைந்து உரைத்தலும்
பிரிவுஉணர்த் தல்லொடு பருவரல் அறிதலும்
அருட்குணம் உரைத்தலும் அணிமை கூறலும்
ஆடுஇடத்து உய்த்தலும் அருமை அறிதலும்
பாங்கியை அறிதலும் பகருங் காலை
நீங்கா இயற்கை நெறிஎன மொழிப'. மு. வீ. 8

123

## வன்புறை வகை

496 ஐயம் நீர்த்தல் பிரிவுஅறி வுறுத்தல்என்று
எய்திய வன்புறை இருவகைத்து ஆகும்.

நிறுத்த முறையானே (120-ஆம் நூற்பா) வன்புறை உணர்த்துவனவற்றுள், இஃது அதன்வகை இத்துணைத்து என்கின்றது.

(இ-ள்) ஐயம் தீர்த்தலும் பிரிவு அறிவுறுத்தலும் என மேற்கூறிய வன்புறை இரண்டு கூற்றினை உடைத்தாம் என்றவாறு.

வன்புறை—வற்புறுத்தல்.

ஒத்த நூற்பாக்கள்

முழுதும் — ந. அ. 128

'சந்தயம் தவிர்த்தல் தணத்தல்உணர்த் தல்என
வந்த இரண்டும் வன்புறை வகையே'. மா. அ. 20

124

## வன்புறை விரி

497 அணிந்துழி நாணியது உணர்ந்துதெளி வித்தலும்[1]
பெருநயப்பு உரைத்தலும்[2] தெய்வத்திறம் பேசலும்[3]

பிரியேன் என்றலும்[4] பிரிந்துவருகு என்றலும்[5]
இடம்அணித்து என்றலும்[6] என்றுஇவை ஆறும்
மடன்அறத் தெரிந்த வன்புறை விரியே.

இது வன்புறை விரி இத்துணைப் பகுதித்து என்கின்றது.

(இ-ள்) அணிந்துழி நாணியது உணர்ந்து தெளிவித்தல் முதலாக இடம் அணித்து என்றல் ஈறுகச் சொல்லப்பட்ட ஆறும் தலைமகளது அறிவின்மை நீங்க ஆராய்ந்து கூறிய வன்புறையின் விரியாம் என்றவாறு.

விளக்கம்

1 தான் புனைந்தமை வேறுபாட்டைப் புலப்படுத்தும் என்று தலைவி நாணியதை அறிந்த தலைவன், 'முன் போலவே அணிந்தேன்' என்று அவளைத் தெளிவித்தல்.

2 தனது மிக்க காதலைப் புகழ்ச்சிவகையான் தலைவன் உரைத்தல்.

3 தம்மைச் சேர்த்து வைத்த ஊழ்வினையின் தன்மையைத் தலைவன் கூறுதல்.

4 தலைவியை 'என்றும் பிரியேன்' என்று தலைவன் சொல்லுதல்.

5 இருவர் நலமும் குறித்துப் 'போய் வருவேன்' என்று தலைவன் தலைவியிடம் கூறுதல்.

6 தம்முடைய ஊர்கள் ஒன்றுக்கு ஒன்று அணிமையில் உள்ளவாற்றைத் தலைவன் தலைவிக்குக் கூறுதல்.

ஒத்த நூற்பாக்கள்

முழுதும் — ந. அ. 128

‘ அணிந்தமை கூறல் அறநயப்பு உரைத்தல்
பணிந்துஎழு தெய்வப் பான்மை உணர்த்தல்
பிரியேன் என்றல் பிரிந்துவருகு என்றல்
இடம்அணித்து என்றல் இருபதமும் வேண்டல்
உடன்ஏழ் வன்புறைக்கு உரித்துஎனும் விரியே ’.

மா. அ. 21]

அணிந்துழி நாணியது உணர்ந்து தெளிவித்தல் :

‘ நாவியும் கார்அகில் ஆவியும் தோய்குழல் நாணிஅஞ்சேல்
வாவியும் சோலையும் சூழ்தஞ்சை வாணன்தென் மாறைவயல்
காவியும் சேலும் கமலமும் காட்டும்நின் கண்மலரும்
ஆவியும் போலஇனி யார் அணி யாக அணிந்தனமே ’.

தஞ்சை. 20

எனவும்,

[புழுகும் அகிற்புகையும் தோய்ந்த குழலை உடையாய் ! வாவியும் சோலையும் சூழ்ந்த தஞ்சைவாணனுடைய மாறை நகர் சூழ்ந்த வயலிடத்துள்ள காவியும் கயலும் போன்ற நின் கண்களும் உயிரும் போன்று இனிய தோழியர் அணியுமாறு நினக்கு அணிசெய்துள்ளேன் ஆதலின், நாணம் உற்று அஞ்சாதே ]

பெருநயப்பு உரைத்தல் :

‘ கொங்குதேர் வாழ்க்கை அஞ்சிறைத் தும்பி
காமம் செப்பாது கண்டது மொழிமோ
பயிலியது கெழீஇய நட்பின் மயில்இயல்
செறிஎயிற்று அரிவை கூந்தலின்
நறியவும் உளவோ நீ அறியும் பூவே ’.

எனவும் வரும். இது குறுந்தொகை. (2)

[நறுமணத்தை ஆராய்தலையே வாழ்க்கைத் தொழிலாக உடைய வண்டே ! என் நிலத்து வண்டு ஆகையால், என் மாட்டு வாரம் வைத்துக் கூறுது உண்மையைச் சொல் ;

பொருந்திய நட்பினையும், மயில் இயலினையும், செறிஎயிற் றினையும் உடைய இத்தலைவியின் கூந்தலைவிட மணம் கமழும் பூக்களாக நீ அறிந்தன உளவாயின் கூறு.]

தெய்வத்திறம் பேசல் :

'தேவரில் பெற்றநம் செல்வக் கடிவடி வார்திருவே
யாவரில் பெற்றுஇனி யார்சிதைப் பார்இமை யாதமுக்கண்
மூவரில் பெற்றவர் சிற்றம் பலம்அணி மொய்பொழில்வாய்
பூஅரில் பெற்ற குழலிஎன் வாடிப் புலம்புவதே'.

திருக்கோவை 14

எனவும்,

[இமையாத முக்கண்களைச் சூரியன் சந்திரன் செந்தீக் கடவுள் இவர்களால் பெற்ற சிற்றம்பலவனின் பொழிற்கண், மணமலர் சூடிய கூந்தலை உடையாய்! முயற்சியும் உளப் பாடும் இன்றித் தேவராலே பெற்ற நம் அழகிய மணத்தை வாய்ப்புப்பெற்றுச் சிதைப்பார் ஒருவரும் இரார்; ஆதலின் நீ வாடித் துன்புறுதல் வேண்டா.]

பிரியேன் என்றல் :

'சிந்தா மணிதெண் கடல்அமு தம்தில்லை யான்அருளால்
வந்தால் இகழப் படுமே மடமான் விழிமயிலே
அந்தா மரைஅன் னமேநின்னை யான்அகன்று ஆற்றுவனோ
சிந்தா குலம்உற்றுஎன் னோஎன்னை வாட்டம் திருத்துவதே'.

திருக்கோவை 12

எனவும்,

[மான் விழியை உடைய மயில்போல்வாய்! திருவே! சிந்தாமணியும் அமுதமும் இறைவன் அருளால் கிடைக்கப் பெறின், அவை பெற்றவனால் இகழப்படுமோ? அவற்றை ஒத்த சிறப்புடைய நின்னை யான் பிரிந்து ஆற்றியிரேன். ஆதலின் நீ மனம் மயக்கம் உற்று என்னைவாட்டுவது ஏன்?]

பிரிந்து வருகு என்றல் :

'தெளிவளர் வான்சிலை செங்கனி வெண்முத்தம் திங்களின்வாய்ந்து
அளிவளர் வல்லிஅன் னாய்முன்னி ஆடுபின் யான்அளவா
ஒளிவளர் தில்லை ஒருவன் கயிலை உகுபெருந்தேன்
துளிவளர் சாரல் கரந்துஉங் ஙனேவந்து தோன்றுவனே'.

திருக்கோவை. 16

எனவும்,

[கால்நிமிர்ந்த பெரிய விற்களும், கொவ்வைக் கனியும் முத்துக்களும் சந்திரனில் பெற்று, வண்டு மொய்க்கும் கொடி போல்வாய்! யான் கூறுவதனைத் தெளிவாயாக. இனி, முற்பட்டு விளையாடுவாயாக. யான் சிற்றம்பலவனின் கயிலைச் சாரலுள் சிறிதுபோது மறைந்து இருந்து மீண்டும் உவ்விடத்தே வந்து தோன்றுவேன்.]

இடம் அணித்து என்றல் ;

'வருங்குன்றம் ஒன்றுஉரித் தோன்தில்லை அம்பல வன்மலையத்து
இருங்குன்ற வாணர் இளங்கொடி யேஇடர் எய்தல்எம்மூர்ப்
பருங்குன்ற மாளிகை நுண்களபத்துஒளி பாயநும்மூர்க்
கருங்குன்றம் வெண்ணிறக் கஞ்சுகம் ஏய்க்கும் கனங்குழையே'.

திருக்கோவை. 15

எனவும் வரும்.

[மலைபோன்ற யானையை உரித்த தில்லையான் மலைய மலைக்குறவர் பயந்த இளங்கொடியே! வருந்தாதே; எம் ஊரின் பெரிய மாளிகைகளில் தீட்டிய சாந்தின் ஒளி பரவுதலால், உம் ஊர்க்கண் உள்ள கரியகுன்றம் வெள்ளைச் சட்டை அணிந்தது போலக் காணப்படும்.]

இவற்றுள், முன்னைய மூன்றும் ஐயம் தீர்த்தற்கும், ஏனைய பிரிவு அறிவுறுத்தற்கும் உரிய எனக்கொள்க.

'மடன் அறத்தெரிந்த' என்ற மிகையானே, தெய்வத்திறம் பேசியபின்னர்ப் பருவரல் உணர்தலும் அதன்பின்னர்ப்

பிரிவு அச்சமும், அதன்பின்னர் இன்றியமையாமை எடுத்து உரைத்தலும், பிரியேன் என்றலின் பின்னர்த் தீராத் தேற்றமும் வரவும்பெறும். தீராத்தேற்றம்—தீராதவாறு தேற்றுதல்.

பருவரல் உணர்தல் :

'கறிஉறு சாரல் களிஉறு தோகைக் கணம்நடம்செய்
வெறியுறு சோலை விழைவுஉற நீடில் வெருவுறுமான்
மறிஉறு செங்கண் மதுமலர்க் கோதை நொதுமலர்வந்து
அறிவுறல் கூடும்என் றோதிரு மேனி அழுங்குவதே'.
அம்பி. 11

எனவும்,

[பருவரல் உணர்தல்— தலைவி மனத்துக்கொண்ட வருத்தத்தைத் தலைவன் உணர்ந்து கூறுதல்.

மிளகுக்கொடி வளரும் பக்கமலைகளில் மயில்கள் ஆடும் மணம்மிக்க சோலையில் யான் காலம் தாழ்த்தித் தங்கின், அயலார் அறிதல் கூடும் என்றோ, மான் விழி நங்கையே! நீ உடல் வாடி வருந்துகிறாய் ?]

பிரிவு அச்சம் :

'நீங்கின் சிறிது பொழுதுநில் லாஉயிர் நேரிழைக்குஇன்று
ஈங்குஇப் படிவைகில் எய்தும் பழிநமக்கு என்றுசிந்தித்து
ஓங்கல் சிலம்பிடை நின்றுஊச லாடி உயங்கும்நம்மைத்
தாங்கத் தகும்துணை யாதுகொல் லோஎன் தனிநெஞ்சமே'.
அம்பி. 12

எனவும்,

[பிரிவுஅச்சம் — தலைவியிடத்து அன்பு காரணமாகப் பிரிதற்குத் தலைவன் அஞ்சுதல்.

மனமே! 'யாம் பிரியின் தலைவி உயிர் நீப்பாள்; இங்கேயே இருப்பின் பழிவந்து சேரும்' என்று எண்ணியவாறே இம்மலையில் ஊசலாடி வாடும் நம்மைத் தாங்கி ஒருவழிப் படுத்தும் துணை யாதோ ?]

இன்றியமையாமை எடுத்து உரைத்தல் :

' நீங்கரும் பொற்கழல் சிற்றம் பலவர் நெடுவிசும்பும்
வாங்கிருந் தெண்கடல் வையமும் எய்தினும் யான்மறவேன்
தீங்கரும் பும்அமிர் தும்செழுந் தேனும் பொதிந்து செப்பும்
கோங்கு அரும் பும்தொலைத்து என்னையும் ஆட்கொண்ட கொங்கைகளே'.
திருக்கோவை. 46

எனவும்,

[இன்றியமையாமை எடுத்துஉரைத்தல்—தலைவி தனக்கு என்றும் நீங்கத்தகாத தேவையுடையவள் என்பதைத் தலைவன் கூறுதல்.

சிவபெருமானுக்கு உரிமையான தேவர்உலகமும் இவ்வுலகமும் கிடைப்பதாயினும் கரும்பும் அமிர்தும் தேனும் பொதிந்து, சிமிழும் கோங்கு அரும்புமாகிய இவற்றை ஒத்த வடிவினவாய் என்னைத் தம் வசப்படுத்திய இத் தலைவியின் கொங்கைகளை மறவேன்.]

தீராத் தேற்றம் :

' மெல்லியல் அரிவைநின் நல்அகம் புலப்ப
நின்துறந்து அமைகுவென் ஆயின் என்துறந்து
இரவலர் வாரா வைகல்
பலவா குகயான் செலவுஉறு தகவே '

எனவும் வரும். இது குறுந்தொகை. (137)

[தீராத்தேற்றம் — எஞ்ஞான்றும் பிரியாமைக்குக் காரணம் ஆகிய சூளுறுதல்.

தலைவியே ! நின்மனம் வருந்த நின்னைப் பிரிந்து யான் கவலையற்று இருப்பின், என் வாழ்க்கையில் என்னை நீத்து இரவலர்கள் என்வீட்டிற்கு வாராத நாள்கள் பலவாகுக.]

## தெளிவு

498 தலைவன் மாற்றம் தலைவி தேற்றம்
தெளிவாம் என்ப தெளிந்திசி னோரே.

இது நிறுத்தமுறையானே (120) தெளிவிற்கு வகையும் விரியும் இன்மையின், அதன் இலக்கணம் கூறுகின்றது.

(இ-ள்) தலைவன் சொல்லைத் தலைமகள் தெளிதலைத் தெளிவு என்று சொல்லுவர் புலவர் என்றவாறு.

தெளிவுக்குச் செய்யுள் :

'எத்தும் தமதுஉரை தேறிநின் றேனைஇங் கேதனியே
வைத்துஅங்கு அகன்று மறந்துஉரை யார்வறி யோர்கவர
முத்தும் துகிரும் இரங்கும் தரங்கம் முகந்துஎறிந்து
தத்தும்புனல்வையை சூழ்தஞ்சை வாணன் தமிழ்வெற்பரே'.

தஞ்சை 26
எனவரும். 126

[ஏழைகள் கொள்ளுமாறு முத்துக்களையும் பவளத்துண்டுகளையும் அலைகள் வாரி வீசக் கரை புரண்டோடும் வைகையை சூழ்ந்த தஞ்சை வாணனது மாறை மலைத்தலைவர், அவர் சொற்களை நம்பியே உயிர்வாழும் என்னை இங்கே தனியே துன்புற விடுத்துத் தாம் தமது ஊரில் என்னை மறந்து தங்கி இரார்.]

ஒத்த நூற்பாக்கள்

'முழுதும் — ந. அ. 130

'இறைவன் கூறுதல் இறைவி தேறுதல்
அறைவர் தெளிவுஎன்று அறிவுடை யோரே'.
மா. அ. 22
126

## பிரிவுழி மகிழ்ச்சியின் விரி

499 செல்லும் கிழத்தி செலவுகண்டு உளத்தொடு
சொல்லலும் பாகனொடு சொல்லலும் இரண்டும்
பிரிவுழி மகிழ்ச்சியின் விரிஎனக் கொளவே.

இது நிறுத்த முறையானே, பிரிவுழி மகிழ்ச்சிக்கு வகை இன்மையின், அதன் விரி இத்துணைத்து என்கின்றது,

(இ-ள்) அவ்வாறு அவ்விடத்து நீங்கித் தலைமகள் தன்னைக் காணாமல் தான் அவளைக் காண்பதோர் அணிமைக்கண் நின்ற தலைமகன், புணர்ச்சிக் களத்து நின்றும் போகா நின்ற தலைமகளது செலவு கண்டு தன்நெஞ்சொடு கூறலும், பாகனொடு கூறலும் ஆகிய இரண்டும் பிரிவுழி மகிழ்ச்சியின் விரியாம் எனக்கொள்க என்றவாறு.

விளக்கம்

[இதனைப் ' பெற்றவழி மகிழ்ச்சியும் ' தொ. பொ. 102 என்னும் தொல்காப்பியம்.

ஒத்த நூற்பாக்கள்

முழுதும் — ந. அ, 131

' வரிவளை செலவினை மனத்தொடு கூறலும்
பரிவுடை மான்தேர்ப் பாகனொடு கூறலும்
பிரிவுழி மகிழ்ச்சியின் விரிஎனப் படுமே '. மா. அ. 23]

செல்லும் கிழத்தி செலவுகண்டு உளத்தொடு சொல்லல் :

' காணா மரபினது உயிர்என மொழிவோர்
நாணிலர் மன்ற பொய்மொழிந் தனரே
யாஅம் காண்டும்எம் அரும்பெறல் உயிரே
சொல்லும் ஆடும் மென்மெல இயலும்
கணைக்கால் நுணுகிய நுசுப்பின்
மழைக்கண் மாதர் பணைப்பெருந் தோட்டே '.

எனவும்,

[' உயிர் காட்சி அளவைத்து அன்று ' என்று கூறுவார் தவறு கூறுதற்கண் நாணமற்றவர் ஆவர். அவர் பொய்யே கூறுகின்றனர். யாம் எம் அரிய உயிரைக் கண்ணால் காணும்

வாய்ப்பினம். அது எம்மோடு பேசும்; மென்மையாக நடக்கும், நுண்ணிய இடையினையும், குளிர்ந்து நோக்கும் பார்வையினையும் பெருந் தோள்களையும் உடையது அது ]

பாகனொடு சொல்லல் :

'தென்பார்த் திலகம்அன் னான்தஞ்சை வாணன்தென் மாறைமுந்நீர்
வன்பால் திரள்முத்தம் வண்டலின் மேல்வரும் ஏதம்அஞ்சி
முன்பார்த்துஎன் நெஞ்சம் வழிபார்த்து ஒதுங்க முறைமுறைதன்
பின்பார்த்து ஒதுங்குதல் காண்வல வாஒரு பெண்அணங்கே'.

தஞ்சை. 28

எனவரும்.

[பாகனே ! ஒரு பெண் அணங்கு தஞ்சை வாணன் மாறையிலே கடல்அலை தன் வண்டலை அழித்து விடுமோ என்று முன் பார்த்து, பின்னே தொடர்ந்துவரும் என் நெஞ்சம் வரும் வழியைப் பின் பார்த்துச் செல்லுதலைக் காண்.]

127

## பிரிவுழிக் கலங்கலின் வகை

500 மருள்உற்று உரைத்தல் தெருள்உற்று உரைத்தல்என்று
இருவகைத்து ஆகும் பிரிவுழிக் கலங்கல்.

இது பிரிவுழிக் கலங்கலின் வகை இத்துணைத்து என்கின்றது.

(இ-ள்) மருள்உற்று உரைத்தலும் தெருள்உற்று உரைத்தலும் என இரண்டு வகையினை உடைத்தாம் பிரிவுழிக் கலங்கல் என்றவாறு. 128

### விளக்கம்

மருள்உற்று உரைத்தல் — மனம் மயக்கம்உற்றுக் கூறுதல்; தெருள்உற்று உரைத்தல் — மனத்தில் தெளிவுபெற்றுக் கூறுதல். இதனைப் 'பிரிந்தவழிக் கலங்கல்' (தொ. பொ. 102) என்னும் தொல்காப்பியம்.

ஒத்த நூற்பாக்கள்

முழுதும் — ந. அ. 132

' மருள்பெற நிகழ்த்தலும் தெருள்பெற நிகழ்த்தலும்
பிரிவுழிக் கலங்கல் வகைஎனப் படுமே '. மா. அ 24
128

## பிரிவுழிக் கலங்கலின் விரி

501 ஆய வெள்ளம் வழிபடக் கண்டுஇது
மாயமோ என்றலும்[1] வாயில்பெற்று உய்தலும்[2]
பண்புபா ராட்டலும்[3] பயந்தோர்ப் பழிச்சலும்[4]
கண்படை பெறாது கங்குல்நோ தலும்[5] எனும்
ஐந்தும் பிரிவுழிக் கலங்கல்விரி ஆகும்.

இது பிரிவுழிக் கலங்கலின்விரி இத்துணைத்து என்கின்றது.

(இ-ள்) தலைமகளை ஆயவெள்ளம் வழிபடக்கண்டு இது மாயமோ என்றல் முதலாகக் கண்படை பெறாது கங்குல் நோதல் ஈறுகச் சொல்லப்பட்ட ஐந்தும் பிரிவுழிக் கலங்கலின் விரியாம் என்றவாறு.

### விளக்கம்

1 [ஆயவெள்ளம் வழிபடக் கண்டு இது மாயமோ என்றல்- பாங்கியர் கூட்டம் தலைவிக்கு வழிபாடு செய்ய அதனைத் தலைவன் கண்டு ' இவ்வளவு பாதுகாப்பில் இருக்கும் இவளை நான் அடைந்து இன்புற்றது பொய்யோ ' என்று எண்ணுதல்.

2 தலைவியை பெறுதற்குத் தூது இன்னுள் என்பதை அறிந்து தலைவன் ஆற்றுமை நீங்குதல்.

3 தலைவியின் அழகைத் தலைவன் மிகப் புகழுதல்.

4 தலைவியின் தாய்தந்தையர்களைத் தலைவன் வாழ்த்தல்.

5 தலைவியைப் பிரிந்த தலைவன் துயில் பெருமல் இராப் பொழுதில் வருந்திக் கூறுதல்.

ஒத்த நூற்பாக்கள்

முழுதும் — ௳ ந. அ. 133

'புனம்மயில் சாயலை ஆயம் போற்றலின்
கனவுகொல் என்றலும் வாயில் காண்டலும்
பண்புபா ராட்டலும் பயந்தோர்ப் பழிச்சலும்
காதுஅடர் கண்படை பெறுது கங்குல்
நோதலும் பிரிவுழிக் கலங்கல்விரி நோக்கம்'. மா. அ 25]

ஆயவெள்ளம் வழிபடக் கண்டு இது மாயமோ என்றல் :

'புணர்ப்போன்நிலனும்விசும்பும்பொருப்பும்தண்பூங்கழலின்
இணர்ப்போது எனக்குஅணிஆக்கும்தொல்லோன்தில்லைச்சூழ்பொழில்வாய்
இணர்ப்போதுஅணிகுழல்ஏழைதன்நீர்மைஇந்நீர்மைஎன்றால்
புணர்ப்போகனவோபிறிதோஅறியேன்புகுந்ததுவே'.

திருக்கோவை. 17

எனவும்,

[மண்ணும் விண்ணும் மலைகளும் படைக்கும் பெரியோன் ஆயினும் தன் திருவடிகளை என் முடிமலரியாக்கும் எளிமையுடைய பெருமானது தில்லைப் பொழிலில், இத் தலைவியின் பெருமை இத்தன்மைத்தாயின், இவளை யான்பெற்றது மாயமோ! கனவோ! இரண்டுமன்றி வேறொன்றோ! இன்னது என்று அறியேன்.]

வாயில் பெற்று உய்தல் :

'உயிர்ஒன்று உளமும்ஒன்று ஒன்றே சிறப்புஇவட்கு என்னொடுஎன்னப்
பயில்கின்ற சென்று செவியுற நீள்படைக் கண்கள்விண்வாய்ச்
செயிர்ஒன்று முப்புரம் செற்றவன் தில்லைச்சிற் றம்பலத்துப்
பயில்கின்ற கூத்தன் அருள்எனல் ஆகும் பணிமொழிக்கே'.

எனவும், திருக்கோவை. 18

[திரிபுரங்களை அழித்த தில்லைக்கூத்தன் அருளேவடிவாக வந்த தலைவியின் காதளவும் நீண்ட படைக்கண்கள், தலைவியாகிய தன்னோடு தோழியாகிய அவளுக்கு உயிரும் ஒன்று, மனமும் ஒன்று, இருமுது குரவரால் செய்யப்படும் சிறப்பும் ஒன்று என்பதைத் தெரிவிக்கின்றன.]

பண்பு பாராட்டல் :

‘ குன்ற நாடன் குன்றத்துக் கவாஅன்
பைஞ்சுனை பூத்த பகுவாய்க் குவளையும்
அஞ்சில் ஓதி அசைஇயல் கொடிச்சி
கண்போல் மலர்தல் அரிது அவள்
தன்போல் சாயல் மஞ்ஞைக்கும் அரிதே ’.

எனவும், ஐங்குறு 299

[வெற்பன் மலைப்பக்கத்துச் சுனைக்கண் பூத்த குவளைகள் இக்குன்றவர்மகளின் கண்போல் மலர்தலும் இயலாது. இவள்போன்ற கண்ணுக்கு இனிமைதரும் மென்மை மயிலுக்கும் அமையாது.]

பயந்தோர்ப் பழிச்சல் :

‘ தாயசெந் தாமரைப் பொன்னைஎன் ஆவித் துணையைத்தந்த
தாயரும் தந்தையும் தாரணிமேல் உந்தி தந்த அண்ணல்
ஆயுவும் தாதை அருளும் புராரி அழகுஈறிக்கும்
தேயுவும் இந்திரன் செல்வமும் கூடிச் சிறக்கநின்றே ’,

எனவும், அம்பி. 23

[திருமகள் போல்வாளாய் என் உயிருக்குத் துணையாகிய இவளை எனக்குப் பெற்று அளித்த தாயும் தந்தையும் இவ்வுலகில் பிரமனைப்போன்ற ஆயுளும், திருமாலைப்போன்ற அருளும், சிவபெருமானைப்போன்ற ஒளியும், இந்திரனைப் போன்ற செல்வமும் பெற்றுச் சிறப்பாராக. தாயர் என்றது பெற்ற நற்றாயையும், ஆட்டுவாள், ஊட்டுவாள், ஓல் உறுத்துவாள், நொடிபயிற்றுவாள், கைத்தாய் என்ற செவிலித் தாயர் ஐவரையும், உட்கொண்டு சொற்றது ]

கண்படைபெறாது கங்குல் நோதல் :

மயில்போல் இனியமென் சாயல்நல் லாருடன் வல்வினையேன்
துயில்போனது; இன்னமும் தோன்றவும் காண்கிலன். சோலைஇளங்
குயில்போல் மொழியவர் தம்நுழல் போல்இருள் கூர்ந்து கொற்றம்
அயில்போல் மறம்செய் கண்போல், அறநீளும் அருங்கங்குலே.

எனவும் வரும். அம்பி. 24

[மயில்சாயலாளுடன் நீங்கிய என்துயிலை இன்னும் மீளப் பெற்றிலேன். அக்துயில்மொழியாளின் கூந்தல் போன்று இருண்டு, அவள் வேற்கண்போலத் துன்பம் செய்து, இராப்பொழுது நீண்டுகொண்டிருக்கின்றது]

இவற்றுள், ஆயவெள்ளம் வழிபடக்கண்டு இது மாயமோ என்றல் மருள்உற்று உரைத்தற்கும், ஏனைய நான்கும் தெருள் உற்று உரைத்தற்கும் உரிய.

இனி ஒன்றென முடித்தலான், பிரிந்துழிக் கலங்கி நெஞ்சொடு கூறலும் வரப்பெறும். அதற்குச் செய்யுள் :

'இல்லோன் இன்பம் காமுற் றுஅங்கு,
அரிதுவேட் டனையே; நெஞ்சே! காதலி
நல்லள் ஆகுதல் அறிந்துஆங் கு
அரியள் ஆகுதல் அறியா தோயே'. குறுந் - 120

எனவரும்.

[வறியவன் இன்பத்தை விரும்பி வாடுவதுபோல நம் தகுதிக்கு அரியது ஒன்றை விரும்பும் நெஞ்சே! நம் காதலி நல்லாள் என்பதை அறிந்துள்ள நீ அவள் நமக்குக் கிடைத்தற்கு அரியவள் என்பதனை அறியாது இருக்கின்றனையே!]
129

## இடந்தலைப்பாட்டின் வகை

502 தெய்வம் தெளிதல் கூடல் விடுத்தல்என்று
இவ்வோர் மூவகைத்து இடந்தலைப் பாடே.

இது நிறுத்தமுறையானே இடந்தலைப்பாட்டின் வகை இத்துணைத்து என்கின்றது.

(இ-ள்) தெய்வம் தெளிதலும் கூடலும் விடுத்தலும் என இடந்தலைப்பாடு மூவகையினை உடைத்து என்றவாறு.
130

விளக்கம்

இடந்தலைப்பாடு — இயற்கைப் புணர்ச்சி நிகழ்ந்த இடத்தைத் தலைவன் அடைதல்.

தெய்வம் தெளிதல் — இதற்கு முன் தலைவியைத் தானே கூட்டுவித்த தெய்வம் மீண்டும் கூட்டுவிக்கும் என்று மனம் தெளிதல்.

ஒத்த நூற்பாக்கள்

'பாங்கிலன் தமியோள் இடந்தலைப் படலும்'.
இறை அக. 3

முழுதும் — ந. அ. 134

'முயற்சிஇல் தெய்வம் தெளிதல் முயங்குதல்
இயங்குதல் எனமூ வகைத்துஇடந் தலையே'.
மா. அ. 26

'பொழிலிடைச் சேறல் இடந்தலைச் சொன்ன
வழியொடு கூட்டி வகுத்திசி னோரே'. மு. வீ களா. 13.
130

## இடந்தலைப்பாட்டின் விரி

503 தந்த தெய்வம் தரும்எனச் சேறலும்[1]
முந்துஉறக் காண்டலும்[2] முயங்கலும்[3] புகழ்தலும்[4]
உடன்புணர் ஆயத்து உய்த்தலும்[5] எனஐந்து
இடந்தலைப் பாட்டின் இலக்கண விரியே.

இஃது இடந்தலைப்பாட்டின் விரி இத்துணைப் பகுதித்து என்கின்றது.

(இ-ள்) தந்த தெய்வம் தரும் எனச் சேறல் முதலாக ஆயத்து உய்த்தல் ஈறாக இடந்தலைப்பாட்டின் இலக்கணவிரி ஐந்தாம் என்றவாறு.

## விளக்கம்

1 [‘ தலைவியை முன்பு அளித்த தெய்வம் இன்னும் தரும் ’ என்று தலைவன் தலைவியை முதல்நாள் கண்ட இடத்திற்குச் செல்லுதல்.

2 தலைவியைத் தலைவன் முன்பு போலத் தனித்து நின்றதை நேரில் காணுதல்.

3 தலைவியைத் தழுவுதல்.

4 தலைவியின் அழகைப் புகழ்தல்.

5 பாங்கியர்கூட்டத்தை அடையும்படி தலைவன் தலைவியை விடுத்தல்.

## ஒத்த நூற்பாக்கள்

முழுதும் — ந. அ. 135

‘ சேறலில் தந்த தெய்வம் தரும்எனச்
சேறல் காண்டல் சேர்தல் புகழ்தல்
ஆயத்து உய்த்தலோடு ஐந்துஇடந் தலைஎன
மேய பின்உறு புணர்ச்சியின் விரியே’. மா. அ. 27]

### தந்த தெய்வம் தரும் எனச்சேறல் :

*என்அறி வால் வந்தது அன்றுஇது முன்னும் பின்னும்முயன்றால்*
*மன்நெறி தந்தது இருந்தன்று தெய்வம் வருந்தல், நெஞ்சே*
*மின்எறி செஞ்சடைக் கூத்தப் பிரான் வியன் தில்லைமுந்நீர்ப்*
*பொன்எறி வார்துறை வாய்ச்சென்று மின்தோய் பொழில்இடத்தே.*

எனவும், திரு. 49

[ மனமே ! கூத்தப்பிரான் தில்லைக் கடல்துறையை அடுத்த பொழிற்கண் தலைவியைக் கூடும் வாய்ப்பு: முன்னும் என்அறிவால் முயன்று பெற்றது அன்று; இன்னும் அவ் வாய்ப்பு அளித்த தெய்வம் நமக்குக் கூட்டுவிப்பதற்கு உள்ளது; ஆதலின் வருந்தாதே.]

முத்துறக் காண்டல் :

நேயத்த தாய்நென்னல் என்னைப் புணர்ந்து நெஞ் சம் நெகப் போய்
ஆயத்த தாய்அமிழ் தாய்அணங் காய் அரன் அம்பலம்போல்
தேயத்த தாய் என்தன் சிந்தைய தாய்த் தெரி யின் பெரிதும்
மாயத்த தாகி இதோ வந்து நின்றது என் மன் உயிரே.

எனவும், திரு. 39

[என் உயிர், நேற்று உள்ளம் நெகிழ்ச்சியுடையதாய் என்னைக்கூடி, பின் நேயம் இல்லது போல் என் நெஞ்சு உடையும்வகைப் பிரிந்துசென்று தன்தோழியர் ஆயத்தைக் கூடி, இன்பம் செய்தலின் அமிழ்தாய், துன்பம் செய்தலின் அணங்காய், புலப்பாட்டான் பொன்னம்பலம்போல ஒளியை உடையதாய், புலப்படாது வந்து என்மனத்தின்கண்ணதாய் ஆராயின் பெரிதும் மாயத்தை உடையதாய் இவ்விடத்து வந்து நிற்கின்றது ]

முயங்கல் :

'வேட்ட பொழுதின் அவைஅவை போலுமே
தோட்டார் கதுப்பினாள் தோள்'. குறள், 1105

எனவும் வரும்.

சுரும்பு உழு கூந்தலும், செவ்வாய் மழலையும் சோதிநுதல்
அரும்பிய வேர்வும், அலமரு நோக்கும், அசைந்துஒசியும்
கரும்புரு வச்சிலை யும், நிலை சோரும் கலையும், கண்டு,
விரும்பின மே, மன மே! களி கூர் இன்ப வெள்ளத்தையே.

இதுவும் அது. அம்பி. 41

[பூச்சூடிய கூந்தலை உடைய இத்தலைவியின் தோள்கள் எவ்வெவற்றை விரும்புகின்றனமோ, அவ்வப்பொருள்களாய் அமைந்து இன்பம் தருகின்றன.

மனனே ! தலைவியின் வண்டுகோதும் கூந்தல், மழலை மொழி, நெற்றியில் அரும்பிய வேர்வை, சுழலும் பார்வை,

அசைந்து தளரும் புருவவில், நிலைசோரும் ஆடை இவற்றை மனங்கொண்டு மகிழ்ச்சி மிகுதற்குக் காரணமான இன்ப வெள்ளத்தை விரும்பினோம்.]

புகழ்தல் :

கனமே கருங்குழல், கங்குல்அன் றே;கண் கருவிளையின்
இனமே, குவளையும் நெய்தலும் அல்ல; இவர்க்கு இடையென்
மனமே, வளர்இள வஞ்சிஅன் றே;வஞ்ச மாறன்வைத்த
தனமே தனம்,கன கத்தட மேருச் சயிலமன்றே '. அம்பி. 42

எனவும்,

[தலைவியின் கூந்தல் மேகமே; இருள்அன்று; கண்கள் கருவிளையே, குவளையும் நெய்தலும் அல்ல; இடை என்மன மாகிய அருவப்பொருளே, வஞ்சிக்கொடி அன்று: தனம் மன்மதனுடைய செல்வக்குவியலே, மேருமலை அன்று.]

உடன்புணர் ஆயத்து உய்த்தல் :

' சூளாமணிஉம்பர்க்குஆயவன்சூழ்பொழில்தில்லைஅன்னாய்க்கு
ஆளாய் ஒழிந்ததுஎன் ஆருயிர் ஆரமிழ் தேஅணங்கே
தோளா மணியே பிணையே பலசொல்லி என்னைதுன்னும்
நாள்ஆர் மலர்ப்பொழில் வாய்எழில் ஆயம் நணுகுகவே'.
திருக்கோவை 47

எனவும் வரும்.

[அமிழ்தே ! அணங்கே ! துளைமிடாத மணியே ! மான் பிணையே ! பலசொல்லுவது ஏன் ? தில்லைஅன்ன உனக்கு என் உயிர் அடிமையாய் விட்டது. நீ இனி, பொழிலிடத்து நின் தோழியர் குழாத்தை அடைவாயாக.]

இவற்றுள், தந்ததெய்வம் தரும் எனச் சேறல் ஆகிய ஒன்றும் தெய்வம் தெளிதற்கும், காண்டலும் முயங்கலும் புகழ்தலும் ஆகிய மூன்றும் கூடற்கும், ஆயத்து உய்த்தல் ஆகிய ஒன்றும் விடுத்தற்கும் உரியவாம்.

'இலக்கணவிரி' என்ற மிகையானே, தந்த தெய்வம் தரும் எனச் சென்ற பின்னர்த் தலைவன் நெஞ்சொடு வினுதலும், அதன் பின்னர்க் கிள்ளை வாழ்த்தலும், அதன் பின்னர் அவள் எதிர்ப்பட்ட இடத்தை அவளாகக் கூறுதலும், அதன் பின்னர் மன்னனை நினைந்து மின்னிடை மெலிதலும், முந்துறக் காண்டலின் பின்னர்த் தனிநிலை கண்டு தளர்வு அகன்று உரைத்தலும், தான் நீங்கியவழிப் பிறந்த வருத்தமும் வேட்கையும் அவள் அறியுமாறு தலைவன் கூறுதலும், அதன்பின்னர்க் கூடற்கு அரிது என வாடி உரைத்தலும், ஆயத்து உய்த்த பின்னர் நீங்கற்கு அருமை நின்று நினைத்தலும் வரவும்பெறும்.

தலைவன் நெஞ்சொடு வினுதல் :

'நீடுங்கொல் லோகொண்ட நேயம்என் ஆயத் தவரிடையில்
தேடுங்கொல் லோவந்து செல்லுங்கொல் லோஅந்தச் செவ்வி இன்னம்
கூடுங்கொல் லோவிதி கூட்டுங்கொல் லோஎன்று கொம்பின்உள்ளம்
வாடுங்கொல் லோ அறியேன்மலைச் சாரலில் வந்துநின்றே'.

அம்பி. 26

எனவும்,

[தலைவி மலைச்சாரலில் வந்துநின்று 'நம் நட்பு நீட்டிக்குமா, அவர் ஆயத்திடை என்னைத் தேடுவாரா, வந்து சென்று விடுவாரா? அந்த வாய்ப்பு இன்னும் கூடுமா, அவ்வாய்ப்பை விதி கூட்டுமா' என்று மனம் வாடுவாளோ? அறியேன்.]

கிள்ளை வாழ்த்தல் :

'வெள்ளம் வரம்பின் ஊழி போகியும்
கிள்ளை வாழிய பலவே ஒள்ளிழை
இரும்பல் கூந்தல் கொடிச்சி
பெருந்தோள் காவல் காட்டி யவ்வே'.

ஐங்குறுநூறு 281

எனவும் வரும்.

[ஒள்ளிய அணிகளையும் ஐம்பாலாகிய கூந்தலையும் உடைய தலைவி புனத்தைக் காவல் காக்கும் வாய்ப்பினை அளித்த கிளிகள் வெள்ளம் ஆகிய பலஆண்டுகளைஉடைய ஊழிக்கால வரையறைக்கு மேலும் நீண்ட காலம் வாழ் வனவாக.

கிள்ளை வாழ்த்தல் போல்வன நச்சினார்க்கினியர் உரைத்தன. தொல். பொ. 102]

'காம்புஇணை யால்களி மாமயி லால்கதிர் மாமணியால்
வாம்பிணை யால்வல்லி ஒல்குத லால்மன்னும் அம்பலவன்
பாம்பிணை யாக்குழை கொண்டோன் கயிலைப் பயில்புனமும்
தேம்பிணைவார்குழலாள்எனத்தோன்றும்என்சிந்தனைக்கே'.
எனவும், [திருககோவை 38

[மூங்கில்களாலும் (தோள்) மயில்களாலும் (சாயல்) மணிகளாலும் (உடல்ஒளி) மான்களாலும் (விழி) தளரும் கொடிகளாலும் (இடை) பாம்பைக் காதணியாகக்கொண்ட சிவபெருமானுடைய கயிலைப் புனமும் என்உள்ளத்திற்குத் தலைவியாகவே காட்சி வழங்குகின்றது.]

மன்னனை நினைந்து மின்னிடை மெலிதல் :

'ஆவிஅன் னாய்கவ லேல்அக லேம்என்று அளித்துஒளித்த
ஆவிஅன் னார்மிக்கு அவாவின ராய்க்கெழு மற்குஅழிவுற்று
ஆவிஅன்னார்மன்னி ஆடுஇடம்சேர்வர்கொல்அம்பலத்துஎம்
ஆவிஅன் னான்பயி லும்கயி லாயத்து அருவரையே'.
எனவும் வரும். [திருக்கோவை 37

[என் உயிர்போல்வாய்! நீ கவலைப்படாதே. உன்னை விட்டு நீங்கேன்' என்று தண்ணளி செய்து போன என்உயிர் போன்ற தலைவர், என்னைக் கூடுதற்கு விதுப்புற்று, அம்பலத் தில் எம் உயிராக விளங்கும் சிவபெருமான் பயிலும் இக் கயிலாய மலைப்பகுதியில் என் உயிர்த்தோழியர் விளையாடும் இடத்திற்கு வந்து வீடுவாரோ ?]

தனிநிலை கண்டு தளர்வு அகன்று உரைத்தல் :

'தாதுஇவர் போதுகொய் யார்தைய லார்அங்கை கூப்பநின்று
சோதி வரிப்பந்து அடியார் சுனைப்புனல் ஆடல்செய்யார்
போதுஇவர் கற்பக நாடுபுல் லென்னத்தம் பொன்அடிப்பாய்
யாதுஇவர் மாதவம் அம்பலத் தான்மலை எய்துதற்கே'.
திருக்கோவை 40

எனவும்,

[தேவர் உலகம் பொலிவு அழிய அதனைவிடுத்து ஏதோ தவம் செய்யக் கருதுவாள்போல அம்பலத்தான் மலையை எய்திய நம்தலைவி, போதுகொய்யாது, தோழியர் போற்றப் பந்து ஆடாது, சுனையில் நீராடாது தனித்து நிற்கிருள்.]

முன் நீங்கியவழித் தன்வருத்தமும் வேட்கையும் அவட்குக் கூறல் :

'நீங்கில் தெறூஉம் குறுகுங்கால் தண்ணெனும்
தீயாண்டுப் பெற்ருள் இவள்'. — குறள் 1104

எனவும்,

[தன்னைவிடுத்து அகன்ருல் வருத்துதலும் தன்னை அணுகினுல் குளிர்ச்சி தருதலும் உடைய புதியதொரு நெருப்பினை இவள் எவ்விடத்தில் இருந்து பெற்றுள்ளாள் ?]

கூடற்கு அரிது என வாடி உரைத்தல் :

'காவிநின்று ஏர்தரு கண்டர்வண் தில்லைக்கண் ணார்கமலத்
தேவினென் றேஐயம் சென்றதுஅன் றேஅறி யச்சிறிது
மாஇயன் றன்னமென் நோக்கிநின் வாய்திற வாவிடின்என்
ஆவிஅன் றேஅமிழ் தேஅணங் கேஇன்று அழிகின்றதே'.
திருக்கோவை 41

எனவும் வரும்.

[மான்போன்ற பார்வையினை உடையாய் ! நீலகண்டருடைய தில்லையில் உள்ள திருமகளே நீ என்று என் உள்ளம்

ஐயுறுகின்றது. அவ்வையம் நீங்கச் சிலசொற்களாவது பேசு. அமிழ்தே! அணங்கே! நின் வாய்ச்சொல் கேளாமல் என் உயிர் அழிந்துகொண்டிருக்கிறது ]

நீங்கற்கு அருமை நின்று நினைந்து இரங்கல் :

‘ பொய்உடையார்க்குஅரன்போல்அகலும்அகன்றல்புணரின்
மெய்உடை யார்க்குஅவன் அம்பலம் போல மிகநணுகும்
மைஉடைவாள்கண் மலைஉடைப்பூண்முலைவாள் நுதல்வான்
பைஉடை வாள்அர வத்துஅல் குல்காக்கும் பைம்புனமே ’.
திருக்கோவை 48

எனவரும். **131**

[வாள்கண், பூண்முலை, வாள்நுதல், அரவுஅல்குல் இவற்றை உடைய தலைவி காக்கும் தினைப்புனம், யான் அவளை அகன்றால் பொய்உடையார்க்கு அரன் துன்பத்தைச் செய்து சேயன் ஆமாறு போல மிக்க துயரத்தைச்செய்து எனக்குச் சேய்த்தாம்; இவளை அணைந்தால் மெய்யுடையார்க்கு அவன் அம்பலம் பேரின்பத்தைச் செய்து அணித்து ஆமாறுபோலப் பேருவகை செய்து எனக்கு மிகவும் அணித்தாம்] **131**

## பாங்கற்கூட்டத்தின் வகை

504 சார்தல்[1] கேட்டல்[2] சாற்றல்[3] எதிர்மறை[4]
நேர்தல்[5] கூடல்[6] பாங்கில் கூட்டல்[7] என்று
ஆங்குஎழு வகைத்தே பாங்கற் கூட்டம்.

இது நிறுத்தமுறையானே பாங்கற் கூட்டத்தின் வகை இத்துணைத்து என்கின்றது.

(இ-ள்) சார்தல் முதலாகப் பாங்கில் கூட்டல் ஈறாக எழுவகைத்தாம் பாங்கற்கூட்டம் என்றவாறு.

ஆங்கு அசை **132**

## விளக்கம்

1 தலைவன் பாங்கனைச் சார்தல்.

2 பாங்கன் தலைவனை வினவுதல்.

3 தலைவன் தன் நிலையைக் கூறுதல்

4 பாங்கன் தலைவன் கருத்தினை மறுத்தல்.

5 தலைவன் கருத்திற்குப் பாங்கன் உடன்படல்.

6 தலைவன் தலைவியைச் சேர்தல்.

7 தலைவியை ஆயத்திடைக் கூட்டல்.

பாங்கற் கூட்டம் நிகழின் இடந்தலைப்பாடு நிகழாது; இடந்தலைப்பாடு நிகழின் பாங்கற்கூட்டம் நிகழாது என்பது, இறையனார்களவியல் உரை, திருக்கோவையார் உரை, முத்து வீரிய உரை என்பனவற்றான் அறியப்படுகிறது. தாமே கூடும் இடந்தலைப்பாடும், பாங்கனால் கூடும் இடந்தலைப் பாடும் என்று இடந்தலைப்பாட்டினை இருவகையினது ஆக்கு வர் நச்சினார்க்கினியர். பாங்கற்கூட்டமாவது பாங்கனைக் கூடும் கூட்டம் என்று பொருள்கொள்வர் அவர்.

இடந்தலைப்பாடு வேறு, பாங்கற் கூட்டம் வேறு என் பார் நம்பிஅகப்பொருள் ஆசிரியரும், மாறன் அகப்பொருள் ஆசிரியரும் இவரும் ஆவர்.

## ஒத்த நூற்பாக்கள்

‘ ஆங்கனம் புணர்ந்த கிழவோன் தன்வயின்
பாங்க னோரில் குறிதலைப் பெய்தலும்
பாங்கிலன் தமியோள் இடந்தலைப் படலும்என்று
ஆங்கஅவ் விரண்டே தலைப்பெயல் மரபே ’.

இறை. அக. 3

முழுதும் — ந. அ. 136

'சார்தல் வினுதல் செப்பல் எதிர்மறை
நேர்தல் கூடல் கூட்டலென்று ஆங்குப்
பார்புகழ் எழுவகை பாங்கற் கூட்டம்'. மா. அ 28
132

## பாங்கற்கூட்டத்தின் விரி

505 தலைவன் பாங்கனைச் சார்தலும்[1] பாங்கன்
தலைவனை உற்றது வினுதலும்[2] தலைவன்
உற்றது உரைத்தலும்[3] கற்றறி பாங்கன்
கழறலும்[4] கிழவோன் கழற்றுஎதிர் மறுத்தலும்[5]
கிழவோற் பழித்தலும்[6] கிழவோன் வேட்கை
தாங்கற்கு அருமை சாற்றலும்[7] பாங்கன்
தன்மனத்து அழுங்கலும்[8] தலைவனோடு அழுங்கலும்[9]
எவ்விடத்து எவ்வியற்று என்றலும்[10] அவன்அஃது
இவ்விடத்து இவ்வியற்று என்றலும்[11] பாங்கன்
இறைவனைத் தேற்றலும் [12] குறிவழிச் சேறலும்
இறைவியைக் காண்டலும்[14] இகழ்ந்ததற்கு இரங்கலும்[15]
தலைவனை வியத்தலும்[16] தலைவியை வியத்தலும்[17]
தலைவன் தனக்குத் தலைவிநிலை கூறலும்[18]
தலைவன் சேறலும்[19] தலைவியைக் காண்டலும்[20]
கலவியின் மகிழ்தலும்[21] புகழ்தலும்[22] தலைவியைப்
பாங்கியோடு வருகஎனப் பகர்தலும்[23] பாங்கில்
கூட்டலும்[24] என்றாங்கு ஈட்டுநா லாறும்
காட்டிய பாங்கற் கூட்டத்து விரியே.

*இது பாங்கற்கூட்டத்து விரி இத்துணைப் பகுதித்து என்கின்றது.*

*(இ-ள்) தலைவன் பாங்கனைச் சார்தல் முதலாகப் பாங்கில் கூட்டல் ஈறுக இவ்விடத்துத் தொகுத்த இருபத்து நான்கு கிளவியும் மேல் காட்டிய பாங்கற்கூட்டத்து விரி என்றவாறு.*

விளக்கம்.

1 தலைவன் தன் உயிர்த்தோழனைச் சென்று அடைதல்.

2 பாங்கன் தலைவனுடைய தோள்மெலிவு முதலியன கண்டு, அவனுக்கு ஏற்பட்ட புதுமை பற்றி வினவுதல்.

3 தலைவன் தனக்கு நேர்ந்த புதுஅனுபவம் பற்றி உரைத்தல்.

4 கற்று வல்ல பாங்கன் தலைவனை இடித்து உரைத்தல்.

5 பாங்கன் இடித்துக் கூறியதைத் தலைவன் மறுத்துச் சொல்லுதல்.

6 பாங்கன் தலைவனைப் பழித்துக் கூறுதல்.

7 தலைவன் தலைவியின்பால் தனக்கு உள்ள விருப்பத்தைத் தடுத்தல் இயலாது என்று குறிப்பிடுதல்.

8 பாங்கன் தலைவன்நிலைகண்டு தன்மனத்துள்ளே வருந்துதல்.

9 பாங்கன் தலைவனோடு சேர்ந்து வருந்துதல்.

10 தலைவன் கண்ட உருவம் எவ்விடத்தில் உள்ளது, எவ்விலக்கணத்தை உடையது என்று பாங்கன் தலைவனைக் கேட்டல்.

11 'தலைவியின் உருவம் இத்தகையது, இயல் இத்தகையது' என்று தலைவன் பாங்கனிடம் குறிப்பிடுதல்.

12 பாங்கன் தலைவனை ஆற்றுவித்தல்.

13 தலைவன் குறித்த இடத்திற்குப் பாங்கன் செல்லுதல்.

14 அங்ஙனம் சென்ற பாங்கன் தலைவியைக் காணுதல்.

15 தலைவியைக் கண்ட பாங்கன் முன்னம் தலைவனைத் தான் இகழ்ந்ததற்கு வருந்துதல்.

16 தலைவியின் அழகைக் கண்ட தலைவன் அதில் ஈடுபட்டு அங்கேயே இருந்துவிடாமல் மனத்திட்பத்தோடு தன் இடத்து வந்தமையைப் பாங்கன் வியந்து கூறுதல்.

17 பாங்கன் தலைவியின் வனப்பு முதலியன கண்டு வியத்தல்.

18 தலைவி தனியே நிற்றலைத் தலைவனுக்குப் பாங்கன் கூறல்.

19 தலைவன் தலைவி இருக்கும் இடத்தை அடைதல்.

20 தலைவன் தலைவியைக் காணுதல்.

21 தலைவியோடு தலைவன் அளவளாவுதல்.

22 தலைவியைப் புணர்ந்து உரைத்தல்.

23 இனி வருங்கால் உயிர்த்தோழியோடு வருமாறு தலைவியிடம் தலைவன் குறிப்பிடுதல்.

24 பாங்கியர்கூட்டத்திற்குச் செல்லுமாறு தலைவன் தலைவியை விடுத்தல்.

## ஒத்த நூற்பாக்கள்

'நினைதல் வினுதல் உற்றது உரைத்தல்
கழறல் மறுத்தல் கவன்றுரைத் தல்லே
வலிஅழிவு உரைத்தல் விதியொடு வெறுத்தல்
நொந்து கூறல் நோதல் நீங்கி
இயல்இடம் கேட்டல் இயல்இடம் கூறல்
வற்புறுத் தல்குறி வழிச்சேறல் காண்டல்
வியந்துரைத் தல்அம் மெல்லியல் தன்னைக்
கண்டமை கூறல் கருத்துக்கு ஏற்பச்
செவ்வி செப்பல் அவ்விடத்து ஏகல்
ஈங்குஇவை நிற்க இடந்தலை தனக்கும்
ஆங்குஅவள் மெலிதல் பொழில்கண்டு மகிழ்தல்
நீங்கா மகிழ்வொடு நிலைகண்டு வியத்தல்
தளர்வு அகன்று உரைத்தல் மொழிபெற வருந்தல்
கண்புதை வருத்தும் காவல் நாண்விடல்
நண்பொடு சென்று நன்மருங்கு அணைதல்
இன்றியமையாமை ஆயத்து உய்த்தல்

நின்று வருந்தல் நிகழ்ஆ றைந்தும்
துன்று பாங்கன் துறைஎனப் படுமே'.

திருக்கோவை, மு. வி. களா. 9

'வினுதலும் விடுத்தலும் கழறலும் மறுத்தலும்
நோதலும் யாண்டுளன இன்னுழி என்றலும்
மாதரைக் காண்டலும் மன்னிய வகுத்தலும்
கிழவோற்கு இசைத்தலும் ஆற்றான் கிளத்தலும்
பழவரை விடுத்தலும் பாங்கற் கூட்டம்'.

த. நெ. வி 16
ந. அ. 137

முழுதும் —

'செம்மல் பாங்கனைச் சேர்தலும் பாங்கன்
செம்மலோடு உற்றது வினுதலும் செம்மல்
உற்றது உரைத்தலும் மற்றுஅவன் கழறலும்
உரவோன் கழற்றுஎதிர் மறுத்தலும் உரவோற்
பழித்தலும் வேட்கை கழித்தற்கு அருமை
சாற்றலும் தன்மனத்து அழுங்கலும் தலைவனோடு
ஏற்றற்கு அழுங்கலும் ஏகுஅவண் என்றலும்
எவ்விடத்து எவ்வியற்று என்றலும் இறைவன்
அவ்விடத்து அவ்வியற்று என்றலும் பாங்கன்
இறைவனைத் தேற்றலும் குறிவழிச் சேறலும்
இறைவியைக் காண்டலும் இறைவியை எளிதின்
காட்டிய கடவுளைக் கண்ணுற்று இறைஞ்சலும்
வாள்தடங் கண்ணியை மதித்துஅவன் வியத்தலும்
இகழ்ந்ததற்கு இரங்கலும் இறைமகன் தனையே
புகழ்ந்துஅவன் வியத்தலும் புரவலன் தன்னொடு
நவ்வியங் கண்ணி நன்னிலை உரைத்தலும்
செவ்வி செப்பலும் செம்மல்அங்கு ஏகலும்
இணர்மலர்க் குழலியை இறைவன் காண்டலும்
புணர்தலும் புகழ்தலும் பூங்கொடி தன்னைப்
பாங்கியொடு வருகஎனப் பகர்ந்த பின்னர்
ஆயத்து உய்த்தலொடு அம்மூ வொன்பதும்
ஏய பாங்கன் கூட்டத்து விரியே'. மா. அ. 29]

தலைவன் பாங்கனைச் சார்தல் :

'பூங்கனை ஆர்புனல் தென்புலி யூர்புரிந்து அம்பலத்துள்
ஆங்கு எனை ஆண்டுகொண்டு ஆடும்பிரான்அடித்தாமரைக்கே
பாங்கனை யான்அன்ன பண்பனைக் கண்டுஇப் பரிசுஉரைத்தால்
ஈங்குஎனை யார்தடுப் பார்மடப் பாவையை எய்துதற்கே'.
திருக்கோவை. 19

எனவும்,

[புலியூரை விரும்பி அம்பலத்துள் என்னை ஆண்டு கொண்டு ஆடும் சிவபெருமானுடைய திருவடிக்கண் ஈடுபாடு உடையவனும், என்னை ஒத்த பண்பினனும் ஆகிய பாங்கனைக் கண்டு, நிகழ்ந்ததை உரைத்துவிட்டால், பின் தலைவியை எய்தற்கண் தடை ஏதும் நிகழாது.]

பாங்கன் தலைவனை உற்றது வினுதல் :

'சிறைவான் புனல்தில்லைச் சிற்றம் பலத்தும்என் சிந்தையுள்ளும்
உறைவான் உயர்மதில் கூடலின் ஆய்ந்தஒண் தீந்தமிழின்
துறைவாய் நுழைந்தனையோஅன்றி ஏழிசைச் சூழல்புக்கோ
இறைவா தடவரைத் தோட்குஎன் கொலாம்புகுந்து எய்தியதே'.
திருக்கோவை. 20

எனவும்,

[இறைவா! சிற்றம்பலமாகிய தூய இடத்தும் என் சிந்தையாகிய தாழ்ந்த இடத்தும் ஒருசேரத் தங்கியிருக்கும் சிவபெருமான் மதுரையில் ஆய்ந்த தமிழின் துறைக்கண் நுழைந்தாயா? இசைச்சூழலில் ஈடுபட்டாயா? நின் தோள்கள் வாடிய காரணம் என்ன ?.]

தலைவன் உற்றது உரைத்தல் :

'கோம்பிக்குஒதுங்கிமேயாமஞ்ஞைகுஞ்சரம்கோள்இழைக்கும்
பாம்பைப் பிடித்துப் படம்கிழித் தாங்குஅப் பணைமுலைக்கே
தேம்பல் துடியிடை மான்மட நோக்கிதில் லைச்சிவன்தாள்
ஆம்பொன் தடமலர் சூடும்என் ஆற்றல் அகற்றியதே'.
திருக்கோவை 21

எனவும்,

[கொம்பிக்குப் பயந்து இரை உண்ணாத மயில், யானையையும் கொல்லும் ஆற்றல் உடைய பாம்பைப் பிடித்து அதன் படத்தைக் கிழித்தாற் போல, முலைப்பாரம் தாங்காது நையும் இடையை உடைய தலைவி சிவபெருமான் திருவடித் தாமரைகளையே சூடும் என் ஆற்றலைப் போக்கிவிட்டாள்.]

கற்றறி பாங்கன் கழறல் :

'உளமாம் வகைநம்மை உய்யவந்து ஆண்டுசென்று உம்பர்உய்யக்
களமாம் விடம்அமிழ்து ஆக்கிய தில்லைத்தொல் லோன்கயிலை
வளமாம் பொதும்பரின் வஞ்சித்து நின்றுஓர்வஞ் சிம்மருங்குல்
இளமான் விழித்தது என்றோஇன்றுஎம் அண்ணல் இரங்கியதே'.

திருக்கோவை 22

எனவும்,

[நம்மை ஆட்கொண்டு தேவர் உய்ய விடம் உண்ட சிவபெருமானுடைய கயிலை மலைச் சோலையில் வஞ்சிக்கொடி போன்ற இடையைஉடைய இளைய மான் விழித்ததுகண்டோ அண்ணலாகிய நீ மனம் தளர்ந்து இருக்கின்றாய் ?]

கிழவோன் கழற்றுஎதிர் மறுத்தல் :

'சேணில்பொலிசெம்பொன்மாளிகைத்தில்லைச்சிற்றம்பலத்து
மாணிக்கக் கூத்தன் வடவான் கயிலை மயிலைமன்னும்
பூணின்பொலிகொங்கைஆவியைஓவியப்பொற்கொழுந்தைக்
காணின் கழறலை கண்டிலை மென்தோள் கரும்பினையே'.

திருக்கோவை 23

எனவும்,

[செம்பொன் மாளிகைத் தில்லையிலுள்ள கூத்தப்பிரானின் கயிலை மலையில் தங்கியிருந்த என் உயிர் போன்ற ஓவியக் கொழுந்தை நீ கண்டிருந்தால் இப்படி என் கருத்தை மறுத்துப் பேசத் துணியாய், காணாததனால் அன்றோ இவ்வாறு பேசுகிறாய் ?

கிழவோற் பழித்தல் :

'இளங்கொம்பு ஒருதனி நின்றுஇருஞ் சாரலின் என்னை இங்ஙன்
உளங்கொண்டு உறுதுயர் செய்ததென்றுய்விண் ஒளிரும்மின்போல்
விளங்கும் கதிர்வடி வேல்அண் ணலேதென் றல் மீதுஅசையத்
துளங்கும் சிறுகொடிக் கோமத வேழம் துவக்குஉண் டதே'.
அம்பி 49

எனவும்,

[அண்ணலே! 'மலைப்பகுதியில் இளங்கொம்பு ஒன்று என் உள்ளத்தைக் கைப்பற்றி மிக்க துயரைத் தருகின்றது' என்று நீ கூறுவது, தென்றலுக்கு அசையும் சிறுகொடி மத யானையைக் கட்டும் ஆற்றலைப் பெற்றது போன்ற செய்தியாகும்.]

கிழவோன் வேட்கை தாங்கற்கு அருமை சாற்றல் :

'தலைப்படு சால்பினுக் கும்தன ரேன்சித்தம் பித்தன்என்று
மலைத்துஅறி வார்இல்லை யாரையும் தேற்றுவன் எத்துணையும்
கலைச்சிறு திங்கள் மிலைந்தசிற் றம்பல வன்கயிலை
மலைச்சிறு மான்விழி யால்அழி வுற்று மயங்கினனே'.
திருக்கோவை. 25

எனவும்,

[இதற்கு முன் தலைமையான அமைதி தளராது இருந்தேன். நான் மனம் மயங்கினவன் என்று ஒருவரும் என்னைக் கூறியவர் இலர். பிறர் கொண்ட கலக்கங்களையும் யான் தெளிவித்துள்ளேன். ஆனால் இன்று சிற்றம்பலவனுடைய கயிலை மலைக்கண் கண்ட தலைவியின் மான்விழியால் மனம் அழிந்து மயங்கிவிட்டேன்.]

பாங்கன் தன்மனத்து அழுங்கல் :

'யானும் அறிவு கொளுத்துகிற் பேன்இங்ஙன் ஏறுஅனையான்
தானும் அறிவும் தளர்ந்துநிற் பான்செந் தளவுஅரும்பும்

தேனும் இனிய குதலைச்செவ் வாய்இளஞ் செவ்வி நவ்வி
மானும் இவனை மயங்கஇவ் வாறு வருத்துவதே'.

அம்பி. 51

எனவும்,

[முத்துப் போன்ற பற்கள், மழலை பேசும் செவ்வாய், மான்விழி இவற்றை உடையாள் தன்னை மயக்க, இவன் வருந்துகின்றானே! இவனுக்கு யானோ அறிவுரை கூற வல்லேன்? இவனை இப்படி அறிவு தளரக்கூடியவன் யாவும் வியப்பாய் உள்ளன.]

தலைவனோடு அழுங்கல்:

'ஆலத்தி னால்அமிர் து ஆக்கிய கோன்தில்லை அம்பலம்போல்
கோலத்தி னாள்பொருட் டாக அமிர்தம் குணம்கெடினும்
காலத்தி னால்மழை மாறினும் மாறாக் கவிகைநின்பொன்
சீலத்தை நீயும் நினையாது ஒழிவதுஎன் தீவினையே'.

திருக்கோவை 27

[அமிர்தம் குணம் மாறினும் பருவமழை பொய்ப்பினும் தவறாத கொடைத் தன்மையைஉடைய நீ, விடமுண்ட சிவ பெருமான் அம்பலம்போன்ற வனப்பினாள் காரணமாக நின் பொன்போன்ற 'அரிய ஒழுக்கத்தை அறியாது மயங்குவது என் தீவினைப்பயனே யாம்.]

எவ்விடத்து எவ்வியற்று என்றல்:

'நின்னுடை நீர்மையும் நீயும்இவ் வாறு நினைத்தெருட்டும்
என்னுடை நீர்மைஇதுஎன் என்பதேதில்லை ஏர்கொள்முக்கண்
மன்னுடை மால்வரை யோமலரோ விசும் போசிலம்பா
என்இடம்யாதுஇயல்நின்னை இன்னேசெய் தாார்ங்கொடிக்கே'.

திருக்கோவை 28

எனவும்,

[சிலம்பா ! உன் பண்பும் இவ்வாறுயிற்று. கலங்காத நீயும் கலங்கி நிற்கின்றாய். உன்னைத் தெளியவைக்க முயலும் என் தன்மையை என் என்று சொல்லுவது ? உன்னை இவ்வாறு கலக்கிய கொடிபோல்வாளின் இருப்பிடம் கயிலையா, தாமரையா, வான்உலகா ? கூறு. அவள் இயல்பையும் விளங்கக்கூறு.]

**அவன் அஃது இவ்விடத்து இவ்வியற்று என்றல் :**

‘ **விழியால் பிணையாம் விளங்குஇய லால்ம யிலாம்மிழற்றும்**
**மொழியால் கிளியாம் முதுவா னவர்தம் முடித்தொகைகள்**
**கழியாக் கழல்தில்லைக் கூத்தன் கயிலைமுத் தம்மலைத்தேன்**
**கொழியாத் திகழும் பொழிற்குஎழி லாம்எம் குலதெய்வமே’.**

திருக்கோவை. 29

எனவும்,

[வானவர் வணங்கும் தில்லையான் கயிலைப் பொழிற்கண் உள்ள தலைவி, மான்விழியும் மயில் இயலும் கிளிமொழியும் உடையாள்.]

பாங்கன் இறைவனைத் தேற்றல் :

‘ குயிலைச் சிலம்புஅடிக் கொம்பினைத் தில்லைஎம் கூத்தப்பிரான்
கயிலைச் சிலம்பில்பைம் பூம்புனம் காக்கும் கருங்கண்செவ்வாய்
மயிலைச் சிலம்பகண்டு யான்போய் வருவன்வண் பூங்கொடிகள்
பயிலச் சிலம்புஎதிர் கூய்ப்பண்ணை நண்ணும் பளிக்கறையே ’.

திருக்கோவை. 30

எனவும்,

[சிலம்ப ! தில்லையான் கயிலைச்சிலம்பில் புனங்காக்கும்-மயிலையும் குயிலையும் பூங்கொம்பையும் போல் வாளைப்-பளிக் கறையை அடுத்துச் சென்று கண்டு வருவன்.]

குறிவழிச் சேறல் :

‘கொடுங்கால்குலவரை ஏழ்ஏழ் பொழில்எழில் குன்றும் அன்றும்
நடுங்கா தவனை நடுங்க நுடங்கும் நடுஉடைய

வீடம்கால் அயில்கண் ணிமேவும்கொலாம் தில்லைஈசன் வெற்பில்
தடங்கார் தருபெரு வான்பொழில் நீழல்அம் தண்புனத்தே'.
திருக்கோவை 31

எனவும்,

[தில்லையான் மலையில் பொழில் நீழலில் தண்புனத்தே, மலைகளும் உலகுகளும் அழகு குன்றும் அன்றும் நடுங்காத வனை நடுங்கச்செய்த வேற்கண்ணி பொருந்தி இருப்பாளோ?]

இறைவியைக் காண்டல் :

' வடிக்கண் இவைவஞ்சி அஞ்சும் இடைஇது வாய்பவளம்
துடிக்கின்றவாவெற்பன்சொல்பரிசேயான்தொடர்ந்துவிடா
அடிச்சந்த மாமலர் அண்ணல்விண் ணோர்வணங்கு அம்பலம்போல்
படிச்சந்த மும்இது வேஇவ ளேஅப் பணிமொழியே '.
திருக்கோவை 32

எனவும்,

[வடிக்கண், வஞ்சிஇடை, பவளவாய் இவை தலைவன் கூறியவாறே உள்ளன. சிவபெருமானுடைய அம்பலம் போன்ற ஒப்பும் இதுவே. இவளே தலைவன் குறிப்பிட்ட தலைவி ஆவாள்.]

பாங்கன் இகழ்ந்ததற்கு இரங்கல் :

'பண்ஆர்பணிமொழிவண்ணமும்தண்ணறும்பைங்குவளைத்
கண்ணால் உரைசெய்த காதலும் காமக் கனல்கொளுத்திப்
புண்ணான நெஞ்சமும் தஞ்சம்இல் லாதவன் வன்பொறையும்
எண்ணாது அருவினை யேன்இகழ்ந் தேன்எம் இறைவனையே'.
அம்பி. 62

எனவும்,

[இத்தலைவியின் வனப்பினையும், அவள் கண்ணால் உரைத்த காதலையும், காமக்கனலால் புண்ணான தலைவன் நெஞ்சத்தினையும், அவன்பொறுமையையும் எண்ணாது, யான் தலைவனை இகழ்ந்தேனே.]

தலைவனை வியத்தல் :

'குவளைக் களத்துஅம் பலவன் குரைகழல் போல்கமலத்
தவளைப் பயங்கர மாகநின்று ஆண்ட அவயவத்தின்
இவளைக் கண்டு இங்குநின்று அங்குவந்து அத்துணை யும்பகர்ந்த
கவளக்களிற்று அண்ணலேதிண்ணியான் இக்கடலிடத்தே'.

திருக்கோவை. 33

எனவும்,

[நீலகண்டனுன சிவபெருமானின் திருவடிபோன்ற தாமரையில் வாழும் திருமகளை வென்ற உறுப்பு அழகினை உடைய இவளைக்கண்டு இவ்விடத்தைவிட்டு என்பால் வந்து இவ்வளவும் உரையாடிய நம் தலைவனே இவ்வுலகில் மன உறுதி உடையவன் ஆவான்.]

தலைவியை வியத்தல் :

' துறைமேய் வலம்புரி தோய்ந்து மணல்உழுத தோற்றம் மாய்வான்
பொறைமலி பூம்புன்னைப் பூஉதிர் நுண்தாது போர்க்கும் கானல்
நிறைமதி வாள்முகத்து நேர்கயல்கண் செய்த
உறைமலி உய்யாநோய் ஊர்சுணங்கின் மென்முலையே தீர்க்கும் போலும்'.

சிலப். கானல். 8

எனவும்,

[வலம்புரி மணலை உழுத சுவடு மாறும்படிப் புன்னைப்பூ உதிர்ந்து நுண்ணிய மகரந்தம் மூடும் கடற்கரைச் சோலையில், தலைவியின் மதிமுகத்துக் கயற்கண்கள் தலைவனுக்குச் செய்துள்ள நோயை, அவள் மென்முலையே தீர்க்கும் போலும்.]

தலைவன் தனக்குத் தலைவி நிலைகூறல் :

' பணம்தாழ் அரவுஅரைச் சிற்றம் பலவர்பைம் பொன்கயிலைப்
புணர்ந்துஆங்கு அகன்ற பொருகரி உன்னிப் புனத்துஅயலே

மணம்தாழ் பொழிற்கண் வடிக்கண் பரப்பி மடப்பிடிவாய்
நிணம்தாழ் சுடர்இலை வேலகண் டேன்ஒன்று நின்றதுவே'.
திருக்கோவை. 34

எனவும்,

[வேல! சிற்றம்பலவன் கயிலையிலே புணர்ந்து அகன்ற களிற்றை உன்னிப் புனத்து அயலே பொழிற்கண் கண்பரப்பிப் பிடி ஒன்று நின்றதனைக் கண்டேன்.]

தலைவன் சேறல் :

'எயில்குலம் மூன்றுஇருந் தீஎய்த எய்தவன் தில்லைஒத்துக்
குயில்குலம் கொண்டுதொண் டைக்கனி வாய்க்குளிர்முத் தம்நிரைத்து
அயில்குல வேல்கம லத்தில் கிடத்தி அனம்நடக்கும்
மயில்குலம்கண்டதுஉண்டேல்அதுஎன்னுடை மன்உயிரே'.
திருக்கோவை 36

எனவும்,

[திரிபுரம் எரித்த சிவபெருமான் தில்லையை ஒத்து, குயில் ஒலிகொண்டு, தொண்டைக்கனி போன்ற வாயில் முத்துப்போன்ற பற்கள் பொருந்த, வேல் கமலத்தில் கிடப்ப, அன்னம்போல நடக்கும் குலமயில் உண்டாயின் அதுவே என் உயிராம்]

தலைவியைக் காண்டல் :

'மறக்கும் பரிசுஅறி யாவண்டல் ஆயம் மறந்துவந்து
சிறக்கும் கமலத் திருநின்ற வாசெங்கண் முத்துஅரும்ப
நிறக்கும்பசலையும்மேனியுமாய்நெஞ்சில்நீடுஉயிர்ப்பும்
பிறக்கும் பெருநல னும்மடம் நாணும் பிணங்கவிட்டே'.
அம்பி 66

எனவும்,

[மறத்தல் அறியாததோழியர்கூட்டத்தை மறந்துவந்து கண்களில் முத்து அரும்ப, மேனியில் பசலை பாய, பெருமூச்சு விட்டு, நலனும் நாணும் மடனும் பிணங்கவிட்டுத் திருமகள் போன்ற தலைவி நிற்கின்றவாறு என்னே!]

கலவியின் மகிழ்தல் :

'வேட்ட பொழுதின் அவைஅவை போலுமே
தோட்டார் கதுப்பினுள் தோள்'. குறள். 1105

'மெய்வாய்கண்மூக்குச் செவிஎன்னும் நாமங்கள் மேவப்பெற்ற
ஐவா யினும்நின்று அருந்தின ரோஅருந் தானவர்முன்
உய்வான்மலைகொண்டுஒலிநீர்கடைந்தஅன்றும்பர்என்போல்
மைவார் அளக மடந்தைநின் போலும் மருந்தினையே'.
அம்பி. 69

எனவும்,

[விரும்பிய பொழுதில் அவ்வவ் விரும்பிய பொருள்களைப் பெற்றாற் போலும், இப்பூவணிந்த கூந்தலாள் தோள்கள்.

தலைவியே! தேவர்கள் உய்ய மலைகொண்டு பாற்கடல் கடைந்த அன்று அவர்கள் உன்னைப் போன்ற மருந்தினை என்னைப்போல ஐம்பொறிகளானும் நுகர்ந்தனரோ !]

புகழ்தல் :

'தழல்கண்டது அன்ன கலிவெம்மை ஆறத்தன் தண்ணளியால்
நிழல்கண்ட சந்திர வாணன்தென் மாறை நிலவுஉமிழும்
கழல்கண்டது அன்ன கதிர்முத்த மாளிகைக் காரிகைநின்
குழல்கண்ட பின்அல்ல வோஅறல் நீருள் குளித்ததுவே',
தஞ்சை. 60

எனவும்,

[கலியின் வெம்மை நீங்கத் தன்கருணையால் நிழல்செய்த சந்திரன் மகனாகிய வாணன் மாறையிலே, ஒளிவீசும் முத்த மாளிகைக்கண் அமரத்தக்க காரிகையே! உன் கூந்தல் அழகைக் கண்டபின் வெளிப்படத் தோன்றும் விருப்பினை விடுத்துக் கருமணல் நீரில் மூழ்கிவிட்டது ]

தலைவியைப் பாங்கியொடு வருக எனப் பகர்தல் :

‘ முன் ஆவி வந்த முருகன்வை வேல்கண் முனைகவர்ந்த
என் ஆவி நல்கும் இதுநினை வேல்இன்று போய்இனிய
நல்நாவி வாச நறுங்குழ லாய்வரின் நாளைஇங்ஙன்
நின் ஆவி அன்னவர் முன்னாக அன்றி நினையலையே ’.

அம்பி 70

எனவும்,

[நறுங்குழலாய்! சரவணப்பொய்கையில் தோன்றிய முருகனுடைய வேல்போன்ற நின் கூரிய கண்கள் கவர்ந்த என் உயிரைக் காப்பது நின் விருப்பாயின், நாளை நின் உயிர் போன்ற தோழியோடு வருதலை நினைப்பாயாக.]

பாங்கிற் கூட்டல் :

‘ முற்றும் பழுதுஅற மொய்ம்முலை ஆகம் முயங்கும்இன்பம்
பெற்றும் பெருத பெருநலம் தந்தனிர் பேர்அளிகள்
சுற்றும் பரிமளச் சோலையில் ஆயம் தொழஅருவி
எற்றும் பனிவரைச் சீறூர் நலம்பெற எய்துகவே ’.

அம்பி. 71

எனவும் வரும்.

[பழுதற்ற மார்பினை முயங்கும் பெருநலம் தந்த நீ, சோலையில் ஆயம்தொழ, அருவி மோதும் பனிவரைச் சீறூரில் நலம்பெற எய்துவாயாக.]

இவற்றுள், முன்னையமூன்றும் சார்தல் கேட்டல் சாற்றல் என்னும் மூன்றற்கும், பாங்கன் கழறல் முதலாகக் கிழவோன் வேட்கை தாங்கற்கு அருமை சாற்றல் ஈறுகச் சொல்லப்பட்ட நான்கும் எதிர்மறைக்கும், தன்மனத்து அழுங்கல் முதலாகத் தலைவன் தனக்குத் தலைவி நிலை கூறல் ஈறுகச் சொல்லப்பட்ட பதினொன்றும் நேர்தற்கும், தலைவன் சேறல் முதலாகத் தலைவியைப் புகழ்தல் ஈறுகச் சொல்லப்பட்ட நான்கும் கூடற்கும்,

தலைவன் தலைவியைப் 'பாங்கியொடு வருக' எனப் பகர்தலும் பாங்கிற் கூட்டலும் ஆகிய இரண்டும் கூட்டற்கும் உரியவாம்.

'காட்டிய' என்ற மிகையானே, தலைவன் உற்றது உரைத்தலின் பின்னர்ப் பாங்கனை 'நின் குறையாக இது முடிக்க வேண்டும்' என்றலும், கிழவோன் கழற்று எதிர் மறுத்தலின் பின்னர்ப் பாங்கனை ஆண்டுச் செலல் வேண்டும் என்றலும், பாங்கன் குறிவழிச் சென்ற பின்னர்த் தலைவி உருவு வெளிப்பட்டமை கண்டு தலைவன் கூறுதலும், அதன் பின்னர் 'அவ்விடத்துக் காணுங் கொல்லோ ?' எனத் தலைவன் ஐயுற்று இரங்கலும், பாங்கன் இறைவியைக் கண்ட பின்னர் அவளை எளிதில் காட்டிய தெய்வத்தை வணங்குதலும், தலைவன் சேறற்கு முன்னர்த் தலைவி 'தலைவன் வருங் கொல்லோ ?' என நினைத்தலும், கலவியின் மகிழ்தலின் பின்னர்ப் பாங்கனை உள் மகிழ்ந்து உரைத்தலும் வரவும் பெறும்.

பாங்கனை 'நின்குறையாக இதுமுடிக்க வேண்டும்' என்றல்:

'இடிக்கும் கேளிர் நுங்குறை யாக
நிறுத்தல் ஆற்றினோ நன்றுமன் தில்ல
ஞாயிறு காயும் வெவ்வறை மருங்கின்
கையில் ஊமன் கண்ணில் காக்கும்
வெண்ணெய் உணங்கல் போலப்
பரந்தன்று இந்நோய் நோன்றுகொளற்கு அரிதே'.
குறுந்தொகை 58

எனவரும்.

[என்னை இடித்துரைக்கும் நண்பா ! இதனை நின் செயலாகக் கொண்டு நிறைவேற்றுதல் வேண்டும். அதுவே மேதக்கது. கதிரவன் காயும் வெப்பமான பாறையில் கை இல்லாத ஊமன் கண்ணினால் காக்கும் வெண்ணெய்த்திரள் வெப்பத்தால் உருகிப் பரவுவதுபோல, என்மனத்துப் பரவியுள்ள இந்நோய் பொறுத்தற்கு அரியது.]

பாங்கனை ஆண்டுச் செலல் வேண்டும் என்றல் :

‘ காயா ஈன்ற கணவீ நாற்றம்
மாயா முன்றில் வருவளி துரக்கும்
ஆகோள் வாழ்நர் சிறுகுடி யாட்டி
வேய்எர் மென்தோள் விலக்குநர்
யாரோ வாழிநீ அவ்வயின் செலினே ’.

தொல். பொ. மே.

எனவரும்,

[காயாமலர் மணம், வீட்டின் முன்னிடத்தில் நீங்காத வாறு, காற்று வீசும், பசுக்களைக் கவர்ந்து வாழும் மக்கள் சார்ந்த சிறுகுடிக்கண் நீ செல்லின், தலைவியின் மென்தோள் களை நீ காண்டலை விலக்குவோர் ஒருவரும் இரார்.]

தலைவி உருவு வெளிப்பட்டமை கண்டு தலைவன் கூறுதல் :

‘ விம்முறு துயரமொடு வெந்நோய் ஆகிய
எம்முறு துயரம் தீரிய சென்ற
நான்மறை நவிற்றிய நூல்நெறி மார்பன்
கண்டனன் கொல்லோ தானே தண்டாது
புருவக் கொடுவில் கோலிப் பூங்கண்
செருவப் பகழியில் சேர்த்துஅழிவு உறீஇ
ஏத்தொழில் தொடங்கி ஏமுறுத்து அகன்ற
மடமான் நோக்கின் தடமென் தோளியைத்
தண்தழை ததும்பிய இன்னிழல் ஒருசிறை
உடன் ஆடு ஆயத்து நீங்கி
இடனுற நின்ற ஏமுறு நிலையே ’. தொ. பொ. மே.

எனவும்,

[துயரம் மிக்குக் காமநோய் வருத்தும் என் பெருந் துயரைத் தீர்க்கச்சென்ற பூணூல் அணிந்த அந்தணப் பாங்கன், புருவவில் கோலிக் கண்களாகிய அம்பினைத் தொடுத்து அழித்தலைக்கருதி விடுத்து என்னை மயக்கம் உறுத்திச் சென்ற மான்போன்ற நோக்கினை உடைய மென்தோளியை, தழை

சள் செறிந்த இனிய நிழலையுடைய ஒரு தனிஇடத்தில் ஆய வெள்ளம் நீங்கி மயங்கி நிற்கும் நிலையில் கண்டனன் கொல்லோ ?]

அவ்விடத்துக் காணுங்கொல் எனத் தலைவன் ஐயுற்று இரங்கல் :

'என்உறுநோய் தீர்த்தற்கு இருபிறப்பின் நான்மறையோன்
தன்உறுநோய் போலத் தளர்கின்றான் — இன்னினிய
சுற்றத்தில் தீர்ந்த சுடர்இழையைச் செவ்வியால்
தெற்றெனக் கண்ணுறுங்கொல் சென்று'. பாரதம்

எனவும் வரும்.

[என் மிக்கநோயைத் தீர்த்தற்கு என் பார்ப்பனப்பாங்கன் தன் நோய் போலக் கருதித் தளர்கின்றான். ஆயவெள்ளம் நீங்கித் தனித்து நிற்கும் தலைவியை அவன் தெளிவாகக் கண்டு வருவான்கொல்.]

இறைவியை எளிதில் காட்டிய தெய்வத்தை வணங்குதல் :

'அளிதோ தானே அருள்மிக உடைத்தே
களிதாம் வண்டினம் கலந்துஉண்டு ஆடும்
ஒலிதார் மார்பின் ஓங்குஎழில் குரிசிலைப்
பிரியாத் துயரமொடு பேதுறுத்து அகன்ற
கிளிஏர் மழலை கேழ்கிளர் தாமரை
ஆர்ந்த சுற்றமொடு தமரின் நீங்கித்
தானே தமியள் காட்டிய
வானோர் தெய்வம் வணங்குவல் யானே'.
தொல். பொ. மே

என வரும்,

[வண்டினம் கலந்துஉண்டு ஆடும் மாலையை அணிந்த மார்பினன் ஆகிய குரிசிலைத் துயரத்தோடு மயக்கமுறுத்தி நீங்கிய கிளிபோன்ற மழலையளாய், தாமரைஇதழ் போலத் தன்னைச்சூழ்ந்த ஆயத்தாரை நீங்கித் தானே தனித்து நிற்கு

மாறு தலைவியைக் காட்டிய தெய்வம் என்மாட்டு இரக்கம் உடையது. அருள்மிக உடையது. அதனை யான் வணங்குவல்.]

தலைவி தலைவன் வருங்கொல் என நினைத்தல் :

'புறவுஆர் நறுமுல்லை போல்நகை யார்பொய்தல் ஆடுசிற்றில்
நறவுஆடு சந்தனம் நாறுதண் சாரல் நயந்தஇன்பம்
மறவாத நெஞ்சம் வனமுலை தோய மணிப்புயமும்
உறவாட நிற்பர்கொல் லோஎன்னை ஆளும் ஒருவர்வந்தே'.

அம்பி. 25

எனவரும்.

[முல்லைநகையார் ஆகிய தோழியர் சிற்றில் இழைத்து விளையாடும் சந்தனச்சாரலில், முன்புபெற்ற இன்பத்தை மறவாது, முலை தோய மணிப்புயம் தழுவுவதற்கு என்னையாளும் தலைவர் வந்து நிற்பார்கொல் ?]

பாங்கனை உள்மகிழ்ந்து உரைத்தல் :

'நெய்வளர் ஐம்பால் நேரிழை மாதரை
மெய்ந்நிலை திரியா மேதத சுற்றமொடு
எய்துதல் அரிதுஎன இன்னணம் இரங்கிக்
கையறு நெஞ்சமொடு கவன்றுநனி பெயர்ந்தஎன்
பைதல் நெஞ்சம் பரிவு நீங்கித்
தெய்வத் தன்ன தெரிஇழை மென்தோள்
எய்தத் தந்த ஏந்தலோடு எம்மிடை
நற்பால் கேண்மை நாள்தொறும் எய்த
அப்பால் பிறப்பினும் பெறுகமற்று எமக்கே'.

தொ. பொ. மே. 133

எனவரும்.

['ஐம்பாலை உடைய தலைவியைத் தோழியர்இடைச் சென்று அடைதல் அரிது' என்று இவ்வாறு இரங்கிச் செயலற்ற மனத்தோடு கவலையுற்றுப் போகிய என் வருந்தும்

நெஞ்சம், துயரம் நீங்கி இவ்வணங்கின் தோள்களை மருவும் வாய்ப்பினை அளித்த என் பாங்கனோடு எனக்கு உண்டாகிய நட்பு, இனி எடுக்கும் பிறப்பிலும் எனக்குத் தொடர்ந்து உறுவது ஆகுக ] 133

## பாங்கிமதி உடன்பாட்டு வகை

506 முன்னுற வுணர்தல் குறையுற உணர்தல்
இருவரும் உள்வழி அவன்வர உணர்தல்என்று
ஒருமூன்று என்ப தோழிக்கு உணர்ச்சி.

இது நிறுத்த முறையானே மதிஉடன்பாட்டின் வகை இத்துணைத்து என்கின்றது.

(இ-ள்) முன்னுற வுணர்தலும் குறையுற உணர்தலும் இருவரும் உள்வழி அவள்வர உணர்தலும் என மூன்று வகையாம், மேல் கூறிப்போந்த பாங்கிமதி உடன்பாடு என்றவாறு. 134

### விளக்கம்

முன்னுற உணர்தல் — முற்படத் தோழி ஆராய்ந்து அறிதல்; முன்உறவு உணர்தல் — முன்னர், தலைவிக்குத் தலைவனிடை உறவு ஏற்பட்டவாற்றை ஆராய்ந்து அறிதல். குறையுற உணர்தல் — தலைவன் தன்மாட்டு ஒருகுறை கருதி வந்தவழி அவன் உளக்கருத்தை அறிதல். இருவரும் உள் வழி அவன்வர உணர்தல் — தலைவியும் தோழியும் சேர்ந்து இருந்த விடத்துத் தலைவன் வர, நிகழ்ச்சியைத் தோழி உணர்தல்.

முன்னுறவுணர்தல்—இருவகையாகப் பிரித்துப் பொருள் கொள்ளப்படுவது நோக்குக.

### ஒத்த நூற்பாக்கள்

'குறையுற உணர்தல் முன்னுற உணர்தல்
இருவரும் உள்வழி அவன்வர உணர்தல்என
மதியுடம் படுத்தல் ஒருமூன்று ஆகும்'.
தொ. பொ. 127

'அன்ன வகையான் உணர்ந்தபின் அல்லது
பின்னிலை முயற்சி பெறுஅள்என மொழிப'. 128

'முயற்சிக் காலத்து அதற்பட நாடி
புணர்த்தல் ஆற்றலும் அவள்வயி னான'. 129

முழுதும் — இறை. அக. 7

'முன்னுற உணர்தல் குறையுற உணர்தல்
இருவரும் உள்வழி அவன்வர உணர்தல்என்று
ஒருமூன்று வகைத்தே பாங்கிமதி உடன்பாடு'.
ந அ. 138

'மதியுடன் படல்ஒரு மூன்றன் வகையே
முன்னுற உணர்தல் குறையுற உணர்தல்
இருவரும் உள்வழி அவன்வர உணர்தல்
ஆம்நெறித்து என்பர் அறிவுடை யோரே'.
மா. அ. 30
134

### பாங்கிமதி உடன்பாட்டுவிரி

507 நாற்றமும் தோற்றமும் ஒழுக்கமும் உண்டியும்
செய்வினை மறைப்பும் செலவும் பயில்வும்என்று
இவ்வகை ஏழினும் ஐயம்உற்று ஓர்தலும்[1]
அவ்வகை தன்னால் ஐயம் தீர்தலும்[2]
மெய்யினும் பொய்யினும் வழிநிலை பிழையாது
பல்வேறு கவர்பொருள் சொல்லின் ஆடலும்[3]
பேட்டவாயில்பெற்று இரவுவலி யுறுத்தோன்
கண்ணியும் தழையும் ஏந்தி நண்ணி

ஊர்பெயர் கெடுதியோடு ஒழிந்தவும் வினவுழி
யாரே இவர்மனத்து எண்ணம் யாதுஎனத்
தேர்தலும்[4] எண்ணம் தெளிதலும்[5] ஆங்குஅவன்
இருவரும் உள்வழி ஒருமையின் போந்து
கையுறை ஏந்திநின்று அவ்வகை வினவுழி
எதிர்மொழி கொடுத்தலும்[6] இறைவனை நகுதலும்[7]
மதியினில் அவர்அவர் மனக்கருத்து உணர்வும்[8] என்று
ஈங்கனம் இயம்பிய இருநான்கு கிளவியும்
பாங்கி மதியுடன் பாட்டது விரியே.

இது மதிஉடன்பாட்டின்விரி இத்துணைத்து என்கின்றது.

(இ-ள்) நாற்றம் முதலாகப் பயில்வு ஈறாகச் சொல்லப் பட்ட மூன்னுறு புணர்ச்சியை உள்ளுறுத்து வருஉம் இத் திறம் ஏழானும் 'எம் பெருமாட்டிக்குப் பண்டைத்தன்மை அன்றால்; இவ்வேறுபாடு எற்றினான் ஆயிற்று?' எனத் தோழி தன் உள்ளத்துள்ளே ஐயமுற்று ஆராய்தலும், அவற்றுளே ஐயம் தீர்ந்து புணர்ச்சி உண்டு என்பதனைத் தெளிதலும், அங்ஙனம் தெளிந்தபின் அல்லது தலைவிமாட்டுச் சொல் நிகழ்த்தாள் ஆதலின், அவ்வாறு தெளிந்த பின்னர்த் தோழி தலைவியுடன் ஆராயுங்கால், தன்மனத்து நிகழ்ந்தனவற்றை மறைத்துக் கூற வேண்டுதலின், மெய்யினானும் பொய்யினானும் குற்றேவல் தப்பாமல் பலவாய் வேறுபட்ட இருபொருள்பட்ட சொற்களைக் கூறி அவ்வாற்றான் ஆராய்தலும்,

இயற்கைப்புணர்ச்சிப் பின்னர்ப் பேணப்பட்ட தோழியாகிய வாயிலைப் பெற்றுப் பின்னர் இரந்து குறையுறுதலைவலியுறுத்த தலைவன் கண்ணியும் தழையும் ஏந்திச் செவ்வி பார்த்துச் சார்ந்து ஊரும் பெயரும் வேழம் முதலிய கெடுதியும் வழி முதலிய ஒழிந்தனவும் ஆகியவற்றை 'இவன் என்னின் ஆயது ஒரு குறையுடையன்' என்று அவள் கருதுமாறு

வினுய இடத்து, 'இவர் யார்?' எனவும், 'இவர் மனத்து எண்ணம் யாது?' எனவும் தோழி ஆராய்தலும், ஆய்ந்து அவன் அகத்து எண்ணத்தினைத் தெளிதலும்,

தலைமகன் கிழவியும் தோழியும் ஒருங்கு தலைப்பெய்த செவ்விக்கண் ஒருதலையாகச் சென்று கண்ணியும் தழையும் ஏந்தி நின்று முன்போல ஊர் பெயர் முதலியன வினுயஇடத்துத் தோழி அதற்கு எதிர்மொழி கொடுத்தலும், இறைவனை நகுதலும், மதியினின் அவர்அவர் மனக்கருத்து உணர்வும் என்று இவ்வாறு கூறிய எட்டுக்கிளவியும் பாங்கி மதிஉடன் பாட்டு விரியாம் என்றவாறு.

இதனுள், நாற்றமாவது — ஓதியும் நுதலும் முதலியன பேதைப் பருவத்துக்குத் தக நாறுது தலைவன் கூட்டத்தான் மான்மதச்சாந்து முதலியனவும் பல பூக்களும் விரவிநாறுதல்.

தோற்றமாவது — நீண்டும் பிறழ்ந்தும் பிள்ளைப் பருவத்து வெள்ளைநோக்கு இன்றி உள்ளொன்று கொள்ளநோக்கும் கண்ணும், தம்நிலை திரிந்து துணைத்து மெல்கிப் பணைத்துக் காட்டும் தோளும் முலையும் என்று இன்னோரன்னவற்றின் பொலிவு.

ஒழுக்கமாவது — பண்ணை ஆயத்தோடு முற்றிலான் மணல் கொழித்துச் சோறு அமைத்தல் முதலாயின முனிந்த குறிப்பினளாய்ப் பெண்தன்மைக்கு ஏற்ப ஒழுகுதலும், தெய்வம் தொழாமை முதலியனவும் ஆம்.

உண்டியாவது — பண்டையில் குறைந்த உண்டி.

செய்வினை மறைத்தலாவது-முன்போலாது இக்காலத்து நினைவும் செயலும் தலைவனெடுபட்டன ஆகலான், அவை பிறர்க்குப் புலனுகாமை மறைத்தல். அஃது ஆயத்தொடு கூடாது இடந்தலைப்பாட்டிற்கு ஏதுவாக நீங்கி நிற்றலாம்.

செலவாவது—பண்டுபோல வேண்டியவாறு நடவாது சீர்பெற நடந்து ஓர் இடத்துச் சேறல்.

பயில்வாவது — செவிலி முலையிடைத் துயில் வேண்டாது வேறோர் இடத்துப் பயிறல்.

விளக்கம்

[நாற்றம் முதலியவற்றிற்கு வரைந்துள்ள உரை தொல்காப்பியப் பொருட்படல 114-ஆம் நூற்பாவுரையுள் நச்சினார்க்கினியர் உரைத்தனவே.

1 நாற்றம் முதலியவற்றான் தோழி ஐயுற்று ஆராய்தல்.

2 ஆராய்ந்து கண்ட முடிவான் ஐயம் தெளிதல்.

3 மெய்யானும் பொய்யானும் தலைவியொடு குறிப்பா உரையாடல்.

4 தலைவன் ஊர் பெயர் முதலிய வினயவழி, 'இவன் யாவன்? இவன் உள்ளக்கருத்து யாது ?' என்று ஆராய்தல்.

5 ஆராய்ச்சியால் தலைவன் எண்ணத்தை அறிதல்.

6 தோழியும் தலைவியும் இருந்த இடத்துத் தலைவன் வந்து உரையாடியவழி அவனுக்கு மறுமொழி கொடுத்தல்.

7 தலைவனை எள்ளி நகையாடுதல்.

8 தலைவன் தலைவியர் உள்ளக்கருத்தைத் தோழி முடிவாக உணர்தல்.]

' நாற்றமும் தோற்றமும் ஒழுக்கமும் உண்டியும்
செய்வினை மறைப்பினும் செலவினும் பயில்வினும்
புணர்ச்சி எதிர்ப்பாடு உள்ளுறுத்து வரூஉம்
உணர்ச்சி ஏழினும் உணர்ந்த பின்றை '.

தொல். பொ. 114

எனவும்,

'ஆங்குஉணர்ந்து அல்லது கிழவோள் தேஎத்துத்
தான்குறை உறுதல் தோழிக்கு இல்லை'.

இறை. அக. 8

எனவும் ஓதுப ஆகலின்,

'இவ்வகை ஏழினும் ஐயம்உற்று ஓர்தலும்
அவ்வகை தன்னால் ஐயம் தீர்தலும்
மெய்யினும் பொய்யினும் வழிநிலை பிழையாது
பல்வேறு கவர்பொருள் சொல்லின் ஆடலும்'.

என்று கூறினார்.

பெருநாணும் பேரச்சமும் உடையாள் தலைவி ஆதலின், இறந்துபாடு பயப்பன கூறி நாடாமைக்கு அன்றே,

'நாணவும் நடுங்கவும் நாடாள் தோழி
காணுங் காலைத் தலைமகள் தேஎத்து'.

இறை. அக. உரை 7 மேற்

எனச் சூத்திரம் பிறந்தது ஆதலின், இங்ஙனம் கூறி நாடாமைக்கு

'மெய்யினும் பொய்யினும் வழிநிலை பிழையாது
பல்வேறு கவர்பொருட் சொல்லின் ஆடல்'.

என்றார்,

இயற்கைப்புணர்ச்சி புணர்ந்த பின்னைத் தன்னை அவள் காணாமைத் தான் அவளைக் காணுவதோர் அணுமைக்கண் நின்றானாக, மற்றையார்எல்லாம் தலைமகட்குச் செய்யும் வழிபாடும் தோழி விசேடத்தால் செய்யும் வழிபாடும், எல்லார்க்கும் தலைமகள் செய்யும் அருளிச்செய்கையும் தோழிக்கு விசேடத்தால் செய்யும் அருளிச்செய்கையும் கண்டு, 'இவளே போலும் இவட்குச் சிறந்தாள்; இதுவும் எனக்கு ஒரு சார்பாம்' என உணர்ந்து தலைவன் முன் பேணினமையால், 'பெட்டவாயில்' என்றார்.

இயற்கைப்புணர்ச்சியான் ஆதல், இடந்தலைப்பாட்டான் ஆதல், பாங்கனான் ஆதல் புணர்ந்த தலைவன், பின்னரே தெருண்டு வரைதல் தலை; அல்லாதுவிடின், இரந்து குறை உறுதற்கு உரியன் ஆதலின், ‘இரவு வலியுறுத்தோன்’ என்றார்.

‘காமப் புணர்ச்சியும் இடந்தலைப் படலும்
பாங்கொடு தழாஅலும் தோழியின் புணர்வும்என்று
ஆங்கநால் வகையும் அடைந்த காமமொடு
முறையான் மொழிந்திசின் மறையோர் ஆறே’.
தொ. பொ. 498

எனவும்,

‘புணர்ந்த பின்றை ஆங்கனம் ஒழுகாது
பணிந்த மொழியால் தோழி தேஎத்து
இரந்துகுறை உறுதலும் கிழவோன் மேற்றே’.
இறை. அக. 5

எனவும் ஓதுப ஆகலின்.

அங்ஙனம் வினவுவான், ஏதிலார்போல ஊரினைமுன் வினாய்ச் சிறிது உறவு தோன்றப் பெயரினைப் பின் வினாய், அவ்விரண்டினும் மாற்றம் பெறாதான், ஒன்று கெடுத்தானாகவும் அதனை அவர் கண்டார் போலவும் வினாய், அவற்றினும் மாற்றம் பெறாதான் பிறவாற்றானும் வினவுதலின், இம் முறை வைத்தார். ஒழிந்தன ஆவன, வழி வினாதலும் மொழியாமை வினாதலும் இடைவினாதலும் பிறவும் ஆம்.

குறையுற உணர்தற்கும் இருவரும் உள்வழி அவன் வரவு உணர்தற்கும் உரிய கிளவிகள் ஐந்துமே அன்றி, அக்கிளவி நிகழ்தற்கு நிமித்தமாகிய பெட்டவாயில் பெற்றுச் சேறலும், இரவு வலியுறுத்தலும், இருவரும் உள்வழி ஒருதலையாகச் சேறலும் முதலிய தலைமகன் கூற்றுக்களும், அநுவாத முகத்தான் ஈண்டே நிகழ்தலும் கொள்க.

ஒன்றென முடித்தலான், புனம்கண்டு மகிழ்தலும் புனத்திடைக் கண்டு மகிழ்தலும் ஆகிய தலைவன் கூற்றுக்களும் ஈண்டே கொள்ளப்படும்.

எதிர்மொழி கொடுத்தல் முதலிய மூன்றும் இருவரும் உள்வழி அவன் வந்துழிய தோழி மதியுடம்படுமாற்றான் நிகழ்தலும், பெட்டவாயில் பெற்று இரவு வலியுறுத்த தலைவன், தலைவியும் தோழியும் ஒருங்கு தலைப்பெய்த செவ்வி நோக்கியாயினும் தோழி தனித்துழி யாயினும் ஊர் பெயர் கெடுதியொடு ஒழிந்தவும் வினாய்த் தோழியை மதியுடம் படுத்துமாற்றான் நிகழ்தலும் கொள்க. என்னை ?

'பெட்ட வாயில்பெற்று இரவுவலி யுறுப்பினும்
ஊரும் பெயரும் கெடுதியும் பிறவும்
நீரில் குறிப்பின் நிரம்பக் கூறித்
தோழியைக் குறையுறும் பகுதியும்'. தொ. பொ. 102

எனவும்,

'இரந்துகுறை பெறாஅது கிழவியும் தோழியும்
ஒருங்குதலைப் பெய்த செவ்வி நோக்கி
பதியும் பெயரும் பிறவும் வினாஅய்ப்
புதுவோன் போலப் பொருந்துவ கிளந்து
மதியுடம் படுத்தற்கும் உரியன் என்ப'.
இறை. அக. 6

எனவும் வருவன ஒத்து ஆகலான். இன்னும் சான்றோர் செய்யுட்களானும் உணர்க.

## விளக்கம்

[இவ்வுரை விளக்கங்கள் இறையனார் களவியல் உரையையும் பொருட்படல நச்சினார்க்கினியர் உரையையும் கொண்டு வரையப்பட்டன.

ஒத்த நூற்பாக்கள்

‘ நாற்றமும் .... ... ... உணர்ந்த பின்றை
மெய்யினும் பொய்யினும் வழிநிலை பிழையாது
பல்வேறு கவர்பொருள் நாட்டத் தானும் ’.
தொல், பொ. 114

‘ புணர்ந்த .... ... .... மேற்றே ’. இறை. அக. 5

‘ பெட்ட வாயில் .... .... .... பகுதியும் ’.
தொல். பொ. 112

‘ இரந்து குறை .... .... .... என்ப ’. இறை. அக. 6

முழுதும் — ந. அ. 139, 140, 141

அவற்றுள்,

நாற்றம் முதலாப் பயில்வுஈ ரும்என
ஆற்றல் ஏழினும் ஐயம்உற்று ஓர்தலும்
சாற்றிய ஏழினும் ஐயம் தீர்தலும்
மெய்யினும் பொய்யினும் வழிநிலை பிழையாது
பல்வேறு கவர்பொருள் பகர்ந்துநா டலும்என
மூன்று கூற்றன முன்னுற வுணர்தல் ’. மா. அ. 31

‘ பெட்ட வாயில்பெற்று இரவுவலி யுறுத்தோன்
கண்ணியும் தழையும் கையுறை ஏந்தி
ஊர்பெயர் கெடுதி உடன்பிற விுைதலும்
யார்இவர் இவர்மனத்து எண்ணம் யாதுஎனத்
தேர்தலும் தெளிதலும் எனத்தெளி வுடையோர்
ஓர்இரண்டு என்ப குறைஉற உணர்தல் ’. மா. அ. 32

‘ ஆய்ந்தவன் கையுறை ஏந்திவந்து அவ்வகை
வினவுழி எதிர்மொழி விளம்பலும் இறைவனை
நகுதலும் இருவர்உட் கோள்நா டலும்என

உவகையுற்று அவர்தாம் இருவரும் உள்வழி
அவன்வரவு உணர்தலும் மூன்றுஎன் றனரே'.
மா. அ. 33

'விதிஇரு நான்கிவை மேதகு பாங்கி
மதிஉடன் பாட்டிற்கு வாய்ந்த விரியே'. மா. அ. 34

'சேறல் துணிதல் வேழம் வினுதல்
கலைமான் வழிபதி பெயர்வினு தல்லே
மொழிபெறுது உரைத்தல் கருத்துஅறி வித்தல்
இடைவீ ஞுதலோடு இவைஈ ரைந்தும்
மடவரல் தோழிக்கு மதிஉடன் படுத்தல்.
திருக்கோவை. மு. வீ. கள. 10

'ஐயம் அழிதலும் அறிவு நாடலும்
மையறு தோழி அவன்வர உணர்தல்
திருக்கோவை. மு. வீ. கள. 11

'வாட்டம் வினுதல் முன்னுற உணர்தல்
கூட்டி உரைக்கும் குறிப்புரை யாகும்'.
திருக்கோவை. மு. வீ. கள. 12

குறையுற்று நிற்றல் அவன்குறிப்பு அறிதல்
அவள்குறிப்பு அறிதலோடு அவர்நினைவு எண்ணல்
கூறிய நான்கும் குறையுற உணர்வுஎனத்
தேறிய பொருளில் தெளிந்திசி னோரே'.
திருக்கோவை, மு. வீ கள. 13

நாற்றம் முதலிய ஏழானும் ஐயம்உற்று ஓர்தல்:

'பூங்கேச மன்றல் புனையா எழில்வெண் புதுமதிகண்டு
ஆங்கே இகழ்தல் அருகிய உண்டி அருஞ்செலவு
தீங்கே கரத்தல் ஒருவயி னேஎன்றும் சென்றுநிற்றல்
தாம்கே வலம்அல்ல வந்ததுஎன் னேஇந்தத் தையலுக்கே'.
அம்பி. 74

எனவும்,

[கூந்தலின் புதுமணம், புது அழகு, பிறைதொழ மறுத்தல், குறைந்த உணவு, தனித்துச் செல்லுதல், செய்வன மறைத்தல், ஒருபால் சென்று நிற்றல் இவை சாதாரணச் செயல்கள் என்று விடுக்கத் தக்கன அல்ல; தலைவிக்கு ஏதோ ஒரு புதுத்தொடர்பு ஏற்பட்டுள்ளது.]

இனி, அவை தனித்தனி வருமாறு காட்டுதும்.

நாற்றத்தான் ஐயம்உற்று ஓர்தல் :

'கங்கைச் சடிலர் மதுரா புரீசர் கடம்பவனத்து
எங்கட்கு உளதன்றி எங்குஉள தோஇவட்கு ஆரமும் பூந்
தொங்கல் புதுமண மும்திருப் பாவைபொற் றோளும் இரு
கொங்கைக் குவடும் அளகா டவியும் குடிகொண்டதே'.
மதுரை. 95

எனவும்,

[மதுராபுரேசர் கடம்பவனத்தைச் சார்ந்த இவட்கு எங்களிடம் இல்லாத அளவில் புதுமையாகச் சந்தன மணமும் பூ மணமும் எவ்வாறு உண்டாயின? இவள் தோள்களிலும் கொங்கையிலும் ஆர மணமும் தொங்கலில் புதுமலர் மணமும் ஏற்பட்டதன் காரணம் யாது?]

தோற்றத்தான் ஐயம்உற்று ஓர்தல் :

'தோளில் குழைவும் களபா சலம்தரு சோபையும்வை
வாளில் சிறந்த விழியும்கண் டால்சசி வட்டம்என்னும்
கோளில் திகழ்குடை யார்கூடல் வாழும் கொடியிடைக்கு
நாளில் புதுமை சிறந்துஒரு கோடி நலம்தருமே'.
மதுரை. 96

எனவும்,

[சந்திரனை ஒத்த குடையை உடையாரின் கூடலில் வாழும் இக்குறப்பெண், தோளில் குழைவும் தனங்களில் புது ஒளியும் விழியில் தனிக்கூர்மையும் புதுமையாகப்பெற்றுப் புதுவனப்புக் கொண்டுள்ளாள்.]

ஒழுக்கத்தான் ஐயம் உற்று ஓர்தல் :

'கந்துஆ டியகளிற் றூர்கடம் பாடவிக் காவின்மின்போல்
வந்தாள்ஒழுக்கவழக்குஎன்சொல்வேன்வண்டல்ஆடலும்பூஞ்
சந்துஆடு சோலை மணிஊசல் ஆடலும் தண்தரளப்
பந்துஆ டலும்மறந் தாள்என்ன பாவம் பலித்ததுவே'.
மதுரை. 97

எனவும்,

[சிவபெருமானின் கடம்பாடவிச் சோலையில் மின்போல் வந்த தலைவியின் ஒழுக்கம்பற்றி யாது சொல்லவல்லேன்? வண்டல் ஆடுதலும், சோலையில் ஊசல் ஆடுதலும், பந்து ஆடுதலும் மறந்துவிட்டாள். என்ன தீவினை ஏற்பட்டு விட்டதோ?]

உண்டியான் ஐயம் உற்று ஓர்தல் :

'பெருந்தா மரைப்பதம் போற்றிநிற் பார்பிற வீப்பிணிக்கு
மருந்தா கியபெரு மான்மது ரேசர் வரையில் இந்தக்
கருந்தாரை வேல்கண்ணிக்கு என்னகண் மாயம் கலந்தது அண்டர்
அருந்தா அமுதுஅருந் தப்புகுந் தாலும் அருந்திலளே'.
மதுரை. 98

எனவும்,

[அடியார்க்குப் பிறவிப்பிணியைப் போக்கும் மதுரேசர் மலையில் இத்தலைவிக்கு என்னமாயம் ஏற்பட்டுவிட்டதோ? அறியேன்; தேவாமிருதம் போலும் சுவைஉடைய பொருள் களையும் உண்ண மறுக்கிறாள்.]

செய்வினை மறைப்பான் ஐயம்உற்று ஓர்தல் :

'யாமேயும் அன்றி இனஆய வெள்ளமும் இன்றிஇவர்
தாமே புரியும் தவம்என்கொ லோதண் தரளம்அணி
வாம்மே கலைப்பங்கர் வாழ்மது ராபுரி வைகைசுற்றும்
பூமேவு சோலையும் செய்குன் றுமாகப் புகுந்துநின்றே'.
மதுரை. 99

எனவும்,

[என்னையும் விடுத்துத் தன் தோழியர்கூட்டத்தையும் விடுத்து மதுராபுரியில் சோலையும் செய்குன்றும் புக்கு இவள் தனியே நின்று செய்யும் தவம்தான் யாதோ ?]

செலவுகண்டு ஐயம்உற்று ஓர்தல் :

'கரிக்கும்ப கம்பக் கடாசலத் தார்கடம் பாடவிமான்
பரிக்கும் சிலம்பு சிலம்புபொற் பாதம் பதுமமலர்
விரிக்கும் தவிசில் மெலநடந் தாலும் மெலிவதுஅராத்
தரிக்கும் திருவுட லும்கன்ற வேநடை தந்ததுவே'.
மதுரை. 100

எனவும்,

[சிவபெருமானின் கடம்பாடவியைச் சார்ந்த இம்மான் போல்வாள் தன் சிலம்பு ஒலிக்கும் அடிகள் மலர்மேல் நடந்தாலும் மெலியும் நிலையள். அவள் தன் அடிகளும் மெல்லிடை தாங்கும் உடலும் கன்றுமாறு நடக்கின்றாளே.]

பயில்வான் ஐயம்உற்று ஓர்தல் :

'வன்னம் தருமவு லிச்சொக்க நாதர் மதுரைஇன
அன்னம் தனிநடை கற்பநின் றாள்தன் அமுதச்செவ்வாய்
இன்னம் துணைமுலைப் பால்மணம் போயின தில்லைஇவள்
தன்னந் தனிபயி லக்கற்ற வாறுஎன்கொல் சாற்றுவதே'.
மதுரை.101

எனவும் வரும்.

[சொக்கநாதர் மதுரையிலே அன்னத்துக்கு நடை கற்பிக்கும் இத்தலைவியின் வாய் இன்னும் பால்மணம் மாறவில்லை; அதற்குள் இவள் தன்னந்தனியேபயிலுவதற்கு எவ்வாறு கற்றனளோ ?]

அவ்வகை தன்னால் ஐயம் தீர்தல் :

'முதுக்குறைந் தனளே முதுக்குறைந் தனளே
மலையன் ஒள்வேல் கண்ணி
முலையும் வாரா முதுக்குறைந் தனளே'.

எனவரும்.

[மலையனுடைய ஒள்ளிய வேல்போன்ற கண்ணை உடைய தலைவி முலை பருப்பதன்முன்னும் பேரறிவு படைத்து விட்டாள்.]

மெய்யினும் பொய்யினும் வழிநிலை பிழையாது பல் வேறு கவர்பொருள் சொல்லின் ஆடலுள், பிறைதொழுக என்றல் :

‘ மைவார் கருங்கண்ணி செங்கரம் கூப்பு மறந்தும்மற்றைப்
பொய்வா னவரில் புகாதுதன் பொன்அடிக் கேஅடியேன்
உய்வான் புகஒளிர் தில்லைநின் றோன்சடை மேலதுஒத்துச்
செவ்வான் அடைந்த பசுங்கதிர் வெள்ளைச் சிறுபிறைக்கே’.

திருக்கோவை 67

எனவும்,

[மறந்தும் பிறதெய்வங்களை வழிபடாது தன் அடி களையே வழிபடுமாறு என்னை அமைத்துத் தில்லையில் நிற் கும் பெருமானின் சடைமேல் இருக்கும் பிறையை ஒத்த இப் பிறைச்சந்திரனை, கருங்கண்ணியே ! நீ வழிபடுவாயாக.

கணவன் அமைந்தபின், அவன் வழிபடும் தெய்வத்தை யன்றிப் பிறிது ஒன்றினை அவன் இசைவுபெறாது கற்புடைப் பெண் வழிபடாள் ஆதலின், தலைவி பிறையைத் தொழ மறுப்பாள் என்பது ]

கரந்து உரைத்தல் :

கோடுடையர் தண்பிறை தோய்குன்றம் ஈதுபைங் கொன்றைஎன்ன
நீடிய பூங்குழல் நேரிழை யாய்நென்னல் நின்னைஒழிந்து
ஆடிய பூஞ்சுனை வாய்அளி மூசி அளித்தவண்ணம்
வாடியது அன்றி வருந்திய காரணம் மற்றில்லையே ’.

அம்பி. 76

எனவும்,

[வான் அளாவிய இக்குன்றில், பூங்குழல் தோழியே! நேற்று நின்னை விடுத்து யான் குளித்த சுனையில் வண்டுகள் என்மேல் மொய்த்ததனால் உடல் வாடி விட்டது. யான் வருந்திய காரணம் அதுவே; பிறிதுஇல்லை.]

கரவு நாட்டம் :

'நீலம் பவளம் படரப் பவள நிறம்தரளக்
கோலம் புனைய நுதல்குறு வேர்வுஎழக் கோமளமே
போலும் திருநிறம் பொன்நிற மாகப் புனைசுனைநீர்
ஏலம் தருகுழ லாய்கிடை யாதுகொல் எங்களுக்கே'.

அம்பி. 77

எனவும்,

[ஏலம்கமழ் குழலி! நின் கண்கள் சிவக்கவும், உதடுகள் வெளுக்கவும் நெற்றியில் வியர்வை துளிக்கவும், நின் நிறம் பொன் நிறமாகவும், நின்னைச் சுனைநீர் மாற்றிவிட்டது. இம்மாற்றத்தை எங்களுக்கு ஏற்படுத்தவில்லையே!]

சுனைவியந்து உரைத்தல் :

'பருங்கண் கவர்கொலை வேழப் படையோன் படப்படர்தீத்
தருங்கண் ணுதல்தில்லை அம்பலத் தோன்தட மால்வரைவாய்க்
கருங்கண் சிவப்பக் கனிவாய் விளர்ப்பக்கண் ஆர்அளிபின்
வரும்கள்மா லைமலர் சூட்டவற் றோமற் றுஅவ் வான்சுனையே'.

திருக்கோவை. 70

எனவும்,

[காமனை எரித்த தில்லையான் மலையில் நீ ஆடியசுனை நின் கருங்கண் சிவப்பச் செவ்வாய் விளர்ப்ப வண்டுமொய்க்கும் மாலையை நினக்குச் சூட்டும் ஆற்றல் உடையதோ?]

நாண நாட்டம் :

'செந்நிறமேனிவெண்ணீறணிவோன்தில்லைஅம்பலம்போல்
அந்நிற மேனிநின் கொங்கையில் அங்குஅழி குங்குமமும்

மைந்நிற வார்குழல் மாலையும் தாரும் வளாய்மதம்சேர்
இந்நிற மும்பெறின் யானும் குடைவன் இருஞ்சுனையே'.
திருக்கோவை. 69

எனவரும்.

[சிவபெருமானுடைய அம்பலம் போன்ற உன் மேனியில் கொங்கையில் அழியும் குங்குமமும், குழற்குமாலையும், தாரும், இப் புதுநிறமும், அமைந்துள்ளமை போல, யானும் பெறும் வாய்ப்பு உண்டாயின், யானும் அச்சுனையில் குடைவேன்.]

நடுங்க நாட்டம் :

'ஆஆ இருவர் அறியா அடிதில்லை அம்பலத்து
மூவா யிரவர் வணங்கநின் றோனை உன் னாரின்முன்னித்
தீவாய் உழுவை கிழித்ததுஅந் தோசிறி தேபிழைப்பித்து
ஆஆ மணிவேல் பணிகொண்ட வாறுஇன்றுஓர் ஆண்தகையே'.
திருக்கோவை. 72

எனவும்,

[பிரமனும் மாலும் அறியாத அடிகளைத் தில்லைவாழ் அந்தணர் வணங்குமாறு நிற்கும் பெருமானை நினையாதவரைப் போலத் துன்பம் உறுமாறு, ஓர் ஆண்தகையைப் புலியொன்று கிழிக்க வரக் கணநேரத்தில் தன் வேலை அதன்மேல் பாய்ச்சி அவன் உயிர் பிழைத்தான்.]

இதுவும் அது :

'பண்டுஇப் புனத்துப் பகலிடத்து ஏனலுள்
கண்டுஇக் களிற்றை அறிவன்மன் — திண்டிக்
கதிரன் பழையனூர்க் கார்நீலக் கண்ணாய்
உதிரம் உடைத்து இதன் கோடு'. சிற்றெட்டகம்.

எனவும் வரும்.

இன்னோரன்ன காட்டின், இறந்துபாடு பயத்தலான் வழிநிலை பிழைத்தனவாம் ஆதலின், ஈண்டைக்கு ஏலாஎன மறுக்க.

[பண்டும் இத்திணைப்புனத்தில் இக்களிற்றைக் கண்டு அறிவேன். தலைவியே! இன்று அதன்கோடு உதிரம் தோய்ந்து காணப்பட்டது.

நாணநாட்டம், நடுங்கநாட்டம் இவைபற்றித் திருக்கோவையார் உரையாசிரியரான பேராசிரியர்,

'பிறைதொழுக என்றல் பின்னும் அவளை
உறவுஎன வேறு படுத்தி உரைத்தல்
சுனையாடல் கூறல் தோற்றம் கண்டு
புணர்ச்சி உரைத்தல் பொதுஎனக் கூறி
மதியுடம் படுதல் வழிநாணல் நடுங்கல்
புலிமிசை வைத்தல் புகலுங் காலே'.

என்று வரைந்த நூற்பாவும், அதற்கு அமைந்த இலக்கிய எடுத்துக்காட்டுக்களும், அந்நூற்பாவை ஒட்டிய முத்து வீரியக் களவொழுக்கவியல் 14-ஆம் நூற்பாவும் இவ்வாசிரியர் கருத்துக்கு ஏற்பன அல்ல.]

பெட்டவாயில் பெற்றுச் சேறல் :

'எளிதஅன்று இனிக்கனி வாய்வல்லி புல்லல் எழில்மதிக்கீற்று
ஒளிசென்ற செஞ்சடைக் கூத்தப் பிரானைஉன் னாரின்என்கண்
தெளிசென்ற வேல்கண் வருவித்த செல்லல்எல் லாம்தெளிவித்து
அளிசென்ற பூங்குழல் தோழிக்கு வாழி அறிவிப்பனே'.

திருக்கோவை. 50

எனவும்,

[இனி, தலைவியை யானே எதிர்ப்பட்டுப் புணர்தல் அவ்வளவு எளியதன்று. திரிபுரத்தை அழித்த சிவபெருமானை நினையாதவர் போல, என்மனத்துத் தலைவியின் கண்கள் வருவித்த துன்பங்களை எல்லாம் அவள் தோழிக்கு அறிவித்து அவள் வாயிலாகக் கூட்டத்தைத் தொடர்வேன்.]

இரவு வலியுறுத்தல் :

' குவளைக் கருங்கண் கொடிஏர் இடைஇக் கொடிகடைக்கண்
உவளைத் தனதுஉயிர் என்றது தன்னொடு உவமையில்லா
தவளைத்தன் பால்வைத்த சிற்றம் பலத்தான் அருளிலர்போல்
துவளத் தலைவந்த இன்னல்இன் னேஇனிச் சொல்லுவனே '
திருக்கோவை. 51

எனவும்,

[ஒப்பற்ற பார்வதியைத் தன் இடப்பாகமாகக் கொண்ட சிவபெருமானின் அருள் இல்லாதவரைப் போல, என்மனம் வாடுமாறு வந்துள்ள துன்பத்தை, தலைவியின் கடைக்கண் களால் தன் உயிர்போல்வாள் என்று அறிவிக்கப்பட்ட தோழியிடம் யான் போய்ச் சொல்லுவேன்.]

ஊர் வினுதல் :

' ஒருங்குஅட மூஎயில் ஒற்றைக் கணைகொள்சிற் றம்பலவன்
கருங்கடம் மூன்றுஉகு நால்வாய்க் கரிஉரித் தோன்கயிலை
இருங்கடம்மூடும்பொழில்எழில்கொம்பர்அன்னீர்கள்இன்னே
வருங்கள்தம் மூர்பகர்ந் தால்பழி யோஇங்கு வாழ்பவர்க்கே'.
திருக்கோவை 55

எனவும்,

[திரிபுரத்தை அழித்து, யானையைக் கொன்று தோலை உரித்த சிவபெருமானின் கயிலைச் சோலையில் உள்ள கொடி போல்வீர் ! இப்பொழுதே வாருங்கள், இவ்வூரில் வாழ்வார் தம் ஊர்ப் பெயரைக் கூறுதல் பழியாகுமோ ?]

பெயர் வினுதல் :

' தார்என்ற ஓங்கும் சடைமுடி மேல்தனித் திங்கள்வைத்த
கார்என்ன ஆரும் கறைமிடற்று அம்பல வன்கயிலை
ஊர்என்ன என்னவும் வாய்திற வீர்ஒழி யீர்பழியேல்
பேர்என்ன வோஉரை யீர்விரை ஈர்ங்குழல் பேதையரே'.
திருக்கோவை 56

எனவும் வரும்.

[கோதையரே! பிறை சூடிய நீலகண்டனை சிவபெருமானுடைய கயிலை மலையின் உம் ஊர்ப்பெயர் கேட்கவும் அதனைக் கூறுதல் பழி என்று விடுத்தீர் ஆயினும், உம் பெயர்களையாவது கூறுங்கள்.]

ஊரும் பிறவும் உடன்வினுதல் :

' அருவி ஆர்க்கும் பெருவரை நண்ணி
கன்றுகால் யாத்த மன்றப் பலவின்
வேர்க்கொண்டு தூங்கும் கொழுஞ்சுளைப் பெரும்பழம்
குழவிச் சேதா மாந்தி அயலது
வேய்பயில் இறும்பின் ஆம் ஊறல் பருகும்
பெருங்கல் வேலிச் சிறுகுடி யாதுஎனச்
சொல்லவும் சொல்லீர் ஆயின் கல்லெனக்
கருவி மாமழை வீழ்ந்தென எழுந்த
செங்கேழ் ஆடிய செழுங்குரல் சிறுதினைக்
கொய்புனம் காவலும் நுமதோ
கோடுஏந்து அல்குல் நீள்தோ ளீரே '.

இது நற்றிணை. 213

எனவரும்,

[நீள்தோளீரே! ' அருவி ஒலிக்கும் மலையை அடைந்து, கன்றுகள் தம் அடிமரங்களில் கட்டப்பட்ட மன்றத்திலுள்ள பலாவின் வேரில் தொங்கும் பழத்தைப் பசுக்கன்று உண்டு மூங்கில் வளர்ந்த பக்கத்திலுள்ள குறுங்காட்டில் உள்ள நீரைப் பருகும் மலைசூழ்ந்த நும் சிறுகுடி யாது?' என்று வினவவும், விடையிறுது போயினீர். அது கிடக்க; மழையால் கருவுற்ற சிறுதினை விளையும் இத் தினைப்புனங் காவல் உமதோ? அதனையாவது கூறுமின்.]

கெடுதியுள் வேழம் வினுதல் :

' இரும்களி யாய்இன்று யான்இறு மாப்பஇன் பரபணிவோர்
மருங்குஅளியா அனல்ஆடவல்லோன் தில்லையான்மலைஈங்கு

ஒருங்குஅளி ஆர்ப்ப உமிழ்மும் மதத்துஇரு கோட்டுஒருநீள்
கருங்களி ஆர்மத யானைஉண் டோவரக் கண்டதுவே'.
திருக்கோவை 52

எனவும்,

[யான் மகிழுமாறு தன்னைப் பணிபவருக்கு இன்பம் அளித்து அனலில் ஆடும் தில்லையான் மலையில், மதத்தில் வண்டுகள் அமர்ந்து ஒலிப்ப ஒரு மதயானை இப்பக்கம் வந்த ததனைக் கண்டீரோ ?]

மரை வினுதல் :

'நறைபரந்த சாந்தம் அறஎறிந்து நாளால்
உறைஎதிர்ந்து வித்தியஊழ் ஏனல்—பிறைஎதிர்ந்த
தாமரைபோல் வாள்முகத்துத் தாழ்குழலீர் காணீரோ
ஏமரை போந்தன ஈண்டு'. திணைமாலை 1

எனவும்,

[சந்தன மரங்களை வெட்டி நிலம் திருத்தி விதைத்த தினைப்புனத்தில், பிறையை மேலேகொண்ட தாமரைபோன்ற முகத்தை உடைய தாழ்குழலீர்! அம்பு தன்மேல் புதையுண்ட மான்கள் இப்பக்கம் வந்தனவற்றை காணவில்லையா ?]

கலைமான் வினுதல் :

'கருங்கண் ணனைஅறி யாமைநின் றோன்தில்லைக் கார்ப்பொழில்வாய்
வரும்கள் நனையவண்டு ஆடும் வளர்இள வல்லிஅன்னீர்
இருங்கண் அனைய கணைபொரு புண்புணர் இப்புனத்தின்
மருங்கண் அனையதுஉண் டோவந்தது ஈங்குஒரு வான்கலையே',
திருக்கோவை. 53

எனவும்,

[திருமால் அறியாதபடி நின்ற சிவபெருமானுடைய பொழிலிலே வண்டுகள் சூழும் கொடிபோல்வீர்! இங்கு இப் பக்கல் உம் கண்கள்போன்ற அம்புகள்பட்ட புண்ணோடு கலைமான் ஒன்று வந்தது உண்டா ?]

வன்றி வினுதல் :

‘ தங்குறிப்பி னோரும் தலைச்சென்று கண்டக்கால்
எங்குறிப்பின் நோம்என்று இகழ்ந்திரார் — நும்குறிப்பின்
வென்றி படர்நெடுங்கண் வேய்த்தோளீர் கூறீரோ
வன்றி படர்ந்த வழி ’ தொ. பொ. மே

எனவும் வரும். வன்றி — பன்றி.

[தம் செயலில் ஈடுபட்டாரும், ஒருவர் தம்மைக் காண வருவாராயின், தம் செயல் கெடுமே என்று வந்தவரை வினுவாது இகழ்ந்து‘ வாளா இருக்கமாட்டார்கள். அவ்வாறாக, நெடுங்கண் வேய்த்தோளீர் ! பன்றிஒன்று இப்பக்கல் சென்ற வழியை நீர் கூறீரோ ?]

மாஞெடு மனம் வினுதல் :

‘ கனம்வந்து இறைஞ்சும் கடம்பா டவியர் கருணைஎன்னத்
தனம்வந்து அரும்பும் சுரிகுழ லீர்என் சரத்தொடுமான்
இனம்வந்த தோவந்த மான்பிணை தேடி இளைத்துமற்றுஎன்
மனம்வந்த தோஉரை யீர்உங்கள் காவல் மலிபுனத்தே ’.
மதுரை 87

எனவரும்,

[மேகம் தாழும் கடம்பமரக் காட்டினை உடைய சிவபெருமானுடைய அருள்போல, முலைமுகம் செய்துள்ள நங்கையரே ! நீங்கள் காக்கும் இப்புனத்திற்கு என் அம்போடு மான் ஒன்று வந்ததோ ? அம்மானைத் தேடி இளைத்து என் மனம் வந்ததோ ? கூறுவீராக ]

வழி வினுதல் :

‘ சிலம்புஅணி கொண்டசெஞ் சீறடி பங்கன்தன் சீர்அடியார்
குலம்பணி கொள்ள எனைக்கொடுத்தோன்கொண்டு தான்அணியும்
கலம்பணி கொண்டுஇடம் அம்பலம் கொண்டவன் கார்க்கயிலைச்
சிலம்புஅணி கொண்டநும் சீறூர்க்கு உரைமின்கள் செல்நெறியே’.
திருக்கோவை 54

எனவும்,

[பார்வதிபங்கனும் தன் அடியார்க்கு என்னை அடியவன் ஆக்கிப் பாம்பினை அணிகலனாக அணிந்து அம்பலத்தான் ஆகும் சிவபெருமானின் கயிலைச் சிலம்பில் உள்ள உம் சீறூருக்குச் செல்லும் வழியைக் கூறுங்கள்.]

மொழியாமை வினாதல் :

‘ இரதம் உடைய நடம்ஆட்டு உடையவர் எம்உடையவர்
வரதம் உடைய அணிதில்லை அன்ன வரிப்புனத்தார்
விரதம் உடையர் விருந்தொடுபேச்சின்மை மீட்டு அதுஅன்றேல்
சரதம் உடையர் மணிவாய் திறக்கின் சலக்குஎன்பவே ’

திருக்கோவை. 57

எனவும்,

[சுவையான நடனம் ஆடும் சிவபெருமானுடைய தில்லை அன்ன இப்புனத்தார்கள், ஒன்று, ‘ விருந்தினரோடு பேசுதல் கூடாது ’ என்ற விரதம் உடையவர் ஆதல் வேண்டும்; இன்றேல், தம்வாயைத் திறந்தால் முத்துக்கள் சலக்கு என்ற ஓசையோடு உதிர்ந்துவிடும் என்று கருதுபவர் ஆதல் வேண்டும்.]

திருக்கோவை. 59

எனவும்,

இடைவினாதல் :

‘ கலைக்கீழ் அகல்அல்குல் பாரம்அது ஆரம்கண் ஆர்ந்துஇலங்கும்
முலைக்கீழ்ச் சிறிதுஇன்றி நிற்றல்முற் றாது அன்று இலங்கையர்கோன்
மலைக்கீழ் விழச்செற்ற சிற்றம் பலவர்வண் பூங்கயிலைச்
சிலைக்கீழ்க் கணைஅன்ன கண்ணீர் எதுநுங்கள் சிற்றிடையே ’

[மேகலையின்கீழ் அல்குல்உளது; முலைக்குகீழ் அல்குலுக்கு மேல் சிறிதாவது இடம்இல்லாது இணைதல் இயலாது. இராவணன் ஆற்றலை ஒடுக்கிய சிவபெருமானுடைய கயிலையிலே, வில்லின் கீழ்உள்ள அம்புபோன்ற கண்ணீர் ! ‘ நும் சிறிய இடை எது?’ என்பதைக் கூறுங்கள்.]

உரைத்தது உரையாது கருத்து அறிவித்தல் :

'வில்நிற வாள்நுதல் வேல்நிறக் கண்மெல் லியலைமல்லல்
தன்நிறம் ஒன்றில் இருத்திநின் றோன்தனது அம்பலம்போல்
மின்நிறநுண் இடைப்பேரெழில்வெண் நகைப்பைந்தொடியீர்
பொன்நிற அல்குலுக்கு ஆமோ மணிநிறப் பூந்தழையே'.
திருக்கோவை 58

எனவும் வரும். பிறவும்அன்ன.

[ 'வாள்நுதல் வேற்கண் பார்வதியைத் தன் மேனியில் இருத்தி நின்ற சிவபெருமானது அம்பலம்போல, ஒளிவீசும் நுண்இடைப் பேர்எழில் வெண்முறுவல் மகளிரே! யான் கொண்டுவந்துள்ள இத்தழையாடை நுமக்கு அணிதற்கு ஏற்குமோ ?' என்று கூறுங்கள்.]

யாரே இவர் மனத்து எண்ணம் யாது எனத்தேர்தல் :

'பல்லிலன் ஆகப் பகலைவென் றோன்தில்லை பாடலர்போல்
எல்லிலன் நாகத்தொடுஏனம்வினவுஇவன்யாவன்கொலாம்
வில்லிலன் நாகத் தழைகையில் வேட்டைகொண் டாட்டம்மெய்ஓர்
சொல்லில னாகற் றவாகட வான்இச் சுனைப்புனமே'.
திருக்கோவை 60

எனவும்,

[பகலைப் பல் உகுத்த சிவபெருமானுடைய தில்லையைப் பாடாதவரைப்போல ஒளி இழந்து, யானையும் பன்றியும் வந்த வழியை வினவும் இவன், இப்புனத்தைக் கடவானாய்க் கையில் வில் இன்றித் தழை ஏந்தி வேட்டைக்கு வந்தவனாக உண்மை ஏதும் உரையானாய் உளான். இவன் யாவனோ ?]

'ஆழம்மன் னோஉடைத்து இவ்வையர் வார்த்தை அரங்கன்னைந்து
விழமுன் நோக்கிய அம்பலத் தான்வெற்பின் இப்புனத்தே
வேழம்முன் னுய்க்கலை யாய்ப்பிற வாய்ப்பின்னும் மென்தழையாய்
மாழைமென் நோக்கி இடையாய்க் கழிந்தது வந்துவந்தே'.
திருக்கோவை 61

எனவும்,

[இத் தலைவன் சொற்கள் ஆழமுடையன. மன்மதனை எரித்த அம்பலத்தான் மலையைச்சார்ந்த இப்புனத்தில் இவன் சொற்கள் யானையில் தொடங்கி மானாகிப் பிறவாகிப் பின் தழையாகி இறுதியில் இத்தலைவியின் இடையாய் வந்து முடிந்துவிட்டது.]

இருவரும் உள்வழி ஒருமையின் தலைவன் கையுறை ஏந்திச் சேறல் :

'தண் தாமரைமலர்ப்பொன்னையும்பார்மங்கைதன்னையும்போல்
வண்டு ஆர்குழல்மடவார்மணந்தார்சென்றுவாணன் தஞ்சை
நுண் தாது அணிபொங்கர் நீழலின் கீழ்இந்நுடங்கிடையார்க்
கண்டு ஆ தரவைஎல் லாம்சொல் லவேநல்ல காலம்இதே'.

தஞ்சை 7

எனவும்,

[தஞ்சை வாணன் சோலையிலே திருமகளும் நிலமகளும் போலத் தலைவியும் தோழியும் சேர்ந்து உள்ளனர் ஆதலின், அவர்களைக் கண்டு என் விருப்பத்தைக் கூற இஃது ஏற்ற செவ்வியாகும்.]

கையுறை ஏந்திநின்று அவ்வகை வினாதல் :

'தழைக்கின்றசந்தனம்தண்ணறுஞ்சாரல்தவழும்கொண்டல்
மழைக்குன்ற வாணர் மடவிய ரே நும் மலர்க்கண்களால்
உழைக்கன்றையும்மொழியால்ஒருகோடிப்பைங்கிள்ளையையும்
அழைக்கின்ற உங்களை யோபுனம் காவலர் ஆக்குவதே'.

அம்பி 94

எனவும் வரும்.

[சந்தனச் சாரலிலே மேகம் தவழும் குன்றவர் மகளிரே! நும் கண்களால் மான் கன்றையும் மொழியால் கிளிகளையும் அழைக்கின்ற உங்களையோ, மானையும் கிளியையும் கடிதற்கு உரிய தினைப்புனத்தில் காவலாக வைப்பது ?]

தோழி தனித்துழித் தலைவன் குறையுற்று மதியுடம்படுத்தல் வந்துழிக்காண்க. மற்று இவற்றையே ஒருவரைக்கூறும் பன்மைக்கிளவி ஆக்கி உதாரணம் ஆக்குவதும் ஒன்று.

கையுறை ஏந்திநின்று அவ்வகை வினவுழி எதிர்மொழி கொடுத்தல் :

'உடுக்கும் கலைஇன்றி இங்குஒரு நாளும் ஒருவர்வந்து
கெடுக்கும் கலைகண்டு அறிகிலம் யாங்கிளர் வான்உலகை
மடுக்கும் கலைமதி துஞ்சும்அஞ் சாரல் அருவிவெற்பா
தொடுக்கும்கலைஇனிவேறும்உண்டாயினும்சொல்லுகவே'.

அம்பி 91

எனவும்,

[வானை அடைந்து உச்சியில் உள்ள மதி தங்கும் மலைச் சாரலில் அருவிபாயும் வெற்பனே! நாங்கள் உடுக்கும் கலையை (ஆடையை) அன்றிப் பிறர் இப்புனத்தருகே கெடுத்த கலையை (மானை) அறியோம். உன் அறிவினால் இனித்தொடுக்கும் வினாக்கள் உளவேல் சொல்லுக.]

இறைவனை நகுதல் :

'மின்னே தழைகொண்டு வேழம்எய் தார்அந்த வேழம்வந்து
பின்னே இணைபிரி யும்பிணை யானது பேசில்இன்னம்
கொன்னே உகளும் குறுமுயல் ஆகவும் கூடும்கொல்லோ
என்னே உலகில் இவரைஒப் பார்இல்லை ஏவினுக்கே'.

அம்பி. 92

எனவும்,

[தலைவியே! கையில் தழையைக்கொண்டு இவர் யானையை எய்தார். அந்த யானை பின் இணையைப் பிரிந்த

மான் ஆகிவிட்டது. இன்னும்கேட்டால் குறுமுயல் ஆக வும் கூடுமோ ? என்ன வியப்பு ! உலகில் அம்பு எய்வதில் இவரை ஒப்பார் ஒருவரும் இரார் ]

மதியினின் அவர் அவர் மனக்கருத்து உணர்தல் :

‘ ஏனல் காவல் இவளும் அல்லள்
மான்வழி வருகுவன் இவனும் அல்லன்
நரந்தங் கண்ணி இவனோடு இவளிடைக்
கரந்த உள்ளமொடு கருதியது பிறிதே
நம்முன் நாணுநர் போலத் தம்முள்
மதுமறைந்து உண்டோர் மகிழ்ச்சி போல
உள்ளத்து உள்ளே மகிழ்ப
சொல்லும் ஆடுப கண்ணி னானே ’.

தொல். பொ.

எனவரும்,

[இவள் திணைக்காவல் புரிவாளும் அல்லள்; இவன் மான் தப்பிச்சென்ற வழியைத் தேடி வருவானும் அல்லன். இவ னும் இவளும் தம் மறைந்த உளத்தோடு கருதியது வேறு ஒன்றாகும். என்முன் நாணுவார்போல உளர். ஆனால் மறைத்துக் கள்ளினை உண்டார் களிப்பு உள்ளத்துள்ளே யாவது மயக்கம் தருவதுபோல் உள்ளேயே மகிழ்கின்றனர். தம் கண்களால் பேசிக்கொள்வதும் செய்கின்றனர்.]

இவற்றுள், நாற்றம் முதலிய ஏழானும் ஐயமுற்று ஓர் தலும், அவ்வகை தன்னால் ஐயம் தீர்தலும், மெய்யினும் பொய்யினும் வழிநிலை பிழையாது பல்வேறு கவர்பொருள் சொல்லின் ஆடலும், என்னும் மூன்றும் முன்னுற வுணர்தற் கும், கண்ணியும் தழையும்ஏந்தி நண்ணி ஊர்பெயர் கெடுதி யோடு ஒழிந்தவும் வினவுழி ‘யாரே இவர் ? மனத்து எண் ணம் யாது ?’ எனத்தேர்தலும் எண்ணம் தெளிதலும் என் னும் இரண்டும் ‘குறையுற உணர்தற்கும், கையுறை ஏந்தி நின்று அவ்வகை வினவுழி எதிர்மொழி கொடுத்தலும்,

இறைவனை நகுதலும், மதியினின் அவர்அவர் மனக்கருத்து உணர்வும் என்னும் மூன்றும் இருவரும் உள்வழி அவன் வரவு உணர்தற்கும் உரியவாம்.

புனம் கண்டு மகிழ்தல் :

'உவரும் புலவும் ஒழிக்கும் கழிப்புன்னை ஒண்மலர்த்தாது
இவரும் துறை, அன்னம் மென்னடை யார் இதண் ஏற முல்லைப்
பவரும் கொடியும் படர்கொழுஞ் சாரல், பசுந்தினையைக்
கவரும் கிளியினுக்கு, இன்றுகைம் மாறுஒன்று கண்டிலமே'

அம்பி 83

எனவும்,

[உவர்மணம் புலால்நாற்றம் இவற்றைப்போக்கும் புன்னைத் தாது பரவும் கடல்துறையிலுள்ள அன்னம்போன்ற நடையையுடைய தலைவியும் தோழியும் பரணில் ஏறுமாறு, முல்லைக்கொடி படரும் சாரலிலே தினைக்கதிரைக் கவரும் கிளிகளுக்குச் செய்யத் தக்க கைம்மாறு ஒன்றும்இல்லை.]

புனத்திடைக் கண்டு மகிழ்தல் :

'தினைக்காவல் இந்தத் திருவைவைப் பார்அந்தச் செங்கமல
மனைக்குஆர் உளர்என்று அறிந்திலரோ அருள் மாரிவெள்ளச்
சுனைக்காவி அம்கண்ணி தோய்வார் அழகியசொக்கர்வெற்பில்
வினைக்கா னவர்அறிவு இப்படி யோமுன் விதித்ததுவே'.

மதுரை. 78

எனவும் வரும். 135

[அருள்வெள்ளம் பொழியும் குவளைக்கண்ணியாகிய பார்வதியைக் கூடிய சொக்கநாதர் மலையிலே, இத்திரு மகளைத் தினைக்காவலுக்கு இக்குறவர் வைத்துள்ளனரே! இவள் முன்பு தங்கியிருந்த செந்தாமரையில் வேறு யாரைத் தங்கச் செய்வர்? இவருக்கு ஆண்டவன் அறிவை இப்படி அமைத்து விட்டானே!] 135

## பாங்கியிற் கூட்டத்து வகை

508 இரந்துபின் நிற்றல்[1] சேட்படை[2] மடல்கூற்று[3]
மடல்விலக்கு[4] உடன்படல்[5] மடல்கூற்று ஒழிதல்[6]
குறைநயப் பித்தல்[7] நயத்தல்[8] கூட்டல்[9]
கூடல்[10] ஆயம் கூட்டல்[11] வேட்டல்[12] என்று
ஈராறு வகைத்தே இருவயின் கூட்டம்

இது நிறுத்த முறையானே பாங்கியின் கூட்டத்தின் வகை இத்துணைத்து என்கின்றது.

(இ-ள்) இரந்து பின்நிற்றல் முதலாக வேட்டல் ஈறுகச் சொல்லப்பட்ட பன்னிரண்டு வகையினை உடைத்தாம் பாங்கியின்கூட்டம் என்றவாறு. 133

விளக்கம்

1 தலைவன் தோழியை இரந்து பின் நிற்றல்.
2 தோழி தலைவனை அகற்ற முயறல்.
3 தலைவன் மடல் ஏறுவதாகக் கூறல்.
4 தோழி மடலேறுதலை விலக்குதல்.
5 தோழி தலைவன் குறையை முடிப்பதற்கு உடன்படல்.
6 தலைவன் மடலேறுவதாகக் கூறுவதனைத் தவிர்தல்.
7 தலைவன் குறையைத் தலைவி விரும்பி ஏற்றுக்கொள்ளுமாறு தோழி கூறல்.
8 தலைவி தோழிகூற்றுக்கு உடன்பட்டு விரும்புதல்.
9 தலைவியைத் தலைவனிடம் சேர்ப்பித்தல்.
10 தலைவன் தலைவியைக் கூடல்.
11 தோழி தலைவியை ஆயவெள்ளத்தில் கொண்டுசேர்த்தல்.
12 தலைவன் அன்று தலைவி இல்லில் விருந்தினனாக வருதற்கு விரும்புதல்.

ஒத்த நூற்பாக்கள்

‘ பெட்ட வாயில்பெற்று இரவுவலி யுறுப்பினும்
ஊரும் பேரும் கெடுதியும் பிறவும்
நீரில் குறிப்பின் நிரம்பக் கூறி
தோழியைக் குறையுறும் பகுதியும் .... ...
அறிந்தோன் அயர்ப்பின் அவ்வழி மருங்கின்
கேடும் பீடும் கூறலும் தோழி
நீக்கலின் ஆகிய நிலைமையும் நோக்கி
மடல்மாக் கூறும் இடனுமார் உண்டே ’

தொ. பொ. 102

‘ பண்பிற் பெயர்ப்பினும் பரிவுற்று மெலியினும்
அன்புற்று நகினும் அவட்பெற்று மலியினும்
ஆற்றிடை உறுதலும் அவ்வினைக்கு இயல்பே ’ 103

ந. அ. 143

முழுதும் —

‘ இரந்துபின் நிற்றல் சேட்படை என்று
மடற்கூற் றுடனே மடல்விலக்கு என்று
உடன்படக் கூறல்மடல் கூற்றொழிதல் என்று
குறைநயப் பித்தல் மறுத்தல் என்று
கூட்டல் கூடல் ஆயம் ஒன்றக்
கூட்டல் அமைதியின் வேட்டல் என்றுங்குப்
பன்னிரு வகைத்தே பாங்கியிற் கூட்டம் ’.

மா. அ. 35

136

## பாங்கியிற் கூட்டத்து விரி

509 தலைவன் உட்கோள் சாற்றலும்[1] பாங்கி
குலமுறை கிளத்தலும்[2] தலைவன் தலைவி
தன்னை உயர்த்தலும்[3] நன்னுதல் பாங்கி
அறியாள் போன்று வினவுதலும்[4] இறையோன்
இறைவி தன்மை இயம்பலும்[5] பாங்கி

தலைவி அருமை சாற்றலும்[6] தலைவன்
இன்றியமையாமை இயம்பலும்[7] பாங்கி
நின்குறை நீயே சென்றுஉரை என்றலும்[8]
பாங்கியைத் தலைவன் பழித்தலும்[9] பாங்கி
பேதைமை ஊட்டலும்[10] காதலன் தலைவி
மூதறி வுடைமை மொழிதலும்[11] பாங்கி
முன்னுறு புணர்ச்சி முறையுறக் கூறலும்[12]
தன்நிலை தலைவன் சாற்றலும்[13] பாங்கி
உலகியல் உரைத்தலும்[14] தலைவன் மறுத்தலும்[15]
பாங்கி அஞ்சிஅச் சுறுத்தலும்[16] ஆங்குஅவன்
கையுறை புகழ்தலும்[17] தையல் மறுத்தலும்[18]
ஆற்று நெஞ்சினோடு அவன்புலத் தலும்[1] அவள்
ஆற்றுவித்து அகற்றலும்[20] ஆகும்நா லைந்தும்;
இரந்துகுறை பெறாது வருந்திய கிழவோன்
மடலே பொருள்என மதித்தலும்[21] பாங்கிக்கு
உலகின் மேல்வைத்து உரைத்தலும்[22] அதனைத்
தன்மேல் வைத்துச் சாற்றலும்[23] பாங்கி
தலைமகள் அவயவத்து அருமை சாற்றலும்[24]
தலைமகன் தன்னைத் தானே புகழ்தலும்[25]
அலர்முலைப் பாங்கி அருள்இயல் கிளத்தலும்[26]
கொண்டுநிலை கூறலும்[27] என்றுஇவை ஏழும்;
தலைவி இளமைத் தன்மை பாங்கி
தலைவற்கு உணர்த்தலும்[28] தலைவன் தலைவி
வருத்திய வண்ணம் உரைத்தலும்[29] பாங்கி
செவ்வி அருமை செப்பலும்[30] தலைவன்
செவ்வி எளிமை செப்பலும்[31] பாங்கி
என்னை மறைப்பின் எளிதுஎன நகுதலும்[32]
அந்நகை பொறாஅது அவன்புலம் பலும்[33] அவள்
தேற்றலும்[34] கையுறை ஏற்றலும்[35] கிழவோன்
ஆற்றலும்[36] என்னும் அவ்வோன் பானும்;
இறைவன் தனக்குக் குறைநேர் பாங்கி

இறைவிக்கு அவன்குறை உணர்த்தலும்[37] இறைவி
அறியாள் போன்று குறியாள் கூறலும்[38]
பாங்கி இறையோன் கண்டமை பகர்தலும்[39]
பாங்கியைத் தலைவி மறைத்தலும்[40] பாங்கி
என்னை மறைப்பது என்எனத் தழாஅலும்[41]
கையுறை புகழ்வும்[42] என்று இவ்விரு மூன்றும்;
தோழி கிழவோன் துயர்நிலை கிளத்தலும்[43]
மறுத்தற்கு அருமை மாட்டலும்[44] தலைவன்
குறிப்பு வேறாக நெறிப்படக் கூறலும்[45]
தலைவியை முனிதலும்[46] தலைவி பாங்கி
தன்னை முனிதலும்[47] தன்கைக் கையுறை
ஏற்றலும்[48] எனமுறை சாற்றிய ஆறும்;
இறைவி கையுறை ஏற்றமை பாங்கி
இறைவற்கு உணர்த்தலும்[49] குறியிடம் கூறலும்[50]
குறியிடத்து இறைவியைக் கொண்டு சேறலும்[51]
குறியிடத்து உய்த்து நீங்கலும்[52] இறையோன்
இடத்துஎதிர்ப் படுதலும்[53] இயைதலும்[54] புகழ்தலும்[55]
விடுத்தலும்[56] பாங்கி மெல்லியல் சார்ந்து
கையுறை காட்டலும்[57] மைஉறை கண்ணியைப்
பாங்கில் கூட்டலும்[58] நீங்கித் தலைவற்கு
ஓம்படை சாற்றலும்[59] உலகியல் மேம்பட
விருந்து விலக்கலும்[60] பெருந்தகை விருந்துஇறை
விரும்பலும்[61] எனமுறை தெரிந்தபன் மூன்றொடு
அற்றம்இல் சிறப்பின்இவ் வறுபத் தொன்றும்
குற்றம்இல் பாங்கியின் கூட்டத்து விரியே.

இது பாங்கியிற்கூட்டத்து விரி இத்துணைப் பகுதித்து என்கின்றது.

(இ-ள்) தலைவன் உட்கோள் சாற்றல் முதலாகப் பாங்கி ஆற்றுவித்தல் ஈறாகச் சொல்லப்பட்ட இருபதும், இரந்து குறைபெறாது வருந்திய கிழவோன் மடலே பொருள் என மதித்தல் முதலாகக் கொண்டுநிலைகூறல் ஈறாகச் சொல்லப்

பட்ட ஏழும், தலைவியின் இளமைத் தன்மை பாங்கி தலை வற்கு உணர்த்தல் முதலாகக் கிழவோன் ஆற்றல் ஈருகச் சொல்லப்பட்ட ஒன்பதும், இறைவன் தனக்குக் குறை நேர் பாங்கி இறைவிக்கு அவன்குறை உணர்த்தல் முதலாகப் பாங்கி கையுறை புகழ்தல் ஈருகச் சொல்லப்பட்ட ஆறும்' தோழி கிழவோன் துயர்நிலை கிளத்தல் முதலாகக் கையுறை ஏற்றல் ஈருகச் சொல்லப்பட்ட ஆறும், இறைவி கையுறை ஏற்றமை பாங்கி இறைவற்கு உணர்த்தல் முதலாகத் தலைவன் விருந்துஇறை விரும்பல் ஈருக ஆராய்ந்த பதின்மூன்ருேடு கூட மிகுந்த சிறப்பினை உடைய இவ்வறுபத்தொரு கிளவி யும் தீமை இல்லாத பாங்கியிற்கூட்டத்து விரியாம் எ-று.

## விளக்கம்

[1 தன் உள்ளத்துக்கொண்ட காதலைத் தலைவன் பாங்கிக் குச் சொல்லுதல்.

2 தலைவன் குலத்தின் மேம்பாட்டையும் தங்கள் குலத்தின் தாழ்வையும் பாங்கி தலைவனுக்குச் சொல்லுதல்.

3 தலைவன் தலைவியை மேம்படுத்திச் சொல்லுதல்.

4 பாங்கி, தலைவன் விரும்பிய நங்கையை இன்னுள் என்று அறியாள்போன்று அவனை வினவுதல்.

5 தலைவன் தலைவியின் சிறப்பிலக்கணத்தைத் தோழியிடம் கூறுதல்.

6 பாங்கி தலைவனிடம் அவன் குறித்த நங்கை பெறுதற்கு அரியவள் என்பதைக் கூறுதல்.

7 தனக்குத் தலைவி இன்றியமையாதவள் என்பதைத் தலை வன் தோழிக்குச் சொல்லுதல்.

8 பாங்கி தலைவனிடம் 'நின்காரியத்தை நீயே சென்று தலைவியிடம் சொல்லு' என்று குறிப்பிடுதல்.

9 தலைவன் அச்சொல் பொருது பாங்கியைப் பழித்துக் கூறுதல்.

10 தலைவியின் அறியாமையை மனம் கொள்ளும்படி பாங்கி தலைவனுக்குக் கூறுதல்.

11 தலைவி முதிர்ந்த அறிவு உடையவள் என்பதைத் தலைவன் பாங்கிக்குச் சொல்லுதல்.

12 முன்னமே தலைவனுக்குத் தலைவிபால் அமைந்திருந்த நட்பை அவனுக்குப் பாங்கி கூறல்.

13 தலைவன் தன் நிலைமையைத் தோழிக்குக் கூறுதல்.

14 ஒரு மங்கையை ஒரு தலைவன் மணம் செய்துகொள்வது தான் முறை என்று தலைவனுக்குப் பாங்கி சொல்லுதல். (உலகியல் – ஆன்றோர் ஒழுக்கம்.)

15 'நீ தலைவியை மணந்து கொள்' என்று பாங்கி கூறியதைத் தலைவன் மறுத்தல்.

16 தலைவன் செயலுக்கு அஞ்சிப் பாங்கி தலைவனை அச்சுறுத்தல்.

17 தலைவன் தான்கொணர்ந்த கையுறைப் பொருளைப் புகழ்தல்.
(கையுறை—தலைவியின் கையில் சேர்த்தற்கு உரியது.)

18 பாங்கி கையுறையை ஏற்றுக்கோடற்கு மறுத்தல்.

19 பாங்கி மறுத்தலைப் பொறாத நெஞ்சுடையவனாகித் தலைவன் வெறுத்துக் கூறுதல்.

20 தோழி தலைவன் துயரத்தை ஆறச்செய்து அவனை நீக்குதல்.

21 தோழியை இரந்து வேண்டியும் தன் காரியம் கைகூடப் பெறாத தலைவன், மடல் ஏறுதலே தான் செய்யத்தக்க பொருள் என்று தீர்மானித்தல்.

22 'ஒருவன், முன் நட்பு உடைய தலைவியைத் தான் பெறாவிடின் மடல்மா ஊர்ந்து சென்று பெறுவது உலக வழக்கம்' என்று தலைவன் பாங்கிக்குக் கூறுதல்.

23 அம்மடல் ஊர்தலைத் தான் செய்வதாகத் தலைவன் பாங்கிக்குச் சொல்லுதல்.

24 தலைமகளுடைய அவயவங்கள் படத்தில் எழுதுதற்கு அரியன என்பதைப் பாங்கி தலைவனுக்குச் சொல்லுதல்.

25 தலைவன் தன் ஆற்றலைத் தானே புகழ்ந்து கூறுதல்.

26 'மடலின் பொருட்டுப் பனையை நீ வெட்டினால் அதன் மேல் உள்ள பறவைகள் துன்புறும். அப்பறவைகளின் முட்டைகள் உடையும் ஆதலால் அச்செயல் அருள் உடையார் இயல்புக்கு மாறாகும்' என்று பாங்கி தலைவனுக்குக் கூறுதல்.

27 தலைவன் குறையை உட்கொண்டு தான் உதவிசெய்ய நிற்றலைப் பாங்கி அவனுக்குக் கூறுதல். (நிலை-உடன்பட்டு நிற்றல்.)

28 தலைவியினுடைய பேதைமை பற்றிப் பாங்கி தலைவனிடம் கூறுதல்.

29 பார்வை முதலியவற்றால் தன்னை வருத்திய தலைவி மங்கைப் பருவத்தினள் என்று தலைவன் கூறுதல்.

30 தலைவியைப் பார்ப்பதற்கு உரிய காலம் பெறுதற்கு அரியது என்பதைப் பாங்கி தலைவற்குக் கூறுதல்.

31 'என் பெயரைக் கேட்கும் அளவிலேயே தலைவி செவ்வி எளியள் ஆவள்' என்பதைத் தலைவன் பாங்கிக்குக் கூறுதல்.

32 'தலைவிக்கு இன்றியமையாத என்னை மறைத்தபிறகு தலைவியைப் பெறுதல் உமக்கு எளிது' என்று பாங்கி தலைவனைப் பரிகசித்தல்.

33 அவளது எள்ளல்சிரிப்பைப் பொருது தலைவன் வருந்துதல்.

34 பாங்கி தலைவனுக்கு ஆறுதல்மொழி கூறுதல்.

35 பாங்கி தலைவன் கொணர்ந்த கையுறையை ஏற்றுக் கொள்ளுதல்.

36 தலைவன் தன்துயரைத் தணித்துக் கொள்ளுதல்.

37 பாங்கி தலைவிக்குத் தலைவனுடைய குறையை அறிவித்தல்.

38 தலைவி, தலைவனை முன்பு அறியாதவள்போன்று, பாங்கி கூறியவற்றை உட்கொள்ளாதவள்போல் காட்டி, அவனை நோக்கி வேறு செய்தியைக் குறிப்பால் கூறுதல்.

39 தலைவனைத் தான் கண்டமையைப் பாங்கி தலைவிக்குச் சொல்லுதல்.

40 தலைவி பாங்கியை மறைத்து நாணத்தால் ஒன்றும் சொல்லாதிருத்தல்.

41 பாங்கி 'என்னை நீ மறைப்பது ஏன்' என்று தலைவியைத் தழுவிக் கொள்ளுதல்.

42 பாங்கி தலைவன் கொடுத்த கையுறையைப் புகழ்தல்.

43 தலைவியைப் பெறாத தலைவன் வருந்துதலைத் தோழி குறிப்பிடுதல்.

44 தலைவி தலைவனுக்கு உடன்படாமல் இருத்தல் அருமை என்பதனைத் தலைவிக்குப் பாங்கி கூறுதல்.

45 பாங்கி, தலைவன் மடல்ஏறுதலைத் துணிந்த செய்தியைத் தலைவியிடம் குறிப்பிடுதல்.

46 விடை கூறாதிருந்த தலைவியைப் பாங்கி சினந்து கூறுதல்.

47 தன் உயிர்ப்பாங்கி தன்பொருட்டாகிய செயல் எதற்கும் தன்னைக் கேட்கவேண்டிய இன்றியமையாமை இல்லை என்று கூறித் தலைவி பாங்கியைச் சினந்து கூறுதல்.

48 பாங்கி கொணர்ந்த கையுறையைத் தலைவி ஏற்றுக் கோடல்.

49 தலைவி கையுறை ஏற்ற செய்தியைப் பாங்கி தலைவனுக்குக் கூறுதல்

50 பாங்கி, தலைவியைக் காண்பதற்கு ஒரு குறிப்பிட்ட இடத்தைத் தலைவனுக்குக் கூறுதல்

51 பாங்கி, குறிஇடத்திற்குத் தலைவியை அழைத்துக் கொண்டு சேர்தல்.

52 தலைவியைக் குறியிடத்திற்குச் செலுத்திவிட்டுப் பாங்கி மலர் கொய்து வருவதாகக் கூறித் தான் நீங்குதல்.

53 தலைவன் குறியிடத்தில் தலைவியைச் சந்தித்தல்.

54 இருவரும் புணர்ச்சியின் மகிழ்தல்.

55 தலைவன் தலைவியைப் புனைந்து உரைத்தல்.

56 தலைவன் தலைவியைப்பாங்கிபால் செல்லுமாறு விடுத்தல்.

57 பாங்கி தலைவியைச் சார்ந்து தான் பறித்துவந்த பூக்களைக் காட்டுதல்.

58 பாங்கி தலைவியை ஆயவெள்ளத்திடைச் சேர்த்தல்.

59 தலைவியை எப்பொழுதும் பாதுகாக்கவேண்டும் என்று தலைவனுக்குப் பாங்கி சொல்லுதல்.

60 ஊர்திரும்பஇருந்த தலைவனை நோக்கி ‘ விருந்துஉண்டு செல்க ’ என்று பாங்கி செலவு விலக்குதல்.

61 விருந்தினனாய்த் தங்குதலைத் தலைவன் விரும்புதல்.

ஒத்த நூற்பாக்கள்

'குறையுறற்கு எதிரிய கிழவனை மறையுறப்
பெருமையில் பெயர்ப்பினும் உலகுஉரைத்து
ஒழிப்பினும்
அருமையின் அகற்சியும் அவள் அறிவுறுத்துப்
பின்வர வென்றலும் பேதைமை ஊட்டலும்
முன்னுறு புணர்ச்சி முறைநிறுத்து உரைத்தலும்
அஞ்சிஅச் சுறுத்தலும் உரைத்துழிக் கூட்டமோடு
எஞ்சாது கிளந்த இருநான்கு கிளவியும் ...'

தொ. பொ. 114

'இரந்துகுறை யுற்ற கிழவனைத் தோழி
நிரம்ப நீக்கி நிறுத்தல் அன்றியும்
வாய்மை கூறலும் பொய்த்தலைப் பெய்தலும்
நல்வகை உடைய நயத்தில் கூறியும்
பல்வகை யானும் படைக்கவும் பெறுமே'. 237

'ஆங்குஉணர்ந் தல்லது கிழவோள் தேஎத்துத்
தான்குறை உறுதல் தொழிக்கு இல்லை'

இறை அக. 8

'உள்ளத்து உணர்ச்சி தெள்ளிதின் கரந்து
கிழவோள் தேஎத்துக் குறையுறூஉம் உளவே
குறிப்புஅறி வுறூஉம் காலை யான'. 10

'தன்னுள் குறிப்பினை அருகும் தோழிக்கு
முன்னுறு புணர்ச்சியின் அருகலும் உண்டே'. 11

'குறையுறும் கிழவனை உணர்ந்த தோழி
சிறையுறக் கிளந்து சேட்பட நிறுத்தலும்
என்னை மறைத்தது எவனு கியர்என
முன்னுறு புணர்ச்சி முறைமுறை செப்பலும்
மாயப் புணர்ச்சி அவனொடு நகாஅ
நீயே சென்று கூறுஎன விடுத்தலும்

அறியாள் போறலும் குறியாள் கூறலும்
படைத்துமொழி கிளவியும் குறிப்புவேறு கொளலும்
அன்ன பிறவும் தலைப்பெயல் வேட்கை
முன்னுறு புணர்ச்சிக்கு உரிய என்ப'. இறை. அக. 12

'குறையுறு புணர்ச்சி தோழி தோத்துக்
கிழவிக்கு இல்லை தலைப்பெயல் ஆன'. 13

'ஆற்றாது உரைத்தல் உலகின்மேல் வைத்தல்
தன்துணிபு உரைத்தலொடு மடல்வகை உரைத்தல்
அருளால் அரிதுஎனல் நடையால் அரிதுஎனல்
அவயவம் எழுதல் அரிதுஎன விலக்கல்
உடன்படாது விலக்கல் உடன்பட்டு விலக்கல்
இடம்பட ஒன்பதும் செப்புங் காலை
வடம்படு முலைமேல் மடலா கும்மே'.
திருக்கோவை, மு. வீ. கள. 15

'குறிப்புஅறி தலோடு மென்மொழி கூறல்
விரவிக் கூறல் அறியாள் போறல்
வஞ்சித்து உரைத்தல் புலந்து கூறல்
வன்மொழி கூறல் மனத்தொடு நேர்தல்
சொன்ன இருநான்கும் துறைகுறை நயப்புஎன
மன்னிய பொருளில் வருத்திசி னோரே'. 16

தழைகொண்டு சேறல் தகாதுஎன மறுத்தல்
நிலத்துஇன்மை கூறல் நினைவு அறிவு கூறல்
படைத்து மொழிதலொடு பனிமதி நுதலியை
எடுத்துநாண் உரைத்தல் இசையாமை கூறல்
செவ்வியிலள் என்றல் சேட்பட நிறுத்தல்
அவ்வினிய மொழிநீ அவட்குஉரை என்றல்
குலமுறை கிளத்தல் கோதண் டத்தொழில்
வலிசொல்லி மறுத்தல் மற்றவர்க்கு இரங்கல்
சிறப்பின்மை கூறல் சிறியள்என்று உரைத்தல்

மறைத்தமை கூறி நகைத்துஉரை செய்தல்
நகைகண்டு மகிழ்தல் நான்அவள் தன்னை
அறியேன் என்றல் அவயவம் கூறல்
கண்நயந்து உரைத்தல் கையுறை எதிர்தல்
முகம்புக உரைத்தல் முகம்கொண்டு கூறல்
வகுத்துரைத் தல்லொடு வண்தழை அவட்கு
மிகுத்துரை செய்து விரும்பிக் கொடுத்தல்
தழைவிருப்பு உரைத்தல் தானிரு பத்தாறு
இழைவளர் முலையாய் இவைசேட் படையே'.

திருக்கோவை, மு. வீ களவு 17.

முழுதும் — ந. அ 144, —150-ஆம் நூற்பாக்கள்.

'குலமகன் உட்கோள் கூறலும் பாங்கி
குலமுறை கிளத்தலும் குலமகன் கிழத்தி
தன்னை உயர்த்தலும் மின்இடைச் சேடி
விளங்கா தவள்போல் வினுதலும் வேந்தன்
தலைவி தன்னைச் சாற்றலும் தாதி
இறைவி அருமை இயம்பலும் இறைவன்
இன்றியமை யாமை இயம்பலும் இகுளை
நின்குறை நீயே சென்றுஉரை என்றலும்
இகுளையை இறைவன் இகழ்தலும் இகுளை
காதலி மடமை கழறலும் காதலன்
மூதறி வுடைமை மொழிதலும் தோழி
முன்னுறு புணர்ச்சி முன்னத்தின் மொழிதலும்
தன்னிலை மன்னன் சாற்றலும் தோழி
உலகுஒழுக்கு உணர்த்தலும் தலைமகன் மறுத்தலும்
தோழி அஞ்சிஅச் சுறுத்தலும் வாழி
கையுறை புகழ்தலும் மொய்யிழை மறுத்தலும்
ஆற்றா நெஞ்சினோடு அவன்புலத் தலும்அவள்
ஆற்றுவித்து ஏகலும் ஆகும்ஐ நான்கும்
இரந்துபின் நிற்றல் சேட்படை இரண்டற்கும்
நிரந்தன என்ப நெறியுடை யோரே'. மா. அ. 36

‘ பேதையை இரந்துகுறை பெறுதுபே துற்றோன்
மடல்இனிப் பொருள்என மனங்கோ டலும்அதைக்
கடன்என உலகின்மேல் வைத்துக் கழறலும்
தன்மேல் வைத்துஇகு ளைக்குச் சாற்றலும்
தலைமகள் அவயவத்து அருமை சாற்றலும்
தலைமகன் தன்னைத் தானே புகழ்தலும்
எழுதும்முன் இரங்கலும் எழுதி இரங்கலும்
கெழுதகை பாங்கி அருள்நிலை கிளத்தலும்
கொண்டுநிலை கூறலும் என்றுஇவை ஒன்பதும்
மடல்கூற் றிற்கும் மடல்விலக் கிற்கும்
திடம்பட மொழிவர் தெளிவுடை யோரே ’. 37

‘ இளமைத் தன்மை இகுளைசெப் பலும்அவள்
வளமைத் தன்மை வருத்தியது உணர்த்தலும்
செவ்வி அருமை செப்பலும் தலைமகன்
செவ்வி எளிமை செப்பிய பின்னர்
என்னை மறைப்பின் எளிதுஎன நகுதலும்
அந்நகை பொறுது வருந்தலும் மன்னனைத்
தெளித்தலும் கையுறை அளித்ததை ஏற்றலும்
களித்தவன் உரைப்பதொடு கருதிய ஒன்பதும்
உடன்பட லுடன்மடல் கூற்றொழி தற்கும்
உடன்படும் என்பர் உரனுடை யோரே ’. 38

‘ குரிசிற்கு இன்புறக் குறைநேர் பாங்கி
அரிமதர் விழியாட்கு அவன்குறை உணர்த்தலும்
அறியாள் போன்றுஅவள் குறியாள் கூறலும்
இறையோற் கண்டமை இகுளை இயம்பலும்
இகுளை அறியாது இறைவி மறைத்தலும்
என்னை மறைப்பது என்எனத் தழாஅலும்
கையுறை புகழ்தலொடு மெய்பெற ஆறும்
மெலிதாகச் சொல்லிக் குறைநயப் பித்தற்கும்
வலிதாகக் கூறி மறுத்தற்கும் உரிய ’. 39

'பாங்கி இறைவன் பருவரல் உணர்த்தலும்
மறுத்தற்கு அருமை வழங்கலும் உரவோன்
உள்ளம்வே றுதலை உள்ளி உரைத்தலும்
தலைவியை முனிதலும் தலைவி பாங்கியை
வெய்துற முனிதலும் கையுறை ஏற்றலும்
வலிதாகச் சொல்லிக் குறைநயப் பித்தற்கும்
மெலிதாகச் சொல்லி மேவற்கும் உரிய'. மா. அ. 40

'கற்புடைத் தையல் கையுறை ஏற்றமை
கொற்றவற்கு இகுளை குறிப்புற நிகழ்த்தலும்
குறியிடம் கூறலும் கொண்டு சேறலும்
இடத்துஉய்த்து நீங்கலும் இறைஎதிர்ப் படுதலும்
புணர்தலும் புகழ்தலும் புணைந்துற விடுத்தலும்
இணர்கொடு பாங்கிமெல் லியலைச் சார்ந்து
கையுறை காட்டலும் பாங்கிற் கூட்டலும்
பையர வல்குலை நீங்கிப் பார்த்திபற்கு
ஓப்படை சாற்றலும் உலகியல் ஆம்படி
விருந்து விலக்கலும் விருந்துஇறை மருந்துஎன்று
அருந்தலும் ஆகிய அறைந்தபன் மூன்றும்
கூட்டல் வேட்டல் முதல்ஈறு ஆக
இகுளைக்கு விதித்தஈ ரிரண்டற்கும் உரிய'.
மா. அ. 41

'அழகுற உணர்த்தும்இவ் வறுபான் மூன்றும்
குழகுஅமர் பாங்கியின் கூட்டத்து விரியே'. ,, 42]

தலைவன் உட்கோள் சாற்றல் :

'மடுக்கோ கடலின் விடுதிமில் அன்றி மறிதிரைமீன்
படுக்கோ பணிலம் பலகுளிக் கோபரன் தில்லைமுன்றில்
கொடுக்கோவளைமற்று நும்ஐயர்க்குஆயகுற்றேவல்செய்கோ
கொடுக்கோ பணியீர் அணிஈர் மலர்நும் சுரிகுழற்கே'.
திருக்கோவை 63

எனவும்,

[கடலில் மீன்பிடிக்கும் படகைச் செலுத்துவேனோ, அன்றி மீன் பிடிப்பேனோ, முத்துக் குளிப்பேனோ, அரன் தில்லை முன்றிலில் உங்களுக்கு வளைகளுக்காகச் சங்குகளைக் கொணர்ந்து கொடுப்பேனோ? உம் அண்ணன்மார் இடும் குற்றேவல்களைச் செய்வேனோ? உங்கள் கூந்தலில் சூட்டிக் கொள்ளப் பூக்களைத் தொடுப்பேனோ? கூறுவீர்களாக]

பாங்கி குலமுறை கிளத்தல் :

'தெங்கம் பழம்கமு கின்குலை சாடிக் கதலிசெற்றுக்
கொங்குஅம் பழனத்து ஒளிர்குளிர் நாட்டினை நீஉமைகூர்
பங்குஅம் பலவன் பரங்குன்றில் குன்றன்ன மாபதைப்பச்
சிங்கம் திரிதரு சீறூர்ச் சிறுமிஎம் தேமொழியே'.

திருக்கோவை 100

எனவும்,

[தேங்காய், கமுகுக்குலைகளை மோதி வாழைக் கனிகளைத் தாக்கி வயலில் வீழும் மருதநிலத்தினன் நீ; சிவபெருமானுடைய பரங்குன்றில் யானைகள் நடுங்கச் சிங்கம் திரியும் சீறூர்ச் சிறுமி எம் தலைவி.]

தலைவன் தன்னை உயர்த்தல் :

'மாடம்செய் பொன்நக ரும்நிகர் இல்லைஇம் மாதர்க்குஎன்னப்
பீடம்செய் தாமரை யோன்பெற்ற பிள்ளையை உள்ளலரைக்
கீடம்செய்து என்பிறப் புக்கெடத் தில்லைநின் றோன்கயிலைக்
கூடம்செய் சாரல் கொடிச்சிஎன் றேநின்று கூறுவதே'

திருக்கோவை. 129

எனவும்,

[தன்னை நினையாதவர்களைப் புழுப்போலத் துடிக்கச்செய்து, என்பிறவித் துயரைப் போக்கிய தில்லையான் கயிலைச்சாரலில், தேவர்உலகத்தாரும் தனக்கு நிகரில்லை என்னுமாறு பிரமனால் படைக்கப்பட்ட இத்தலைவியைக் குறிஞ்சிநிலப் பெண் என்று குறைவாகப் பேசலாமா?]

பாங்கி அறியாள்போன்று வினுதல் :

'விண்இறந் தார்நிலம் விண்டவர் என்றுமிக் கார்இருவர்
கண்இறந் தார்தில்லை அம்பலத் தார்கழுக் குன்றில்நின்று
தண்நறுந் தாதுஇவர் சந்தனச் சோலைப்பந்து ஆடுகின்றார்
எண்இறந் தார்அவர் யார்கண்ண தோமன்ன நின்அருளே'
திருக்கோவை. 107

எனவும்,

[மன்ன! பிரமனும் திருமாலும் காணமுடியாத சிவ பெருமான்தங்கும் கழுக்குன்றில் சந்தனச்சோலையில் பந்தாடும் எண்ணிறந்த மங்கையருள் உன்அருள் யார்மாட்டு உள்ளது?]

இறையோன் இறைவி தன்மை இயம்பல் :

குவவின கொங்கை குரும்பை குழல்கொன்றைகொவ்வைசெவ்வாய்
கவவின வாள்நகை வெண்முத்தம் கண்மலர் செங்கழுநீர்
தவவினை தீர்ப்பவன் தாழ்பொழில் சிற்றம் பலம்அனையாட்கு
உவவின நாள்மதி போன்றுஒளிர் கின்றது ஒளிமுகமே'.
திருக்கோவை 108

எனவும்,

[அடியார் வினைகளை மிகவும் தீர்க்கும் சிவபெருமானுடைய சிற்றம்பலம் அனையாட்குக் கொங்கை குரும்பை போல்வன; குழல் கொன்றை போல்வது; செவ்வாய்நகை முத்துப்போல்வன; கண் கழுநீர் போல்வன; முகம் நிறைமதிபோல ஒளி வீசுவதாம்.]

பாங்கி தலைவி அருமை சாற்றல் :

'நெருநலும் முன்னாள் எல்லையும் ஒருசிறைப்
புதுவை ஆகலின் கிளத்தல் நாணி
நேர்இழை வளைத்தோள் நின்தோழி செய்த
ஆர்அஞர் வருத்தம் களையா யோஎன

என்குறை உறுதிர் ஆயின் சொல்குறை
எம்பதத்து எளியள் அல்லள் எமக்குஓர்
கண்காண் கடவுள் அல்லளோ பெரும
ஆய்கோல் மிளகின் அமலைஅம் கொழுங்கொடி
துஞ்சுபுலி வரிப்புறம் தைவரும்
மஞ்சுசூழ் மணிவரை மன்னவன் மகளே '.

இறை. 12 மேற்

எனவும்,

[நேற்றும் முதல்நாளும் இப்பக்கல் வந்து, புதியவர் ஆதலின் உரையாடற்கு நாணி, இன்று, ' உன்தோழி எனக்குச் செய்துள்ள அரிய துயரத்தை நீங்க மாட்டாயா?' என்று என்னிடம் குறை வேண்டுகிறீர். யாம் கூறி உடன்படுவிக்கும் அளவிற்கு, மிளகுக்கொடி, தூங்கும் புலியின் கோடுகள் உடைய முதுகைத் தடவிக்கொடுக்கும் மலைநாட்டு மன்னன் மகளாகிய அவள் எளியள் அல்லளாய், எமக்குக் கண்ணால் காணப்படும் கடவுள்போல உள்ளாள்.]

தலைவன் இன்றியமையாமை இயம்பல் :

'பொருளா எனைப்புகுந்து ஆண்டு புரந்தரன் மால்அயன்பால்
இருளாய் இருக்கும் ஒளிநின்ற சிற்றம் பலம்எனலாம்
சுருள்ஆர் கருங்குழல்வெண்ணகைச்செவ்வாய்த்துடிஇடையீர்
அருளாது ஒழியின் ஒழியாது அழியும்என் ஆர்உயிரே'

திருக்கோவை 73

எனவும்,

[என்னை ஒருபொருளாகக் கொண்டு ஆண்டு, இந்திரன் அரி அயன் ஆகியோர் காண இயலாதவனாய் உள்ள பெருமானுடைய சிற்றம்பலம் அனைய துடிஇடையீர்! நீங்கள் அருள் செய்யாது விடுப்பின், என் அரிய உயிர் தவறாது அழிந்து விடும்.]

பாங்கி நின்குறை நீயே சென்று உரை என்றல்:

'அந்தியின் வாய்எழி லம்பலத்து எம்பரன் அம்பொன்வெற்பில்
பந்தியின் வாய்ப்பல வின்சுளை பைந்தே னொடும்கடுவன்
மந்தியின் வாய்க்கொடுத்து ஓம்பும் சிலம்ப மனம்கனிய
முந்திநின்வாய்மொழி நீயேமொழிசென்று அம்மொய்குழற்கே'
திருக்கோவை. 99

எனவும்,

[செவ்வான மேனியன் ஆகிய அம்பலவன் மலையிலே, மந்தியின்வாயில் பலாச்சுளைகளைத் தேனொடும் கடுவன் கொடுத்துக் காக்கும் சிலம்பனே! தலைவியின் மனம் கனியுமாறு உன்கூற்றை நீயே சென்று அவட்குக் கூறு.]

பாங்கியைத் தலைவன் பழித்தல் :

'மாதர் குறைமுடிக்க வல்லாமை வல்லைஎனக்
காதல் சிறப்பக் கருதியது — மேதகைய
பாம்பு அடுதேர் அல்குல் பயம்படுநீர் மானமான்
தேம்படுதேர் மீது செலல்'.
சிற்றகத்தியம்

எனவரும்.

[தோழியே! தலைவியின் பொருட்டு யான் வேண்டுவதனை முடிக்கும் ஆற்றல் அற்ற உன்னைத் தக்கவள் என்று அன்பு சிறக்கக் கருதியது, மான் கானல் நீரை உண்மையான நீர் என்று கருதிச் செல்வதனை ஒக்கும்]

பாங்கி பேதைமை ஊட்டல் :

' நறுந்தண் தகரம் வகுளம் இவற்றை
வெறும்புதல்போல் வேண்டாது வெட்டி — எறிந்துழுது
செந்தினை வித்துவார் தங்கை பிறர்நோய்க்கு
நொந்துஇனைய வல்லளோ நோக்கு'. திணைமாலை. 24

எனவரும்.

[தலைவனே! ‘ தகரம் மகிழ் முதலிய நறுமண மரங்களை வெற்றுப் புதர் போலக் கொண்டு வெட்டிஎறிந்து அவ் விடத்தை உழுது தினை விதைப்பார் மரபில் வந்துள்ள தலைவி பிறர் துன்பம் கண்டு மனம் நோகும் இயல்பினள் ஆவளோ ?' என்பதனை ஆராய்ந்து பார் ]

காதலன் தலைவி மூதறிவுடைமை மொழிதல் :

‘ அணங்குஉடைப் பனித்துறைத் தொண்டி அன்ன
மணம்கமழ் பொழில்குறி நல்கினள் நுடங்குஇடைப்
பொங்கு அரி பரந்த உண் கண்
அம்கலுழ் மேனி அசைஇயல் எமக்கே’

ஐங்குறு நூறு. 174

எனவரும்.

[அசையும் இடை, அரிபரந்த உண்கண், அழகுஒழுகும் மேனி, தளர்ந்தஇயல் இவற்றை உடைய தலைவி, தெய்வம் தங்கும் குளிர்ந்த துறையை உடைய தொண்டிஎன்ற ஊரைப் போல நறுமணங் கமழும் பொழிற்கண் எனக்குக் குறிவாய்ப்ப அருளினுள்.]

பாங்கி முன்னுறு புணர்ச்சி முறை உறக் கூறல்:

‘ நறுந்தண் கூந்தல் குறுந்தொடி மடந்தை
சிறுமுதுக் குறைவி ஆயினள் பெரிதுஎன
நின்எதிர் கிளத்தலும் அஞ்சுவல் எனக்குஎான்
இன் உயிர் அன்னள் ஆயினும்
தன் உறு விழுமம் காத்த லானே ’. தொ. பொ. மே.

எனவரும்.

[தண்கூந்தலாளாகிய குறுந்தொடி மடந்தை எனக்கு உயிர் போலச் சிறந்தனளாயினும் தனக்குவந்த துயரத்தைத்தானே காத்துக் கோடலான், இளமையிலேயே பேரறிவு படைத்து விட்டாள் என்பதை உன்னிடம் கூறுதற்கு அஞ்சுகிறேன்.

என்னை மறைத்து ஒழுகியவள், யான் மறை உணர்ந்ததை அறியின் என்னை வெகுளலும் கூடும். ஆதலின் மறையை யான் அறியாதது போல்வேனாக; நீ முன்புபோல நேரிடையாக அவள் தொடர்பைத் தொடர்ந்து கொள்க.]

தன்நிலை தலைவன் சாற்றல் :

‘ தோளும் கூந்தலும் பலபா ராட்டி
வாழ்தல் ஒல்லுமோ மற்றே செங்கோல்
குட்டுவன் தொண்டி அன்ன
என்கண்டு நயந்துநீ நல்காக் காலே ’.

ஐங்குறுநூறு 178

எனவரும்.

[செங்கோலனாகிய குட்டுவனுடைய தொண்டியைப் போன்ற இயற்கை அழகுடைய நீ, என் நிலையைக்கண்டு உதவாய்ஆயின், யான் இனித் தலைவியின் தோள்களையும் கூந்தலையும் பலவாகப் பாராட்டி அவள் தொடர்புகொண்டு வாழ்தல் நிகழக்கூடிய செயல் ஆகுமோ ?]

பாங்கி உலகியல் உரைத்தல் :

‘ கோடுஈர் எல்வளைக் கொழுமடல் கூந்தல்
ஆய்தொடி மடவரல் வேண்டுதி யாயின்
தெண்கழிச் சேயிறுஅப் படூஉம்
தண்கடல் சேர்ப்ப வரைந்தனை கொண்மோ ’.

ஐங்குறுநூறு 196

எனவரும்.

[சங்குவளையலையும் பூ முடித்த கூந்தலையும் அழகிய தொடியினையும் உடைய தலைவியைக் கோடல்வேண்டின், கழிகளில் இறுமீன் பிடிக்கப்படும் நெய்தல் நிலத்தலைவனே ! அவளை மணந்துகொண்டு தொடர்பு கொள்வாயாக.]

தலைமகன் மறுத்தல் :

‘ சிலைமேல் முகில்அன்ன நன்னுதல் மீது செறிகுழலாள்
முலைமேல் முயங்குவன் நீசொன்ன வாறு முழுமணியின்
கலைமே லணிதழை அல்குல்நல் லாய்முன் கவிகொணர்ந்த
மலைமேல் மருந்துவந் தோதலை மேல்விடம் மாற்றுவதே’.

அம்பி. 111

எனவும்,

[மேகலைமீது தழைஉடை அணிந்துள்ள தோழியே ! வில்மேல் தங்கும் முகில்போல நெற்றிமேல் அமைந்த கூந் தலை உடைய தலைவியை நீ கூறியவாறு வரைந்துகொண்டு தொடர்பு கொள்வது, தலைக்கு ஏறியவிடத்தை விரைந்து போக்குவதற்குச் சஞ்சீவி மூலிகையைக் கொண்டுவர முயல் வதனை ஒக்கும்.]

பாங்கி அஞ்சி அச்சுறுத்தல் :

‘ முனிதரும் அன்னையும் என்ஐயர் சாலவும் மூர்க்கர்இன்னே
தனிதரும்இந்நிலத்து அன்றுஐய குன்றமும்தாழ்சடைமேல்
பனிதரு திங்கள் அணிஅம் பலவர் பகைசெகுக்கும்
குனிதருதிண்சிலைக்கோடுசென்ருன்சுடர்க்கொற்றவனே’.

திருக்கோவை 98

எனவும்,

[வேலவனே ! சந்திரனைச் சூடிய சிவபெருமான் திரி புரத்தை அழிக்கக்கொண்ட மேருபோன்ற மேலைமலைச் சிகரத் தைக் கதிரவன் அடைந்துவிட்டான் இனிக்காலம் தாழ்த் தின் எம்தாயர் வெகுள்வர்; எம் ஐயர் மிகக்கொடியர். இனி, தனித்துக் காலம் தாழ்த்திப் போதல் கூடாது. எங்கள் மலையும் இந்நிலத்தில் இல்லை. சற்றுச் சேய்மையில் உள்ளது.]

ஆங்கு அவன் கையுறை புகழ்தல் :

'வில்லும் பிறையும் திறையிடும் வாள்நுதல் மெல்லியலாய்
எல்லும் குமுத மலரும்கண் டால்இருங் கோங்குஅரும்பும்
வல்லும் பொருத வனமுலைக்கு ஆன மணிஇதுபேர்
சொல்லும் பொழுது பிரமனும் மாலும் தொழத்தகுமே'.
அம்பி 141

எனவும்,

[வில்லையும் பிறையையும் ஒத்த நுதலாய்! குமுதம் கண்டால் மலரும் எனத்தக்க ஒளியுடையதாய், பிரமனும் மாலும் போற்றத்தக்க இம்மணி, கோங்கரும்பும் வல்லும் ஒத்த தலைவியின் வனமுலைக்கு வனப்புத் தருவதாகும்.]

தையல் மறுத்தல் :

'ஆரத் தழைஅராப் பூண்டுஅம் பலத்துஅன லாடிஅன்பர்க்கு
ஆரத் தழைஅன்பு அருளிநின் றோன்சென்ற மாமலயத்து
ஆரத் தழைஅண்ணல் தந்தா லிவைஅவள் அல்குல்கண்டால்
ஆர்அத் தழைகொடு வந்தார் எனவரும் ஐயுறவே'.
திருக்கோவை. 91

எனவும்,

[அண்ணலே! பாம்பு பூண்டு அம்பலத்தில் அனல்ஆடி அடியார்தமக்கு மிக்கஅன்பு அருளும் சிவபெருமானுடைய மலையமலையின் சந்தனத் தழையை நீ தர, அதனைத் தலைவி உடுப்பதைக் கண்டால், அத்தழை கொடுத்தவர் யாவர் என்ற ஐயுறவு ஏற்பட்டுவிடும்]

ஆற்றா நெஞ்சினோடு அவன்புலத்தல் :

'கடுந்தேர் ஏறியும் காலில் சென்றும்
கொடுங்கழி மருங்கின் அடம்பமலர் கொய்தும்

கைதை தூக்கிய நெய்தல் குற்றும்
புணர்ந்தாம் போல உணர்ந்த நெஞ்சமொடு
வைகலும் இனையம் ஆகவும் செய்தார்ப்
பசும்பூண் வேந்தர் அழிந்த பாசறை
ஒளிறுவேல் அழுவத்துக் களிறுபடப் பொருத
பெரும்புண் உறுநர்க்குப் பேஎய் போலப்
பின்னிலை முனியா நம்வயின்
என்என நினையுங்கொல் பரதவர் மகளே'. நற். 349

எனவும்,

[தேர்ஏறி வந்தும், பின் அதனை நிறுத்திக் காலால் நடந்துவந்தும், இவள்பொருட்டு அடம்பமலர் கொய்தும், தாழம்பூப் பறிக்குமாறு இவளைத் தூக்கிக்கொண்டும், ஆடைக்கு நெய்தல்தழையும் சூடற்கு நெய்தற்பூவும் பறித்துக் கொடுத்தும், இவளோடு நட்புக் கொண்டது போன்ற மகிழ்ந்த மனத்துடன் நாள்தோறும் யான் தோழியாகிய இவளை இவள்மனம் நெகிழும்வரை சுற்றித்திரியவும், அரசர் பாசறையில் யானையொடு பொருது புண்பட்டுக் கிடக்கும் வீரர்க்கு அவர்உயிர் போம்துணையும் நாயும் நரியும் கழுகும் அவரைத் தீண்டாதவாறு பாதுகாக்கும் பேய் அவரைச் சுற்றித் திரிவதுபோல இவள்மனம் நெகிழும்வரை இவளைச் சுற்றித் திரியும் என்னைப் பரதவர் மகளாகிய தலைவி இவன் எக்கருத்தினன்?' என்று நினைப்பாளோ?]

அவள் ஆற்றுவித்து அகற்றல் :

'யாழார் மொழிமங்கை பங்கத்து இறைவன் எறிதிரைநீர்
ஏழாய் எழுபொழி லாய்இருந் தோன்நின்ற தில்லைஅன்ன
சூழ்ஆர் குழல்எழில் தொண்டைச்செவ் வாய்நவ்வி சொல்அறிந்தால்
தாழாது எதிர்வந்து கோடும் சிலம்ப தரும்தழையே'.
திருக்கோவை. 93

எனவும்,

[பார்வதி பங்களுய் ஏழ்கடலாய் ஏழ்உலகாய் இருக்கும் சிவபெருமானின் தில்லையை ஒத்த மான் போன்ற தலைவியின் கருத்தைஅறிந்து காலம் தாழ்க்காது நீ தந்த தழைஆடையைக் கொள்வல்.]

இரந்து குறைபெறுது வருந்திய கிழவோன் மடலே பொருள் என மதித்தல் :

> ' காமம் உழந்து வருந்திஞர்க்கு ஏமம்
> மடல்அல்லது இல்லை வலி' —குறள் *1131*

எனவும் வரும்.

> ' தலையாய நண்புடையார் தளர்நதார் உயிர்தாங்குதற்குஓர்
> நிலையாகஇன்றுஉளம்நின்றிலரேல்வெய்யநீள்நெடுங்கண்
> வலையால்வளைப்புஉண்டுவார்குழல்கண்ணியில்வந்துபட்ட
> கலையார் விடுக்கவல் லார்விடு வார்எவர் கைப்பட்டதே'.
> அம்பி *118*

இதுவும் அது,

[காமத்தில் அகப்பட்டு வருந்தினவர்களுக்குப் பாது காவலைத் தரும் மடல் ஏறுதலைத் தவிர வேறுசெயல் நிறைவேற்றுதற்குரிய வாய்ப்பு இல்லை.

மேம்பட்ட நட்புடையவர் தளர்ந்தவர் உயிரைத் தாங்குதற்கு உதவாராயின், கண்வலையால் வளைக்கப்பட்டுக் கூந்தலாகிய கண்ணியில் அகப்பட்ட தம் மனமாகிய கலையை விடுதலை செய்வது இயலாது. அதனை விடுவிப்பவர் யாவர் ?]

பாங்கிக்கு உலகின்மேல் வைத்து உரைத்தல் :

> ' காய்சின வேல்அன்ன மின்இயல் கண்ணின் வலைகலந்து
> வீசின போதுஉள்ளம் மீன்இழந் தார்வியன் தென்புலியூர்

ஈசன சாந்தும் எருக்கும் அணிந்துஓர் கிழிபிடித்துப்
பாய்சின மாஎன ஏறுவர் சீறூர் பனைமடலே'.

திருக்கோவை 74

எனவரும்.

[வேற்கண் வலைப்பட்டு உள்ளமாகிய மீனை இழந்தவர்கள் சிவபெருமான் பூசும் சாம்பலைப் பூசி, எருக்கமாலை அணிந்து, தம் மனத்தைக் கொண்டவளது வடிவத்தை ஒரு துணியில் எழுதிப் பனங்கருக்கால் செய்யப்பட்ட குதிரையை ஏறிச் சீறூர்க்கண் மடல் ஊர்வர்.]

'மாஎன மடலும் ஊர்ப பூஎனக்
குவிமுகிழ் எருக்கங் கண்ணியும் சூடுப
மறுகில் ஆர்க்கவும் படுப
பிறிதும் ஆகுப காமம்காழ்க் கொளினே',

குறுந். 17

இதுவும் அது.

பிறிதும் ஆகுப என்றது வரைபாய்தலை.

[காமம் மிகுவதாயின், அவர்கள் மா என்று சொல்லி மடல்ஏறி, எருக்கங்கண்ணி சூடி ஊரவர் ஆரவாரிக்கப் பனைமடல்மா ஊர்ந்து வருவதோடு, வரைபாய்தலுக்கும் உளம் கொள்வர்.]

மடலேற்றினைத் தலைமகன் தன்மேல்வைத்துச் சாற்றல் :

'கழிகின்ற என்னையும் நின்றநின் கார்மயில் தன்னையும்யான்
கிழிஒன்ற நாடி எழுதிக்கைக்கொண்டுஎன் பிறவிகெட்டுஇன்று
அழிகின்றது ஆக்கிய தாள்அம் பலவன் கயிலைஅந்தேன்
பொழிகின்ற சாரல்நும் சீறூர்த் தெருவிடைப் போதுவனே'.

திருக்கோவை. 76

எனவும்,

[என் பிறவிப்பிணியைப்போக்கும் அம்பலவன் கயிலையை அடுத்த மலைப்பக்கத்துள்ள உம் சிறூரின்கண், உயிர்போய்க் கொண்டிருக்கும் என்படத்தையும் உன் தலைவிபடத்தையும் ஒரே துணியில் சேர்த்து எழுதிக் கைக்கொண்டு மடலூர்ந்து வருவேன்.]

தலைமகள் அவயத்து அருமை பாங்கி சாற்றல் :

'அடிச்சந்தம் மால்கண் டிலாதன காட்டிவந்து, ஆண்டுகொண்டு, என்
முடிச்சந்த மாமலர் ஆக்கும்முன் ஞேன்புலி யூர்புரையும்
கடிச்சந்த யாழ்கற்ற மென்மொழிக் கன்னி அனநடைக்குப்
படிச்சந்தம் ஆக்கும் படம்உள வோநும் பரிசுஅகத்தே'.

திருக்கோவை. 78.

எனவும்,

[திருமால் காணமுடியாத திருவடிகளை என் தலைக்குப் பூக்களாகஆக்கி என்னை ஆட்கொள்ளும் சிவபெருமானுடைய புலியூரை ஒத்த இன்மொழித் தலைவியின் அன்னநடையை நீர் துணியில் எழுதுவதற்கு வாய்ப்பு இல்லையே!]

தலைமகன் தன்னைத்தானே புகழ்தல் :

'காரார் கொடைத்தடக் கைக்கரு மாணிக்கன் கப்பல்வெற்பின்
நேராக நீர்கொண்ட நெஞ்சுதந் தால்அந்த நெஞ்சுகொண்டே
ஏர்ஆர் திருஉரு எல்லாம் எழுத வரும்எனக்கு
வாரா திருப்பதுஐ யோமட வீர்உங்கள் வன்கண்மையே'

கப்பல். 90

எனவும்,

[கார்மேகம்போன்ற கொடைக் கையையுடைய கருமாணிக்கனுடைய கப்பல்நகரைச் சார்ந்த மலையில் நீங்கள் என்னிடம்இருந்து கைப்பற்றிக்கொண்ட என்மனத்தை மீளவும் திருப்பித் தந்தால், அதனைக்கொண்டு யான் தலைவியின் உருவ நலன்களை எல்லாம் கிழியில் எழுதவல்லேன். உங்கள் கல்மனம் ஒன்றே எழுதுதற்கு அரிது.]

பாங்கி அருளியல் கிளத்தல் :

' நடன்நாம் வணங்குந்தொல் லோன்எல்லை நான்முகன் மால்அறியாக்
கடனாம் உருவத்து அரன்தில்லை மல்லல்கண் ஆர்ந்தபெண்ணை
உடனாம் பெடையொடு ஒண்சேவலும் முட்டையும் கட்டழித்து
மடல்நாம் புனைதரின் யார்கண்ண தோமன்ன இன்னருளே '.
திருக்கோவை. 97

எனவும்,

[கூத்தனாய் நாம் வணங்கும் தொல்லோனாய், நான்முகன் மால் ஆகியோர் அறியாவடிவனாகிய சிவபெருமானின் தில்லையிலே மடல்மா அமைப்பதற்குப் பறவைகளும் முட்டைகளும் செறிந்து இருக்கும் பனைமரத்தை வெட்டினால், அவற்றிற்கு ஊறு நிகழும் ஆதலின், அஃது அருளுடையாருக்கு இயைவது அன்றாம்.]

பாங்கி கொண்டுநிலை கூறல் :

' ஊர்வாய்ஒழிவாய்உயர்பெண்ணைத்திண்மடல் நின்குறிப்புச்
சீர்வாய்ச் சிலம்ப திருத்த இருந்திலம் ஈசர்தில்லைக்
கார்வாய் குழலிக்கு உன் ஆதரவு ஓதிக்கற் பித்துக்கண்டால்
ஆர்வாய் தரின்அறி வார்பின்னைச் செய்க அறிந்தனவே '.
திருக்கோவை 80

எனவும் வரும்.

இறந்துபடுவானை இச்சொல் தாங்கிக்கொண்டு நின்றமையின், கொண்டுநிலை ஆயிற்று.

[வெற்பனே ! நீ மடல் ஊரினும் ஊர்க; வீடுப்பினும் விடுக்க; உன் கருத்தை மாற்ற யாம் விரும்புகிலம். தில்லையிலே உள்ள தலைவிக்கு உன்விருப்பத்தை எடுத்து உரைக்கிறேன். அவள் அதனை நிறைவேற்ற உடன்படுதலும் ஆம்; அதனை அறிந்தபின் நீ மடல்ஊர்தல் பற்றித் திட்டமிட்டுச் செயற்படுக ]

தலைவி இளமைத்தன்மை பாங்கி தலைவற்கு உணர்த்தல் :

'உருகு தலைச்சென்ற உள்ளத்தும் அம்பலத் தும் ஒளியே
பெருகுதலைச்சென் றுநின்றோன்பெருந்துறைப்பிள்ளைகள் ஆர்
முருகு தலைச்சென்ற கூழை முடியா முலைபொடியா
ஒருகு தலைச்சின் மழலைக்குஎன் ளுேஐய ஓதுவதே'.

திருக்கோவை. 104

எனவும்,

[உருகும்அடியார்தம் உள்ளத்தும் அம்பலத்தும் ஒளி மிக ஆடும் சிவபெருமானின் பெருந்துறை என்ற நகரைச் சார்ந்த தலைவிக்குத் தலைமயிர் கூட்டி முடிக்கும் அளவிற்கு இன்னும் வளரவில்லை; நகில்களும் முகம்செய்யவில்லை. அவ்' வாறுன இளையாளாகிய தலைவிக்கு யான்சென்று ஓதும் செய்தி உண்டோ ?]

தலைவன் தலைவி வருந்தியவண்ணம் உரைத்தல் :

'அளைதாழ் அரவும் அரியும்வெந் தீயும் அரசும்இங்ஙன்
இளைதா யினும்கொல்லும் என்பது நீவந்து இருஞ்சுரும்பின்
கிளைதாழ் குழல்வஞ்சி கேட்டிலை யோ இளங் கிள்ளைமென்சொல்
முளைவாள் நகைப்பெண் அரசு அல்லவோ அந்த மொய்குழலே'.

அம்பி 1:6

எனவும்,

[வண்டுகள் படியும் குழலைஉடைய வஞ்சியே ! பாம்பும், சிங்கமும், நெருப்பும் அரசும் இளைய ஆயினும் கொன்று விடும் ஆற்றல்உடையன என்பதை நீ அறியாயோ ? கிள்ளை மொழி வெண்பல் தலைவி பெண்அரசு அல்லளோ ? அவள் வாட்டும் திறம் சிறிதோ ?]

பாங்கி தலைவி செவ்விஅருமை செப்பல் :

'கற்றில கண்டுஅன்னம் மென்னடை கண்மலர் நோக்கருளப்
பெற்றிலமென்பிணைபேச்சுப்பெருகிள்ளை பிள்ளை இன்றுென்று

உற்றிலள் உற்றது அறிந்திலள் ஆகத்து ஒளிமிளிரும்
புற்றில வாள்அர வன்புலி யூர்அன்ன பூங்கொடியே'.

திருக்கோவை 97

எனவும்,

[மார்பில் பாம்புகளை அணிகலனாகத் தரித்த சிவபெருமானுடைய புலியூரை ஒத்த தலைவி இன்று மனம் ஒருவகையாக உள்ளாள். அன்னம் தன் நடையைக் கற்கவும், மான் தன் கண்அழகைக் கண்டுகொள்ளவும், கிளி தன் பேச்சைக் கேட்டுப் பழகவும் வாய்ப்பு அளிக்கும் வகையில் இன்று தலைவி விளையாட்டின்கண் ஈடுபடவில்லை; மேலும், யான் நுமக்குக் குறை நேர்ந்தவாறும் இன்னும் அறிந்திலள்]

தலைவன் செவ்வி எளிமை செப்பல் :

'தேன்வந்த ஆயிதழ்ச் சேயிழை யாய்இன்ன செவ்விநவ்வி
மான்வந்த வாள்விழி வஞ்சிக்கு நீதஞ்சை வாணன்வெற்பில்
யான்வந்த வாசென்று இயம்புதி யேல்அவர் யாவர்என்னாள்
தான்வந்து அவாவுடனே நின்னை ஆரத்தழீஇக்கொள்ளுமே'.

தஞ்சை 111

எனவும்,

[இன்சொல் தோழியே! மான் விழித் தலைவிக்கு நீ தஞ்சைவாணன் வெற்பில் யான் வந்துள்ள செய்தியைத் தெரிவிப்பாயாயின், 'வந்துள்ளவர் யாவர்? என்று கூடவினவாது, அன்போடுவந்து உன்னைத் தழுவிக்கொள்ளுவாள்.]

பாங்கி என்னை மறைப்பின் எளிதுஎன நகுதல் :

'பண்டுஆல் இயலும் இலைவளர் பாலகன் பார்கிழித்துத்
தொண்டால் இயலும் சுடர்க்கழ லோன்தொல்லைத் தில்லையின்வாய்
வண்டுஆல் இயலும் வளர்பூந் துறைவ மறைக்கில்என்னைக்
கண்டால் இயலும் கடன்இல்லை கொல்லோ கருதியதே'.

திருக்கோவை. 105

எனவும்,

[ஆலிலையில் கண்வளரும் திருமால் உலகை இடந்தும் காண இயலாது, பின் தொண்டுசெய்து காணும் கழலோனாகிய சிவபெருமானின் தில்லையைச் சார்ந்த வண்டு ஒலிக்கும் பூந் துறைவ! என்னை மறைப்பின் நீ கருதியது முடிக்கும் முறைமை இல்லைபோலும்!]

அந்நகை பொருது அவன் புலம்பல் :

'மத்தகம் சேர்தனி நோக்கினன் வாக்குஇறந்து ஊறுஅமுதே
ஒத்துஅகம் சேர்ந்துஎன்னை உய்யநின் றோன்தில்லை ஒத்துஇலங்கு
முத்துஅகம் சேர்மென் நகைப்பெருந் தோளி முகம்மதியின்
வித்தகம் சேர்மெல்லென் நோக்கம் அன்றோஎன் விழுத்துணையே'.

திருக்கோவை. 106

எனவும் வரும். பெருந்தோளி — அண்மைவிளி.

[நெற்றிக்கண்ணாய்ச் சொல்லும் அளவைக் கடந்து ஊறும் அமுதம்போல என் உள்ளத்துச் சேர்ந்து என்னை ஆட்கொண்ட சிவபெருமானுடைய தில்லையை ஒத்து ஒளி வீசும் பற்களை உடைய பெருந்தோளி ஆகிய தோழி! நின் முகமாகிய மதியின்கண் உண்டாகிய சதுரப்பாட்டினை உடைய கருணைப் பார்வையே இன்று எனக்குச் சிறந்ததுணை யாகும்.]

பாங்கி தலைமகனைத் தேற்றல் :

'எனக்குஆவி நின்னை வருத்திய மான்அவ் விளங்குஇழையாள்
தனக்குஆவி யானும் தடமலை நாட தளைஅவிழ்பூஞ்
சினைக்காவில் நீகொய்ததேமென் தழையும் சிலம்பில்அந்தண்
சுனைக்காவி யும்கரு கத்துவ ளோல்இறை சோர நின்றே'.

அம்பி. 231

எனவும்,

[உன்னை வருத்திய தலைவி எனக்கு உயிர்; யானும் அவளுக்கு உயிர்; ஆதலின் நீ கொய்துவந்த தழை ஆடையும் குவளைப்பூக்களும் கைகளில் நின்று கருகிச் சோருமாறு வருந்தாதே.]

கையுறை ஏற்றல் :

‘ தோலாக் கரிவென்ற தற்கும் துவள்விற்கும் இல்லின்தொன்மைக்கு
ஏலாப் பரிசுஉள வேஅன்றி ஏலேம் இருஞ்சிலம்ப
மாலார்க்கு அரிய மலர்க்கழல் அம்பல வன்மலையில்
கோலாப் பிரசம்அன் னாட்குஐய நீதந்த கொய்தழையே ’.

திருக்கோவை. 110

எனவும்,

[திருமால் காணமுடியாத திருவடிகளையுடைய அம்பலத்தான் மலையில் நீ தரும் தழைஆடையை, வண்டுகள் தேடிச் சேர்க்காத இயற்கையாகிய தேனைப் போன்ற தலைவிக்கு யான் ஏற்பது எம்குடும்பச்சிறப்பிற்கு ஏலாது எனினும், நீஎமக்குத் தீங்கு செய்யவந்த யானையை வென்றதனையும், நீ எம்மிடம் அன்புபூண்டு எம்மைவிட்டு நீங்காது துவளும் வருத்தத்தினையும் உட்கொண்டே ஏற்றுக்கொள்கிறோம்.]

கிழவோன் ஆற்றல் :

‘ உறாஅ தவர்போல் உறினும் செறாஅர்சொல்
ஒல்லை உணரப் படும் ’ —குறள் 1096

எனவும் வரும்.

‘ மொய்ம்மால் வரைஎன்ன விம்மா எழும்என் முகிழ்முலைக்கு
நம்மால் வரைவினை நாள்தொறும் சொல்லி நலம்சிறக்க
எம்மால் ஒருபயன் ஏலாது அருந்தழை ஏற்றசெங்கை
மைம்மான் விழிக்குஒரு கைம்மாறு கண்டிலம் வையகத்தே ’

அம்பி. 133

இதுவும் அது.

[வெளியே மனம் பொருந்ாதவர்போல நடிப்பினும், மனத்தில் பகைமை இல்லாதவர் சொற்களால் அப்பகைமை யின்மை விரைவில் உணரப்படும்.

மலைபோன்று விம்மி எழும் முகிழ்முலைத் தலைவிக்கு என் உள்ளக் கிடக்கையைத் தெரிவித்து நான்நாளும் சிறக்குமாறு என்னிடம் ஒருபயனும் கருதாது தழை ஆடையைக் கையுறை யாகத் தலைவிக்குப் பெற்றுச்சென்ற இம் மான்விழித் தோழிக் குக் கைம்மாருகச் செய்யக்கடவது இவ்வுலகில் ஒன்றும் இல்லை.]

இறைவன்தனக்குக் குறைநேர் பாங்கி இறைவிக்கு அவன் குறை உணர்த்தல் :

' தாதுஏய் மலர்க்குஞ்சி அஞ்சிறை வண்டுதண் தேன்பருகித்
தேதே எனும்தில்லை யோன்சேய் எனச்சின வேல்ஒருவர்
மாதே புனத்திடை வாளா வருவர்வந்து யாதும்சொல்லார்
யாதே செயத்தக் கதுமது வார்குழல் ஏந்திழையே '.

திருக்கோவை 82

எனவும்,

[மாதே ! ஏந்திழையே ! தன் மயிர்முடியில் உள்ள பூக் களில் வண்டு தேன் பருகி முரலும் தில்லையான் மகனை முரு கனைப்போல, வேல் ஏந்திய தலைவன் ஒருவன் நம்புனத்திடை வந்து உரையாடாது நிற்கின்றான். அவன் திறத்து நாம் செய்யத்தக்கது யாது.?]

இறைவி அறியாள் போன்று குறியாள் கூறல் :

' சங்கம் தருமுத்து யாம்பெற வான்கழி தான்கெழுமிப்
பொங்கும் புனல்கங்கை தாங்கிப் பொலிகலிப் பாறுஉலவு

துங்கம் மலிதலை ஏந்தலின் ஏந்திழை தொல்லைப்பன்மா
வங்கம் மலிகலி நீர்தில்லை வானவன் நேர்வருமே'.

திருக்கோவை 85

எனவும்,

[தலைவி தன்னை வினவிய தோழிக்கு நாணத்தான் வெளிப்படையாக விடை கூறுள் ஆயினும், குறிப்பால் விடை பகருவது இது.

தோழி! மரக்கலங்கள் இயங்கும் இக்கடல் சிவபெருமானுக்கு நிகராகக் காட்சி அளிக்கிறது. எங்ஙனம் எனின், இக்கடல் சங்குதரும் முத்துக்களை நாம்பெறுமாறு பெரியகழிகளைத் தான் பொருந்திப் பொங்கும் புனலையுடைய கங்கையைத் தான் தாங்கிப் பொலிந்த ஆரவாரத்தை உடைய மரக்கலங்கள் இயங்கும் மிகுதியான அலைகளை உடையது; சிவபெருமான், தன் திருவடிக்கண் உண்டாகிய பற்றுத்தரும் முத்தியை யாம் பெறும்வண்ணம், எல்லாப் பொருள்களையும் அகப்படுத்தி நிற்கும் ஆகாயத்தையும் கடந்து நின்ற ஒரு வடிவு கொண்டுவந்து பொருந்திப் பொங்கும் புனலைஉடைய கங்கையைச் சூடி மிக்க ஆரவாரத்தைஉடைய கழுகுகள் சூழும் உயர்வுமிக்க தலைஓட்டை ஏந்துகிறுன் என்று இரட்டுற மொழிதல் அமைந்துள்ளது. இதன்கண் 'தில்லையான் சேய் போன்ற பெரியவன் தன்மாட்டு உண்டான புணர்ச்சியாகிய பேரின்பத்தை யாம் பெறுமாறு இங்ஙனம் எளிவந்து உன்னை வந்து சேர்ந்தான்; அஃது என்போல்வதுஎனின், பெறுதற்கு அரிய சங்கு தருகின்ற முத்தினை நாம் பெறுவதற்காக எளிதாகக் கடல் பெரியகழியை வந்து பொருந்திறுற் போல்வதாம். இனி உனக்கு வேண்டியது செய்க' என்ற குறிப்புப் பொருளைத் தலைவி அமைத்தவாறு.

'கலைதொடக் கீண்ட கருவிஅந் தேன்பல கால்கொடுமா
மலைதொடுத் தூர்ந்து வருகின்ற தால்தஞ்சை வாணன்வென்றிச்
சிலைதொடுத் தாங்குளழில் சேர்நுத லாய்பயில் செம்பழுக்காய்க்
குலைதொடுத் தோங்குபைங் கேழ்ப்பூகம் நாகம் குழாம்கவர்ந்தே'.

தஞ்சை. 128

என்ற பாடலையும் நோக்குக.

முசுக்கலை தீண்டியதால் கிண்ட தேன்கூட்டிலிருந்து பெருக்கெடுத்த தேன் ஆறுபோல ஒடிப் பாக்கு நாகம் இம் மரங்களை அடித்துக்கொண்டு மலையிலிருந்து ஊர்ந்து வருகின்றது என்பது வெளிப்படைப் பொருள்.

தலைவன் தீண்டியதால் தன்கண் வெளிப்பட்ட காம வெள்ளம் பெருக்கெடுக்கவே, அப்பெருக்கில் தன் நாணம், மடம் ஆகிய பண்புகள் அடித்துச்செல்லப்பட்டுவிட்டன- என்ற குறிப்புப்பொருள் அமைந்தவாறும் காண்க.]

பாங்கி இறையோற் கண்டமை பகர்தல் :

'வளைஅணி முன்கை வால் எயிற்று இன்னகை
இளையர் ஆடும் தளைஅவிழ் கானல்
குறுந்துறை வினவி நின்ற
நெடுந்தேர் அண்ணலைக் கண்டிகும் யாமே'.

ஐங்குறு. 198

எனவும்,

[வளையலை அணிந்த முன்கைகளையும் வெள்ளியபற்களையும் இனியசிரிப்பையும் உடைய மகளிர் ஆடும் கடற்கரைச் சோலையில் நீர்த்துறையை வினவிநின்ற, பெரியதேர் ஏறி வந்த அண்ணலை யாம் கண்டோம்]

பாங்கியைத் தலைவி மறைத்தல் :

'இறவுஆர் குருகுஇனம் தங்குபைங் கானலில் இன்றுஅளவும்
பிறவாதது ஒன்று பிறந்ததுவேபெரு நீர்உலகில்

சுறவுஆர் கொடிஉயர்த் தோன்தொண்டை மான்கப்பல் சூழ்திருநாட்டு
உறைவார் தமக்குஇது வும்தகு மோசொல்லு ஒண்ணுதலே'.

கப்பல். 104

எனவும்,

[தோழி! உலகில் மீனக்கொடியை உயர்த்த தொண்டைமானது கப்பலைச் சூழ்ந்த நாட்டில் இதுவரை ஏற்படாத பழி ஒன்று நமக்கு ஏற்படுவதுபோலும், நமக்கு இத்தகைய பழி தருவதா? சொல்லுவாயாக]

பாங்கி என்னை மறைப்பது என்எனத் தழாஅல்:

'மஞ்சுஅறி யாமின்னும் வான்அறி யாதமருந்தும்மற்றுஉன்
நெஞ்சுஅறி யாதநினைவும்உண் டோநெடு நீர்உலகில்
நஞ்சுஅறி யாஅன்பின் நல்லவர் ஊட்டினும் நாணியசெம்
பஞ்சுஅறி யாத பனிமலர்ச் சீறடிப் பைந்தொடியே'

அம்பி. 140

எனவும்,

[வஞ்சனை அறியாத தோழியர் செம்பஞ்சு தீட்டினும் மென்மையால் நாணுதலால் செம்பஞ்சே தீட்டி அறியாத மலர்ச் சீறடித் தலைவியே! மேகம்அறியாத மின்னலும், தேவர் அறியாத அமுதமும், உன்மனம் அறியாத என் நினைவும் இவ்வுலகில் உண்டோ?]

பாங்கி கையுறை புகழ்தல் :

'தெவ்வரைமெய்எரிகாய்சிலை ஆண்டுஎன்னை ஆண்டுகொண்ட
செவ்வரை மேனியன் சிற்றம் பலவன் செழுங்கயிலை
அவ்வரை மேலன்றி இல்லைகண் டாய்உள்ள வாறருளான்
இவ்வரை மேல்சிலம் பன்எளி தில்தந்த ஈர்ந்தழையே'.

திருக்கோவை. 114

எனவும்,

[திரிபுரத்தை அழித்து என்னை ஆட்கொண்ட செக்கர் மேனிப் பெருமானுடைய கயிலைமலையின்மேன் அன்றி வேறு இடங்களில், அருளே காரணமாகத் தலைவன் கொணர்ந்து நமக்கு எளிதாக தந்துள்ள இத்தழை காண்பது அரிது.]

தோழி கிழவோன் துயர்நிலை கிளத்தல் :

'மைத்தழை யாநின்ற மாமிடற்று அம்பல வன்கழற்கே
மெய்த்தழை யாநின்ற அன்பினர் போல விதிர்விதிர்த்துக்
கைத்தழை ஏந்திக் கடமா வினுய்க்கையில் வில்இன்றியே
பித்துஅழை யாநிற்ப ரால்என்ன பாவம் பெரியவரே'

திருக்கோவை 102

எனவும்,

[நீலகண்டனை சிவபெருமான் திருவடிக்கே பித்துக் கொண்ட அன்பர்போல, மெய்நடுங்கிக்கொண்டு கையில்தழை ஏந்தித் தன் அம்புபட்ட யானையை வினவிக் கையில் வில் இன்றிப் பெரியோன் ஒருவன் பித்தன் போலப் பேசுகிறுன்; என்ன பாவமிது !]

மறுத்தற்கு அருமை மாட்டல் :

'நீகண் டனைஎனின் வாழலை நேரிழை அம்பலத்தான்
சேய்கண் டனையன் சென்றுஆங்குஓர் அலவன்தன் சீர்ப்பெடையின்
வாய்வண்டு அனையதுஒரு நாவல் கனிநனி நல்கக்கண்டு
பேய்கண் டனையதுஒன் றுஆகிநின் றுன்அப் பெருந்தகையே'

திருக்கோவை 84

எனவும்,

[நேரிழையே! சிவபெருமான் மகனுகிய முருகனைப் போன்ற தலைவன், நண்டு ஒன்று தன் பெடைநண்டின் வாயில் வண்டுபோல்வது ஒரு நாவற்கனியை உண்ணக் கொடுத்தனைக் கண்டு, பேயைக் கண்டவனைப்போலப் பித்துக் கொண்டு நின்றுன். அதனை நீ கண்டிருந்தால் உயிர்வாழ மாட்டாய்.]

தோழி தலைமகன் குறிப்புவேறாக நெறிப்படக் கூறல் :

‘மேவிஅந் தோல்உடுக் கும்தில்லை யான்பொடி மெய்யில்கையில்
ஓவியம் தோன்றும் கிழிநின் எழில்என்று உரைஉளதால்
தூவிஅந் தோகைஅன் னாய்என்ன பாவம்சொல் ஆடல்செய்யான்
பாவிஅந் தோபனை மாமடல் ஏறக்கொல் பாவித்ததே’.

திருக்கோவை. 88

எனவும்,

[மயிலனையாய் ! புலித்தோல் உடுக்கும் சிவபெருமான் பூசும் வெண்ணீற்றை மெய்யில்பூசி, உன்வடிவு கொண்ட துணியைக் கையில் கொண்டு யாருடனும் உரையாடா திருக்கும் தலைவன் மடல்ஏறத் துணிந்துவிட்டான் போலும் ! என்ன பாவம் ! பெரிதும் இரங்கத் தக்கான்.]

தோழி தலைவியை முனிதல் :

‘உள்ளப் படுவன உள்ளி உரைத்தக் கவர்க்குஉரைத்து
மெள்ளப் படிறு துணிதுணி யேல்இது வேண்டுவல்யான்
கள்ளப் படிறர்க்கு அருளா அரன்தில்லை காணலர்போல்
கொள்ளப் படாது மறப்பது அறிவுஇல்என் கூற்றுக்களே’.

திருக்கோவை. 87

எனவும்,

[கள்ளமனத்தவர்க்கு அருளாத சிவபெருமானுடைய தில்லையைத் தரிசிக்காதவர் சொற்கள் கொள்ளத் தகாதன ஆவது போல அறிவுஅற்ற என்சொற்களைக் கொள்ளாது மறந்து, நினைக்கத்தக்கனவற்றை நீயே நினைத்து, உரையாடத்தக்க மேம்பட்ட தோழியரோடு உரையாடி நீ பொய் என்று கருதிய இதனை மெள்ளத் துணிவாயாக]

தலைவி பாங்கி தன்னை முனிதல் :

‘வாளாது வந்துஎனை வந்தன சொல்லி மணிவரைவேய்த்
தோளாய் புலந்து துயர்வதுஎன் னேதொன்று தொட்டுவந்துஇங்

நாளாக ஒன்றி நயந்தநம் கேண்மையில் நாளும்உன்சொல்
கேளாதனவும்உண்டோஎன் கொலோஎன்னைக்கேட்கின்றதே
அம்பி. 146

எனவும்,

[வேய்த்தோளாய்! ஒருதேவையு மின்றி என்னிடத்து வந்து மனம்போன போக்கில் பேசி என்னை வெறுத்து நீ வருந்துவது எதற்கு? தொன்றுதொட்டு இன்று வரை தொடர்ந்து வரும் நட்பில் நீ சொல்லி யான் கேளாத செய்தி ஏதேனும் உண்டோ? அவ்வாருக என்னை நீ கேட்பது எதனுக்கு?]

தலைவி பாங்கி தன்கைக் கையுறை ஏற்றல்:

'தீதுஆகில்என் அன்றிநன்றுஆகில்என் திண்சிலம்பர்தந்த
போதுஆர்தழையும்புதுநறுங்கண்ணியும்பூங்குவளைத்
தாதுஆர்மலர்க்குழல்தையல்நல்லாய்வையம்சாற்றுவன
யாதாகில்என்வந்துநின்கையதுஆனதின்று என்கையதே'.
அம்பி. 144

எனவும்,

[தோழி! தீதாகில் என்ன? நன்ருகில் என்ன? உலகம் யாது கூறில் என்ன? சிலம்பன் நின்னிடத்துத்தந்த தழையும் கண்ணியும் யான் இன்று பெற்றுக்கொள்கிறேன்]

இறைவி கையுறை ஏற்றமை பாங்கி இறைவற்கு உணர்த்தல்:

'பாசத்தளை அறுத்துஆண்டுகொண்டோன்தில்லைஅம்பலம்சூழ்
தேசத் தனசெம்மல் நீதந் தனசென்று யான்கொடுத்தேன்
பேசில் பெருகும் சுருங்கும் மருங்குல் பெயர்த்துஅரைத்துப்
பூசிற் றிலள்அன்றிச் செய்யாதன இல்லை பூந்தழையே'.
திருக்கோவை. 115

எனவும்,

[பற்றறுத்து என்னை ஆண்டுகொண்ட சிற்றம்பலவன் தில்லையைச் சூழ்ந்த தேசத்தனவாய் நின்னால் தரப்பட்டன வாகிய பூக்களையும் தழையுடையையும் யான் தலைவிபிடத்துக் கொடுத்த அளவில், அவள் நிகழ்த்திய செயல்களைக் கூறப் புகில் அக்கூற்று நீண்டுவிடும். சுருங்கச் சொல்லின், அவற்றை அரைத்துத் தன் மெய்யில் அவள் பூசிக்கொள்ளு தலைத் தவிர்த்து அவற்றைக் கொண்டு வேறு எல்லாச்செயல் களையும் செய்துவிட்டாள்.]

குறியிடம் கூறல் :

'வானுழைவாள் அம்பலத்தரன் குன்றுஎன்றுவட்கிவெய்யோன்
தான் நுழையா இருளாய்ப்புறம் நாப்பண்வண் தாரகைபோல்
தேன் நுழை நாகம் மலர்ந்து திகழ்பளிங் கால்மதியோன்
கானுழைவாழ்வுபெற்றாங்குஎழில்காட்டும்ஓர்கார்ப்பொழிலே'.
திருக்கோவை. 116

எனவும்,

[இருட்கு அப்பாலாகிய வான்இடத்து உண்டாகிய ஒளி யாய்ச் சேயன் ஆயினும் அணியனாய் அம்பலத்து நிற்கும் அர னதுகுன்று என்று கூறி வெய்யவன் நுழையாத இருளாய்ப் புறத்தே காட்சி தந்து, நடுவில் விண்மீன்போல ஒளி வீசும் நாகப்பூக்கள் மலர்ந்து, திகழும் பளிங்கு ஒளியினால் சந்திரன் வான்இடத்து வாழ்தலை விடுத்துக் கான்இடத்து வாழ்தலைப் பெற்றாற்போல ஒரு கரிய பொழில் தன் எழிலை வெளிப் படுத்தும்.]

குறியிடத்து இறைவியைக் கொண்டு சேறல் :

'புயல்வளர் ஊசல்முன் ஆடிப்பொன் னேபின்னைப் போய்ப்பொலியும்
அயல்வளர் குன்றில்நின்று ஏற்றும் அருவி திருஉருவில்
கயல்வளர் வாள்கண்ணி போதரு காதரம் தீர்த்துஅருளும்
தயல்வளர் மேனியன்அம்பலத் தான்வரைத் தண்புனத்தே'
திருக்கோவை 117

எனவும்,

[கயற்கண்ணியே ! வா ! அச்சத்தைப் போக்கி அருளும் பார்வதி பாகனுன சிவபெருமான் மலையில் உள்ள தண்புனத்தில் முதலில் ஊசல்ஆடிப் பக்கத்துக் குன்றில் நின்று விழும் அருவியில் நீராடுவோம் ]

குறியிடத்து உய்த்து நீங்கல் :

'நால்வேய் இனம்நின தோட்குஉடைந்து உக்கான் முத்தம்சிந்திப்
பால்வேய் அறைஉறைக் கும்பஞ்சு அடிபான் தில்லைஅன்னாய்
வால்வேய் தருவன்இங் கேநில்லுங் கேசென்றுஉன் வார்குழற்குஏர்க்
குரல்வேய் அளிமுரல் கொங்குஆர் தடமலர் கொண்டுவந்தே'.

திருக்கோவை 119

எனவும் வரும்.

[செம்பஞ்சு ஊட்டிய அடிகளைஉடைய, சிவபெருமான் தில்லையை ஒப்பாய் ! உன்தோள் அழகுக்கு உடைந்த மூங்கில்களிலிருந்து தெறித்த முத்துக்கள் பருக்கைக் கற்களைப் போல உன்அடிகளுக்குத் துன்பம் தரும் ஆதலின் நீ என்னுடன் வருதல் வேண்டா; இங்கேயே நில்; யான் அப்பக்கம் சென்று உன் நீண்ட கூந்தலில் சூட்டுதற்கு ஆகும் வண்டு மொய்க்கும் நறுமண மலர்களைக் கொய்து உன்னிடம் வந்து சேருகிறேன்.]

ஒன்றென முடித்தலால், நீங்கும் தோழி தலைவற்கு உணர்த்தலும் வரவும் பெறும்.

அதற்குச் செய்யுள் :

'பனிஏர் நறுமலர்ப் பாயலில் கண்வளர் பாவைஒரு
தனியே கிடந்துஅழும் தாயும்இங்கு இல்லை தடஞ்சிலம்பா
முனியேல் விடைகொள்வன் முற்றும்நின் காவல் முகிழ்நகைச்செங்
கனியே அனையசெவ் வாய்நவ்வி மான்விழிக் காரிகையே'.

அம்பி. 153

எனவரும்.

[சிலம்பா ! நறுமலர்ப் பாயலில் படுத்து உறங்கும் பாவை போன்ற தலைவி தனிமையை நினைத்தால் அழுவாள்.

உடன் உறையத் தாயும் இல்லை. இம்மான்விழிக் காரிகை இனி முழுதும் உன்காவலினள் ஆவாள். இங்ஙனம் உன்னை அவளைக் காக்குமாறு பணிப்பதற்காக என்னை வெகுளாதே; நான் விடைகொள்கிறேன்.]

இறையோன் இடத்து எதிர்ப்படுதல் :

' படமா சுணப்பள்ளி இக்குவடு ஆக்கிப் பங்கயக்கண்
நெடுமால் எனஎன்னை நீநினைந் தோநெஞ்சத் தாமரையே
இடமா இருக்கல்உற் றோதில்லை நின்றவன் ஈர்ங்கயிலை
வடமார் முலைமடவாய்வந்துவைகிற்றிவ்வார்பொழிற்கே'.

திருக்கோவை 120

எனவும்,

[இம்மலைப்பகுதியை ஆதிசேடனாகிய படுக்கை என்றும் என்னைத் திருமால் என்றும் கருதியோ, என்மனமாகிய தாமரையில் தங்கலாம் என்று விருப்பம்கொண்டோ, தில்லை யான் கயிலையைப் போன்ற முலைகளையுடையாய்! இப் பொழிற்கண் நீ வந்து தங்கியுள்ளாய் ? நீ வந்த காரணம் தான் யாதோ ?]

இயைதல் :

' செழுநீர் மதிக்கண்ணிச் சிற்றம் பலவன் திருக்கழலே
கெழுநீர்மை யில்சென்று கிண்கிணி வாய்க்கொள்ளும் கள்அகத்த
கழுநீர் மலர்இவள் யான்அதன் கண்மரு விப்பிரியாக்
கொழுநீர் நறப்பரு கும்பெரு நீர்மை அளிகுலமே'.

திருக்கோவை. 123

எனவும்,

[சிற்றம்பலவன் திருவடிகளையே பொருந்தும் நீர்மை யான் உள் மகிழ்ந்து முகம் மலர்வது போலச் சிறிதே மலரத் தொடங்கும் தேன் துளிக்கும் கழுநீர்மலர் இவள்; நான் அதன் கண் பொருந்தித் தேன் பருகும் வண்டாவேன்.]

புகழ்தல் :

‘ மயனூர் வீதித்தன்ன மாமதில் சூழ்தஞ்சை வாணன்வெற்பில்
பயனூர் பயோதரப் பாவைஅன் னீர்பசும் பொன்குழைதோய்
நயனூர விந்தத்து நஞ்சமும் வாய்இதழ் நல்அமுதும்
அயனூர் படைத்தில ரேல்அடங் காதுஅவ் வரனுக்குமே ’.
தஞ்சை. 135

எனவும்,

[சிறந்த மதிலை உடைய தஞ்சைமன்னன் மலையில் உள்ள பாவை அன்னீர்! குழை அளவு நீண்ட கண்களில் நஞ்சினைப் படைத்த பிரமன் உங்கள் வாய்இதழில் அமுதத்தைப் படைக் காது விட்டால், உங்கள் கண்நஞ்சம் சிவபெருமானும் தாங் குதல் இயலாது.]

தலைமகளைத் தலைமகன் விடுத்தல் :

‘ கொழுந்தா ரகைமுகை கொண்டலம் பாசடை விண்மடுவில்
எழுந்துஆர் மதிக்கம லம்எழில் தந்தென இப்பிறப்பில்
அழுந்தா வகைஎனை ஆண்டவன் சிற்றம் பலம்அனையாய்
செழுந்தாது அவிழ்பொழில் ஆயத்துச் சேர்க திருத்தகவே ’.
திருக்கோவை. 124

எனவும் வரும்.

[இப்பிறவியில் அழுந்தாது என்னை ஆண்டவனது சிற் றம்பலம் அனைய தலைவியே ! விண் ஆகிய நீர்நிலையில் விண் மீன்களாகிய மொட்டுக்களுக்கும் மேகங்களாகிய இலைகளுக்கும் நடுவில் சந்திரனாகிய தாமரை அழகுற அமைவது போலச் சோலையில் உள்ள உன்தோழியர் கூட்டத்தைச் சென்று அடைவாயாக.]

இன்னும் ‘ அற்றமில் சிறப்பின் ’ என்றதனால், தலைவி சோர்தலும் கொள்க :

அதற்குச் செய்யுள் :

‘ பொன்றாத காதல் பொறைஅறும் ஆவி புலம்பிநைய
இன்று ஆருயிர் இன்றி இருந்தனன் யான் இக் குருந்திடையே
குன்றாத அன்பொடு கூடியும் வாடியும் கோலம்கொண்டு
சென்றார் மணிநெடுந் தேருடன் போனதுஎன் சிந்தையுமே’.
அம்பி 157

எனவரும்,

[அழியாத காதலால் பிரிவைப் பொறுத்தல் ஆற்றாத என்உயிர் புலம்பி வருந்த இன்று உயிரற்றவள்போல யான் உள்ளேன்; இக் குருந்தமரங்களிடையே குறையா அன்போடு கூடியும் வாடியும் என் அழகைக் கைக்கொண்டு சென்ற தலைவனது தேருடன் என் உள்ளமும் சென்றுவிட்டது.]

பாங்கி தலைவியைச் சார்ந்து கையுறை காட்டல் :

‘பொன்அனையான் தில்லைப்பொங்கு அரவம்புன்சடைமிடைந்த
மின்அனை யான்அருள் மேவலர் போல்மெல் விரல்வருந்த
மெல்நனை ஆய்மறி யேபறி யேல்வெறி ஆர்மலர்கள்
இன்னன யான்கொணர்ந்தேன்மணம் தாழ்குழற்கு ஏய்வனவே’
திருக்கோவை 125

எனவும்,

[மான்அனையாய்! தில்லைப்பிரான் அருள் மேவப்பெறாதவர் போல உன்மெல்லிய விரல்கள் வருந்த மெல்லிய மொட்டுக்களைப் பறிக்காதே; யான் உன்கூந்தலுக்குப் பொருத்தமான, நறுமண மலர்கள் இவற்றைக் கொய்துகொண்டு வந்துள்ளேன்’ என்று தோழி, தலைமகனைப் பிரிந்த பிரிவாற்றாமையாலும், தலைமகன் புணர்ச்சி நீக்கத்துக்கண் தன்னைக் கோலம் செய்த அக்கோலத்தைத் தோழி காணாநின்றாள் என்ற பெருநாணினாலும் ஆற்றாளாய் மயங்கி மலரைப் பறிப்பதற்கு மாறாக மொட்டினைப் பறித்துக் கொண்டிருந்த தலைவியிடம் கூறியவாறு.]

பாங்கி தலைவியைப் பாங்கிற் கூட்டல் :

'அறுகால் நிறைமலர் ஐம்பால் நிறைஅணிந் தேன்அணி ஆர்
துறுகான் மலர்த்தொத்துத்தோகைதொல் ஆயம்மெல் லப்புகுக
சிறுகால் மருங்குல் வருந்தா வகைமிக என்சிரத்தின்
உறுகால் பிறர்க்குஅரி யோன்புலி யூர்அன்ன ஒண்ணுதலே'.
திருக்கோவை 126

எனவும்,

[என் தலையில்தான் வைத்த திருவடி பிறருக்கு மிகஅரிய வனுகிய சிவபெருமானுடைய புலியூரை ஒத்த தலைவியே! மயிலனையாய்! வண்டுகள் நிறைந்த மலர்களை அணிந்த உன் கூந்தலில் நறுமணம் மிக்க இப்பூங்கொத்துக்களையும் செருகியுள்ளேன். உன் சிறிய இடை வருந்தாதபடி மெல்லத் தோழியர் கூட்டத்தை அடைவாயாக]

பாங்கி தலைவியை நீங்கி ஓம்படை சாற்றல் :

'பெடைநின்று காண உடன்நின்ற தோகை பெருநடம்செய்
புடைநின்ற சோலைப் பொதியின்வெற் பாபொற்குழைதொடரும்
கடைநின்று உகுபுனல் கண்ணிக்கும் நின்புவி காவலுக்கும்
இடைநின்ற பாவிக்கும் ஏதம் உருவண்ணம் எண்ணுகவே'.
அம்பி. 161

எனவும்,

[பெண்மயில் காண ஆண்மயில் நடஞ்செய்யும் சோலைகளை உடைய பொதியமலைத் தலைவனே! உன்னையே நினைத்துக் கண்ணீர்விடும் தலைவிக்கும், நிலஉலகைக் காக்கும் உன் காவலுக்கும், உங்களுக்கு இடையே நட்புறவை வளர்த்து நிற்கும் எனக்கும் தீங்கு நேராதபடி நடந்துகொள்வாயாக.]

விருந்து விலக்கல் :

'தழங்கும் அருவிஎம் சீறூர் பெரும இதுமதுவும்
கிழங்கும் அருந்தி இருந்துஎம்மொடு இன்று கிளர்ந்துகுன்றர்

முழங்கும் குரவை இரவில்கண்டு ஏகுக முத்தன்முத்தி
வழங்கும் பிரான்எரி யாடிதென் தில்லை மணிநகர்க்கே'.

திருக்கோவை. 127

எனவும்,

[இயல்பாகவே விடுபட்டவனாய் நமக்கு முத்தி வழங்கும் பெருமானாய் எரியாடும் சிவபெருமானுடைய தில்லை நகரை ஒட்டி, அருவி முழங்கும் எம் சிறூர் இது. இன்று எம்மொடு இருந்து மதுவும் கிழங்கும் உண்டு, குறவர் ஆடும் கூத்தினை இரவில் கண்டு பின் உன் ஊருக்குச் செல்வாயாக.]

விருந்து இறை விரும்பல் :

'போதுஆர் வனமுலைத் தோகைஅன் னீர்உங்கள் செங்கைதொட்டது
யாதா யினும்எனக்கு இன்னமு தாம்எல்லை சாயும் எல்லை
தாதுஆர் மலர்ப்பொழில் தங்கலும் ஆம்இங்ஙன் உங்கள்வெற்புக்
காதுஆர் நறுங்குழைக் கானவர் வானவர் காவல்இன்றே'.

அம்பி 163

எனவும் வரும்.

[மயிலனையீர்! உங்கள் கையால் தொடப்பட்ட பொருள் எதுவாயினும் எனக்கு அமுதமாகும். கதிரவன் மறையும் நேரத்தில் இப்பொழில் தங்குதற்கும் இனிதாக உள்ளது. உங்கள் மலையும் காதில் குழை சூடிய கானவர் காவலோ, தேவர் காவலோ உடையது அன்று.]

இவற்றுள், இயைதலும் அதன்பாற்படும் இடத்துஎதிர்ப் படுதலும் புகழ்தலும் விடுத்தலும் விருந்து இறை விரும்பலும் ஆகிய தலைவன் கூற்றுக்கள் ஐந்தும், இயைதல் நிமித்தமாகி நிகழும் தோழிகூற்று முப்பத்துநான்குமாக ஈண்டைக்கு உரிய புணர்தலும் புணர்தல் நிமித்தமும் ஆகிய கிளவிகள் முப்பத்தொன்பதுமே அன்றித் தோழிகூற்று நிகழ்தற்கு நிமித்தம் ஆகிய ஏனைத் தலைவன்கூற்றுப் பதினெட்டும் தலைவிகூற்று நான்குமாக ஈண்டைக்கு உரியஅல்ல ஆகிய இருபத்திரண்டும், அநுவாத முகத்தான் ஈண்டே நிகழப்

பெறுதலின், இவற்றையும் அவற்றோடு தலைப்பெய்து இவ் வறுபத்தொன்றும் பாங்கியிற்கூட்டத்து விரி என ஒருங்கு தொகுத்து ஓதினார்.

அற்றேல், ஆசிரியர் தொல்காப்பியனார் தலைவன்கூற்றும் தலைவிகூற்றும் பாங்கிகூற்றும் தனித்தனி எடுத்து ஓதுப ஆதலின், இவர் பாங்கிகூற்றோடு ஏனை இருதிறத்தோர் கூற்றையும் விரவித்தொகுத்து ஓதியது மாறுகொளக் கூற லாம் பிறஎனின், ஆகாது; இது புடைநூல் ஆகலின் என்க. இவ்வாறு வந்துழி எல்லாம் இக்கடாவிடைகளை மத்திமதீப மாக்கி, முன்னும் பின்னும் உய்த்து உரைத்துக் கொள்க.

தலைமகன் உட்கோள் சாற்றல் முதலாகப் பாங்கி ஆற்று வித்து அகற்றல் ஈறாகச் சொல்லப்பட்ட இருபதனுள் தலைவன் கூற்றாயின எல்லாம் இரந்து பின்நிற்றற்கும், தோழி கூற்றா யின எல்லாம் சேட்படுத்தற்கும்,

இரந்து குறைபெறாது வருந்திய கிழவோன் மடலே பொருள் என மதித்தல் முதலாகக் கொண்டுநிலைகூறல் ஈறாகச் சொல் லப்பட்ட ஏழனுள் தலைவன் கூற்றாயின எல்லாம் மடல் கூற் றிற்கும், தோழி கூற்றாயின எல்லாம் மடல் விலக்கிற்கும்,

தலைவி இளமைத்தன்மை பாங்கி தலைவற்கு உணர்த்தல் முதலாகக் கிழவோன் ஆற்றல் ஈறாகச் சொல்லப்பட்ட ஒன்ப தனுள் தோழிகூற்றாயின எல்லாம் உடன்படற்கும், தலைவன் கூற்று ஆயின எல்லாம் மடல்கூற்று ஒழிதற்கும்,

இறைவன் தனக்குக் குறை நேர் பாங்கி இறைவிக்கு அவன் குறை உணர்த்தல் முதலாகப் பாங்கி கையுறை புகழ்தல் ஈறாகச் சொல்லப்பட்ட ஆறனுள் பாங்கி கூற்றாயின எல்லாம் மெலிதாகச் சொல்லிக் குறை நயப்பித்தற்கும், தலைவிகூற்று ஆயின எல்லாம் வலிதாகச் சொல்லி மறுத் தற்கும்,

தோழி கிழவோன் துயர்நிலை கிளத்தல் முதலாகக் கையுறை ஏற்றல் ஈறாகச் சொல்லப்பட்ட ஆறனுள் தோழி கூற்றாயின எல்லாம் வலிதாகச் சொல்லிக் குறை நயப்பித்தற்கும், தலைவிகூற்று ஆயின எல்லாம் மெலிதாகச் சொல்லிக் குறை நயத்தற்கும்,

இறைவிகையுறை ஏற்றமை பாங்கி இறைவற்கு உணர்த்தல் முதலாகத் தலைமகன் விருந்து இறை விரும்பல் ஈறாகச் சொல்லப்பட்ட பதின்மூன்றனுள் தோழிகூற்று ஆயின எல்லாம் கூட்டற்கும் தலைவன் கூற்று ஆயினஎல்லாம் கூடற்கும் கூட்டற்கும் வேட்டற்கும் உரிய எனக்கொள்க. 137

## பகற்குறியின் வகை

510 கூட்டல் கூடல் பாங்கிற் கூட்டல்
வேட்டல்என்று ஒருநால் வகைத்தே பகற்குறி.

நிறுத்த முறையானே பகற்குறி கூறுவனவற்றுள் இஃது அதன்வகை இத்துணைத்து என்கின்றது.

(இ-ள்) கூட்டல் முதலாக வேட்டல் ஈறாக நான்கு வகையினை உடைத்துப் பகற்குறி என்றவாறு. 138

## விளக்கம்

இவை பாங்கியிற் கூட்டத்து வகையில் இறுதியில் கூறப்பட்டனவே.

## ஒத்த நூற்பாக்கள்

முழுதும் — ந. அ 151

'பழுது அறக் கூட்டல் கூடல் பாங்கின்
விழுமிதின் கூட்டல் வேட்டல் என்று
வழுவில் பகற்குறி வகைநான்கு என்ப'. மா. அ. 43
138

## பகற்குறியின் விரி

511 குறிஇடம் கூறல் முதலாப் பெறல்அரும்
விருந்துஇறை விரும்பல் ஈறுப் பொருந்தப்
பகர்ந்தபன் னிரண்டும் பகற்குறி விரியே.

இது பகற்குறி விரி இத்துணைப் பகுதித்து என்கின்றது.

(இ-ள்) குறிஇடம் கூறல் முதலாக விருந்து இறை விரும்பல் ஈறுக மேல் பாங்கியிற் கூட்டத்துள் எடுத்து ஓதப்பட்ட பன்னிரண்டும் பகற்குறி விரியாம் என்றவாறு.

உதாரணம் மேல்காட்டிய எனக்கொள்க. 139

### ஒத்த நூற்பாக்கள்

'முழுதும் — ந. அ, 152

'குறியிடம் கூறல் ஆடுஇடம் படர்தல்
குறியிடைச் சேறல் இடத்துஉய்த்து நீங்கல்
உவந்துரைத் தலலொடு மருங்குஅணை தல்லே
அறிவு அறி வித்தல் அவன்உள் மகிழ்தல்
ஆயத்து உய்த்தல் தோழிவந்து கூடல்
ஆடுஇடம் புகுதல் தனிகண்டு உரைத்தல்
தடமென் முலையாள் பருவம் கூறி
வரவு விலக்கல் வரைவுஉடன் படாது
மிகுத்துரைத் தல்லொடு மெய்ம்மை உரைத்தல்
வருத்தம் கூறல் தாய்அச்சம் கூறல்
இல்செறிவு அறிவித்தல் தமர்நினைவு உரைத்தல்
எதிர்கோள் கூறல் ஏறுகோள் கூறல்
ஏதிலார் தம்உரை கூறல் அவளொடு
கூறுவாள் போன்று தினைமுதிர்வு உரைத்தல்
பகல்வரல் விலக்கல் பையுள் எய்தித்
தினையொடு வெறுத்தல் சிறைப்புற மாக
வேங்கையொடு வெறுத்தல் வெற்புஅமர் நாடற்குக்

கழுமலுற்று இரங்கல் கடிப்புனம் கையறக்
கொய்தமை கூறல் பிரிவு அருமை கூறல்
மயிலொடு கூறல் வறும்புனம் காண்டல்
பயில்பதி நோக்கிப் பதிமிக வாடல்
சொன்னநா லெட்டும் தோன்றும் இயற்கை
மன்னிய பகற்குறி வகையா கும்மே'.

திருக்கோவை மு. வி. கள. 18

'முற்றிழை குறியிடம் கூறல்முத லாகக்
கொற்றவன் விருந்துகைக் கோடல் ஈறுப்
பகர்ந்தபன் னிரண்டும் பகற்குறி விரியே'.

மா. அ. 44

'பாங்குணர் வையுற இரந்துகுறை யுறுதலும்
ஆங்குஅவள் வினுதலும் மதியுடன் ஆக்கலும்
துணிதலும் சேட்பட நிறுத்தலும் சுட்டியது
அறியேன் அறிவன் மறையேல் என்றலும்
குறியா கூறலும் படைத்தன மொழிதலும்
அரியள் என்றலும் நீகூறு என்றலும்
நகைகொண்டு ஆற்றலும் நகாதுஉரை என்றலும்
கையுறை எளிமை காட்டலும் மெய்யுற
ஒவ்வாது என்றலும் அவள்நிலை உணர்ந்து
கொள்குவன் என்றலும் மடன்மாக் கூறலும்
மற்றுஅது விலக்கலும் கையுறை கோடலும்
விழைய உணர்தலும் நாணொடு நீங்கலும்
வலிதாகச் சொல்லிக் குறைநயப் பித்தலும்
தழீஇக் கோடலும் தழைஏற் பித்தலும்
கையுறை எதிர்ந்தமை மெய்பெற இசைத்தலும்
விரும்புஇடம் உரைத்தலும் குறியொடு நீங்கலும்
புனைந்து நிலையலும் நிலைமை கூறலும்
பாங்கிகொண்டு இகத்தலும் பகற்குறி ஆகும்'.

த நெ. வி. 17

## ஒருசார் பகற்குறியின் வகை

512 இரங்கல் வன்புறை இற்செறிப்பு உணர்த்தல் என்று
ஒருங்குமூ வகைத்து ஒருசார் பகற்குறி.

இஃது ஒருசார்பகற்குறி வகை இத்துணைத்து என்கின்றது

(இ-ள்) இரங்கலும் வன்புறையும் இல்செறிப்பு உணர்த்தலும் என மூன்று வகையினை உடைத்து ஒருகூற்றுப் பகற்குறி என்றவாறு. 140

விளக்கம்

இரங்கல்—தலைவி மனம் வருந்துதல்.

வன்புறை — தோழி தலைவியை வருந்தாதவாறு வற்புறுத்துதல்.

இற்செறிப்பு உணர்த்தல்—தோழி தலைவனுக்குத் தலைவி இல் செறிக்கப்பட்ட செய்தியைத் தெரிவித்தல்.

ஒத்த நூற்பாக்கள்

முழுதும் — ந. அ. 153

'புல்லென் றிரங்கல்வன் புறைசெறிப்பு உணர்த்தலென்று
ஒல்லுதல் மூவகைத்து ஒருசார் பகற்குறி'. மா. அ. 45
140

## ஒருசார் பகற்குறியின் விரி

513 கிழவோன் பிரிந்துழிக் கிழத்தி மாலைஅம்
பொழுதுகண்டு இரங்கலும்[1] பாங்கி புலம்பலும்[2]
தலைவன் நீடத் தலைவி வருந்தலும்[3]
தலைவியைப் பாங்கி கழறலும்[4] தலைவி
முன்னிலைப் புறமொழி மொழிதலும்[5] இன்னுயிர்ப்
பாங்கியொடு பகர்தலும்[6] பாங்கிஅச் சுறுத்தலும்[7]
நீங்கற்கு அருமை தலைவிநினைந்து இரங்கலும்[8]
தலைவிக்கு அவன்வரல் பாங்கி சாற்றலும்[9]

சிறைப்புற மாகச் சேறிப்புஅறி வுறுத்தலும்[10]
முன்னிலைப் புறமொழி மொழிந்துஅறி வுறுத்தலும்[11]
முன்நின்று உணர்த்தலும்[12] முன்நின்று உணர்த்தி
ஓம்படை சாற்றலும்[13] மேம்படு கிழவோன்
தஞ்சம் பெறாது நெஞ்சொடு கிளத்தலும்[14]
என்றார் ஏழும் எல்லுக்குறி விரியே.

இஃது ஒருசார்பகற்குறி விரி இத்துணைத்து என்கின்றது.

(இ-ள்) கிழவோன் பிரிந்துழிக் கிழத்தி மாலைஅம் பொழுது கண்டு இரங்கல் முதலாகக் கிழவோன் தஞ்சம் பெறாது நெஞ்சொடு கிளத்தல் ஈறாகச் சொல்லப்பட்ட பதிநான்கும் ஒருசார் பகற்குறி விரியாம் என்றவாறு.

விளக்கம்

[1 அந்திப்பொழுது கண்டு தலைவி ஆற்றாது வருந்துதல்.

2 'தலைவியின் செயலால் களவு வெளிப்பட்டு விடுமோ?' என்று பாங்கி வருந்துதல்.

3 தலைவன் வரக் காலம் தாழ்க்கவே, தலைவி வருந்துதல்.

4 தலைவியைப் பாங்கி இடித்து உரைத்தல்.

5 பாங்கி தன் முன்னே நிற்கவும் அவள்மேல் உள்ள வெறுப்பால் தலைவி அவளை நோக்கிக் கூறாமல் அவளுக்குப் புறமாக மொழிந்து அவளுக்கு அறிவுறுத்தல்.

6 பின் தலைவி பாங்கியிடம் நேராக உரையாடுதல்

7 தலைவியை நோக்கிப் பாங்கி 'களவு வெளிப்படும்' என்று அச்சம் உறச்செய்தல்.

8 'தலைவனைப் பிரிந்திருத்தல் இயலாத செயலாய் உள்ளதே' என்பதனை நினைத்துத் தலைவி வருந்துதல்.

9 தலைவிக்குத் தலைவன் வந்துகொண்டிருக்கும் செய்தியைப் பாங்கி குறிப்பிடுதல்.

10 தலைவன் வெளிப்புறத்தே நிற்ப, தலைவியை வீட்டின்கண் செறித்த செய்தியைப் பாங்கி கிளி முதலியவற்றிற்குக் கூறுவாள்போல அவனுக்கு அறிவித்தல்.

11 தலைவன் முன்னே நிற்பவும் தோழி அவனை நோக்கிக் கூறாமல், வண்டினை நோக்கிக் கூறுவாள் போன்று, இற்செறிப்பை அவனுக்கு அறிவித்தல்.

12 பாங்கி தலைவன்முன்னே நின்று தலைவியைச் செவிலி வீட்டில் செறித்த செய்தியைக் குறிப்பிடுதல்.

13 தலைவன்முன் நின்று தோழி தலைவியைப் பாதுகாக்க வேண்டும் என்று அவனை வேண்டுதல்.

14 தலைவன் தன்துயர் நீக்கப் பற்றுக்கோடின்றி மனத்துடனே கூறிக்கொண்டு வருந்துதல்.

## ஒத்த நூற்பாக்கள்

முழுதும் — ந. அ. 154

‘ பூங்கொடி மாலையம் பொழுதுகண்டு இரங்கலும்
பாங்கி புலம்பலும் பார்த்திபன் நீடக்
காரிகை வருந்தலும் பாங்கி கழறலும்
மொய்குழல் முன்னிலைப் புறமொழி மொழிதலும்
பையரவு அல்குல் பாங்கியொடு பகர்தலும்
பாங்கிஅச் சுறுத்தலும் நீங்கற்கு அருமை
இறைவி நினைந்து இரங்கலும் இறைவிக்கு அவன்வரல்
பிறைநுதல் பாங்கி உரைத்தபின் பெயர்த்தும்
சிறைப்புற மாகச் செறிப்பு அறி வுறுத்தலும்
முன்னிலைப் புறமொழி பாங்கி மொழிதலும்

முன்னின்று உணர்த்தலும் ஓம்படை மொழிதலும்
தளர்ந்த நெஞ்சமொடு தஞ்சம் பெறு அது
விளம்பலீ ரேழ்ஒரு சார்பகற் குறிவிரி' மா. அ 46]

கிழவோன் பிரிந்துழிக் கிழத்தி மாலைப்பொழுது கண்டு இரங்கல் :

'பகலோன் கரந்தனன் காப்பவர் சேயர்பற்று அற்றவர்க்குப்
புகலோன் புகுநர்க்குப் போக்குஅரி யோனெவ ரும்புகலத்
தகலோன் பயில்தில்லைப் பைம்பொழில் சேக்கைகள் நோக்கினவால்
அகல்ஓங்கு இருகழி வாய்க்கொழு மீன்உண்ட அன்னங்களே'.
திருக்கோவை. 188

எனவும்,

[கதிரவன் மறைந்து விட்டான். என்னைக் காக்கும் தலைவரும் தூரத்திலுள்ளார். பற்றற்ற அடியாருக்குப் புகலிடமாய், தன்னை வந்து அடைந்தார் நீங்குதல் இலராய் எல்லோராலும் விரும்பத் தகுபவராயுள்ள சிவபெருமானுடைய தில்லைப்பொழிலில் உள்ள தத்தம் கூடுகளை நோக்கி, உப்பங்கழிகளில் இரைதேடிய அன்னங்கள் புகத் தொடங்கிவிட்டன ]

பாங்கி புலம்பல் :

'பொன்னூர் நறுமலர்ப் புன்னையங் கானல் புளினம்தங்கி
பன்னாள் மணந்து மறந்தவர் போல அருக்கன்சென்ற
பின்னா அதன்முன்ன மேசெக்கர் மாலை பிறந்ததுஇனி
என்னாகும் என்றறி யேன்வளங் கோதை இளங்கொடிக்கே'.
அம்பி. 165

எனவும்,

[புன்னையங்கானலில் மணற்குன்றில் ஒளிவீசிப் பல நாளும் நம்மைக்கூடி இப்பொழுது மறந்தவர் புலப்படாமல் இருப்பது போலக் கதிரவன் புலப்படாது போனதை ஒட்டிச் செந்நிறமாலை தோன்றிவிட்டது. இப்பொழுது தலைவிக்கு என்ன நிலை ஏற்படுமோ என்று அறியேன்.]

தலைவன் நீடத்தலைவி வருந்தல் :

' மூவல் தழீஇய அருள்முத லோன்தில்லைச் செல்வன்முந்நீர்
நாவல் தழீஇயஇந் நானிலம் துஞ்சும் நயந்தஇன்பச்
சேவல்தழீஇச்சென் றுதான் துஞ்சும்யான் துயிலாச்செயிர்எம்
காவல் தழீஇயவர்க்கு ஓதாது அளிய களிஅன்னமே '.

திருக்கோவை 191

எனவும்,

[மூவல் என்ற ஊரில் கோயில்கொண்டுள்ள தில்லைப் பெருமானுடைய கடலால் சூழப்பட்ட இவ்வுலகத்தவர் உறங்கத் தொடங்கிவிட்டனர். சேவலைத் தழுவி உறங்காநின்ற பெண் அன்னம் யான் துயிலாத துயரத்தை என்னைக் காக்கும் பொறுப்புடைய தலைவருக்கு உரைப்பதாக இல்லையே.]

தலைவியைப் பாங்கி கழறல் :

'சிறந்தார் தெரிந்தசெழுந்தமிழ் வாணன்தென் மாறைவெற்பர்
துறந்தார் எனைஎன்று சொல்லுவது ஏன் இந்தத் தொல்உலகில்
பிறந்தார் எவர்க்கும் பிரிவுஉள தால்வெய்ய பேர் அமர்க்கண்
புறம்தாழ் கரிய குழல்செய்ய வாய்ஐய பூங்கொடியே '.

தஞ்சை. 145

எனவும்,

[பூங்கொடியே! தமிழ்வாணன் தென்மாறை வெற்பர் உன்னைத் துறந்துவிட்டார் என்று நீ சொல்லுவது ஏன்? இவ்வுலகில் பிறந்தவர் எல்லோருக்கும் பிரிவு உண்டு என்பதை நீ அறியாயோ.]

தலைவி முன்னிலைப் புறமொழி மொழிதல் :

' யாவதும் அறிகிலர் கழறு வோரே
தாய்இல் முட்டை போல உள்கிடந்து

சாயின் அல்லது பிறிதுஎவன் உடைத்தே
யாமைப் பார்ப்பின் அன்ன
காமம் காதலர் கையற விடினே '. குறுந். 152

எனவும்,

[தாய்முகம் நோக்கி வளரும் தன்மையை உடைய ஆமையின் பார்ப்பைப் போலத் தலைவரைப் பல்கால் காண்டலால் வளரும் தன்மையை உடைய காமமானது, காதலர் நாம் செயலறும்படி நம்மைப் பிரிந்து கைவிட்டால் தாய் இல்லாத முட்டை கிடந்தபடியே அழிவதுபோல, உள்ளத்துள்ளே கிடந்து மெலியின் அன்றி வேறு என்ன உறுதியை உடையது? என்னை இடித்துக் கூறுவோர் இதனைச் சிறிதும் அறிகிலர்.]

தலைவி பாங்கியொடு பகர்தற்குச் செய்யுள் :

' நோம்என் நெஞ்சே நோம்என் நெஞ்சே
புன்புலத்து அமன்ற சிறியிலை நெருஞ்சி
கட்குஇன் புதுமலர் முள்பயந் தாஅங்கு
இனிய செய்தநம் காதலர்
இன்னா செய்தல் நோம்என் நெஞ்சே '. குறுந். 202

எனவும்,

[தோழி! மனைக் கொல்லையில் நெருங்கி முளைத்த நெருஞ்சிப்பூ கட்கு இனிதாகத்தோன்றிப் பின் துயர்தரும் முள்ளைப் பயந்தாற்போலத் தோற்றத்தில் இனியராகிய நம் காதலர் தம் செயலால் துயரம் தருதலால் என்நெஞ்சு நோவா நின்றது.]

தலைவியைப் பாங்கி அஞ்சி அச்சுறுத்தல் :

' மனம்கா வலருழை வைத்துமென் கூர்வளை வாய்ப்பசும்புள்
இனம்காவல் மாற்றிய ஏனல்கண் டால்அன்னை எப்படியும்

கனம்காவல் கொண்ட கழைஇருஞ் சாரல் கனங்குழைநின்
புனங்காவல் மாற்றும தன்பின்னர்க் காவலும் பூணும்வந்தே '.
அம்பி. 171

எனவும்,

[தலைவியே ! உன் மனத்தைத் தலைவனிடம் வைத்துப் பறவைகளின் இனங்கள் தினை கவராமல் பாதுகாவாது விடுத்துள்ள தினைப்புனத்தைக் கண்டால், அன்னை எப்படியும் மேகத்தை அளாவிய மூங்கில்களை உடைய மலைச்சாரலில் உன்னைப் புனங்காவலில்இருந்து நீக்கிவிட்டுப் பின்னை உனக்கு இற்செறிப்பும் அளித்துவிடுவாள்.]

நீங்கற்கு அருமை தலைவி நினைந்து இரங்கல் :

' இமையாத வேழம்ஓர் எட்டும் குலகிரி ஏழும்முற்றும்
சுமைஆற வந்துஅரு ளும்தொண்டை மான்கப்பல் தோகைஅன்னீர்
அமையாத அன்புதந்தார்பிரிந்தால்அரிது ஆற்றுவதுஎன்று
உமையாள் அறிந்துஅல்லவோசிவந்தாள்தன் ஒருபக்கமே'.
கப்பல். 130

எனவும்,

[எட்டுக்குலயானைகளும் ஏழுகுலமலைகளும் தம்சுமை நீங்கத்தோன்றி அருள்செய்யும் தொண்டைமானுடைய கப்பலைச் சேர்ந்த மயில் அன்னீர் ! ' அன்பரைப் பிரிந்தால் ஆற்றுவது அரிது' என்று கருதியே உமையாள் தன் ஒரு பகுதியாகச் சிவபெருமானைப் பிரிவு அறக் கொண்டுள்ளாள். தோகை அன்னீர் என்ற பன்மை இழித்தற்கண் வந்தது ]

தலைவிக்கு அவன்வரல் பாங்கி சாற்றல் :

' சேண்ஆர் கொடிநெடுந் தேர்மணி ஓசை செவிப்படும்இவ்
வாள்நாக மேல்வரு கின்றனர் போலுவர் வந்துநம்மைக்
காணுது அலமரும் துன்பமும் காதலும் காணஇங்ஙன்
நீள்நாக நீழல் மறைகுவம் போலும் நிரைவளையே '.
அம்பி. 168

எனவும்,

[தலைவியே! தலைவனுடைய தேர்மணிகளின் ஓசை கேட்கிறது. இவ்வொளி மிக்க மலையை நோக்கி வருகின்றார் போலும். வந்து நம்மைக் காணாமல், மனம் சுழலும் துன்பத்தையும் அவர் அன்பையும்காண, நாகமரநிழலிலே இப்படிச் சிறிது மறைந்திருப்போம்.]

தோழி சிறைப்புறமாகத் தலைமகட்குச் செறிப்பு அறிவுறுத்தல் :

‘ இயலும் கலவ மயிலும்மென் மானும் இனக்கிளியும்
முயலும் தவங்கள் முடிவது போலும் முதுமறலி
செயலும் கமலமும் செங்கழு நீரும் செழியர்வெற்றிக்
கயலும் பொருகண் நல்லாய்இன்று நாளைக் கடிபுனத்தே ’.

அம்பி. 175

எனவும்,

[இயமனுடைய செயலும் கமலமும் கழுநீரும் பாண்டியர் தம்கயலும் ஒத்த கண்களை உடையாய்! இன்று நாளை இக் காவலை உடைய புனத்தே, மயிலும் மானும் கிளியும் முயன்று செய்யும் தவங்கள் முடிந்துவிடுவனபோலும்!]

தோழி முன்னிலைப் புறமொழி மொழிந்து இல்செறிப்பு உணர்த்தல் :

‘ பயில்காள பந்திப் புயல்அன்ன ஓதியைப் பைங்கிள்ளைகாள்
மயில்காள் சிறிதும் மறக்கப் பெறீர் தஞ்சை வாணன் வெற்பில்
குயில்காள் எங்கும் இயய்புதண் சோலையில் கூடிஇன்ப
மயில்காள் வெங்கதிர் வேல்அன்பர் சால அயர்ப்பினுமே ’.

தஞ்சை. 152

எனவும்,

[கிளிகாள்! மயில்காள்! தஞ்சைவாணன் வெற்பில் குயில்காள்! சோலையில் கூடின மயில்காள்! கார்மேகம் போன்ற கூந்தலை உடைய தலைவியைத் தலைவன் மறப்பினும், நீங்கள் சிறிதும் மறவாதீர்கள் ஆகுக.]

பாங்கி தலைவன்முன் நின்று இல்செறிப்பு உணர்த்தல்:

'மால்வரை வெற்ப வணங்குகுரல் ஏனல்
காவல் இயற்கை ஒழிந்தேம்யாம்—தூஅருவி
பூக்கண் கழூஉம் புறவிற்றால் பொன்விளையும்
பாக்கம் உதுஎம் இடம்'. ஐந். ஐம். 12

எனவும்,

[மூங்கில் வளரும் மலைநாடனே! வளைந்த கதிர்களை உடைய திணைக்காவலை நாங்கள் இன்றோடு நீத்துவிட்டோம். அருவிநீர் பூக்களைக் கழுவும் காட்டில் பொன்விளையும் அந்தப் பாக்கமே யாங்கள் உறையும் இடமாகும்]

பாங்கி தலைவன் முன்நின்று இல்செறிப்பு உணர்த்தி ஓம்படை சாற்றல்:

'காவைப் பொருவுசெங் கைக்கரு மாணிக்கன் கப்பல்வள்ளிக்
கோவைப் பொருசெய்ய வேல்கொற்றவா நின் குறைநயந்து
மாவைக் குளிர்நிழல் ஆக்கிய என்னை மறப்பினும்என்
பூவைக்கு நல்உயிர் நீஉடம் பேகொண்டு போகின்றதே'.
கப்பல். 163

எனவும்,

[கற்பகச் சோலையை ஒத்த கொடைக்கையுடைய கரு மாணிக்கனுடைய கப்பல் என்ற ஊரைச்சார்ந்த மலையில் முருகனை ஒத்த செவ்வேல் கொற்றவா! உன் குறையை விரும்பி ஏற்று மாமர நிழலிலே உனக்குத் தலைவியைக் கூட்டு வித்த என்னை மறந்தாலும், என் தலைவிக்கு நீயே உயிர், யான் அவள் உடலையே அழைத்துச் செல்கின்றேன் என்பதை உணர்வாயாக.]

தலைவன் தஞ்சம் பெறாது நெஞ்சொடு கிளத்தல்:

ஏஅலர் ஏய்விழி மாந்தளிர் மேனியர் ஏவல்இனிக்
காவலரேமனம் காத்தனம் நாம்களி யானைசெய்பொன்

நாவல ரேபெற நல்கும்கை மேகம் நறுங்குவளை
மா அலர் ஏய்தொடையான் தஞ்சை வாணன் வரையில்வந்தே'.
தஞ்சை. 155

எனவும் வரும்.

[அம்பையும் பூவையும் ஒத்த விழியையும் மாந்தளிர் மேனியினையும் உடைய இவர்கள் இனித் தினைப்புனம் காவற்கு வாரார். யானைகளையும் பொன்னையும் புலவருக்கு நல்கும் கார்மேகக் கொடைக்கைகளையுடைய மலர்மாலை அணிந்த தொண்டைமான் ஆகும் தஞ்சைவாணன் வரையில் வந்து, நாம் நம் மனத்தை அடக்கிக்கொண்டு இருக்க வேண்டியவர் ஆயினோமே.]

இவற்றுள், கிழவோன் பிரிந்துழிக் கிழத்தி மாலையம் பொழுது கண்டு இரங்கலும், பாங்கி புலம்பலும், தலைவன் நீடத்தலைவி வருந்தலும், முன்னிலைப்புறமொழி மொழிதலும், பாங்கியொடு பகர்தலும், நீங்கற்கு அருமை தலைவி நினைந்து இரங்கலும், கிழவோன் தஞ்சம்பெறுது நெஞ்சொடு கிளத்தலும் ஆகிய ஏழும் இரங்கற்கும்,

இவற்றுள், கிழவோன் தஞ்சம்பெறுது நெஞ்சொடு கிளத்தல் ஒழித்து ஏனைய ஆறும் வரைதல் வேட்கைக்கும்,

தலைவியைப் பாங்கி கழறலும், தலைவியைப் பாங்கி அஞ்சி அச்சுறுத்தலும், தலைவிக்கு அவன் வரல் பாங்கி சாற்றலும் ஆகிய மூன்றும் வன்புறைக்கும்,

சிறைப்புறமாகச் செறிப்பு அறிவுறுத்தலும், முன்னிலைப் புறமொழி மொழிந்து அறிவுறுத்தலும், முன்நின்று உணர்த்தலும், முன்நின்று உணர்த்தி ஓம்படை சாற்றலும் ஆகிய நான்கும் இற்செறிப்பு உணர்த்தற்கும் உரிய எனக்கொள்க; வரைவு கடாதற்கும் ஆம். 141

## பகற்குறி இடையீட்டு வகை

514 விலக்கல் சேறல் கலக்கம் என்றுங்கு
இகப்பில்மூ வகைத்தே பகற்குறி இடையீடு.

இது நிறுத்தமுறையானே பகற்குறி இடையீட்டுவகை இத்துணைத்து என்கின்றது.

(இ-ள்) விலக்கலும் சேறலும் கலக்கமும் எனமூன்று வகையினை உடைத்தாம், பகற்குறி இடையீடு என்றவாறு.
142

### விளக்கம்

விலக்கல் — தோழி தலைவனையும் தலைவியையும் குறிக்கண் வாராதவாறு விலக்குதல்.

சேறல் — தலைவன் குறியிடத்தை அடைதல்.

கலக்கம் — தலைவன் தலைவியைச் சந்தித்த இடத்தை நோக்கி மனம் கலங்குதல்.

பகற்குறி இடையீடு — பகற்குறிக்த இடையில் சில தடைகள் நிகழ்தல்

ஒத்த நூற்பாக்கள்

முழுதும் — ந. அ. 155

'தேர்ந்து விலக்கல் சேறல் கலக்கம்என்று
ஏய்ந்தமூ வகைத்தே பகற்குறி இடையீடு'.

மா. அ. 47

142

## பகற்குறி இடையீட்டு விரி

515 இறைவனைப் பாங்கி குறிவரல் விலக்கலும்[1]
இறைவியைக் குறிவரல் விலக்கலும்[2] இறைமகள்
ஆடுஇடம் நோக்கி அழிதலும்[3] பாங்கி
ஆடுஇடம் விடுத்துக்கொண்டு அகறலும்[4] பின்னுள்

நெடுந்தகை குறிவயின் நீடுசென்று இரங்கலும்[5]
வறுங்களம் நாடி மறுகலும்[6] குறுந்தொடி
வாழும்ஊர் நோக்கி மதிமயங் கலும்[7] எனும்
ஏழும் பகற்குறி இடையீட்டு விரியே.

இது பகற்குறி இடையீட்டுவிரி இத்துணைத்து என்கின்றது.

(இ-ள்) இறைவனைப் பாங்கி குறிவரல் விலக்கல் முதலாகக் குறுந்தொடி வாழும் ஊர்நோக்கி மதிமயங்கல் ஈறாகச் சொல்லப்பட்ட ஏழும் பகற்குறி இடையீட்டு விரியாம் என்றவாறு.

விளக்கம்

1 தலைவனைத் தோழி குறித்த இடத்திற்கு வருவதைத் தடுத்தல்.

2 தலைவியும் குறியிடத்திற்கு வாராதவாறு தோழி தடுத்தல்.

3 தலைவி தலைவனோடு விளையாடும் இடங்களைப் பார்த்து மனம் இரங்குதல்.

4 விளையாடும் இடங்களைவிட்டுத் தலைவியை நீக்கிக் கொண்டு பாங்கி வீட்டிற்குச் செல்லுதல்.

5 மறுநாள் தலைவன் குறியிடத்து வந்து நீண்டநேரம் தங்கித் தலைவியைக்கண்டு அளவளாவும் வாய்ப்பினை இழந்தமைக்கு மனம் இரங்குதல்.

6 தலைவி இல்லாத இடத்தைக்கண்டு மனம் சோருதல்.

7 தலைவி வாழும் ஊரை நோக்கித் தலைவன் மதி மயங்கிக் கூறுதல்.

ஒத்த நூற்பாக்கள்

முழுதும் — ந. அ. 156

'மன்னனைக் குறிவரல் விலக்கலும் மின்இடைக்
கோதையைப் பாங்கி குறிவரல் விலக்கலும்
ஆடுஇடம் நோக்கி ஆயிழை அயர்தலும்
ஆடுஇடம் விடுத்துக்கொண்டு அகறலும் பின்னுள்
நீடுநினைந்து இரங்கலும் நிறைபொறை வழுவா
அண்ணல் வறுங்களம் நண்ணி மறுகலும்
ஒண்ணுதல் வாழும் ஊரினை நோக்கி
மதிமயங் கலும்என வகுத்தஓ ரேழும்
விதிமுறை பகற்குறி இடையீட்டு விரியே'. மா. அ 48.

இறைவனைப் பாங்கி குறிவரல் விலக்கல் :

வடிவுஆர் வயல்தில்லை யோன்மலை யத்துநின் றும்வருதேன்
கடிவார் களிவண்டு நின்றுஅலர் தூற்றப் பெருங்கணியார்
நொடிவார் நமக்குஇனி நோதக யான்நுமக்குஎன் உரைக்கேன்
தடிவார் தினைஎமர் காவேம் பெருமஇத் தண்புனமே.

திரு. 139

எனவும்,

[பெரும ! தில்லையான்மலையத்து நின்றும் தேன்நாடிவரும் வண்டுதன்அலர்களில்மொய்க்குமாறு வேங்கை பூத்துத் தினை கொய்யவேண்டிய காலத்தை அறிவியாநின்றது. அச்செயல் நமக்குத் துன்பம் தருவதாயிற்று. எமர் தினையைக்கொய்து விடுவர்; யாமும் இனிப் புனம் காவேம். நுமக்கு யான் என்ன கூறல் வல்லேன்?]

பாங்கி இறைவியைக் குறிவரல் விலக்கல் :

அதுநாம் அறிந்திலம்அன்னை இப்போது அணி நீர்த்துவரைத்
துதிநாவலர்புகழும்தொண்டைமான்வெற்பில்தோள்மெலிவும்
புதுநாள் மதிநுதல் வண்ணமும் பார்த்துப் புகைஉயிர்த்தாள்
இதுநாம் இனிஅன்ன மேவண்டல் ஆடும் இடம்அல்லவே.

கப்பல். 136

எனவும்,

[அன்னமே! துவராபதியில் நாவலர்புகழவாழும்தொண்டைமான் மலையிலே அன்னை இப்போது உன்தோள்மெலிவும் நுதல்வண்ணமும் பார்த்து அனல்மூச்சுவிட்டாள். இனி நமக்கு இப்பொழில் விளையாட்டிடம் ஆகாது, அன்னை கருதியதை நாம் அறியோம்.]

இறைமகள் ஆடுஇடம் நோக்கி அழிதல் :

பரிவுசெய் தாண்டஅம் பலத்துப் பயில்வோன் பரங்குன்றின்வாய்
அருவிசெய் தாழ்புனத் தைவனம் கொய்யவும் இவ்வனத்தே
பிரிவுசெய் தால்அரி தேகொள்கை பேயொடும் என்னும் பெற்றி
இருவிசெய் தாளின்இருந் தின்று காட்டும் இளங்கிளியே. திரு -144

[அன்போடு நம்மை ஆட்கொள்ளும் சிவபெருமானுடைய பரங்குன்றில் அருவிநீர் பாயும் புனத்தில் மலைநெல்லைக் கொய்த பின்னரும், 'பேயோடு பழகினாலும் பிரிதல் அரிது' என்பதைக் காட்டுவனபோல, நெல் கொய்த அரிதாளில் இன்றும் கிளிகள் தங்கியுள்ளன.]
எனவும்,

பாங்கி ஆடுஇடம் விடுத்துக்கொண்டு அகறல் :

கணியார் கருத்துஇன்று முற்றிற்று யாம்சென்றும் கார்ப்புனமே
மணிஆர் பொழில்காள் மறந்திர்கண்டீர்மன்னும் அம்பலத்தோன்
அணியார் கயிலை மயில்காள் அயில்வேல் ஒருவர்வந்தால்
துணியா தனதுணிந் தார்என்னும் நீர்மைகள் சொல்லுமினே. திரு 145
எனவும் வரும்.

[புனமே! பொழில்களே! அம்பலத்தான் கயிலை மயில்களே! வேங்கையின் எண்ணம் ஈடேறிவிட்டது. யாம் வீட்டிற்குப் போகிறேம். தலைவர் வந்தால் 'துணியக் கூடாத பிரிதலைத்துணிந்து சென்றுவிட்டனர்' என்று எம் பெற்றிகளை அவருக்குக் கூறுங்கள்.]

பின்னுள் நெடுந்தகை குறிவயின் நீடுசென்று இரங்கல் :

பொருவிளில் தீர்த்தஎன்னை ஆண்டோன் புலியூர் அரன்பொருப்பே
இதுஎனில் என்என்று இருக்கின்ற வாறுஎம் இரும்பொழிலே

எதுஉமக்கு எய்தியது என்உற்ற னிர் அறை ஈண்டுஅருவி
மதுவினில் கைப்புவைத் தால்ஒத்த வாமற்றுஇவ் வான்புனமே.

திரு. 146

எனவும்,

['இறைவனை அடைய அதுவோ இதுவோ வழி' என்று மயங்கிப் பொதுவாக நின்ற நிலையை நீக்கி என்னை ஆட்கொண்ட தில்லை அரன் பொருப்பாய் யான் முன்பு பயின்ற இடம் இன்று எவ்வாறு காட்சியளிக்கின்றது ? சோலைகளே ! உமக்கு எய்திய குறைதான் யாது ? நீர் என்ன துன்பம் உற்றிருக்கிறீர் ? அருவிநீர் பாயும் இப்புனம் தேனில் கசப்பை வைத்தாற் போன்று இருக்கின்ற காரணம் யாது ?]

தலைவன் வறுங்களம் நாடி மறுகல் :

தொடைவந்த தண்ணந்துழாய்த்தொண்டை வேந்தன் துவரைவெற்பின்
இடைவந்த கானவர் ஏகுஎன்ற போதில் இருங்கயல்கண்
கடைவந்து உகுபுனல் கச்சுஇள நீர்புக கால்கள்அங்ஙன்
நடைவந்த தோமயில் காள்என்னை வாழ்வித்த நன்னுதற்கே.

கப்பல் 141

எனவும்,

[திருத்துழாய்மாலையை அணிந்த தொண்டைமானுடைய துவரையை அடுத்தமலையிலே, கானவர், தலைவியை வீட்டிற்குச் செல் என்றபோதில், அவள் விடுத்த கண்ணீர் நகில்கள்மேல் பாய, மயில்களே ! என்னை வாழ்வித்த தலைவிக்கு வீடு செல்வதற்குக் கால்கள் எவ்வாறு நடந்து சென்றனவோ ?]

தலைமகன் தலைமகள் வாழும் ஊர் நோக்கி மதிமயங்கல் :

ஆனந்த மாக்கடல் ஆடுசிற் றம்பலம் அன்னபொன்னின்
தேன்உந்து மாமலைச் சீறூர் இது செய்ய லாவதுஇல்லை
வான்உந்து மாமதி வேண்டி அழும்மழப் போலும்மன்னே
நானும் தளர்ந்தனன் நீயும் தளர்ந்தனை நன்னெஞ்சமே.

திரு. 147

எனவும் வரும்.

[மனமே! ஆனந்தக்கடலாய் நடமாடும் சிவபெருமானுடைய சிற்றம்பலத்தை ஒத்த தலைவி வாழும் தேன்கூடுகள் செறிந்த மலையகத்துச் சீறூர் இது எனினும், யான் செய்யத் தக்க செயல் ஒன்றுமில்லை. வானத்திலுள்ள சந்திரனைத் தான் பெறல் வேண்டும் என்று விரும்பி அழும் குழந்தையைப் போல, நானும் தளர்ந்தேன்: நீயும் தளர்ந்தாய்.]

இவற்றுள் முன்னைய இரண்டும் விலக்கற்கும், பாங்கி ஆடுஇடம் விடுத்துக்கொண்டு அகறல் ஆகிய ஒன்றும் சேறற்கும், ஏனைய நான்கும் கலக்கத்துக்கும் உரியவாம் என்றவாறு. உரையிற் கோடலான், பாங்கி ஆடு இடம் விடுத்துக்கொண்டு அகன்ற பின்னர், அவன் உருவு வெளிப்பட இரங்கலும் வரப்பெறும். அதற்குச் செய்யுள்:

அழியும் இரும்புன மும்அழி யாமணல் ஆழிதொட்ட
சுழியும் மறிந்த இதணமும் பார்த்துத் துணைவிழிநீர்
பொழிய இருந்து புலம்பும்என் ஆவியும் பாவிஎம்மூர்
வழியும் அறிந்துஇங் ஙனேவந்த வாஎம் உழைவள்ளலே.

அம்பி. 186

என வரும்.

['புனம் அழிய, சுழி மறிய, விழிநீர் பொழியப் புலம்பும் என் ஆவி நிலை பார்த்துத் தலைவன் எம் ஊர்வழி வினவி வந்துள்ளானோ?' என்று தலைவி தலைவன்உருவெளி கண்டு சொற்றது.] 143

## இரவுக்குறியின் வகை

516 வேண்டல்[1] மறுத்தல்[2] உடன்படல்[3] கூட்டல்[4]
கூடல்[5] பாராட்டல்[6] பாங்கில் கூட்டல்[7]
உயங்கல்[8] நீங்கல்[9] என்று ஒன்பது வகைத்தே
இயம்பிப் போந்த இரவுக் குறியே.

இது நிறுத்தமுறையானே இரவுக்குறிவகை இத்துணைத்து என்கின்றது.

(இ-ள்) வேண்டல் முதலாக நீங்கல் ஈறுகச் சொல்லப் பட்ட ஒன்பது வகையினை உடைத்து, மேல்சொல்லிப்போந்த இரவுக்குறி என்றவாறு. 144

### விளக்கம்

1 தலைவன் இரவுக்குறி விரும்புதல்.
2 முதலில் பாங்கி இரவுக்குறியை மறுத்தல்.
3 தலைவனது சோர்வுகண்டு பாங்கி உடன்படுதல்.
4 தலைவியை இரவுக்குறியில் தலைவனிடம் பாங்கி கூட்டல்.
5 தலைவன் தலைவியைக் கூடல்.
6 தலைவன் தலைவியைப் புகழ்ந்து உரைத்தல்.
7 தலைவியைத் தலைவன் பாங்கியோடு அனுப்புதல்.
8 தோழி இரவுக்குறியை விலக்கத் தலைவன் வாடுதல்.
9 தலைவியை இரவுக்குறிக்கண் கூடிய தலைவன் நீங்குதல்.

### ஒத்த நூற்பாக்கள் :

முழுதும் — ந. அ. 157

'மாட்சியின் வேண்டல் மறுத்தல் உடன்படல்
சூழ்ச்சியின் கூட்டம் சோலையில் கூடல்
பாராட் டுதலொடு பாங்கிற் கூட்டல்
உயத்தல் நீங்கலென்று ஒன்பான் ஆகும்
வகுத்துப் போந்த இரவிற்குறி வகையே.' மா.அ. 49

144

## இரவுக்குறியின் விரி

517 இறையோன் இருட்குறி வேண்டலும்[1] பாங்கி
நெறியினது அருமை கூறலும்[2] இறையோன்
நெறியினது எளிமை கூறலும்[3] பாங்கி
அவன்நாட்டு அணிஇயல் வினாதலும்[4] கிழவோன்
அவள்நாட்டு அணிஇயல் வினாதலும்[5] அவற்குத்
தன்நாட்டு அணிஇயல் பாங்கி சாற்றலும்[6]
இறைவிக்கு இறையோன் குறிப்புஅறி வுறுத்தலும்[7]

நேராது இறைவி நெஞ்சொடு கிளத்தலும்[8]
நேரிழை பாங்கியொடு நேர்ந்துஉரைத் தலும்[9] அவள்
நேர்ந்தமை பாங்கி நெடுந்தகைக்கு உரைத்தலும்[10]
குறியிடை நிறீஇத் தாய்துயில் அறிதலும்[11]
இறைவிக்கு இறைவன் வரவுஅறி வுறுத்தலும்[12]
அவள்கொண்டு சேறலும்[13] குறிஉய்த்து அகறலும்[14]
வண்டுஉறை தாரோன் வந்துஎதிர்ப் படுதலும்[15]
பெருமகள் ஆற்றினது அருமைநினைந்து இரங்கலும்[16]
புரவலன் தேற்றலும்[17] புணர்தலும்[18]புகழ்தலும்[19]
இறைமகள் இறைவனைக் குறிவிலக் கலும்[20] அவன்
இறைவியை இல்வயின் விடுத்தலும்[21] இறைவியை
எய்திப் பாங்கி கையுறை காட்டலும்[22]
இல்கொண்டு ஏகலும்[23] பின்சென்று இறைவனை
வரவு விலக்கலும்[24] பெருமகன் மயங்கலும்[25]
தோழி தலைமகள் துயர்கிளந்து விடுத்தலும்[26]
திருமகள் புணர்ந்தவன் சேறலும்[27] என்றுஆங்கு
இருபத் தேழும் இரவுக் குறியே.

இஃது இரவுக்குறிவிரி இத்துணைப் பகுதித்து என்கின்றது.

(இ-ள்) இறையோன் இருட்குறி வேண்டல் முதலாகத் திருமகள் புணர்ந்தவன் சேறல் ஈறுகச் சொல்லப்பட்ட இருபத்தேழும் இரவுக்குறிவிரியாம் என்றவாறு.

### விளக்கம்

1 தலைவன் தோழியிடம் இரவுக்குறி வேண்டுதல்.

2 தோழி அவன் வரும்வழி அரிதாய் இருத்தலைக் குறிப்பிடுதல்.

3 தலைவன் தனக்கு வழி எளிதாய் இருத்தலைக் கூறுதல்.

4 தலைவனுடைய நாட்டிலுள்ள மகளிர் அணியும் அணிகலன்களையும் அவர்களுடைய இயலையும் பற்றித் தோழி தலைவனை வினவுதல்.

5 தலைவன் தலைவி நாட்டிலுள்ளார் அணிகலன்களையும் இயல்பையும்பற்றித் தோழியிடம் உசாவுதல்.

6 தன் நாட்டிலுள்ளார் அணிகளையும் இயல்பையும் தோழி தலைவனிடம் குறிப்பிடுதல்.

7 தோழி தலைவிக்குத் தலைவன் இரவுக்குறி விரும்பும் குறிப்பை அறிவித்தல்.

8 அதற்கு உடன்படாமல் தலைவி தன் மனத்திடை வருந்துதல்.

9 தலைவி பாங்கியிடம் உடன்பட்டு உரைத்தல்.

10 தலைவி இரவுக்குறிக்கு உடன்பட்ட செய்தியைத் தோழி தலைவனுக்குத் தெரிவித்தல்.

11 தலைவனைக் குறியிடத்து நிறுத்தித் தோழி தாயினது துயிலுதலைச் சோதித்து அறிதல்.

12 தலைவிக்குத் தலைவன் வந்துள்ள செய்தியைத் தோழி தெரிவித்தல்.

13 தோழி குறியிடத்துத் தலைவியைக்கொண்டு சேருதல்.

14 தலைவியைக் குறியிடத்து நிறுத்திப் பூக்கொய்து வருவதாகக் கூறித் தோழி நீங்குதல்.

15 தலைவன் தலைவியை எதிர்ப்படுதல்.

16 தலைவி தலைவன் வரும் வழியின் அருமையை நினைத்து வருந்துதல்.

17 ‘வழி வருவதற்கு எளியதாய் இருந்தது’ என்று கூறித் தலைவன் தலைவியைத் தெளிவித்தல்.

18 தலைவன் தலைவியைக் கூடுதல்.

19 தலைவன் தலைவியைப் புனைந்து உரைத்தல்.

20 ஆற்றின் ஏதம் கூறித் தலைவி தலைவன் குறிக்கண் வருதலை விலக்குதல்.

21 தலைவன் தலைவியை வீட்டுக் கட்டிட எல்லைக்குக் கொண்டு வந்து விடுத்தல்.

22 தோழி தலைவியை அடைந்து தான் பறித்துவந்த மலர் முதலியவற்றைக் காட்டுதல்.

23 தோழி தலைவியை வீட்டிற்குள் அழைத்துச் செல்லுதல்.

24 பாங்கி, பின் தலைவனை அடைந்து இரவில் தலைவியைக் காணவருவதைத் தவிருமாறு வேண்டுதல்.

25 பாங்கி வரவுவிலக்கியதை ஆற்றாத தலைவன் வருந்திக் கூறுதல்.

26 'தலைவன் வரும்வழி அவனுக்குத் துன்பம் தருமே' என்று தலைவி கொண்ட துன்பத்தைத் தோழி தலைவனுக்குக் கூறி விடுத்தல்.

27 தலைவியைக் கூடிய தலைவன் தன் இருப்பிடம்அடைதல்.

[இரவுக்குறி தலைவி வீட்டுச் சூழலைக்கடவாது கட்டிடத்திற்கு அப்பால் மனைக்கொல்லையில் நிகழ்வதாகும்]

ஒத்த நூற்பாக்கள்

'இரவுக்குறி வேண்டல் ஆற்று அருமை கூறல்
நின்றுநெஞ்சு உடைதல் நிலைகண்டு நேர்தல்
உட்கொள வினாதல் உட்கொண்டு வினாதல்
குறியிடம் கூறல் குறிஏற் பித்தல்
இரவர வுரைத்தல் ஏதம் கூறல்
குறிநேர் தல்லொடு குறைநயப்பு உரைத்தல்
மயில்மேல் இசைத்து வரவுஉணர்ந்து உரைத்தல்

தாய்துயில் அறிதல் தலைவிதுயில் எடுத்தல்
இடத்துஉய்த்து நீங்கல் தளர்வுஅகன்று உரைத்தல்
மருங்குஅணை தல்லொடு முகம்கண்டு மகிழ்தல்
பள்ளியிடத்து உய்த்தல் பள்ளியிடத்து உய்த்து
வரைவு கடாவி வரவு விலக்கல்
வரைவுஉடன் படாஅது ஆற்றுது உரைத்தல்
அதரிடைச் செலவிற்கு இரக்கம் கூறல்
இருள்அற நிலவு வெளிப்பட வருந்தல்
வேற்றுக்குறி கூறல் கடல்இடை வைத்துத்
துயர்அறி வித்தல் தோழியும் இன்றி
தானே கிடந்து தனிமையுற்று ஆற்றும்
காமம் மிக்க கழிபடர் கிளவி
காப்புச்சிறை மிக்க கையறு கிளவி
ஆறுபார்த்து உற்ற அச்சக் கிளவி
தன்னுள் கையாறு எய்திடு கிளவி
நிலைகண்டு உரைத்தல் நெடுங்கடல் சேர்த்தல்
அலர்அறி வித்தலோடு ஆறைம் மூன்றும்
இரவுக் குறியிவை என்றிசி னோரே.' திருக்கோவை
மு. வீ. கள. 19

• வேந்தன் இருட்குறி வேண்டலும் சேடி
ஆய்ந்த வழியினது அருமை கூறலும்
வேந்தன் வழியினது எளிமை விளம்பலும்
வேந்தன்நாட்டு அணியியல் பாங்கி வினுதலும்
அவள்நாட்டு அணியியல் அண்ணல் வினுதலும்
பாங்கி தன்நாட்டு அணியியல் பகர்தலும்
கோற்றெடிக்கு இறைவன் குறிஅறி வுறுத்தலும்
மாற்றம்நேராது அவள் மனத்தொடு கிளத்தலும்
திருந்திழை பாங்கியொடு திருந்தி உரைத்தலும்
பொருந்தியது இகுளை புரவலற்கு உணர்த்தலும்
தான்குறி யிடைநிறீஇத் தாய்துயில் அறிதலும்

மான்தனக்கு இறைவன் வரவுஅறி வித்தலும்
கொண்டுஇடம் சேறலும் குறிஉய்த்து அகறலும்
மண்டமர்க் கடந்தோன் வந்துஎதிர்ப் படுதலும்
இறைமகள் ஆற்றினது அருமைநினைந்து இரங்கலும்
இறைவன் தேற்றலும் எய்தலும் புகழ்தலும்
குலமகள் இறைவனைக் குறிவிலக் கலும்அவன்
மெல்லியல் மடந்தையை இல்வயின் விடுத்தலும்
காரிகைக்கு இகுளை கையுறை காட்டலும்
இறைவியை இகுளை இல்கொண்டு ஏகலும்
இறைவனை இகுளை வரவு விலக்கலும்
இறைமகன் மயங்கலும் இன்னவள் துயர்நிலை
செப்பி விடுத்தலும் திருநுதல் புணர்ந்தவன்
நீங்கலும் என்ன நிகழ்த்துமூ வொன்பதும்
ஈங்குஇனிது உணர்த்தும் இரவுக்குறி விரியே.'

மா. அ. 50

' காதல் மிகவின் வாய்விடு கிளவியும்
தோழி சிறைப்புறத்து ஏகிடு கிளவியும்
செறிப்புஅறி வுறுத்தலும் சூள்என நினைத்தலும்
இறப்ப நுவறலும் இருள்வர வேண்டலும்
மறுத்தலும் நேர்தலும் குறியிடம் வகுத்தலும்
நயப்ப மொழிதலும் அவன்வரவு உணர்த்தலும்
குறித்துழி உய்த்தலும் பெயர்ச்சியொடு அல்குறிச்
சிறைப்புற மாகச் செப்பலும் நோதலும்
இறைப்புறம் ஆகிய இரவுக்குறி விரியே '.

த. நெ. வி 18

இறையோன் இருட்குறிவேண்டல் :

மருந்துநம் அல்லல் பிறவிப் பிணிக்குஅம் பலத்துஅமிர்தாய்
இருந்தனர் குன்றில்நின்று எங்கும் அருவிசென்று ஏர்திகழப்
பொருந்தின மேகம் புதைந்துஇருள் தூங்கும் புனைஇறும்பில்
விருந்தினன் யான்நுங்கள் சீறூர் அதனுக்கு வெள்வளையே.

திரு 148

எனவும்.

[வெள்வளையாய்! நம் பிறவிப்பிணிக்கு மருந்தாய் அம்பலத்தில் அமிர்தாமவன் சிவபெருமான். அவன் குன்றிலிருந்து விழும் அருவிகள் அழகு திகழுமாறு மேகம் பொதிந்து இருள்செறிந்த குறுங்காட்டில்உள்ள உங்கள் சீறூருக்கு யான் விருந்தினனாக வந்துள்ளேன்.]

பாங்கி நெறியினது அருமைகூறல் :

விசும்பினுக்கு ஏணி நெறிஅன்னசின்னெறி மேல்மழைதூங்கு
அசும்பினில் துன்னி அளைநுழைந் தால்ஒக்கும் ஐய மெய்யே
இசும்பினில் சிந்தைக்கும் ஏறற்கு அரிதுஎழில் அம்பலத்துப்
பசும்பனிக் கோடு மிலைந்தான் மலயத்துஎம் வாழ்பதியே.

திரு. 149

[இசும்பு-ஏற்று இழிவு]

எனவும்,

[பிறைசூடி அம்பலத்தாடும் பெருமானுடைய மலய மலையைச்சார்ந்த எம்வாழ்பதி, விசும்பில் கிடந்தது ஓர் ஏணி நெறிபோலும் சிறுநெறிமேல் மழை இடையறாது நிற்றலான் இடைஇடை உண்டாகும் சிறு திவலைகளோடு பொருந்தி ஏறுமிடத்துக் குறுகியிருப்பதனால் குகையில் நுழைந்து செல்வதை ஒத்திருப்பதோடு, வழுக்குதலினாலும் ஏற்றிழிவுகளாலும் மனத்தாலும் ஏறுதற்கு அரிதாயிருக்கும்.]

தலைவன் நெறியினது எளிமை கூறல் :

அரவுக்கு மெல்லியல் சாயல்உள் ளேஉண்டு அறஇருண்ட
இரவுக்கு இனிய திருமுகம் தோன்றும் எடுத்த வெண்ணெய்க்
கரவுக் கடியுண்ட மால்கரு மாணிக்கன் கப்பல்அன்னாய்
உருமுக்கு நீதந்த காமவெந் தீஉண்டுஎன் உள்ளத்திலே.

கப்பல்-145

எனவும்,

[வெண்ணெயைத் திருடியுண்ட திருமாலின் அவதாரமான கருமாணிக்கனுடைய கப்பல் என்ற ஊரை ஒத்த இயற்கைஅழகு உடையாய்! வழியிடைப் பாம்புகளை ஓட்ட

மயில் போன்ற சாயலை உடைய தலைவி என் உள்ளே உள்ளாள்; மிக இருண்ட இருட்டைப் போக்கத் தலைவியின் ஒளி முகம் எனக்கு உருவெளியாகக் காட்சி வழங்கும்; இடியைத் தடுக்க அவள் தந்த காமத்தீ என் உள்ளத்தில் உண்டு; ஆதலின் இவ்விரவிடை இந்நெறிக்கண் வருதல் எனக்கு எளிதே.]

பாங்கி அவன் நாட்டு அணியியல் விறுதல் :

வரைஅன்று ஒருகால் இருகால் வளைய நிமிர்த்துவட்கார்
நிரைஅன்று அனல்எழஎய்துநின்றோன் தில்லை அன்ன நின்ஊர்
விரைஎன்ன மென்நிழல் என்ன வெறியுறு தாதுஇவர்போது
உரைஎன்ன வோசிலம் பா நலம் பாவி ஒளிர்வனவே.

திரு, 152

எனவும்,

[சிலம்பா ! மேருவை வளைத்துத் திரிபுரத்தை அழித்த சிவபெருமானின் தில்லையைஒத்த உன்ஊரினர் பூசும் நறுமணப்பொருள் யாது ? அவர்கள் தங்கி விளையாடும் நிழல் யாது ? அவர்கள் அணிந்து வனப்புக்கொள்ளும் நறுமண மலர்கள்தாம் யாவை ?]

தலைமகன் அவள் நாட்டு அணியியல் விறுதல் :

செம்மலர் ஆயிரம் தூஉய்க்கரு மால்திருக் கண்அணியும்
மொய்ம்மலர் ஈங்கழல் அம்பலத்தோன் மன்னும்தென்மலையத்து
எம்மலர்சூடி நின்றுஎச்சாந்து அணிந்துஎன்ன நன்னிழல்வாய்
அம்மலர் வாள்கண் நல் லாய்எல்லி வாய்நுமர் ஆடுவதே.

திரு. 153

எனவும்,

['மலரும் வாளும் போன்ற கண்ணாய் ! ஆயிரம் தாமரைகளைத் தூவி அருச்சித்து இறுதியில் தன்கண்ணையும் இடந்து திருமால் அருச்சிக்கும் திருவடிகளை உடைய

அம்பலத்தோன் பொருந்திய தென் மலையத்திலே, இரவில் நுமர் எம்மலர் சூடி எச்சாந்து அணிந்து எந்த மரத்தின் நிழலிலே ஆடுவர்? கூறுவாயாக என்று, தோழி வினவிய வினாவின் உட்கருத்தை உணர்ந்த தலைவன் அவளை நோக்கி அவள் நாடு பற்றி வினவியவாறு ]

அவற்குத் தன்நாட்டு அணியியல் பாங்கி சாற்றல்:

பனைவளர்கைம்மாப்படாத்து அம்பலத்தரன்பாதம்விண்ணோர்
புனைவளர் சாரல் பொதியின் மலைப்பொலி சந்துஅணிந்து
சுனைவளர் காவிகள் சூடிப்பைந் தோகை துயில்பயிலும்
சினைவளர்வேங்கைகள்யாங்கள் நின்றுஆடும்செழும்பொழிலே.

திரு. 154

எனவும்,

[யானைத்தோலைப் போர்த்த சிவபெருமான் திருவடிகளைத் தேவர்கள் போற்றும் பக்கத்தைஉடைய பொதியமலைச் சந்தனத்தை அணிந்து, குவளைப்பூக்களைச்சூடி, மயில்கள் துயிலும் கிளைகளையுடைய வேங்கைமரச் சோலையே யாங்கள் ஆடும் இடமாகும்.]

பாங்கி இறைவிக்கு இறையோன் குறை அறிவுறுத்தல் :

மோட்டுஅம் கதிர்முலை பங்குடைத் தில்லைமுன் னோன்கழற்கே
கோட்டம் தருநம் குருமுடி வெற்பன் மழைகுழுமி
நாட்டம் புதைத்தன்ன நள்ளிருள் நாகம் நடுங்கச்சிங்கம்
வேட்டம் திரிசரி வாய்வரு வான்சொல்லும் மெல்லியலே.

திரு. 156

எனவும்,

[தலைவியே! பார்வதிபங்கனாகிய சிவபெருமான் திருவடியே பணிந்து வணங்கும் தலையினைஉடைய நம்தலைவன், மேகங்கள் கூடுதலால் கண்ஒளி பயன்படாத செறிந்த இருளில், யானைகள் நடுங்கச் சிங்கம் வேட்டைக்குத்திரியும் மலைப்பகுதியின் வழியே இரவுக்குறிக்கு வருவதாகக் கூறுகிறான்.]

நேராது இறைவி நெஞ்சொடு கிளத்தல் :

செழுங்கார் முழவு அதிர் சிற்றம் பலத்துப் பெருந்திருமால்
கொழுங்கான் மலரிடக் கூத்தயர் வோன்கழல் ஏத்தலர்போல்
முழங்குஆர் அரிமுரண் வாரணம் வேட்டைசெய் மொய்இருள்வாய்
வழங்கா அதரின் வழங்குஎன்று மோஇன்றுஎம் வள்ளலையே.
திரு. 157

எனவும்,

[மேகம்போல முழவு ஒலிக்கும் சிற்றம்பலத்தில் திருமால் மலர்இட்டு அருச்சிக்கும்படி கூத்தாடும் சிவபெருமான் கழல்களை வழிபடாதவர்போலச் சிங்கம் யானைகளை வேட்டையாடும் இருள்செறிந்த மக்கள் போக்குவரத்துஅற்ற வழியிலே நம்வள்ளலை 'வருக' என்றுகூற நம்மனம் இசையுமா ?]

நேரிழை, பாங்கியொடு நேர்ந்து உரைத்தல் :

ஓங்கும் ஒருவிடம் உண்டுஅம் பலத்துஉம்பர் உய்யஅன்று
தாங்கும் ஒருவன் தடவரை வாய்த்தழங் கும்அருவி
வீங்கும்சுனைப்புனல்வீழ்ந்துஅன்றுஅழுங்கப்பிடித்துஎடுத்து
வாங்கு மவர்க்குஅறி யேன்சிறி யேன்சொல்லும் வாசகமே.
(திரு. 158)

எனவும்,

[ஆலகாலவிடத்தை உண்டு அம்பலத்துத் தேவர் உய்யத் தாங்கும் சிவபெருமானுடைய மலையிலே அருவியால் நிறைந்த புனலை உடைய சுனையில் விழுந்து நாம் தடுமாறிய போது நம்மை எடுத்துக்காத்த தலைவனுக்கு யான் என்ன விடை கூறுவது? என்று அறியாது தடுமாறுகிறேன்.]

நேர்ந்தமை பாங்கி நெடுந்தகைக்கு உரைத்தல் :

ஏனல் பசுங்கதிர் என்றாழ்க்கு அழிய எழிலிஉன்னிக்
கானக் குறவர்கள் கம்பலை செய்யும்வம்பு ஆர்சிலம்பா
யானிற்றையாமத்துநின்அருள்மேல்நிற்கல்உற்றுச்சென்றேன்
தேன்நக்க கொன்றையன் தில்லை உறுர்செல்லும் செல்லல்களே.
எனவும், (திரு. 159)

[வெப்பம் தாங்காது தினைப்பயிர் கருகிற்றுகக் குறவர்கள் மழையை வேண்டித் தெய்வத்தை வழிபட்டு ஒலிசெய்யும் மலைநாடனே! யான் இன்று இரவில் நினக்கு இருட்குறி வேண்டித் தலைவியிடம் சென்று சிவபெருமானுடைய தில்லையை அடையாதவர் அடையும் துன்பங்களை ஒத்த இன்னலுடன் அவள் இசைவைப் பெற்றுள்ளேன்.]

பாங்கி தலைமகனைக்
குறியிடத்து நிறுத்திவந்து தாய்துயில் அறிதல் :

கூடார் அரண்எரி கூடக் கொடுஞ்சிலை கொண்டஅண்டன்
சேடுஆர் மதில்மல்லல் தில்லைஅன் னாய்சிறு கண்பெருவெண்
கோடுஆர் கரிகுரு மாமணி ஊசலைக் கோப்புஅழித்துத்
தோடுஆர் மதுமலர் நாகத்தை நூக்கும்நம் சூழ்பொழிற்கே.
திரு. 161

எனவும்,

[திரிபுரத்தை எறித்த அரனுடைய மேதக்க மதில்களை உடைய வளமான தில்லை அன்னாய்! யானை ஒன்று நம் ஊசலை அழித்து நம் சோலையில் பூக்கள்மிக்க நாகமரத்தை ஒடிக்கின்றது ]

பாங்கி தலைவிக்குத் தலைவன் வரவு அறிவுறுத்தல் :

மூன்னும் ஒருவர் இரும்பொழில் மூன்றிற்கும் முற்றும்இற்றால்
பின்னும் ஒருவர்சிற் றம்பலத் தார்தரும் பேரருள்போல்
துன்னும்ஓர் இன்பம்மென் தோகைதம் தோகைக்குச் சொல்லுவபோல்
மன்னும் அரவத்த வாய்த்துயில் பேரும் மயில்இனமே.
திரு. 160

எனவும்,

[உலகத் தோற்றத்தின் முன்னும் உலகங்களின் அழிவின் பின்னும் தாம் ஒருவராய் இருக்கும் சிவபெருமானுடைய பேரருள்போலத் தமக்கு ஏற்பட்ட இன்பத்தை ஆண்மயில்கள் தம்பெடைகளுக்குச் சொல்லுவனபோலத் துயில்இன்றி ஒலித்துக்கொண்டிருக்கின்றன.]

பாங்கி தலைவியைக் குறியிடத்துக் கொண்டுசேறல் :

விண்ணுக்கு மேல்வியன் பாதலக் கீழ்விரி நீர்உடுத்த
மண்ணுக்குநாப்பண் நயந்துதென் தில்லைநின்றோன்மிடற்றின்
வண்ணக் குவளை மலர்கின் றனசின வாள்மிளிர்நின்
கண்ஒக்கு மேல்கண்டு காண்வண்டு வாழும் கருங்குழலே.
எனவும், திரு. 162

[கருங்குழலே! விண்ணுக்கு மேலாகவும் பாதலத்துக்கும் கீழாகவும் உலகின் நடுவிலும் விரும்பித் தில்லையில் நிற்கும் சிவபெருமான் நீலகண்டத்தைப்போல மலர்ந்துள்ள குவளைப் பூக்கள் நின்கண்களை ஒத்துள்ளனவா ? என்பதனைக் கண்டு ஒப்பிட வந்து காண்பாயாக ]

பாங்கி தலைவியைக் குறியிடத்து உய்த்து நீங்கல் :

நந்தீ வரம்என்னும் நாரணன் நாள்மலர்க் கண்ணிற்குஎஃகம்
தந்தீ வரன்புலி யூர்அனை யாய்தடங் கண்கடந்த
இந்தீ வரம்இவை காண்நின் இருள்சேர் குழற்குஏழில்சேர்
சந்தீ வரமுறி யும்வெறி வீயும் தருகுவனே. திரு. 163
எனவும்,

['சிவபெருமானே ! வரம் தருக' என்று திருமால் தன் கண் இடந்து அருச்சிக்க அதற்குச் சக்கரம் வழங்கிய சிவபெருமானுடைய புலியூர் அனையாய் ! உன் கண் அழகை ஒத்த அழகுடைய நீலமலர்கள் இவை; உன் கூந்தலுக்கு ஏற்ற சந்தனத்தளிர்களையும் நறுமணம் மிக்க மலர்களையும் சென்று கொய்து மீள்வேன்.]

தலைவன் தலைவியைக் குறியிடத்து எதிர்ப்படுதல் :

காமரை வென்றகண் ணோன்தில்லைப் பல்கதி ரோன்அடைத்த
தாமரை இல்லின் இதழ்க்கத வம்திறந் தோ தமியே
பாம்அரை மேகலை பற்றிச் சிலம்புஒதுக் கிப்பையவே
நாம்அரை யாமத்துஎன் னோவந்து வைகி நயந்ததுவே.
எனவும், திரு. 164

[மன்மதனை அழித்த சிவபெருமான் தில்லையிலே சூரியன் அடைத்த உம் இல்லாகிய தாமரையின் கதவுகளைச் சூரியனே திறப்பதன்முன் நீங்களே திறந்துகொண்டு வந்துவிட்டீர்களா ? மேகலையை ஒலியாமல் பிடித்துக்கொண்டு சிலம்புகளை அசையாதபடி மேலே கடுக்கி அஞ்சத்தக்க அரையாமத்தில் ஈண்டுவந்து தங்கி விரும்பியது யாதோ ? கூறுவீராக.] [நாம் முன்னிலையைத் தன்மையாகக் கூறியது.]

தலைவி ஆற்றினது அருமை நினைந்து இரங்கல் :

பெயல்கால் மறைத்தலின் விசும்புகா ணலரே
நீர்பரந்து ஒழுகலின் நிலம்கா ணலரே
எல்லை சேறலின் இருள்பெரிது பட்டன்று
பல்லோர் துஞ்சும் பால்நாள் கங்குல்
யாங்குவந் தனையோ ஓங்கல் வெற்ப
வேங்கை கமழும்எம் சிறுகுடி
யாங்குஅறிந் தனையோ நோகோ யானே.

குறுந். 355

எனவும்,

[வெற்ப! மழையால் வானமும் புலப்படவில்லை. நீர் ஓடுவதால் தரையும் புலனாகாது. கதிரவன் மறைந்ததால் இருளும் மிகுதியும் பரவிவிட்டது. பலரும் உறங்கும் இப் பாதிஇரவு இருட்டில் நீ எவ்வாறு நடந்துவந்தாய்? வேங்கை மணக்கும் எம் ஊரை எவ்வாறு அறிந்தாய் ? நீ பட்டுள்ள துன்பத்தை நினைத்து யான் வருந்துகிறேன்.]

புரவலன் தேற்றல் :

மேகம் சிறந்த குழல்நிழல் ஓடிய வேல்நெடுங்கண்
மாகம் சிறந்த மதிநுத லாய்மல்கும் அல்குலுக்கும்

ஆகம் செறிந்த முலைக்கும்முன் தோற்ற அடல்எயிற்று
நாகங்கள் என்னை நலிவுசெய் யாஉம்கண் அன்பன்என்றே.
அம்பி. 207

எனவும்,

[மேகம் போன்ற கூந்தலையும், ஒளி வீசும் வேற்கண்களையும் பிறைபோன்ற நெற்றியையும் உடையாய்! உன் அல்குல் வனப்பிற்குத் தோற்ற பாம்புகளும் நகில்வனப்பிற்குத் தோற்ற கொம்புகளை உடைய யானைகளும், என்னை உன் அன்பன் என்று கொண்டு துன்புறுத்தமாட்டா.]

புணர்தல் :

தம்மில் இருந்து தமதுபாத்து உண்டற்றால்
அம்மா அரிவை முயக்கு. குறள். 1107

எனவும் வரும்.

அரிஆர் மதர்விழி ஆலம்அன் னீர்சொல் அமுதம்அன்னீர்
புரிஆர் தளைஅவிழ் பூமலர்க் காவில் புணர்ந்து இங்ஙனே
தரியாத அன்பு தயங்க முயங்குந் தகைபகலும்
பிரியாமல் இங்குஎவர்க் கும்தெரி யாவிஞ்சை பெற்றிலமே.
அம்பி. 208

இதுவும்அது.

[தம் இல்லத்தில் இருந்துகொண்டு தாம் ஈட்டிய பொருள்களைப் பிறருக்கும் பகுத்துக்கொடுத்து உண்டாற் போன்ற இன்பம்தரும், தலைவியைத் தழுவுதல் என்பது.

விழியால் நஞ்சத்தை ஒப்பாய்! சொல்லால் அமுதத்தை ஒப்பாய்! 'பூமலர்க்காவில், இவ்வாறு பிரிவாற்றாமை தரும் அன்புசிறக்க, இவ்விரவு போன்று பகலும் தழுவிக்கொண்டு இருப்பதற்கு, ஒருவர் கண்ணுக்கும் நாம் புலப்படாது இருப்பதற்கு உரிய மாய வித்தையைக் கற்கவில்லையே!' என்று வருந்துகிறேன்.]

புகழ்தல் :

*அழுந்தேன் நரகத்து யானென்று இருப்பவந்து ஆண்டுகொண்ட*
செழுந்தேன் திகழ்பொழில் தில்லைப் புறவில் செறுஅகத்த
**கொழுந்தேன் மலர்வாய்க் குமுதம் இவள்யான் குழுஉச்சுடர்கொண்டு**
எழுந்துஆங்கு அதுமலர்த் தும்உயர் வானத்து இளமதியே.
திரு. 166

எனவும்,

[யான் நரகத்துன்பத்தில் அழுந்தாதபடி என்னைவந்து ஆட்கொண்ட செழுந்தேனாகிய சிவபெருமானது தில்லையை அடுத்த காட்டில் தேன்வெளிப்படும் குமுத மலர் இவள். நான் நிறமான கிரணங்களைக்கொண்டு அதனை மலர்த்தும் வான்அகத்து இளமதியம் ஆவேன்.]

தலைவி தலைவனைக் குறிவிலக்கல் :

மூரல் கதிர்முத்த வார்முலை ஆவியின் மூழ்கநனி
வாரற்க நீதஞ்சை வாணன்வெற் பாவய மாவழங்கும்
வேரல் கடிய கவலையி னூடு வெயிலவற்கும்
சாரற்கு அருமைய தாய்இருள் கூரும்நம் சாரலிலே.
தஞ்சை. 182

எனவும்,

[தஞ்சை வாணன் வெற்பா! முத்துமாலை அணிந்த நகில்களாகிய குளத்தில் மூழ்க, புலி முதலியன வழங்கும் மூங்கில் வளர்ந்துள்ள பிளவுபட்ட வழிகளின் ஊடே, கதிரவனும் நுழைகல்லா இருள்மிக்க நம் மலைச்சரிவில் நீ வாரற்க.]

தலைவன் தலைவியை இல்வயின் விடுத்தல் :

சுரும்புஉறு நீலம்கொய் யல்தமி நின்று துயில்பயின்மோ
அரும்பெறல்தோழியோடு ஆயத்து நாப்பண் அமரர்ஒன்னூர்

இரும்புஉறுமாமதிள்பொன்இஞ்சிவெள்ளிப்புரிசைஅன்றுஓர்
துரும்புறச்செற்றகொற்றத்துஎம்பிரான்தில்லைசூழ்பொழிற்கே.

திரு. 167

எனவும்,

[திரிபுர அசுரர்களின் பொன் வெள்ளி இரும்பு மதில்களை அழித்த வெற்றியை உடைய சிவபெருமானது தில்லையைச் சூழ்ந்த பொழிற்கண் தனியே நின்று நீலப்பூக்களைக் கொய்து கொண்டுஇராதே. உன் பெறற்கரிய தோழியோடு சென்று தோழியர் கூட்டத்திடையே உறக்கம் கொள்வாயாக.]

பாங்கி இறைவியை எய்திக் கையுறை காட்டல் :

செஞ்சேல் பொருகுழை சேர்க்கும் குவளையும் தேன்இரங்கும்
மஞ்சுஏர் குழற்குஅணி மவ்வலும் கொய்தனன் வந்தனன்முன்
அஞ்சேல் அரிவைஅஞ் சேல்அடி யேன்விட்டு அகன்றதற்கு
நெஞ்சே பட்டது நீஏது பின்னை நினைத்தனையே.

அம்பி. 211

எனவும்,

[அரிவை! காதுகளில் செருகும் குவளைப்பூக்களையும் வண்டுகள் ஒலிக்கும் கார்மேகம்போன்ற கூந்தலுக்கு அணியத் தக்க முல்லைப்பூக்களையும் யான் கொய்து வந்துள்ளேன். உன்னைத் தனியே விட்டுப்போனதற்கு என் நெஞ்சு மிகவும் துன்பப்பட்டது. நீ யாது நினைத்தாயோ ? அஞ்சாதே ]

பாங்கி தலைவியை இல்கொண்டு ஏகல் :

புழைக்கால் நறுங்கு வளைச்செவ்விப் போதும் புயல்அகன்ற
குழற்கான மவ்வலும் கொய்தனம் ஆயின் கொடிய அன்னை
அழல்கால் விழிதுயில் நீத்துஉண ராமுன் அடைகுவம்யாம்
கழல்கால் மதன்கணை போல்விழி யார்தம் கடிமனைக்கே.

அம்பி. 212

எனவும்,

[துளையுள்ள தண்டுகளை உடைய குவளைப்பூக்களும் கூந்தலுக்கு ஆன முல்லைப்பூக்களும் கொய்துவிட்டோம் ஆதலின் அன்னையின் தீக்கண்கள் உறக்கம் நீங்காமுன் மலர்விழியார் காவல் புரியும் நம் கடிமனையைச் சென்று அடைந்து விடுவோம்.]

பாங்கி தலைவனை வரவு விலக்கல் :

நற்பகல் சோமன் எரிதரு நாட்டத்தன் தில்லைஅன்ன
வில்பகைத்து ஓங்கும் புருவத்து இவளின்மெய் யேஎளிதே
வெற்பகச்சோலையின்வேய்வளர் தீச்சென்றுவிண்ணின்நின்ற
கற்பகச் சோலை கதுவும்கல் நாட இக் கல் அதரே.

திரு. 108

எனவும்,

[மலையிடைச் சோலையில் உண்டான மூங்கிலில் பிறந்து வளரும் தீ வானிலுள்ள கற்பகச்சோலையைச் சென்று பற்றும் கல்நாடனே! சூரியன், சந்திரன், அக்கினி என்ற முத்தேவரையும் முக்கண்களாக உடைய சிவபெருமானின் தில்லையை அன்ன, வில்போன்ற புருவமுடைய இவள்பொருட்டாக, இக்கல்வழி உனக்கு எளிதாம் ஆயினும், இனித்தொடர்ந்து நீ வரற்பாலை அல்லை.]

தலைமகன் மயங்கல் :

பைவாய் அரவுஅரை அம்பலத்து எம்பரன் பைங்கயிலைச்
செவ்வாய்க் கருங்கண் பெரும்பணைத் தோள்சிற் றிடைக்கொடியை
மொய்வார் கமலத்தின் மூற்றிழை இன்றுஎன்முன் னைத்தவத்தால்
இவ்வாறுஇருக்கும்என்றேநிற்பதுஎன் றும்என் இன் உயிரே.

திரு. 169

எனவும்,

[அரவை அணிந்த இடையை உடைய சிவபெருமானுடைய கயிலையில்உள்ள செவ்வாயினையும் கருங்கண்களையும் பெரிய மூங்கில்போன்ற தோள்களையும் சிறிய இடையையும்

உடைய கொடிபோல்வாள் ஆகிய தாமரையில் வாழும் திருமகளாகிய இத்தலைவி என் முன் நல்வினையால் யான் எய்தலாம்வண்ணம் இன்று இவ்வாறு குறமகளாக இருப்பதைக் கருதியே என் உயிர் நிலைத்துள்ளது. இவளை யான் எவ்வாறு பிரிந்து வரையுந்துணை ஆற்றியிருத்தல் கூடும்.?]

தோழி தலைமகள் துயர் கிளந்து விடுத்தல் ;

இடிக்கொத்து ஒளிரும் இலங்குஎயிற்று ஆளி இபமருப்பை
ஒடிக்கத் திரியும் உழுவைஅஞ் சாரல் ஒருதனியே
வடிக்கச் சுடர்வடி வேல்மன்ன நீசெல் வழிக்குஇரங்கும்
கொடிக்குப் படர்கொம்பு கூடிநின் சாரல் குறித்தகொம்பே.

அம்பி. 217

எனவும்,

[வேலவ! இடிபோல முழங்கும் ஒளிவீசும் பற்களை உடைய யாளிகள் யானைகளின் மருப்புக்களை ஒடிப்பதற்கு அவற்றைத் தேடித் திரியும் சாரலிலே நீ திரும்பிப்போம் வழி கருதி வருந்தும் தலைவியது துயர்நீங்க, நீ உன் ஊர் சேர்ந்தவுடன் உன் ஊதுகொம்பினை ஊதி ஏதமின்றிச் சேர்ந்ததைக் குறிப்பிடுவாயாக.]

திருமகள் புணர்ந்தவன் சேறல் :

இருங்குன்று அன்னமதில் எம்பதிக்கு ஏகல் எளிதுசெம்மை
தரும்குங்குமமுலைத்தையல்நல்லாய்தஞ்சைவாணன்வெற்பில்
கருங்குஞ் சரஇனம் வெண்சிங்க ஏறுஅஞ்சும் கங்குலில்எம்
மருங்கும் சுடர்விளக் காம்மட வார்குழை மாணிக்கமே.

தஞ்சை 189

எனவும் வரும்.

[குங்கும முலைத்தோழியே! தஞ்சைவாணன் மலையிலே யானைகள் ஆண்சிங்கத்திற்கு அஞ்சும் இரவிலே, எனக்கு உருவெளியாகக் காட்சி வழங்கும் தலைவி அணிந்துள்ள

குழையில் உள்ள மணிகள் நல்ல வெளிச்சத்தை எனக்கு நாற்புறமும் வழங்கும் ஆதலின், மலைபோன்ற மதில்களை உடைய எம்ஊருக்குச் செல்லுதல் எனக்கு மிகஎளியசெயலே.]

உரையிற் கோடலால், தலைமகன் நெறியினது எளிமை கூறலின் பின் பாங்கி இரவுக்குறிக்கு உடன்படலும், நேராது இறைவி நெஞ்சொடு கிளத்தலின்பின் பாங்கி இரவுக்குறி ஏற்பித்தலும், தலைவியைக் குறியிடத்து எதிர்ப்படுதலின் பின் சார்தல் பயனாகப் புகழ்தலும் வரப்பெறும்.

பாங்கி இரவுக்குறிக்கு உடன்படல் :

கூளி நிறைக்கநின்று அம்பலத் தாடி குரைகழற்கீழ்த்
தூளி நிறைத்த சுடர்முடி யோய்இவள் தோள்நசையால்
ஆளி நிறைத்து அடல் ஆனைகள் தேரும் இரவின்வந்து
மீளி உரைத்தி வினையேன் உரைப்பதுஎன் மெல்லியற்கே.
திரு. 151

எனவும்,

[கூத்தின் சுவையால் பேய்களும் போகாது நிறைந்து நிற்க அம்பலத்து ஆடுவான் திருவடிக்கண் உண்டாகிய தூளிபடிந்த சுடர்முடியோய்! ஆளிகள் வரிசையாகக் கூடி யானைகளைத் தேடும் இரவின்கண் வந்து மீளுதலைச் சொல் கின்றாய்! யான் தலைவியிடம் இதனுக்கு உடன்படுவாய் என்பேனோ? உடன்படாது ஒழிவாய் என்பேனோ?]

பாங்கி இரவுக்குறி ஏற்பித்தல் :

மலவன் குரம்பையை மாற்றிஅம் மால்முதல் வானர்க்குஅப்பால்
செலஅன்பர்க்கு ஒக்கும் சிவன்தில்லைக் கானலில் சீர்ப்பெடையோடு
அலவன் பயில்வது கண்டுஅஞர் கூர்ந்துஅயில் வேல்உரவோன்
செலஅந்தி வாய்க்கண் டனன்என்ன தாம்கொல்மன் சேர்துயிலே.
திரு. 155

எனவும்,

[மும்மலங்களுக்கு இருப்பிடமான உடல் எடுக்கும் பிறப்பைப் போக்கித் திருமால் முதலானவருக்கும் மேம்பட இருக்கும் வாய்ப்பை அடியாருக்குத் தரும் சிவபெருமானுடைய தில்லையை அடுத்த கடற்கரைச்சோலையிலே, பெடையோடு ஆண்நண்டு மகிழ்ந்து கூடுவதுகண்டு மனம் வருந்தி, வேல் ஏந்திய நம் தலைவன் சென்றதை மாலையில் கண்டேன். இன்று இரவு அவன் எவ்வாறு கண் உறங்குவானோ? அறியேன்.]

சார்தல் பயனுகப் புகழ்தல் :

அகிலின் புகைவிம்மி ஆய்மலர் வேய்ந்துஅஞ் சனம்எழுதத்
தகிலும் தனிவடம் பூட்டத் தகாள்சங் கரன்புலியூர்
இகலு மவரில் தளரும்இத் தேம்பல் இடைநெமியப்
புகலும் மிகஇங் ஙனேஇறு மாக்கும் புணர்முலையே.

திரு. 165

எனவும் வரும்.

[அகிற்புகை ஊட்டி அழகிய மலர்களைச் சூட்டிக் கண்களுக்கு மை தீட்டத்தக்கவள் ஆயினும், இடைக்குப் பாரமாம் தகையில் ஒரு தனி வடத்தைக் கூட இத்தலைவிக்கு அணிவித்தல் கூடாது. அங்ஙனம் ஆகவும், சிவபெருமானது புலியூரை மேம்பட்டது என்று உணராது அதனோடு மாறுபடுவாரைப்போன்று, தளராநின்ற இத்தேய்தலைஉடைய இடை நெரிந்து ஒடியப்புகினும் அதனை உணராது இப்புணர் முலைகள் மிகவும் விம்முகின்றன. இஃது யாதாய் முடியுமோ?]

இவற்றுள், இறையோன் இருட்குறி வேண்டலும், நெறியினது எளிமை கூறலும், அவன்நாட்டு அணியியல் வினுதலும், பாங்கி இறைவிக்கு இறையோன் குறை அறிவுறுத்தலும் ஆகிய நான்கும் வேண்டற்கும்,

பாங்கி நெறியினது அருமை கூறலும், இறைமகள் இறைவனைக் குறி விலக்கலும், பாங்கி இறைவனை வரவு விலக்கலும் ஆகிய மூன்றும் மறுத்தற்கும்,

பாங்கி அவன் நாட்டு அணியியல் வினுதலும், அவற்குத் தன்நாட்டு அணியியல் சாற்றலும், நேரிழை பாங்கியொடு நேர்ந்து உரைத்தலும் ஆகிய மூன்றும் உடன்படற்கும்,

தலைமகள் நேர்ந்தமை பாங்கி தலைமகற்கு உணர்த்தலும், குறியிடை நிறீஇத் தாய்துயில் அறிதலும், இறைவிக்கு இறைவன் வரவு அறிவுறுத்தலும், அவளைக்கொண்டு சேறலும் ஆகிய நான்கும் கூட்டற்கும்,

தலைமகளை எதிர்ப்படுதலும், தேற்றலும், புணர்தலும் ஆகிய மூன்றும் கூடற்கும்,

புகழ்தலும், கையுறை காட்டலும் ஆகிய இரண்டும் பாராட்டற்கும், தலைமகன் இறைவியை இல்வயின் விடுத்தலும், பாங்கி தலைமகளை இல்கொண்டு ஏகலும் ஆகிய இரண்டும் பாங்கிற் கூட்டற்கும்,

நேராது இறைவி நெஞ்சொடு கிளத்தலும், தலைமகள் ஆற்றினது அருமை நினைந்து இரங்கலும், பெருமகன் மயங்கலும், தோழி தலைமகள் துயர் கிளந்து விடுத்தலும் ஆகிய நான்கும் மயங்கற்கும்,

பாங்கி குறி உய்த்தலும், திருமகட் புணர்ந்தவன் சேறலும் ஆகிய இரண்டும் நீங்கற்கும் உரியவாம் என்க.

இவற்றுள் நேராது இறைவி நெஞ்சொடு கிளத்தலும், பெருமகள் ஆற்றினது அருமை நினைந்து இரங்கலும், இறைமகள் இறைவனைக் குறிவிலக்கலும் ஆகிய மூன்றும் வரைதல் வேட்கைக்கும், பாங்கி நெறியினது அருமை கூறலும், இறைவனை வரவு விலக்கலும், தலைமகள் துயர்கிளந்து விடுத்தலும் ஆகியமூன்றும் வரைவு கடாதற்கும் உரியவாமாறு உணர்க.

145

## இரவுக்குறி இடையீட்டு வகை

518 அல்லகுறி வருந்தொழிற்கு அருமை என்றுஇங்கு
எல்லுக்குறி இடையீடு இருவகைத்து ஆகும்.

இது நிறுத்தமுறையானே இரவுக்குறி இடையீட்டுவகை இத்துணைத்து என்கின்றது.

(இ-ள்) அல்லகுறியும் வருந்தொழிற்கு அருமையும் என இரண்டு வகையினை உடைத்து, இரவுக்குறி இடையீடு என்றவாறு.

'குறிஅல்ல' என்பது அல்லகுறி என முன்பின்னாகத் தொக்கு நின்றது, கடைக்கண்போல. அதுதான் தலைமகனால் நிகழ்த்தப்படும் புள் எழூப்பல் முதலியன பிறிது ஒன்றான் நிகழ்த்தப்படுதலாம் என்றவாறு. 146

### விளக்கம்

கடைக்கண் என்பது கண்கடை என்பன கண்ணினது கடை என்றபொருளில் முன்பின்னாகத் தொக்கதொகை;

இஃது அல்லகுறி என்பது 'குறி அல்ல' என்பதன் முன்பின்னாகத்தொக்க அளவிற்கே எடுத்துக்காட்டு ஆகும்.

### ஒத்த நூற்பாக்கள்

'இருவகைக் குறிபிழைப்பு ஆகிய இடத்தும்.'
தொ. பொ. 107

'வருந்தொழிற்கு அருமை வாயில் கூறினும்
குறியின் ஒப்புமை மருடற் கண்ணும்
தன்குறி தள்ளிய தெருளாக் காலை
வந்தனன் பெயர்ந்த வறுங்களம் நோக்கித்
தன்பிழைப் பாகத் தழீஇத் தேறலும்
பொழுதும் ஆறும் புரைவது அன்மையின்

*அழிவுதலை வந்த சிந்தைக் கண்ணும்.'*
தொல். பொ. 111

*'ஆற்றது தீமையும் அறிவுறு கலக்கமும்*
*காப்பின் கடுமை கையற வரினும்*
*களனும் பொழுதும் வரைநிலை விலக்கி.'* ,, 114

*'அல்லகுறிப் படுதலும் அவ்வயின் உரித்தே*
*அவன்வரவு அறியும் குறிப்பி னான.'* இறை. அக. 17

*முழுதும் —* ந. அ. 159

*'எல்லுக்குறி இடையீடு இருவகைத்து அவைதாம்*
*அல்லகுறி வருந்தொழிற்கு அருமைஎன்று ஆகும்.'*
மா. அ. 51
146

## இரவுக்குறி இடையீட்டு விரி

519 இறைவிக்கு இகுளை இறைவரவு உணர்த்துழித்
தான்குறி மருண்டமை தலைவி அவட்கு உணர்த்தலும்[1]
பாங்கி தலைவன் தீங்குஎடுத்து இயம்பலும்[2]
புலந்துஅவன் போதலும்[3] புலர்ந்தபின் வறுங்களம்
தலைவிகண்டு இரங்கலும்[4] தன்துணைக்கு உரைத்தலும்[5]
தலைமகள் அவலம் பாங்கி தணித்தலும்[6]
இறைவன்மேல் பாங்கி குறிபிழைப்பு ஏற்றலும்[7]
இறைவிமேல் இறைவன் குறிபிழைப்பு ஏற்றலும்[8]
அவள்குறி மருண்டமை அவள்அவற்கு இயம்பலும்[9]
அவன்மொழிக்கொடுமைசென்று அவள்அவட்கியம்பலும்[10]
என்பிழைப்பு அன்றுஎன இறைமகள் நோதலும்[11]
தாயும்[12] நாயும்[13] ஊரும்துஞ்[14] சாமையும்
காவலர் கடுகலும்[15] நிலவுவெளிப் படுதலும்[16]
கூகை குழறலும்[17] கோழிகுரல் காட்டலும்[19]
ஆகிய கிளவி அப்பதி னெட்டும்
இரவுக் குறிஇடை யீட்டது விரியே.

இஃது இரவுக்குறி இடையீட்டுவிரி இத்துணைத்து என்கின்றது.

(இ-ள்) இறைவிக்கு இகுளை இறைவரவு உணர்த்துழித் தான்குறி மருண்டமை தலைவி அவட்கு உரைத்தல் முதலாகக் கோழி குரல் காட்டல் ஈறாகக் கிடந்த கிளவி பதினெட்டும் இரவுக்குறி இடையீட்டின் விரியாம் என்றவாறு.

அநுவாதமுகத்தான், ஈண்டும் இறைவிக்கு இகுளை இறைவரவு உணர்த்துதல் வரப்பெறும்.

### விளக்கம்

அநுவாதம் — முன் கூறிய ஒன்றனையே பின் ஒரு பயன் நோக்கிக் கூறிக்கோடல்.

1 தலைவிக்குத் தோழி தலைவன் இரவுக்குறிக்கண் வந்துள்ள செய்தியை உணர்த்தியவழித் தலைவி தான் மற்றொன்றைத் தலைவன் செய்த குறியாகக் கருதிச்சென்று அவனைக் காணாது வருந்தி மீண்ட செய்தியைச் சொல்லுதல்.

2 பாங்கி தலைவி பொருந்த அறிந்துகொள்ளமுடியாதபடி தலைவன் குறிப்புச் செய்த பொல்லாங்கை எடுத்துக் கூறுதல்.

3 தலைவன் இரவுக்குறிக்கண் தலைவியைக் காணாது மனம் வாடி மீண்டு போதல்.

4 பொழுது விடிந்தபின் தலைவி தலைவன் இல்லாத அவ்விடத்தைக் கண்டு மனம் வருந்துதல்.

5 தலைவி தன் துயரநிலையைத் தோழிக்கு உரைத்தல்.

6 தோழி தலைவியின் துயரத்தை ஆற்றுவித்தல்.

7 குறிப்புத் தவறியதைத் தோழி தலைவன்மேல் ஏற்றிக் கூறுதல்.

8 தலைவன் குறிப்புத் தவறியதைத் தலைவிமேல் ஏற்றிக் கூறுதல்.

9 தோழி, தலைவன் செய்த குறிப்பு என்று வேறொன்றைத் தவறாகக் கருதித் தலைவி இரவுக்குறிக்கண் வந்து மீண்ட செய்தியைச் சொல்லுதல்.

10 தான் செய்த குறிப்பை அறிந்தும் தலைவி வரவில்லை என்று தலைவன் கூறிய கொடுஞ்சொல்லைப் பாங்கி தலைவிக்குக் கூறுதல்.

11 தலைவி ' என் தவறு அன்றே' என்று கூறி வருந்துதல்.

12 தலைவன் இரவுக்குறிக்கண் வருங்கால் தாய் உறங்கா திருத்தல்.

13 நாய் உறங்காது புதுவர்வரவு கண்டு குரைத்தல்.

14 ஊர்மக்கள் உறங்காது விழித்து உரையாடிக் கொண்டிருத்தல்.

15 ஊர்க்காவலர் விரைந்து ஊரைச் சுற்றிக் காவல்செய்து வருதல்

16 நிலவு வெளிப்பட்டுப் பகல் போல ஒளிவீசுதல்.

17 கோட்டான் தலைவி வெளிவாராதவாறு அச்சம் தருதல்.

18 வைகறைப்பொழுது வந்து விட்டது என்பதைக் கோழி கூவித் தெரிவித்தல்.

**ஒத்த நூற்பாக்கள்**

முழுதும் — ந. அ. 160, 161, 162.

' மான்விழிக்கு இகுளை மன்வரவு உணர்த்தலும்

தான்குறி மருண்டமை தலைவிஅவட்கு உணர்த்தலும்
சேடி இறைவன் தீங்கு கிளத்தலும்
ஊடி இறைவன் ஒழிதலும் ஒண்ணுதல்
வறுங்களம் தன்னை வந்துகண்டு இரங்கலும்
நறுந்துணர் அலர்க்குறி நாட்டம்உற்று இனையலும்
உறுந்துயர் இருளைக்கு உரைத்தலும் உறுந்துயர்
இருளை தணித்தலும் இறைவன்மேல் இருளை
குறிபிழைப்பு ஏற்றலும் கோதைமேல் தலைவன்
குறிபிழைப்பு ஏற்றலும் அவள்குறி மருண்டமை
அவள்அவற்கு இயம்பலும் ஆயிடைப் பாங்கி
கொற்றவன் கொடுமை குறித்தவட்கு உணர்த்தலும்
என்பிழைப்பு அன்றென்று இறைவிநோதலும்என
ஆறிரண்டு உடன்ஒன்று அல்லகுறி விரியே.'
மா. அ. 52

' தாய்துஞ் சாமை ஊர்துஞ் சாமை
நாய்துஞ் சாமை நகர காவலர்
கடுகுதல் கங்குலின் உடுபதி உதித்தல்
கூகை குறழல் குக்குடம் குரல்காட்டல்
ஆகிய ஏழும் அல்லுக்குறிக்கு இறைவன்
வருந்தொழிற்கு அருமை பொருந்துதற்கு உரிய.'
மா. அ. 53]

இறைவிக்கு இருளை இறைவரவு உணர்த்தல் :

மின்அங்கு அலரும் சடைமுடி யோன்வியன் தில்லைஅன்னாய்
என்அங்கு அலமரல் எய்திய தோஎழில் முத்தம்தொத்திப்
பொன்அங்கு அலர்புன்னைச் சேக்கையின் வாய்ப்புலம் புற்றுமுற்றும்
அன்னம் புலரும் அளவும் துயிலாது அழுங்கினவே. திரு 172

எனவும்,

[மின் ஒளிர் சடைமுடிச் சிவபெருமானின் தில்லை அன்னாய்! முத்துப்போல் கொத்து அமைந்து பொன்போல் அலரும் புன்னைமரக் கூடுகளில் தனிமைத்துயர் உற்று அன்னங்கள் முழுதும் பொழுது விடியும்அளவும் துயிலாது வருந்தின. அவை என்ன துன்பம் உற்றனவோ ]

தான்குறி மருண்டமை தலைவி பாங்கிக்கு உணர்த்தல் :

அணிகடல் தண்சேர்ப்பன் தேர்ப்பரிமா பூண்ட
மணிஅரவம் என்றெழுந்து போந்தேன்—கனிவிரும்பு
புள் அரவம் கேட்டுப் பெயர்ந்தேன் அணியிழாய்
உள்ளுடை நெஞ்சினேன் யான். ஐந். ஐம். 50

எனவும்,

[' தோழி ! நெய்தல்நிலத் தலைவனின் தேரில் பூட்டப் பட்ட குதிரைகளின் மணிஒளிபோலும் ' என்று கருதி இர வுக்குறிக்கண் சென்ற யான், கனியை விரும்பும் பறவை களின் ஒலியையேகேட்டு மனம் உடைந்து மீண்டு வந்து விட்டேன்.]

பாங்கி தலைவன் தீங்கு எடுத்துஇயம்பல் :

கொடுமுள் மடல்தாழைக் கூம்பு அழித்த வெண்பூ
இடையுள் இழுதுஒப்பத் தோன்றிப் —புடைஎல்லாம்
தெய்வம் கமழும் தெளிகடல் தண்சேர்ப்பன்
செய்தான் தெளியாக் குறி. ஐந் ஐம். 49

எனவும்,

[கொழுவிய முட்களோடு கூடிய மடல்களை உடைய தாழையின் மலர்ந்த பூக்கள் தம் நடுவே வெண்ணெய் போல வழவழப்பான பொகுட்டுகள் தோன்றப்பெற்று நாற்புறமும் இனிய மணம் கமழும் நம்நெய்தல்நிலத் தலைவன் தெளிவில் லாதவாறு குறிப்புச் செய்துள்ளான்.]

தலைவன் வந்து போதல் :

நம்போல் எளியவர் இல்லைநெஞ் சேஇந்த நானிலத்தில்
வம்புஓட வென்ற வனமுலை மாதற்கு மாளிகைஇன்று
அம்போ ருகம்என்று அறிந்தும்வம் போனை நீஅலைத்து
வெம்போ தகம்திரி கங்குல்என் னேஇங்கு மேவியதே.
அம்பி. 223

எனவும்,

[நெஞ்சே! இவ்வுலகில் நம்போல் துன்பப்படப் பிறந்தவர் ஒருவரும் இல்லை. கச்சினைக் கடந்து பரந்த மென்முலைத் தலைவிக்குத் தாமரையே மாளிகை ஆதலின், அஃது இரவில் திறந்து அவளை வெளிவிடாது என்பதை அறிந்தும், வீணுக என்னைத் துன்புறுத்தி யானைகள் திரியும் இவ்விரவில் ஏன் இங்கு என்னைக் கொண்டுவந்தாய்?]

வறுங்களம் தலைவிகண்டு இரங்கல் :

நாம்வந்த வேற்கை நரபாலன் நாவலர் போய்வழுத்தும்
தோம்வந்து அடர்வழித் தொண்டையர் கோன்கப்பல் சூழ்துறையில்
தேம்வந்து அலர்புன்னை காள்கைதை காள்நெய்தல் சேர்ப்பர்கங்குல்
தாம்வந் தனர்கொல் யான்வந்து போனபின் சாற்றுமினே.

கப்பல் 171

எனவும்,

['அஞ்சத்தக்க வேலைக் கையில் ஏந்தியவனும் புலவர்கள் மிகவும் புகழும் குற்றம் நீங்கப்பெற்ற உண்மையான புகழுடைய மரபில் வந்தவனுமாகிய தொண்டைமானுடைய கப்பல் என்ற ஊரைச் சூழ்ந்த நீர்த்துறைக் கரையில் மலரும் புன்னைகளே! தாழைகளே! இரவில் யான்வந்து போயின பின் தலைவர் வந்தாரா?' என்ற செய்தியைச் சொல்லுங்கள்]

தலைவி பாங்கியொடு உரைத்தல் :

வரல்இங்கு அரிய வயங்குஇருள் யாமத்து வந்தனர்வேய்
நரலும் சிலம்பர் நவமணி ஆழிநறவு உண்வண்டு
முரலும்தளை அவிழ்மொய்ம்மலர்க்காந்தள் அம்செம்மலர்க்கை
விரல்என்றுகொல்செறித்தார்நெறித்தாழ்குழல்மெல்லியலே.

அம்பி. 225

எனவும் வரும்.

[சுருண்ட கூந்தலை உடைய தோழியே! யாரும் வருதற்கு அரிய இருள்செறிந்த இரவில், மூங்கில் ஒலிக்கும் நம்

வெற்பர் இங்குவந்து, வண்டுகள் ஒலிக்கும் காந்தள்மொட்டினைச் செங்கைவிரல் என்றுகருதி, மணிகள் இழைக்கப்பட்ட மோதிரத்தை அதன்கண் செறித்துள்ளாரோ ?]

நெய்தல் படுவில் நிறைகழித் தண்சேர்ப்பன்
கைதைசூழ் கானலில் கண்டநாள் போலாஞல்
செய்த குறியும்பொய் ஆயினவால் சேயிழை
மையல்கொல் ஆன்ருர் தொடர்பு. திணைமொழி. 41

இதுவும் அது.

[சேயிழை! நெய்தல் பள்ளத்தில் மலரும் உப்பங்கழிகள் நிறைந்த நெய்தல்நிலத்தலைவர், தாழைகள் சூழ்ந்த கடற்கரைச்சோலையில் முதலில் கண்ட நாள் போல, நம்மாட்டுக் குறையாத அன்பு கொண்டவர் அல்லர். அவர் செய்த குறிப்புக்களும் பொய் ஆகிவிட்டன. பெரியோருடைய தொடர்பும் மயக்கமாய் அமையும் போலும்!]

தலைமகள் அவலம் பாங்கி தணித்தல் :

பொய்யா தவர்தம் குறிபிழை யார்அவர் பூண்டஅன்பு
மெய்யா தல் தேறி அழுங்கல்மின் னேபுய வெற்புஇரண்டான்
மைஆழி வையம் நிலையிட்ட வாணன்தென் மாறைவெற்பின்
உய்யானம் மென்கழு நீர்நறு மாலை உடைத்துஅல்லவே.

எனவும், தஞ்சை. 196

[மின்னே! பொய்த்தல் அறியாத தலைவன் தான் குறித்த இடத்து வருதலைத்தவிரான். அவன் கொண்ட அன்பு மெய்யானது என்பதைத் தெளிந்து கவலை தீர்வாயாக. தன் புயங்களால் உலகத்தைத் தாங்கிப் பாதுகாக்கும் வாணனுடைய தென்மாறை மலையிலே உய்யானவனம் மென்கழுநீர் மாலையைத் தானே புனைந்து அணியும் ஆற்றலுடைத்து அன்றே! சோலையில் தலைவன் செங்கழுநீர் மாலையைத் தான் வந்து மீண்டமைக்கு அடையாளமாகவே சார்த்திச் சென்றுள்ளான்]

இறைவன்மேல்பாங்கி குறிபிழைப்பு ஏற்றல் :

காமம் கடவ உள்ளம் உழைய
யாம்வந்து காணும் பருவ மாயின்
ஓங்கித் தோன்றும் உயர்வரைக்கு
யாங்குஎனப் படும்நுமது ஊரே தெய்யோ.

எனவும் வரும். இஃது ஐங்குறு நூறு 237

[காமம் செலுத்துகையினாலே மனம் வருந்த, அது பொழுது வீட்டில் இருக்கவேண்டிய யாங்களே உன்னைத் தேடிக்கொண்டு வரும் நிலை ஏற்படுமாயின், ஓங்கித் தோன்றும் மலைப்பகுதியிலே உன் ஊர் யாங்கு உள்ளது? என்பதை எங்களுக்குத் தெளிவாக உரைப்பாயாக.]

இறைவிமேல் இறைவன் குறிபிழைப்பு ஏற்றல் :
மழைவரவு அறியா மஞ்ஞை ஆலும்
அடுக்கல் நல்லூர் அசைநடைக் கொடிச்சி
தான்எம் மறந்தனள் ஆயினும்
யாம்தன் உள்ளுபு மறந்துஅறி யேமே.

எனவரும். இஃது ஐங்குறுநூறு 298

[மழை பெய்யப் போதலைக் கார்மேகங்களான் அறிந்து மயில்கள் ஆடும் பக்கமலைகளுக்கு இடைப்பட்ட நல்ல ஊரில் உள்ள மெல்லிய இயல்பினை உடைய தலைவி தான் என்னை மறந்தாளாயினும், யான் அவளை இடைவிடாது நினைத்துக் கொண்டிருப்பதால் ஒரு போதும் அவளை மறந்துஅறியேன்]

அவள் குறிமருண்டமை அவள் அவற்கு இயம்பல் :

கடுங்கால் எறியக் கயத்துஉகு மாவின் கனியைஎல்லாம்
ஒடுங்கா அரவுஅல்குல் உன்குறி யாக உளம்மகிழ்ந்து
நடுங்குஆர் இருள்வந்து நாள்மலர்ச்சோலையின் நண்ணியபின்
அடும்காய்களிற்றண்ணலேஎண்ணுமாறுஓர் அளவுஇல்லையே.

அம்பி 229

எனவும்,

[பகைவரை வெகுளும் கோபம்மிக்க ஆண்யானைகளை உடைய அண்ணலே! வேகமாக வீசும் காற்று அடிக்குந் தோறும் குளத்தில் மாங்கனிகள் விழும் ஓசையை எல்லாம் தலைவி உள்குறிப்பாக மனம் மகிழ்ந்துகொண்டு, தனியே வருதற்கு மனம் நடுங்கும் அரிய இருட்டில் வந்து மலர்ச் சோலையை அடைந்து பின் நின்னைக் காணுமல் அவள் வருந் திய வருத்தம் அளவிடும் தரத்தது அன்று.]

அவன்மொழிக்கொடுமை சென்று அவள் அவட்கு இயம்பல்:

வரும்இந்தால்லேயின்வல்லேஇன்றேவந்துவைகுஇருள்மாந்
துருமம் தரும்கனி எல்லாம் தொலேத்தும் துணைபிரியா
வரும்அந்தஅன்னங்கள்சேக்கைகொள்ளாமல்அழுங்குவித்தும்
தெருமந்துநின்றேவிட்டேன்என்பரால்அன்பர்சேயிழையே.
அம்பி. 230

எனவும்,

[தலைவியே! வழக்கம்போல வரும் மனை இகந்த இல் வரை இகவாத இரவுக்குறியிடத்திற்கு விரைவாகவந்து தங்கி இருட்டில் மாஞ்சோலையில்உள்ள கனிகளை எல்லாம் உகுத்துத் துணை பிரியாத அன்னங்களை எல்லாம் கூட்டில் அமைதியாக இருக்க ஒட்டாது வருத்தியும், உங்கள் வருகையைக் காணு மல் மனம் சுழன்று நின்றேன் என்று தலைவன் கூறுகிருன்.]

என்பிழைப்புஅன்றுஎன இறைமகள்நோதல்:

கொன்னூர் துஞ்சினும் யாம் துஞ்சிலமே
எம்இல் அயலது ஏழில் உம்பர்
மயில்அடி இலேய மாக்குரல் நொச்சி
அணிமிகு மென்கொம்பு ஊழ்த்த
மணிமருள் பூவின் பாடுநனி கேட்டே. குறுந். 138

எனவும் வரும்.

[எம்வீட்டின் அண்மையில் உள்ள ஏழில்மலையின் உச்சியில் உள்ள மயிலடிபோன்ற பிளவுபட்ட இலைகளையும் பெரிய கொத்துக்களையும் உடைய நொச்சியின் கிளைகளிலிருந்து கழன்று விழுந்த பூக்கள் விழும் ஓசையைக் கேட்டவாறே, பெரிய இவ்வூரவர் யாவரும் உறங்கியபின்னும், நான் 'இவ்வோசை தலைவன் செய்த குறியோ ? அன்றோ ?' என்று ஐயுற்றவாறே இரவு முழுதும் உறங்காதிருந்தேன்.]

'உரைபெற வகுத்த' என்ற மிகையானே, தலைவி விருந்துஎன வந்த பெருந்தகை நிலைமை கூறலும் வரப் பெறும். அது,

கனைஇருள் வந்து குறிபிழைத் தார்சிறு காலையில்நம்
மனையிடை வந்துவிருந்தினன் என்னவிருந் துஎன்று அன்னை
புனையிழை நீசென்றுபோற்றுகஎன் றுஎன்னைபோற்றுகஎன்ற
நினைவுஅறி யாதுசென் றேன்அகன் றார்அவர் நீடுஉயிர்த்தே
அம்பி 2?4

எனவரும்

[செறிந்த இருளில் வந்து குறிபிழைத்த தலைவன்விடியற்கண் நம்வீட்டிற்குத்தான்விருந்தினன் என்றபெயரால் வந்தானாக, என்னைஅழைத்து விருந்தினனை உபசரிக்குமாறு அன்னை கூற, அன்னை 'விருந்தோம்புக' என்றுசொன்ன அவள் கருத்தை அறியாது தலைவனைநோக்கி யான் சென்ற அளவில் அவன் இரவுக்குறி பிழைத்ததைக் குறிப்பால் அறிவுறுத்துவான் போலப் பெருமூச்சு விட்டுச்சென்றான்.]

தாய் துஞ்சாமை :

மண்ணிய சென்ற ஒண்ணுதல் அரிவை
புனல்தரு பசுங்காய் தின்றதன் தப்பற்கு
ஒன்பதிற்று ஒன்பது களிற்றொடு அவள்நிறை
பொன்செய் பாவை கொடுப்பவும் கொள்ளான்

பெண்கொலை புரிந்த நன்னன் போல
வரையா நிரையத்துச் செலீஇயரோ அன்னை
நகைமுக விருந்தினன் வந்தெனப்
பகைமுக ஊரில் துஞ்சலோ இலளே. குறுந். 292

எனவும்,

[ஒருநாள் தலைவன் இரவில் விருந்தினனாக வந்தானாக, தாய் பகைப்புலத்து ஊரில் உள்ளார் அமைதியின்மையால் உறக்கத்தை நீத்து இருப்பதுபோல உறங்காமலே விழித்திருந்தாள். ஆதலின், குளிக்கச் சென்ற சிறுமி நீரில் அடித்து வரப்பட்ட மாங்காயைத்தின்ற தவற்றுக்காக, அவள் தந்தை எண்பத்தோர் யானைகளையும் அவளது நிறை அளவிற்றாகிய பொற்பாவையையும் ஒறுப்புத்தொகையாக வழங்கவும், அவற்றைக் கொள்ளாது அப்பெண்ணைக் கொலைபுரிந்த நன்னன் சென்ற நரகம்போல, என்றும் வெளியே உமிழ்தற்கு வாயை அங்காவாத நரகத்தில் அன்னை போய்ச்சேருவாளாக.]

நாய் துஞ்சாமை :

தண்என் புனல்வையை சூழ்தஞ்சை வாணன் தரியலர்போல்
பெண்என்பிறவியும்பேறுஉடைத்துஅன்றுஇப்பெரும்பதிநம்
கண்என் பவர்வரக் கங்குலில் ஞாளிக் கணம்குரைத்துத்
துண்என் கடுங்குரல் வாய்அன்னை துஞ்சினும் துஞ்சிலவே.
தஞ்சை. 203

எனவும்,

[வையை சூழும் தஞ்சைநகர்வாணனுடைய பகைவரைப் போலப் பெண்பிறப்பு எடுத்தாரும் பேறு உடையவர் அல்லர். இப்பேரூரில் நம் கண் போன்றவர் இரவுக்குறிக்கு வந்தாராக, கொடுஞ்சொல் கூறும் நம் அன்னை உறங்கினும், நாய்க்கூட்டங்கள் குரைத்துக்கொண்டு உறங்காது உள்ளனவே.]

ஊர் துஞ்சாமை :

ஓங்குஅண்ணல்வெம்பகடுஉந்திவந்தாரைஉடன்றுதும்பைத்
தேம்கண்ணிசூடிச்செருவென்றவாணன்தென்மாறைமின்னே
தாம்கண் அனையர் தமைப்பிரிந் தோநம் தனிமைகண்டோ
நாம்கண் உறங்கினு மோஉறங் கார்கள் நகரவரே.

தஞ்சை. 204

எனவும்,

[யானைப்படை செலுத்திவந்தவரைத் தும்பைமாலை சூடி வென்ற வாணன் தென்மாறையில் உள்ள தோழியே! இவ் வூரார் தத்தம் கண்போன்ற துணைவரைப் பிரிந்தோ, நம் தனிமை கண்டோ, நாம் உறங்கினாலும் தாம் உறங்காது உள்ளனர்.]

காவலர் கடுகுதல் :

புயல்கண் ணியதலைப் பூகமென் பாளைப் புதுமதுநீர்
வயற்கண் நிறைதஞ்சை வாணன்தென் மாறையில் வஞ்சிஅன்னாள்
கயற்கண் இணைஅஞ்சி நீர்மல்க காவலர் கைப்பறையின்
செயல்கண் இணைஅல்ல வோபடு கின்றன திண்கடிப்பே.

தஞ்சை. 205

எனவும்,

[வான் அளாவிய கமுக மரத்துப் பாளைகளிலிருந்து வடியும் தேன் வயலின்கண் நிறையும் தஞ்சைவாணன் மாறைநகரில், தலைவியின் கயல்போன்ற கண்கள் அஞ்சி நீர் மல்குமாறு, ஊர்க்காவலர் கைகளில் உள்ள பறைகளின் கண்கள் குறுந்தடியால் அடிக்கப்படுகின்றன. அடிபடுவார் ஒருவராக, நீர் உகுப்பார் பிறராதல் என்ன வியப்போ!.]

நிலவு வெளிப்படுதல் :

கருங்கால் வேங்கை வீஉகு துறுகல்
இரும்புலிக் குருளையில் தோன்றும் காட்டிடை

எல்லி வருநர் களவிற்கு
நல்லை அல்லை நெடுவெண் நிலவே. குறுந். 47

எனவும்,

[நிலவே ! வேங்கைப்பூ விழுந்த பாறையைப் போலப் புலிக்குட்டி தோற்றமளிக்கும் இரவில் இரவுக்குறிக்கண் தலைவர் களவில் வருவாராகவும், நீ ஒளிவீசி அவர் புலிக்குட்டியை வேங்கைப்பூ விழுந்த பாறையாகக் கருதி மயங்குமாறு செய்வதால், நற்பண்பு உடையை ஆகாய்.]

கூகை குழறல் :

நம்பேறுஉடைமைஇருக்கின்றவாகடல்ஞாலத்துஉள்ளோர்
தம்பேறு எனவந்த சந்திர வாணன் தரியலர்போல்
வம்புஏறு கொங்கை மயில்இயல் நாம்அஞ்ச மன்றமராம்
கொம்புஏறி நள்இருள் வாய்க்குழ றுநின்ற கூகைகளே.
தஞ்சை 207

எனவும்,

[மயிலனையாய் ! உலகவர் செய்த பாக்கியம்போல அவதரித்த சந்திரன் மகனாகிய வாணனுடைய பகைவரைப்போல நாம் அஞ்சுமாறு, மன்றத்திலுள்ள மராமரக் கிளையில் ஏறி நடுஇரவில் கோட்டான்கள் கத்தி, நாம் அச்சத்தால் இரவுக் குறிக்குச் செல்ல இயலாமல் செல்கின்றன. நம் பேறு அமைந் திருக்கும் நிலை வருந்தத்தக்கது.]

கோழி குரல் காட்டல் :

மன்பதை தாம்உய்ய வந்தருள் வாணன்தென் மாறைவெற்பர்
கொன்பதி வேல்வலம் கொண்டுவந்தால்தங்கள் கோன் அடைந்தான்
என்பது தேறி இடைஇருள் ஊரை எழுப்பும்வெம்முள்
பொன்பதி தாள்வளை வாய்ச்செய்ய சூட்டுவன் புள்ளினமே.
தஞ்சை. 208

எனவும் வரும்.

[உலகம் உய்ய வந்து அருளும் வாணனுடைய தென் மாறையைச் சார்ந்த நம் தலைவர் அச்சம் தரும் வேல் ஏந்தி வந்தால், தங்கள் தலைவனாகிய முருகனே வந்துவிட்டான் என்று உட்கொண்டு, நடுஇரவிலும், கொடிய முட்களும் பொன்போன்ற நிறம் உடைய கால்களும் வளைந்த அலகும் சிவந்த உச்சிக் கொண்டையும் உடைய கோழிச்சேவல்கள் மகிழ்ச்சியால் கூவி ஊரைத் துயில் எழுப்புகையினாலே, நம் இரவுக்குறிக்கு இடையூறு உண்டாகிவிட்டது.]

இவற்றுள், இறைவிக்கு இகுளை இறைவரவு உணர்த்துழித் தான்குறி மருண்டமை தலைவி அவட்கு உரைத்தல் முதலாக என்பிழைப்பு அன்று என இறைவி நோதல் ஈறுகக் கிடந்த பதினொன்றும் அல்லகுறிக்கும்.

தாய் துஞ்சாமை முதலாகக் கோழி குரல் காட்டல் ஈறுகக் கிடந்த ஏழும் வருந்தொழிற்கு அருமைக்கும் உரிய எனக்கொள்க. 147

## வரைதல்வேட்கையின் வகை

520 அச்சம் உவர்த்தல் ஆற்றுமைஎன
மெச்சிய வரைதல் வேட்கைமூ வகைத்தே.

இது, நிறுத்தமுறையான வரைதல்வேட்கை வகை இத்துணைத்து என்கின்றது.

(இ-ள்) அச்சமும் உவர்த்தலும் ஆற்றுமையும் என மூன்று வகையினை உடைத்தாம், வியக்கத்தக்க வரைதல் வேட்கை என்றவாறு. 148

அச்சம் — களவு வெளிப்பட்டு விடுமோ என்று தலைவி அஞ்சும் அச்சம்.

உவர்த்தல் — அச்சம் காரணமாகக் களவுப்புணர்ச்சியை வெறுத்தல்.

ஆற்றாமை — களவுப்புணர்ச்சியை அச்சம் காரணமாக விலக்கக் கருதினும், தலைவன்பிரிவு முதலிய கருதித் தலைவி ஆற்றாளாதல்.

இவ்வரைதல் வேட்கை பற்றி நிகழும் மெய்ப்பாடுகளைத் தொல்காப்பியம்,

‘ முட்டுவயின் கழறல் முனிவுமெய்ந் நிறுத்தல்
அச்சத்தின் அகறல் அவன்புணர்வு மறுத்தல்
தூதுமுனி வின்மை துஞ்சிச் சேர்தல்
காதல் கைம்மிகல் கட்டுரை யின்மைஎன்று
ஆயிரு நான்கே அழிவுஇல் கூட்டம்.’ பொ. 271

என்ற நூற்பாவால் குறிப்பிடும்.

ஒத்த நூற்பாக்கள்

முழுதும் — ந. அ. 163
‘ அகத்துஎழும் அச்சமும் உவர்ப்பும்ஆற் றாமையும்
மிகப்பயில் மூவகை வரைதல் வேட்கை.’ மா. அ. 55
148

## வரைதல் வேட்கையின் விரி

521 பருவரல் வினவிய பாங்கிக்கு இறைவி
அருமறை செவிலி அறிந்தமை கூறலும்[1]
தலைமகன் வருந்தொழிற்கு அருமை சாற்றலும்[2]
தலைமகன் ஊர்க்குச் செலவு ஒருப் படுதலும்[3]
பாங்கி இறைவனைப் பழித்தலும்[4] பூங்கொடி
இறையோன் தன்னைநேர்ந்து இயற்பட மொழிதலும்[5]
கனவுநலிபு உரைத்தலும்[6] கவின்அழிபு உரைத்தலும்[7]
தன்துயர் தலைவற்கு உரைத்தல் வேண்டலும்[8]
துன்புறு பாங்கி சொல்எனச் சொல்லலும்[9]
அலர்பார்த்து உற்ற அச்சக் கிளவியும்[10]
ஆறுபார்த்து உற்ற அச்சக் கிளவியும்[11]

காமம்மிக்க கழிபடர் கிளவியும்[12]
தன்னுள் கையாறு எய்திடு கிளவியும்[13]
நெறிவிலக்கு வித்தலும்[14] குறிவிலக்கு வித்தலும்[15]
வெறிவிலக்கு வித்தலும்[16] பிறர்விலக்கு வித்தலும்[17]
குரவரை வரைவுஎதிர் கொள்ளுவித் தலும்என[18]
உரைபெற வகுத்த ஒன்பதிற்று இரட்டியும்
வரைதல் வேட்கை விரிஎனப் படுமே.

*இது வரைதல்வேட்கை விரி இத்துணைத்து என்கின்றது.*

(இ-ள்) பருவரல் வினவிய பாங்கிக்கு இறைவி அருமறை செவிலி அறிந்தமை கூறல் முதலாகக் குரவரை வரைவு எதிர்கொள்ளுவித்தல் ஈருகச் சொல் பெற வகுத்த பதினெட்டுக் கிளவியும் வரைதல் வேட்கை விரியாம் என்றவாறு.

### விளக்கம்

1 தன் மனத்துயரம் பற்றி வினவிய தோழிக்குத் தலைவி தன் களவுஒழுக்கத்தைச் செவிலி அறிந்த செய்தியைக் கூறல்.

2 தலைவன் இரவுக்குறிக்கண் அரிய வழியில் வருதற்கு அரிதாய் இருத்தலைத் தலைவி தோழிக்குக் கூறல்.

3 தலைவி தோழியோடு தலைவன் ஊருக்குச் செல்ல ஒருப்படுதல்.

4 தோழி தலைவனுடைய வரையாமையாகிய கொடுமையை எடுத்துக்கூறி அவனைப் பழித்தல்.

5 'தலைவன் நற்குணம் உடையவனே' என்பதனைத் தலைவி தோழிக்கு விளங்கக் கூறுதல்.

6 தலைவனைக் காணும் கனவு தன்னைத் துன்புறுத்துகின்றது என்பதனைத் தலைவி தோழியிடம் கூறுதல்.

7 தலைவி தலைவன் நினைவால் தன் அழகு நாடோறும் அழிந்து வருமாற்றைத் தோழியிடம் எடுத்துக்கூறுதல்.

8 தலைவனுக்குத் தனது துன்பத்தை அறிவுறுத்துதல் வேண்டும் என்று தலைவி தோழியிடம் கூறுதல்.

9 தோழி தலைவியிடம் அவளுடைய குறையை நேர்முகமாக அவளே தலைவனிடம் குறிப்பிடுமாறு அறிவித்தல்.

10 பலரும் கூறும் பழிமொழியை அறிந்து தான் கொண்டுள்ள அச்சத்தைத் தலைவி தோழியிடம் கூறுதல்.

11 தலைவன் இரவுக்குறிக்கண் வரும் வழியின் அருமையை அறிந்து தான் அடைந்த வருத்தத்தைத் தலைவி தோழியிடம் சொல்லுதல்.

12 தலைவி தனக்குத் தலைவனிடம் காமம் மிகுதலால் ஏற்பட்ட மிக்க நினைவால் உண்டான துன்பத்தைத் தோழியிடம் குறிப்பிடுதல்.

13 தலைவி தன்னுள் செயலற்றுச் சிலசொற்கள் கூறுதல்.

14 முற்கூறிய வழியில் வாராதவண்ணம் தலைவனை விலக்குமாறு தலைவி தோழியை வேண்டுதல்.

15 இரவுக்குறியிடத்து வாராதபடி தலைவனை விலக்குமாறு தலைவி தோழியிடம் கூறுதல்.

16 தலைவியின் மயக்கஉணர்ச்சியைக் கண்ணுற்று அவளைப் பேய் தீண்டியது என நினைத்துத் தமர் வேலனைக் கொண்டு முருகவேளை வழிபட்டுப் பலியிடும் வெறியாட்டை விலக்குமாறு தோழிக்குத் தலைவி கூறுதல்.

17 தன்னை மணம் செய்தற்பொருட்டுத் தமர்பால் வரும் பிறரை உண்மை கூறி விலக்கும்படித் தலைவி தோழியை வேண்டுதல்.

18 தலைமகனுடைய வரைவை ஏற்றுக்கொள்ளும்படி தன் தாய் தந்தை தமையன்மார் முதலிய குரவருக்கு அறிவிக்குமாறு தலைவி தோழியிடம் குறிப்பிடுதல்.

### ஒத்த நூற்பாக்கள்

'நாணுநெஞ்சு அலைப்ப விடுத்தற் கண்ணும்
வரைதல் வேண்டித் தோழி செப்பிய
புரைதீர் கிளவி புல்லிய எதிரும்
வரைவுடன் படுதலும் ஆங்கதன் புறத்துப்
புரைபட வந்த மறுத்தல் ..' தொல். பொ. 107

'காமத் திணையின் கண்ணின்று வரூஉம்
நாணும் மடனும் பெண்மைய ஆகலின்
குறிப்பினும் இடத்தினும் அல்லது வேட்கை
நெறிப்பட வாரா அவள்வயி னான.' ,, ,, 108

'மறைந்துஅவற் காண்டல் தற்காட் டுறுதல்
நிறைந்த காதலின் சொல்எதிர் மழுங்கல்
வழிபாடு மறுத்தல் மறுத்துஎதிர் கோடல்
பழிதீர் முறுவல் சிறிதே தோற்றல்
கைப்பட்டுக் கலங்கினும் நாணுமிக வரினும்
இட்டுப்பிரிவு இரங்கினும் அருமைசெய்து அயர்ப்பினும்
வந்தவழி எள்ளினும் விட்டுயிர்த்து அழுங்கினும்
நொந்துதெளிவு ஒழிப்பினும் அச்சம் நீடினும்
பிரிந்தவழிக் கலங்கினும் பெற்றவழி மலியினும்
வருந்தொழிற்கு அருமை வாயில் கூறினும்
கூறிய வாயில் கொள்ளாக் காலையும்
மனைப்பட்டுக் கலங்கினும் சிதைந்தவழி தோழிக்கு
நினைத்தல் சான்ற அருமறை உயிர்த்தலும்
உயிராக் காலத்து உயிர்த்தலும் உயிர்செல
வேற்றுவரைவு வரின் அது மாற்றுதற் கண்ணும் ...
கையறு தோழி கண்ணீர் துடைப்பினும்
வெறியாட் டிடத்தும் வெருவின் கண்ணும்

'குறிப்பின் ஒப்புமை மருடற் கண்ணும்
வரைவுதலை வரினும் களவு அறி வுறினும்
தமர்தற் காத்த காரணம் மருங்கினும்
தன்குறி தள்ளிய தெருளாக் காலை
வந்தனன் பெயர்ந்த வறுங்களம் நோக்கித்
தன்பிழைப் பாகத் தழீஇத் தேறலும்
வழுவின்று நிலைஇய இயற்படு பொருளினும்
பொழுதும் ஆறும் புரைவது அன்மையின்
அழிவுதலை வந்த சிந்தைக் கண்ணும் .'

தொல். பொ. 111

'உயிரினும் சிறந்தன்று நாணே நாணினும்
செயிர்தீர் காட்சிக் கற்புச்சிறந் தன்றுஎனத்
தொல்லோர் கிளவி புல்லிய நெஞ்சமொடு
காமக் கிழவன் உள்வழிப் படினும்
தாவில் நன்மொழி கிளவி கிளப்பினும்
ஆவகை பிறவும் தோன்றுமன் பொருளே.'

தொல். பொ. 113

'தன்உறு வேட்கை கிழவன்முன் கிளத்தல்
எண்ணுங் காலைக் கிழத்திக்கு இல்லை
பிறநீர் மாக்களின் அறிய ஆயிடைப்
பெய்ந்நீர் போலும் இயல்பிற்று என்ப.' ,, ,, 118

'உடம்பும் உயிரும் வாடியக் காலும்
என்னுற் றனகொல் இவைஎனின் அல்லது
கிழவோற் சேர்தல் கிழத்திக்கு இல்லை.' - ,, ,, 203

'பொழுதும் ஆறும் காப்பும்என்று இவற்றின்
வழுவின் ஆகிய குற்றம் காட்டலும்
தன்னை அழிதலும் அவன்ஊறு அஞ்சலும்
இரவினும் பகலினும் நீவரல் என்றலும்
கிழவோன் தன்னை வாரல் என்றலும்
நன்மையும் தீமையும் பிறிதினைக் கூறலும்

புரைபட வந்த அன்ன பிறவும்
வரைதல்வேட்கைப்பொருளஎன்ப.' தொல். பொ. 210

' அறக்கழிவு உடையன பொருட்பயம் படவரின்
வழக்குஎன வழங்கலும பழித்தன்று என்ப.' ,, ,, 218

' காமம் மிக்க கழிபடர் கிளவியும்
காப்புச் சிறைமிக்க கையறு கிளவியும்
ஆறுபார்த்து உற்ற அச்சக் கிளவியும்
இரவினும் பகலினும் நீவருக என்றலும்
கிழவோன் தன்னை வாரல் என்றலும்
தன்னுள் கையாறு எய்திடு கிளவியும்
அன்ன மரபின் பிறவும் தொகைஇத்
தன்னை அழிந்த கிளவி எல்லாம்
வரைதல் வேட்கைப் பொருள என்ப ' இறை. அக. 30

முழுதும் — ந. அ. 164

' மின்இடை வருத்தம் பாங்கி வினுதலும்
தன்மறை செவிலி அறிந்தமை சாற்றலும்
பார்த்திபன் வருந்தொழிற்கு அருமை பகர்தலும்
பார்த்திபன் நகர்க்குச் செலவுஒருப் படுதலும்
இறைவனை இகுளை இயல்பழித்து உரைத்தலும்
இறைவிஆ யிடைஎதிர்ந்து இயல்பட மொழிதலும்
கனவின் நலிவொடு கவின் அழிபு உரைத்தலும்
இடர்தலை மகன்தனக்கு இயம்ப விரும்பலும்
படர்உறப் பாங்கிநீ சொல்எனப் பணித்தலும்
அலர்பார்த்து உற்ற அச்சம் தன்னுடன்
ஆறுபார்த்து உற்ற அச்சக் கிளவியும்
காமம் மிக்க கழிபடர் கிளவியும்
தன்னுள் கையாறு எய்திடு கிளவியும்
நெறிகுறி வெறிபிற நிகழ்த்தி விலக்கலும்
குரவரை ஆங்குஎதிர் கொள்ளுவித் தலும்என்று
ஓதிய வழிபயில் ஒருபத் தொன்பதும்
மேதக வரைதல் வேட்கையின் விரியே.' மா. அ. 156]

அநுவாத முகத்தான் பாங்கி தலைவியைப் பருவரல் வினாதலும் வரப்பெறும். அதற்குச்செய்யுள் :

மீன்அறி யாத விரிகடல் போலும் விழிபசந்து
தூநெறி ஆர்குழல் போதும் துறந்தனை துங்கம்மலி
வான்அறி யாத மதிமுகத்தாய்இன் றைவைகல்என்றும்
யான்அறி யாத வருத்தம்என் னோஉனக்கு எய்தியதே.
அம்பி. 237

எனவரும்.

[மதிமுகத்துத்தலைவியே! கடல்போன்ற கரிய விழிகள் பசப்புற்று சுருண்ட நின் கூந்தலில் நீ பூக்களும் அணியவில்லையே. இன்று உனக்கு இதற்குமுன் இல்லாதபடி என்ன வருத்தம் வந்துள்ளது? அஃது எனக்கும் புலனாகவில்லையே!]

பருவரல் வினவிய பாங்கிக்கு அருமறை
இறைவி செவிலி அறிந்தமை கூறல் :

துறைவன் துறந்தெனத் துறைஇருந்து அழுதான்
மம்மர் வாள்முகம் நோக்கி அன்னை நின்
அவலம் உரைஎன் றனளே கடல்என்
பஞ்சாய்ப் பாவை கொண்டு
வண்டல்அஞ் சிறுமனை சிதைத்ததுஎன் றேனே.
தொல். பொ. ந மே.

எனவும்,

[தலைவன் பிரிந்தானாகக் கடல்துறையில் இருந்து அழுத என் மயங்கிய முன்பு ஒளிபெற்று அப்பொழுது ஒளியிழந்த முகத்தை நோக்கிச் செவிலி என் வருத்தம்பற்றி வினவினாளாக, ‘கடல் அலைகள் என் மணல்வீட்டை அழித்துப் பஞ்சாய்க் கோரையால் செய்திருந்த பாவையை அடித்துக் கொண்டு போனதால் வந்த வருத்தம்’ என்று கூறினேன்.]

**தலைமகன் வருந்தோழிற்கு அருமை சாற்றல் :**

இரும்பிழி மகாஅர் இவ் அழுங்கல் மூதூர்
விழவுஇன்று ஆயினும் துஞ்சாது ஆகும்
மல்லல் ஆவணம் மறுகுஉடன் மடியின்
வல்உரைக் கடுஞ்சொல் அன்னை துஞ்சாள்
பிணிகொள் அருஞ்சிறை அன்னை துஞ்சின்
துஞ்சாக் கண்ணர் காவலர் கடுகுவர்
இலங்குவேல் இளைஞர் துஞ்சின் வைஎயிற்று
வலம்சுரித் தோகை ஞாளி மகுளும்
அரவவாய் ஞமலி குரையாது மடியின்
பகல்உரு உறழ நிலவுகான்று விசும்பில்
அகல்வாய் மண்டிலம் நின்று விரியும்மே
திங்கள் கல்சேர்பு கனைஇருள் மடியின்
இல்எலி வல்சி வல்வாய்க் கூகை
கழுதுவழங்கு யாமத்து அழிதகக் குழறும்
வளைக்கண் சேவல் வாளாது மடியின்
மனைச்செறி கோழி மாண்குரல் இயம்பும்
எல்லாம் மடிந்த காலையும் ஒருநாள்
நில்லா நெஞ்சத்து அவர்வா ரலரே

அதனால்,

அரிபெய் புட்டில் ஆர்ப்பப் பரிசிறந்து
ஆதி போகிய பாய்பரி நன்மா
நொச்சி வேலித் தித்தன் உறந்தைக்
கல்முதிர் புறங்காட்டு அன்ன
பல்முட் டின்றால் தோழிநம் களவே. அகா. நா. 122

எனவும்

[கள் குடிக்கும் மக்கள் மிக்க ஆரவாரம் உடைய இவ் வூரார் திருவிழா இல்லாத நாள்களிலும் கூட முன்யாமத்தில் உறங்கமாட்டார்கள்; கடைத்தெருவில் உள்ளாரும் ஊராருள் ஏனையரும் உறங்கினாலும், கடுஞ்சொல் கூறும் செவிலி உறங்

காமல் இருக்கிறுள். நம்மைச் செறித்துவைத்திருக்கும் அன்னை உறங்கினுலும், உறக்கம் அற்ற கண்களை உடைய ஊர்க்காவலர் ஊரைச் சுற்றிக் காவல் காத்து வருகின்றனர். வேல் ஏந்திக் காவல்புரியும் அவ்விளையர் உறங்கினுலும், வலப்பக்கமாகச சுருண்ட வாலை உடைய நாய்கள் குரைக்கின்றன. நாய்கள் குரைத்தலைத் தவிர்த்து உறங்கினுலும், வானத்தில் திங்கள் பகலைப் போலத் தன் கிரணங்களை வீசி மிகுந்த ஒளியைச் செய்யும். திங்கள் மலையைச் சேர்ந்து மறையின், எலியை இரையாகக் கொள்ளும் வலிய அலகினை உடைய கோட்டான் பேய்கள் திரியும் நடுஇரவில் அஞ்சுதல் உண்டாக ஒலிக்கும். வளைந்த கண்களை உடைய கோட்டான்கள் அமைதியுற்றுல், விட்டில்உள்ள கோழிகள் வைகறையாமத்தின் வரவு காட்டிக் கூவும். இவையாவும் நிகழாத நாள் ஒன்று உண்டாயின், உறுதியில்லாத மனத்தை உடைய தலைவன் வருதலைச்செய்யான். அதனுல் மதில் காவலை உடைய தித்தன் வாழ் உறையூரின்கண் கற்கள் முதிர்ந்த வெளியிலுள்ள காவற்காடு கடத்தற்கு அரிய பலமுட்டுப்பாடுகளை உடையதாய் இருப்பதுபோல, நம் இரவுக்குறியும் நிகழ்த்துதற்குஅரிய பல முட்டுப்பாடுகளை உடையதாய் உள்ளது.]

தலைமகன்ஊர்க்குச் செலவு ஒருப்படுதல் :

அருங்கடி அன்னை காவல் நீவிப்
பெருங்கடை இறந்து மன்றம் போகிப்
பகலே பலரும் காண நாண்விட்டு
அகல்வயின் படப்பை அவன்ஊர் வினவிச்
சென்மோ வாழி தோழி பன்னுள்
கருவி வானம் பெய்யாது ஆயினும்
அருவி ஆர்க்கும் கழைபயில் நனந்தலை

வான்தோய் மாமலைக் கிழவனைச்
சான்றோய் அல்லை என்றனம் வரற்கே. நற். 365

எனவும்,

[கடுமையாக நம்மை இற்செறித்துவைத்திருக்கும் செவிலித்தாயின் காவலைக் கடந்து பெரிய வீட்டு வாசற்படியைக் கடந்து ஊர்ப்பொதுஇடத்தை அடைந்து, பகற்பொழுதிலேயே, பலரும் காணுமாறு, நம் நாணத்தை நீத்து, அகன்ற மணைக்கொல்லைகளை உடைய தலைவனுடைய ஊரின் பெயரை வினவி, பலநாளும் இடிமின்னல் முதலியவற்றின் தொகுதிகளை உடைய மழை பெய்யாது போயினும் அருவிகளில் நீர் தடையின்றி ஆரவாரத்தோடு பெருகிவரும் மூங்கில்கள் செறிந்த பரந்த இடத்தை உடைய வானளாவிய மாமலைத் தலைவனை நேரில் கண்டு, 'நீ சான்றவனாகச் செயற்படவில்லை' என்று கூறிவருதலுக்குப் புறப்படுவோம்; எழுவாயாக.]

பாங்கி இறைவனைப் பழித்தல் :

சுறவுஆர் நறுங்குழைத் தூநகை யாய்நம் துணைவருடன்
இறவுஆர் குருகுஇனம் தங்குபைங் கானலில் இன்அளிசூழ்
நறவுஆர் மலர்ப்புன்னை நன்னிழல் வாய்முன் நயந்தசெவ்வி
மறவா நமைமறந் தார்அவர் போல்இல்லை வன்னெஞ்சரே.

அம்பி. 243

எனவும்,

[நறுங்குழையைச் சூடிய, ஒளிமிக்க பற்களை உடையாய்! நம் தலைவர், இருமீன்களை ஒருசேர உண்ணும் நாரைகள் தங்கும் பசிய கடற்கரைச்சோலையில், வண்டுகள் சூழும் தேன் மிக்க மலர்களை உடைய புன்னைமர நிழலில், நம்மை விரும்பி வந்த செவ்வியை நாறைகள் மறக்கமாட்டா. நம்மை மறந்த தலைவரைப்போன்ற கடிய நெஞ்சுடையார் ஒருவரும் இரார்.]

தலைமகள் இயற்பட மொழிதல் :

யாமைதன் பார்ப்பை இகந்துஉயிர் காக்கும் இருந்துறைவன்
தீமைநம் பால்செயல் சிந்திக்கு மோசெவ்வீ போய்ஒழிந்த
மாமையும்பார்த்தவன்வாய்மையும்பார்த்துவரும்தன்மன்றல்
பூமணம் பார்த்துஅளி புல்லும்அல் லார்குழல் பூங்கொடியே.
அம்பி. 244

எனவும்,

[வண்டு மொய்க்கும் கருங்குழல் தோழியே! யாமை தன் பார்ப்புக்களைப் பிரிந்திருந்தாலும், தான் அவற்றை ஒருகால் நினைப்பதனாலேயே அவற்றின் உயிரைப் பாதுகாக்கும் கடல் துறைகளையுடைய தலைவன் நம்மிடம் தீமைகள் செய்தலைக் கருதுவானோ? வளப்புக்கெட்ட நம்மாமைநிறத்தையும் தன் வாய்மையையும் தான்மணக்க வேண்டிய நாளையும் அவன் தவறாது நினைத்துக்கொண்டிருப்பான்.]

கனவு நலிபு உரைத்தல் :

கேட்டிசின் வாழி தோழி அல்கல்
பொய்வல் லாளன் மெய்உற மரீஇ
வாய்த்தகை பொய்க்கனா மருட்ட ஏற்றுஎழுந்து
அமளி தைவந் தனனே குவளை
வண்டுபடு மலரில் சாஅய்த்
தமியேன் மன்ற அளியேன் யானே. குறுந். 30

எனவும்,

[தோழி! இதனைக்கேள்! பொய்த்தலில் வல்ல நம் தலைவன் நேற்று இரவு என்னை உடல்உறத் தழுவிய உண்மையைப் போன்ற பொய்க்கனா என்னை மயக்கியதனால், உறக்கம் தெளிந்து தலைவனைப் புல்லுதற்கு என் படுக்கையைத் தடவினேன். வண்டுகள் மொய்த்தலால் இதழ் குலைந்த குவளைப்பூப் போல, மன அமைதி நுணுகித் தன்னந்தனியளாய் இரங்கத் தக்க நிலையினேன் ஆனேன்.]

கவின் அழிபு உரைத்தல் :

மின்னே அவர் தந்த வேட்கையை மீட்கும் விரகுஅறிய
முன்னே தவங்கள் முயன்றில மேமுன்செய் தீவினையால்
என்னே அருங்கவின் எல்லாம் எனக்கும் அவர்க்கும்இன்றிக்
கொன்னே பசலை திருந்தஇவ் வாறு குறைக்கின்றதே.

அம்பி. 245

எனவும்,

[மின் போன்ற தோழியே! முற்பிறப்பில் செய்த தீவினையால் என் அழகிய வனப்பு எனக்கும் அவருக்கும் பயன்படாமல் போமாறு, பசலை பாய்தலால் இவ்வாறு நாளும் குறைந்து வருகின்றதே. அவர் தந்த காமவிருப்பத்தை மீட்டும் நீக்கிக் கொள்ளும் உபாயத்தை அறிய முற்பிறப்பில் தவங்கள் செய்யாது போய்விட்டோமே!]

தன் துயர் தலைவற்கு உரைத்தல் வேண்டல் :

இன்னள் ஆயினள் நன்னுதல் என்றுஅவர்த்
துன்னச் சென்று செப்புநர்ப் பெறினே
நன்றுமன் வாழி தோழிநம் படப்பை
நீர்வார் பைம்புதல் கலித்த
மாரிப் பீரத்து அலர்சிலர் கொண்டே. குறுந். 98

எனவும்,

[தோழி! நம் மனைக்கொல்லையில் நீர் நிரம்பிய பசிய புதரில் செருக்கி வளர்ந்த மாரிக்காலத்துப் பீர்க்கம்பூக்கள் சிலவற்றைக் கொண்டு சென்று 'தலைவியின் நெற்றி இவ்வாறு பசலை பாய்ந்துவிட்டது' என்று அவரை அடைந்து அவரிடம் கூறுவார் உளராயின், அக்கூற்றுப் பெரும்பயன் தரும்.]

பாங்கி நின்குறை நீயே சென்று உரை என்றல் :

தேமாம் பொழில்தில்லைச் சிற்றம் பலத்துவிண் ணோர்வணங்க
நாம்ஆ தரிக்க நடம்பயில் வோனை நண் ணாதவரின்

வாமாண் கலைசெல்ல நின்றார் கிடந்தநம் அல்லல்கண்டால்
தாமா அறிகிலர் ஆயின்என் நாம்சொல்லும் தன்மைகளே.

திரு. 263

எனவும்,

[ஒட்டுமாம் பொழில்கள் நிறைந்த சிற்றம்பலத்தில் தேவர் வணங்கவும் நாம் விரும்பவும் நடனம் ஆடும் சிவ பெருமானை அடையாதவர் போல வருந்தும் நம் அல்லலை நம் தலைவர் தாமாக அறியாராயின், நாம் சொல்லுவதனால் யாது பயன் நிகழும்? அவரோ பலகலைகளிலும் பேரறிவு படைத்தவர், அவர் மனமே இதுவாயின், யாம் செயற்பாலது யாது?]

தலைமகள் அலர்பார்த்து உற்ற அச்சக்கிளவி :

அலர்ஆ யிரம்தந்து வந்தித்து மால்ஆ யிரம்கரத்தால்
அலர்ஆர் கழல்வழி பாடுசெய் தாற்குஅளவு இல்ஒளிகள்
அலரா இருக்கும்படைகொடுத்தோன் தில்லை யானருள்போன்று
அலராய் விளைகின்றது அம்பல்கைமிக்குஐய மெய்அருளே.

திரு. 180

எனவும்,

[ஐய! ஆயிரம்தாமரைகளை அருச்சித்துத் திருமால் ஆயிரம் கைகளால் தன் திருவடிகளில் வழிபாடுசெய்ய, ஒளிமிகும் சக்கரத்தைக் கொடுத்த தில்லைப் பெருமான் அருள்போன்று, உன் அருள் அம்பலாய் முகிழ்முகிழ்க்கப்பட்டிருந்த நிலையைக் கடந்து அலராய் ஊர் எங்கும் பரவிவிட்டது.]

தலைமகள் ஆறுபார்த்து உற்ற அச்சக்கிளவி :

தார்உறு கொன்றையன் தில்லைச் சடைமுடி யோன்கயிலை
நீர்உறு கான்யாறு அளவில நீந்திவந் தால்நினது
போர்உறு வேல்வயப் பொங்குஉரும் அஞ்சுக அஞ்சிவரும்
சூர்உறுசோலையின்வாய்வரற்பாற்றுஅன்றுதூங்குஇருளே.

திரு. 1

எனவும்,

[ஐய ! கொன்றைமாலை சூடிய சிவபெருமானின் கயிலையிலே நீர்மிக்க காட்டாறுகள் பலவற்றை நீந்திவந்தால், உன் வேலைக்கண்டு இடி வேண்டுமாயினும் அஞ்சும். பலரும் அஞ்சிக்கொண்டு வழிநடக்கும், தீண்டி வருந்தும் தெய்வங்கள் உடைய இச்சோலை செறிந்த இருளில் வரும் தகுதி உடையது அன்று.]

காமம் மிக்க கழிபடர் கிளவி :

மாதுஉற்ற மேனி வரைஉற்ற வில்லிதில் லைநகர்சூழ்
போதுஉற்றபூம்பொழில்காள்கழிகாள்எழில்புள்ளினங்காள்
ஏதுஉற்றுஅழிதிஎன்னீர்மன்னும்ஈர்ந்துறைவர்க்குஇவர்ஓர்
தீதுஉற்றதுஎன்னுக்குஎன்னீர்இதுவோநன்மைசெப்புமினே.

திரு. 174

எனவும்,

[பார்வதிபாகனாகிய மேருமலையை வில்லாக உடைய சிவபெருமானுடைய தில்லைநகரைச் சூழ்ந்த பொழில்காள்! கழிகாள்! பறவைகாள்! 'யாது காரணம் பற்றி வருந்துகிறாய்?' என்று கேட்கும் எண்ணம் உடையீர் அல்லீர். தலைவனிடம் 'இவர்கள் துன்புறுவது எதன்பொருட்டு?' என்று வினவகில்லீர். நீங்கள் உங்களோடு பழகிய எங்களுக்குச் செய்யக்கூடிய நன்மை இதுவோ? சொல்லுங்கள்.]

தலைவி தன்னுள் கையாறு எய்திடு கிளவி :

விண்தலை யாவர்க்கும் வேந்தர்வண் தில்லைமெல் அம்கழிசூழ்
கண்டலை யேகரி யாக்கன்னிப் புன்னைக் கலந்தகள்வர்க்
கண்டிலை யேவர கங்குல்எல் லாம்மங்குல் வாய்விளக்கும்
மண்டில மேபணி யாய்தமி யேற்குஒரு வாசகமே.

திரு. 177

எனவும்,

[தேவாதிதேவராம் சிவபெருமானுடைய தில்லையை ஒட்டிய உப்பங்கழிகளை அடுத்த கண்டல்புதர்களே சாட்சியாகப் புன்னைமர நிழலில் என்னைக் கூடிய தலைவர் வந்த

தனை, இரவு முழுதும் வானத்தில் இருந்து ஒளி வீசும் மதி மண்டிலமாகிய நீ கண்டாய் அல்லையோ ? தனித்து வருந்தும் எனக்கு ஒரு மறுமாற்றம் தருதல் ஆகாதோ?]

தலைமகள் நெறி விலக்குவித்தல் :

ஒருநாள் வரினும் உயர்பழி தூற்றும் உயர்சிலம்பில்
வருநாள் பலஉண்டு மாமலை நாடர் வரநினையும்
பெருநாள் ஒழிய இனிவரில் ஏதம் பிறக்கும்என்று
குருநாள்மலர்க்குழலாய்மொழிநீசென்றுகொற்றவர்க்கே.
அம்பி. 252

எனவும்,

[நிறமுடைய அன்றலர்ந்த மலர்சூடிய கூந்தலைஉடைய தோழி ! ஒருநாள் நம்மை நினைத்துக் குறியிடத்து வந்தாலும் மிக்க பழி தூற்றும் இம்மலையில். இதற்குமுன் பலநாள்கள் குறிவாய்ப்ப வந்துபோன கொற்றவனுக்கு இனி, நம் மலைநாடர் அவன் வரவைக் கருதும் திருமணநாளை விடுத்து வேற்றுநாளில் வரின் அவனுக்குத் தீங்கு நிகழும்என்பதனை நீ சென்று சொல்லுவாயாக.]

குறி விலக்குவித்தல் :

வளைவாய்ச் சிறுகிளை விளைதினை கடியச்
செல்களன் றுளே அன்னை சேண்எனச்
சொல்லில் எவனோ தோழி கொல்லை
நெடுங்கை வன்மான் கடும்பகை உழந்த
குறுங்கை இரும்புலிக் கொலைவல் ஏற்றைப்
பைங்கண் செந்நாய் படுபதம் பார்க்கும்
ஆர்இருள் நடுநாள் வருதி
சாரல் நாட வாரலோ எனினே, குறுந். 141

எனவும்,

[தோழி! தலைவனிடம், புனத்திலே யானையால் வருந்திய ஆண்புலி செந்நாய் தன்னிடம் அகப்படும் செவ்வியை எதிர்பார்த்துப் பதுங்கி இருக்கும். அரிய இருட்டை உடைய நடுஇரவிலே வருதல் வேண்டா. 'விளைந்த தினைப்புனத்தில் கதிர் கொய்யவரும் கிளிகளைக் கடியச் சேய்மையில் உள்ள தினைப்புனக்காவலைக் கொள்க' என்று அன்னை கூறியுள்ளாள். ஆதலின் பகற்குறி வாய்க்கும் என்று கூறுவாயாக]

வெறி விலக்குவித்தல் :

மின்னுஇ இடித்தென்ன அன்னைகொண் டாள்வெறி விந்தைமங்கை
மன்ஆண்மை மன்னிய வாணன்தென் மாறையில் வஞ்சி வண்டுயாழ்
என்னு அசுணம் இறைகொள்ளும் நாடன் எனக்குஅருளான்
முன்னுன் அருளிய நோய்தணிப் பான்இன்று மொய்குழலே.

தஞ்சை. 225

எனவும்,

[மொய்குழலே! வெற்றித்திருவின் கணவனுய் ஆண்மைக்கு இருப்பிடமான வாணனுடைய மாறையில் வண்டொலியை யாழ்ஒலி என்று கருதிச் செவிமடுத்தற்கு அசுணங்கள் வந்துதங்கும் நாட்டை உடைய தலைவன் தன் அருளால் எனக்கு அருளியுள்ள நோயைத் தணிப்ப, மின்னல் இன்றியே இடி தோன்றினுற்போல, எதிர்பார்த்தல் இன்றியே திடீரென்று வெறியாட்டிற்கு ஏற்பாடு செய்து விட்டாள் அன்னை.]

பிறர் விலக்குவித்தல் :

வருவன செல்வன தூதுகள் ஏதில வான்புலியூர்
ஒருவனது அன்பரின் இன்பக் கலவிகள் உள்உருகத்
தருவனசெய்துஎனது ஆவிகொண்டுஏகிஎன்நெஞ்சில்தம்மை
இருவின காதலர் ஏதுசெய் வான்இன்று இருக்கின்றதே.

திரு. 281

எனவும்,

[நொதுமலர் வரைதல்வேண்டி எமரிடம் அனுப்புவாரும் மகட்கேட்டுச் செல்வாரும் பலராய் உள்ளனர். புலியூரில் உள்ள சிவபெருமானுடைய அன்பர்களைப் போல இன்பப் புணர்ச்சிகளை மனம் உருகுமாறு அளித்து, என் உயிரைக் கொண்டு தாம் செல்லும்போது என் நெஞ்சில் தம்மை இருத்திச் சென்ற தலைவர் யாது செய்வதாக இன்று எண்ணம் கொண்டுள்ளாரோ? விரைவில் அவர் என்னை மணம் செய்து கொள்வதற்கு ஆம்வகை முயலுவாயாக.]

குரவரை வரைவு எதிர்கொள்ளுவித்தல் :

போற்றும் தினைவிளை யும்புனம் சாரல் புகர்முகத்துச்
சீற்றம் சிறந்த களிற்றுஉரு வாய்நம் மைத்தேடிவந்த
கூற்றம்கடிந்தநம்கோமான்வரைவுஎதிர்கொள்ளும்வண்ணம்
சாற்றும் திறம்என் கோலோதைய லாய்நம் தமர்களுக்கே.

அம்பி. 258

எனவரும்.

[தோழி! தினைவிளையும் புனத்திலே ஆண்யானை வடிவில் நம்மைக் கொல்ல வந்த யமனைவெருட்டிய நம்தலைவர் நம்மை மகட்பேசத் தமரை அனுப்பினால், அவர்களை எதிர்கொண்டு அழைத்து நமர் வரைவு ஏற்றுக்கொள்ளுமாறு செய்யத்தக்க உபாயம் யாது?]

இவற்றுள், பருவரல் வினவிய பாங்கிக்கு இறைவி அருமறை செவிலி அறிந்தமை கூறலும், அலர் பார்த்து உற்ற அச்சக்கிளவியும், ஆறுபார்த்து உற்ற அச்சக்கிளவியும், நெறி விலக்குவித்தலும், குறி விலக்குவித்தலும், வெறி விலக்குவித்தலும், பிற விலக்குவித்தலும், குரவரை வரைவு எதிர் கொள்ளுவித்தலும் ஆகிய எட்டும் அச்சத்திற்கும்,

தலைமகன் ஊர்க்குச் செலவு ஒருப்படுதலும், பாங்கி இறைவனைப் பழித்தலும், பூங்கொடி இறையோன் தன்னை

நேர்ந்து இயற்பட மொழிதலும் கவின் அழிபு உரைத்தலும் பாங்கி நின் குறை நீயே சென்று உரை என்றலும் ஆகிய ஐந்தும் உவர்த்தலுக்கும்,

தலைமகன் வருந்தொழிற்கு அருமை சாற்றலும், கனவு நலிபு உரைத்தலும், தன்துயர் தலைவற்கு உரைத்தல் வேண்டலும், காமம் மிக்க கழிபடர் கிளவியும், தன்னுள் கையாறு எய்திடு கிளவியும் ஆகிய ஐந்தும் ஆற்றாமைக்கும் உரியவாம்.

149

## வரைவுகடாதலின் வகை

522 பொய்த்தல் மறுத்தல் கழறல் மெய்த்தல்என்று
ஒருநால் வகைத்தே வரைவு கடாதல்.

இது நிறுத்தமுறையானே வரைவுகடாதல் கூறுவன வற்றுள் இஃது அதன்வகை இத்துணைத்து என்கின்றது.

(இ-ள்) : பொய்த்தல் முதலாக மெய்த்தல் ஈறாக நான்கு வகையினை உடைத்து வரைவு கடாதல் என்றவாறு.

150

## விளக்கம்

பொய்யாகப் படைத்துக் கூறுதல், தலைவன் வருகையை மறுத்துக் கூறுதல், தலைவன் வரையாது வருதலை இடித்து உரைத்தல், நிகழ்ச்சிகளை உண்மையாகக் கூறி விளக்குதல் என்ற நான்கும் தலைவன் தலைவியை வரையுமாறு அவனைப் பாங்கி வற்புறுத்தலுக்கு உரிய துறைகளாம்.

### ஒத்த நூற்பாக்கள்

### தொல்காப்பியம்

'ஆற்றது தீமையும் அறிவுறு கலக்கமும்
காப்பின் கடுமை கையற வரினும்
களனும் பொழுதும் வரைநிலை விலக்கிக்

*காதல் மிகுதி உளப்படப் பிறவும்*
*நாடும் ஊரும் இல்லும் குடியும்*
*பிறப்பும் சிறப்பும் இறப்ப நோக்கி*
*அவன்வயின் தோன்றிய கிளவியொடு தொகைஇ*
*அனை நிலை வகையான் வரைதல் வேண்டினும்*
*ஐயச் செய்கை தாய்க்குஎதிர் மறுத்துப்*
*பொய்என மாற்றி மெய்வழிக் கொடுப்பினும்*
*அவன்விலங் குறினும் களம்பெறக் காட்டினும்*
*பிறன்வரைவு ஆயினும் அவன்வரைவு மறுப்பினும் ...*
*வரைவுஉடன் பட்டோற் கடாவல் வேண்டினும் ....'*
தொல். பொ. 114

*முழுதும் —* ந. அ. 165

*'கரத்தல் மறுத்தல் கழறல் மெய்த்தல்என*
*உரைத்தகு நால்வகை வரைவு கடாதல்.'* மா. அ. 57
150

## வரைவுகடாதலின் விரி

523 வினவிய செவிலிக்கு மறைத்தமை விளம்பலும்[1]
அலர்அறி வுறுத்தலும்[2] தாய்அறி வுறுத்தலும்[3]
வெறிஅச் சுறுத்தலும்[4] பிறர்வரைவு உணர்த்தலும்[5]
வரைவுஎதிர்வுஉணர்த்தலும்[6] வரையும்நாள்உணர்த்தலும்[7]
அறிவுஅறி வுறுத்தலும்[8] குறிபெயர்த்து இடுதலும்[9]
பகல்வரு வானை இரவுவருக என்றலும்[10]
இரவுவரு வானைப் பகல்வருக என்றலும்[11]
பகலினும் இரவினும் பயின்றுவருக என்றலும்[12]
பகலினும் இரவினும் அகல்இவண் என்றலும்[13]
உரவோன் நாடும் ஊரும் குலனும்
மரபும் புகழும் வாய்மையும் கூறலும்[14]
ஆறுபார்த்து உற்ற அச்சம் கூறலும்[15]
ஆற்றாத் தன்மை ஆற்றக் கூறலும்[16]
காவல்மிக உரைத்தலும்[17] காமம்மிக உரைத்தலும்[18]

கனவுநலிபு உரைத்தலும்[19] கவின்அழிபு உரைத்தலும்[20]
எனமுறை நாடி இயம்பிய இருபதும்
வரைவு கடாதல் விரிஎனப் படுமே.

இது வரைவு கடாதலின் விரி இத்துணைத்து என்கின்றது.

(இ-ள்) வினவிய செவிலிக்கு மறைத்தமை விளம்பல் முதலாகக் கவின்அழிபு உரைத்தல் ஈறுகச் சொல்லப்பட்ட இருபதும் வரைவு கடாதல் விரி எனப்படும் என்றவாறு.

விளக்கம்

வரைவு கடாதல்—தலைவியை மணம் செய்துகொள்ளும்படி தலைவனைப் பாங்கி வற்புறுத்துதல்.

1 தலைவியின் வேறுபாட்டிற்குக் காரணம் என்ன என்று கேட்ட செவிலித்தாய்க்குத் தான் வேறு காரணம் காட்டிக்கூறியதைத் தலைவிக்குத் தோழி கூறுதல்.

2 பலர் கூறும் பழிமொழிகளைத் தலைவனுக்குப் பாங்கி தெரிவித்தல்.

3 களவொழுக்கத்தைத் தாய் அறிந்தனள் என்பதைத் தலைவனுக்குப் பாங்கி அறிவுறுத்துதல்.

4 வெறியாடுவித்தலைக் கூறித் தலைவனுக்குத் தோழி அச்சத்தை உண்டாக்குதல்.

5 தலைவியை அயலார் மணம்செய்துகொள்ள முயல்கின்றார்கள் என்பதைப் பாங்கி தலைவனுக்குச் சொல்லுதல்.

6 'நீ மணம் செய்துகோள்வதற்குரிய ஏற்பாடுகளோடு வரின் எமர் ஏற்றுக்கொள்வர்' என்று தோழி தலைவனுக்கு உரைத்தல்.

7 மணம் செய்து கொள்வதற்குரியகாலம் இஃது என்பதனைப் பாங்கி தலைவனுக்கு உணர்த்துதல்.

8 தலைமகளுடைய மூதறிவைப் பாங்கி தலைவனுக்கு அறிவித்தல்.

9 தோழி குறியிடத்தை மாற்றுதல்.

10 பகலில் வருகின்ற தலைவனை 'இரவில் வருக' என்று குறிப்பிடுதல்.

11 இரவில் வரும் தலைவனைப் 'பகலில் வருக' என்று வேண்டுதல்.

12 'பகல் இரவு என்ற இருவேளையும் அடிக்கடி வருக' என்று வேண்டுதல்.

13 'பகலினும் இரவினும் இவ்விடத்தினின்றும் நீங்குவாயாக' என்றல்.

14 'நீ இங்ஙனம் வரையாது வந்து ஒழுகுவது உன்னுடைய நாடு ஊர் குலம் என்பனவற்றின் பெருமைக்குத் தகாது' என்று பாங்கி தலைவனுக்குக் கூறுதல்.

15 வரும் வழியின் துன்பத்தை நினைத்துத் தலைவி அஞ்சுதலைப் பாங்கி தலைவனுக்குக் கூறுதல்.

16 தலைவியின் பொறுக்கமுடியாத தன்மையைப் பாங்கி தலைவனுக்கு மிகக் கூறுதல்.

17 தலைவி இல்லத்தைவிட்டு இருவகைக் குறிக்கும் வெளியே வர இயலாத நிலையில் இல்லத்தவர் தலைவியைப் புறம் போகாதவாறு காக்கும் திறம் மிகுதியும் உள்ளவாற்றைத் தோழி தலைவற்குக் கூறுதல்.

18 தலைவியின் காமம் தாங்க இயலாததாகி உள்ள நிலையைத் தோழி தலைவற்குக் கூறுதல்.

19 கனவு தலைவியைத் துன்புறுத்துமாற்றைத் தோழி தலைவற்குக் கூறுதல்.

20 தலைவியின் அழகு நாளும் அழியுமாற்றைத் தோழி தலைவற்குக் கூறுதல்.

ஒத்த நூற்பாக்கள் :

'வருத்தம் கூறல் அவன் மறுத்து உரைத்தல்
உள்ளது கூறல் ஏதம் கூறல்
பகல்வரல் என்றல் தொழுதுஇரந்து உரைத்தல்
சிறைப்புறம் கூறல் மந்திமேல் வைத்தல்
கண்துயி லாமை கண்டார் உரைத்தல்
பகலுடம் பட்டாள்போன்று இரவரல் என்றல்
இரவுஉடன் பட்டாள்போன்று பகல்வரல் என்றல்
இரவும் பகலும் வரவுஒழிக என்றல்
காலம் கூறல் கூறுவிக் குற்றல்
செலவு கூறல் பொலிவுஅழிவு உரைத்தல் என்று
ஈரெண் கிளவியும் இயம்புங் காலை
வார்அணி முலையாய் வரைவு முடுக்கம்.'

திருக்கோவை, மு. வீ. கள. 22

முழுதும் — ந. அ. 166

'வருநெறி நினைந்து வாரல் என்றலும்
காப்புஇடை யீட்டின் கையறு கிளவியும்
வருக என்றலும் வாரல் என்றலும்
படைத்து மொழிதலும் குடித்திறம் கூறலும்
அரிவையை இன்றுயான் அறிந்தேன் என்றலோடு
உரியன கிளந்த பிறவும் தொகைஇ
வரைவு கடாதல் ஆகும் என்மனார்.' த. நெ. வி. 19

'சேடி வினவிய செவிலிக்கு மறைத்தமை
ஆடவற்கு இயம்பலும் அலர்அறி வுறுத்தலும்
நற்றாய் உணர்ந்தமை நட்புற உணர்த்தலும்
வெற்றி வேலவன் வெறிஅச் சுறுத்தலும்
உரைபயில் பிறர்வரைவு உணர்த்தலும் அதன்பின்

வரைவுஎதிர்வு உணர்த்தலும் வரையும்நாள் உணர்த்தலும்
தலைமகள் அறிவு தலைமகற்கு உணர்த்தலும்
இகல்அறக் குறித்த இடம்பெயர்த் திடுதலும்
பகல்வரு வானை இரவுவரல் என்றலும்
இரவுவரு வானைப் பகல்வரல் என்றலும்
இருபொழு தினும்இடை விடாதுவரல் என்றலும்
கொற்றவன் நாடும் ஊரும் குலனும்
மற்றவன் புகழும் வாய்மையும் கூறலும்
ஆற்றிடை ஊறினது அச்சம் கூறலும்
ஆற்றுத் தன்மைக்கு அருமருந்து உரைத்தலும்
காவல் மிகலொடு காமம்மிகல் உரைத்தலும்
கனவின் நலிவொடு கவின்அழிவு உரைத்தலும்
ஆய முறைபயில் அறுமூன் றும் ஒன்றும்
மேய வரைவு கடாதலின் விரியே.' மா. அ. 58]

வினவிய செவிலிக்கு மறைத்தமை விளம்பல் :

சுளைஆர் பொழில்துவரைத்தொண்டைமான்கப்பல் சூழ்துறைவா
இளையாள் வருந்துவது என்னைஎன் றுள்அன்னை யாம்இருந்து
விளையாடு சிற்றிலை வெண்தலைத் தெண்திரை வேலைஎற்றும்
வளையாலழித்ததுஎன்றுள்என்செய்வாள்பின்னைவாள் நுதலே.
கப்பல் 196

எனவும்,

[பலாக்கனிகளோடு கூடிய சோலைகளை உடைய துவராபதி மன்னனான தொண்டைமானுடைய கப்பல் என்ற ஊரைச்சார்ந்த கடல் துறைவனே! என் தாய் தலைவியை 'நீ வருந்தும் காரணம் என்ன?' என்று வினவினாள். 'யாங்கள் தங்கி விளையாடிக்கொண்டு கட்டிய மணல்வீட்டைக் கடல் அலை எற்றிய சங்குகள் அழித்ததனால் ஏற்பட்ட வருத்தம்' என்று அவ்வாள் நுதலி குறிப்பிட்டாள். பின்னர் யாது கூறல் வல்லாள் ?]

அலர் அறிவுத்தல் :

சுற்றும் சடைக்கற்றைச் சிற்றம் பலவர்த் தொழாதுதொல்சீர்
கற்றும் அறியல ரின்சிலம் பா இடை நைவதுகண்டு
ஏற்றும் திரையின் அமிர்தை இனித்தமர் இல்செறிப்பார்
மற்றும் சிலபல சீறூர் பகர்பெரு வார்த்தைகளே. திரு 134

எனவும்,

[சிலம்பா! சடைமுடியோனாகிய சிற்றம்பலவனைத் தொழாது பலநூல்களைக் கற்றும் அறிவற்றிருப்பார் வருந்துவதுபோல, தலைவியின் இடை வருந்துவதுகண்டு, கடல் அமுதம்போன்ற அவளை இனித் தமர் இல்லில் செறித்து வைப்பர். மேலும் ஊரவர் சிலபல வார்த்தைகளைப் பழிச் சொற்களாகப் பேசுகின்றனர்.]

தாய் அறிவுறுத்தல் :

பனித்துண்டம் சூடும் படர்சடை அம்பல வன்உலகம்
தனித்துஉண்டவன்தொழும்தாளோன்கயிலைப்பயில்சிலம்பா
கனித்தொண்டைவாய்ச்சிகதிர்முலைப்பாரிப்புக்கண்டழிவுற்று
இனிக்கண்டிலம்பற்றுச்சிற்றிடைக்குஎன்றஞ்சும்எம்மனையே.
திரு. 132

எனவும்,

[பிறை சூடி, உலகை உண்ட திருமால் தொழும் திருவடிகளையுடைய சிவபெருமானின் கயிலைமலையில் பழகும் தலைவனே! தலைவியின் நகிலது பாரிப்பைக்கண்டு மனம்வருந்தி, எம் அன்னை 'இவள்சிற்றிடைக்குப் பற்றுக்கோடு இல்லையே' என்று அஞ்சினாள்.]

வெறி அச்சுறுத்தல் :

மைஉற்றநீலக்கண்மாமங்கைகோன்தஞ்சைவாணன்வெற்பின்
நெய்யுற்ற வேல்அன்ப நீதணி யாமையின் நெஞ்சத்துள்ளே

ஐயுற்று அயர்வுற்றுஎம் அன்னையும் யாயும்என் ஆரணங்கின்
மெய்யுற்ற நோய்தணிப் பான்வெறி யாடல் விரும்பினரே.

தஞ்சை. 231

எனவும்,

[நீலம்அன்ன கண்களை உடைய திருமகள் தலைவனான தஞ்சை வாணன் மலையில், நெய் பூசிய வேலைஉடைய அன்பனே! நீ போக்காமையின் மனத்துள்ளே ஐயுற்றுவாடி என் அன்னையும் நற்றாயும் தலைவியின் உடலில்ஏற்பட்ட நோயைப் போக்குதற்கு வெறியாடுதலை விரும்பியுள்ளனர்.]

பிறர் வரைவு உணர்த்தல் :

மணிஅக்கு அணியும் பரன்நஞ்சம் அஞ்சி மறுகிவிண்ணோர்
பணியக் கருணை தரும்பரன் தில்லைஅன் னாள்திறத்துத்
துணியக் கருதுவது இன்றே துணிதுறை வாநிறைபொன்
அணியக் கருதுகின் றார்பலர் மேன்மேல் அயலவரே.

திரு. 195

எனவும்,

[துறைவா ! அக்குமணி யணிபவனாய், விடத்தைக் கண்டவுடன் விண்ணோர்களால் பணியப்பட்டவன் ஆகிய சிவபெருமானின் தில்லையை ஒப்பாள் திறத்துத் துணிந்து செய்யவேண்டியதனை இன்றே துணிவாயாக. அயலார் பலரும் இவளை மகட்பேசி மூலவிலை அளிக்க முன்வந்துள்ளனர்.]

வரைவு எதிர் உணர்த்தல் :

வழியும் அதுஅன்னை என்னின் மகிழும்வந்து எந்தையும்நின்
மொழியின் வழிநிற்கும் சுற்றம்முன் னேவயம் அம்பலத்துக்
குழிஉம்பர் ஏத்தும்எம் கூத்தன்குற் றாலம்முற் றும்அறியக்
கெழிஉம் மவேபணைத் தோள்பல என்னோ கிளக்கின்றதே.

திரு. 235

எனவும் வரும்.

கெழீஇய 'கெழி' என விகாரமாய் நின்றது; உம்ம உம்மன என உளப்பாட்டுத் தன்மையாய் நின்றது.

[அம்பலத்தில் கூடித்தேவர் ஏத்தும் சிவபெருமானுடைய குற்றாலம் முழுதும் அறியத் தலைவியின் தோள்கள் அவளோடு தொடர்புடைய உனக்கே உரியவாகும். மணந்து அவளை உன்னவள் ஆக்குதலே நேரியவழி என்னைவிட என் தாயும் மகிழ்வாள். எந்தையும் உன்வேண்டுகோளுக்கு இசைவான். உறவினர் முன்னமேயே உன்வசப்பட்டுள்ளனர். இவ்வாறாக யான் பல கூறுவது எதற்காக? உடனே தலைவியை வரைந்து கொள்ளுதற்கு ஆவன செய்வாயாக.]

வரையும் நாள் உணர்த்தல் :

மைஆர் கதலி வனத்து வருக்கைப் பழம்வீழுதேன்
எய்யாது அயின்றுஇள மந்திகள் சோரும் இருஞ்சிலம்பா
மெய்யா அரியதென் அம்பலத் தான்மதி ஊர்கொள்வெற்பின்
மொய்ஆர்வளர்இளவேங்கைபொன்மாலையின்முன்னினவே.

திரு. 262

எனவும்,

[இப்பாடல் அகநானூற்று இரண்டாம் பாடலின் கருத்தைக் கொண்டது. வாழைத் தோட்டத்தில் வருக்கைப்பலாப் பழத்திலிருந்து பெருக்கெடுத்து ஓடும் தேனை அறியாது உண்டு இளைய மந்திகள் மயங்கும் மலைநாடனே! அம்பலத்தானுக்கு உரிய மதியத்தை ஊர்கோள் சுற்றும் மலையிலே, இளவேங்கைகள் பொன்மாலை போலப் பூத்துவிட்டன. வேங்கை பூக்கும்காலம் தினைக்கதிர் அரியும்காலம். தினைக் கதிர் அரியப்படவே, தினைக்காவல் இன்று ஆதலின், பகற்குறி வாயாது; நிலா பகல்போல ஒளிவிடுவதனால், இரவுக்குறியும் வாயாது; ஆதலின் தலைவியை மணந்துகொண்டே இன்பம் துய்க்கவேண்டும். அதற்கு வேண்டிய நிறைமதி நாளும் அண்மையில் வந்துவிடும் என்பது.]

தலைமகள் அறிவு தலைமகற்கு அறிவுறுத்தல் :

தன்னையும்தோளையும்தோளில்நில்லாவரிச்சங்கையும்கண்டு
உன்னைஅங்குழைதும்உறுபழிநாணிஉளம்கிடந்த
அன்னையும் சேரியும் ஆயத்துஉள் ளாரும் அயலும்அன்றி
என்னையும் கூடவெற் பாமறைத் தாள்என் இளங்கொடியே.
அம்பி. 266

எனவும் வரும்.

[வெற்பா! தன் மனத்தில் பெருமதிப்பிற்கு இலக்காக உள்ள தன் தாய், சேரியோர், ஆயத்தவர், அயலார் இவரையன்றி என்னையும்கூட, நம்தலைவி, 'உன்னைப்பழி தூற்றுவோமோ?' என்பதற்கு நாணித் தன் நிலையையும் மெலிந்த தோள் நிலையையும், தோளில் சங்குவளை நில்லாது கழலும் நிலையையும், யாங்கள் அறியாதபடி மறைத்துவிட்டாள்.]

குறிபெயர்த்திடுதல் :

வாம்மான் உகளும் மணிவரைச் சாரலில் யாம்வளர்த்த
பூமா தவிமீது பூஞ்சிலம் பாபுல்ல நீநினையின்
தேன்மாலை மென்குழ லார்செறி யாஅருஞ் சேண்நெறிக்கண்
நீமாறி வேறுஒரு நீழல்உண் டாக நினைந்தருளே. அம்பி. 267

எனவரும்.

இஃது இருவகைக்குறிக்கும் ஏற்குமாறு உணர்க.

[அழகிய மலைநாடனே! மான்கள் தாவித்திரியும் மலைச் சாரலில், யாம் வளர்த்த தலைவியை நீ புல்லுதலை விரும்பினால், மகளிர் போக்குவரத்து இல்லாத அரிய தூரமான வழியிலே, இப்பொழுது நீ குறித்துக்கொண்டுள்ள குறியை விடுத்து வேறு ஒரு குறியிடத்தைக் கருதிச் சொல்வாயாக]

பகல் வருவானை இரவு வருக என்றல் :

களிறுஉற்ற செல்லல் களைவயின் பெண்மரம் கைஞ்ஞெரித்துப்
பிளிறுற்ற வானப் பெருவரை நாட பெடைநடையோடு

ஒளிறுற்ற மேனியன் சிற்றம் பலம்நெஞ்சு உறாதவர்போல்
வெளிறுஉற்ற வான்பழி யாம்பகல் நீசெய்யும் எம்அருளே.

திரு. 254

எனவும்,

[இப்பாடல் முதல் இரண்டடிகளின் கருத்து அகநானூற்று எட்டாம் பாடற்கண் உள்ளது.

பள்ளத்தில் வீழுந்த யானையின் துயரைத்தீர்த்து அதனை மேல் கொண்டுவரப் பெண்யானைகள் மரங்களை முறித்துப் படியாக அமைத்துப் பிளிறும் பெருவரை நாடனே! பார்வதி பாகனுன சிவபெருமானின் சிற்றம்பலத்தை மனத்தில் கொள்ளாதவர்களைப்போல, பகலில் நீ செய்யும் அருளிச்செய்கை, வீணுகப் பயனற்ற பழியைத்தருவதாகும்.]

இரவு வருவானைப் பகல் வருக என்றல் :

கடந்தொறும் வாரண வல்சியின் நாடிப்பல சீயம்கங்குல்
இடந்தொறும் பார்க்கும் இயவுஒரு நீஎழில் வேலின்வந்தால்
படந்தொறும் தீஅர வன்அம் பலம்பணி யாரின்எம்மைத்
தொடர்ந்தொறும் துன்புஎன் பதேமன்ன நின்அருள் தோன்றுவதே.

திரு. 253

எனவும்,

[மன்ன! 'காடுகள்தோறும் யானைகளாகிய உணவைத் தேடிச் சிங்கங்கள் இரவில் பலஇடங்களையும் பார்க்கும் வழியில், கையில் வேல் ஏந்தி நீ தன்னந்தனியாக வந்தால், பாம்பை அணியும் சிவபெருமானின் அம்பலத்தைப் பணியாதவர்களைப்போல, எம்மைத் துன்பம் தொடர்ந்து வருத்தும். நீ இரவில்வந்து அருள்செய்யும் செயல் இது.]

பகலினும் இரவினும் பயின்று வருக என்றல் :

கங்குல் கலைநிறை திங்களும் காலைக் கமலமும்நின்
துங்கப் புயத்தை வெறுப்பவந் தால்என் சொரிமதத்து

வெங்கைக் களிற்று மருப்பைப் பறித்து அதன் வேர்அருந்தும்
சிங்கத் தடஅருவிச் சிலம் பா இன்று சேரின்நன்றே.
அம்பி. 271

எனவும்,

[மதம் சொரியும் யானையின் தந்தங்களைப் பறித்து அதன்வேரை உண்ணும் சிங்கங்கள் சேரும் பெரிய அருவிகளை உடைய சிலம்பனே! இன்றுமுதல் திங்களும் கமலமும் போலும் முகத்தாள் உன்புயத்தைத் தழுவுமாறு திங்கள் சிறக்கும் இரவும், கமலம் சிறக்கும் பகலும் வருவாயாக.]

பகலினும் இரவினும் அகல்இவண் என்றல் :

சுழியா வருபெருநீர்சென்னிவைத்துஎன்னைத்தன்தொழும்பில்
கழியா அருள்வைத்த சிற்றம் பலவன் கரம்தருமான்
விழியா வரும்புரி மென்குழ லாள்திறத்து ஐயமெய்யே
பழியாம் பகல்வரின் நீஇரவு ஏதும் பயன்இல்லையே. திரு. 261

எனவும்,

[ஐய! சுழித்து வரும் கங்கையைத் தன் தலையில் வைத்து என்னைத்தன் அடிமைக்கண் பொருந்துமாறு அருள் செய்த சிற்றம்பலத்தான் கையில் உள்ள மான்போல விழிக்கும் தலைவி திறத்து நீ பகல் வரின் பழி ஏற்படும்; இரவில் வரின் அவளைக்காணும் வாய்ப்பு உனக்குக் கிட்டாது; ஆதலின் ஏதும் பயன் இன்று.]

உரவோன் நாடும் ஊரும் குலனும் மரபும் புகழும்
வாய்மையும் கூறல் :

குறைவிற்கும்கல்விக்கும்செல்விற்குநின்குலத்திற்கும்வந்தோர்
நிறைவிற்கும் மேதகு நீதிக்கும் ஏற்பின்அல் லால்நினையின்
இறைவில் குலாம்வரை ஏந்திவண் தில்லையன் ஏழ்பொழிலும்
உறைவில் குலாம்நுத லாள்விலை யோமெய்ம்மை ஓதுநர்க்கே.
திரு. 266

எனவும்,

[தலைவனுய் மேருவை வில்லாக வளைத்த சிவபெருமானின் ஏழு உலகும், வில்போன்ற நெற்றியை உடைய தலைவிக்கு விலையாகா எனினும், நீ அவளை விரும்பும் இன்றியமையாமையையும் நின் கல்வியையும் செல்வநிறைவையும் குலப் பெருமையையும் மகட்பேச வந்தவர் பெருமையையும் மேம்பட்ட செய்ந்நன்றி அறிதலாகிய நீதியையும் நோக்கி, நினக்குத் தலைவியை மகட்கொடுத்தலுக்கு ஒருப்படுவர்.]

ஆறுபார்த்து உற்ற அச்சம் கூறல் :

பற்றுஒன்று இலார்பற்றும் தில்லைப் பரன்பரங் குன்றில்நின்ற
புற்றுஒன்று அரவன் புதல்வன் எனநீ புகுந்துநின்றால்
மல்துன்ற மாமலர் இட்டுஉன்னை வாழ்த்திவந் தித்தல்அன்றி
மற்றுஒன்று சிந்திப் பரேல்வல் லளோமங்கை வாழ்வகையே.
திரு. 178

எனவும்,

[பற்றற்றவர் பற்றும் சிற்றம்பலத்தானின் பரங்குன்றில் நின்ற சிவபெருமான்புதல்வனாகிய முருகனைப்போல நீ வந்து நின்றால், சிறந்த மலர்தூவி உன்னை வாழ்த்தி வழிபடுவாராயின் நன்று. நினக்கு ஏதேனும் ஊறுசெய்ய மலைவாழ்நர் கருதுவர் ஆயின், தலைவிக்குப்பிறகு வாழ வழியில்லை.]

ஆற்றுத் தன்மை ஆற்றக் கூறல் :

எழுங்குலை வாழையின் இன்கனி தின்றுஇள மந்திஅந்தண்
செழுங்குலை வாழை நிழலில் துயில்சிலம் பாமுனைமேல்
உழும்கொலை வேல்திருச் சிற்றம் பலவரை உன்னலர்போல்
அழுங்குலை வேல்அன்ன கண்ணிக்குஎன் னோநின் அருள்வகையே.
திரு. 250

எனவும்,

[வாழைக்கனியை உண்ட இளமந்தி செழுங்குலையை உடைய வாழைநிழலில் உறங்கும் வெற்பனே! சிற்றம்பலத்தானை நினையாதவரைப்போல வருந்தும் என்வேற்கண்ணள் ஆகிய தலைவிக்கு நீ அருளுகின்ற வகைதான் யாதோ?]

காவல்மிக உரைத்தல் :

நறைக்கண்மலிகொன்றை யோன் நின்றுநாடகம் ஆடு தில்லைச்
சிறைக்கண் மலிபுனல் சீர் நகர் காக்கும்செவ் வேல்இளைஞர்
பறைக்கண்படும்படுந்தோறும்படாமுலைப்பைந்தொடியாள்
கறைக்கண் மலிகதிர் வேல்கண் படாது கலங்கினவே.
திரு. 258

எனவும்,

[கொன்றையான் ஆகிய சிவபெருமானின் தில்லைநகர் காக்கும் செவ்வேல் இளையவர்களின் கைப்பறை அடிக்கப் படுந்தோறும், குருதிக்கறை படிந்த வேல்போன்ற தலைவி யினுடைய கண்கள் உறங்காது கலங்கின.]

காமம் மிகஉரைத்தல் :

வேரல் வேலி வேர்க்கோள் பலவின்
சாரல் நாட செவ்வியை ஆகுமதி
யார்அஃது அறிந்திசி னோரே சாரல்
சிறுகோட்டுப் பெரும்பழம் தூங்கி யாங்குஇவள்
உயிர்தவச் சிறிது காமமோ பெரிதே. குறுந். 18

எனவும்,

[மூங்கிலை வேலியாகஉடைய பலாத்தோட்டம் நிறைந்த மலைச்சரிவை உடைய வெற்ப! நீ என்றும் தலைவிக்குச் செவ்வி எளியையாய் இருப்பாயாக. சாரலிலே பலாவின் சிறிய கிளையிலே பெரிய பலாப்பழம் தொங்குவதுபோல, இவள் சிறிய உயிரைப் பெரிய காமம் பற்றிக்கொண்டிருக் கிறது. இவளுக்கு யாது நிகழுமோ? யார் அறிய வல்லார்?

கனவு நலிபு உரைத்தல் :

அரவும் களிறும் அணங்கும் உலாவும் அருநெறிநீ
வரவும் குறியிடை வந்துஎதிர் புல்லவும் வல்லிநலம்
பரவும் பணிமொழி உள்ளம் படுக்கவும் பாயல்இடை
விரவும் கனவை நனவுஎன்று பாவம் விழித்தனளே.

எனவும், அம்பி.276

[பாம்பும் பேயும் தீண்டி வருத்தும் தெய்வங்களும் உலாவும் அரிய மலைவழியிலே நீ வருவது போலவும், குறிக்கண் வந்து தன்னைத் தழுவுவது போலவும், தலைவி மனத்தில் நினைத்துக்கொண்டே படுக்கையில் படுத்தாளாக, நினைப்பைப்போலவே கனவும் தோன்றிற்றாக, அதனை நனவு என்று கொண்டு கண் விழித்து உண்மையை உணர்ந்து வருந்துவாள் ஆயினள் ]

கவின் அழிபு உரைத்தல் :

வரும்மந்த மாருதம் வண்தமிழ் நாறும் மலயவெற்பா
தெருமந்த நெஞ்சில் திருஅனை யாள்திரு மார்புஅகலம்
பொரும்அந்த மென்முலை புல்லப் பெறாதபொன் போர்க்களன்போல்
அருமந்த வண்ணம் எலாம்அவ மேஇன்று அழிகின்றதே.

அம்பி.277

எனவும் வரும்.

[மந்த மாருதமும் தமிழும் தோன்றும் மலய மலைத் தலைவனே! மனம் சுழலும் திருமகள் போன்ற தலைவி உன் மார்பைத் தன்முலைகள் புல்லுதலைப் பெருமையால், பசலைபாய அருமையான அவள் பொன்னிறம் இன்று பயன் அற்று அழிகின்றது.]

இவற்றுள், வினவிய செவிலிக்கு மறைத்தமை விளம்பல் முதலாகப் பிறர்வரைவு உணர்த்தல் ஈறாகச் சொல்லப்பட்ட ஐந்தும் பொய்த்தற்கும், குறி பெயர்த்திடுதல் முதலாகப் பகலிலும் இரவிலும் அகல்இவண் என்றல் ஈறாகச் சொல்லப் பட்ட ஐந்தும் மறுத்தற்கும், உரவோன் நாடும் ஊரும் குலனும் மரபும் புகழும் வாய்மையும் கூறலாகிய ஒன்றும் கழறற்கும்,

வரைவு எதிர் உணர்த்தலும் வரையும் நாள் உணர்த்தலும் அறிவுறுத்தலும் ஆறுபார்த்து உற்ற அச்சம் கூறல் முதலாகிய ஆறும் ஆகிய ஒன்பதும் மெய்த்தற்கும் உரிய வாம்.

## ஒருவழித்தணத்தலின் வகை

524 செலவுஅறி வுறுத்தல்[1] செலவுஉடன் படாமை[2]
சேலவுஉடன் படுத்தல்[3] செலவுஉடன் படுதல்[4]
சென்றுழிக் கலங்கல்[5] தேற்றி ஆற்றுவித்தல்[6]
வந்துழி நொந்துஉரை[7] என்றுஎழு வகைத்தே
ஒன்றக் கூறிய ஒருவழித் தணத்தல்.

இது, நிறுத்தமுறையான ஒருவழித்தணத்தல் கூறுவன வற்றுள் இஃது அதன்வகை இத்துணைத்து என்கின்றது.

(இ-ள்) செலவு அறிவுறுத்தல் முதலாக வந்துழி நொந்து உரை ஈறுக ஏழுவகையினை உடைத்து, மேல்சொல் லிப்போந்த ஒருவழித் தணத்தல் என்றவாறு.

ஒருவழித்தணத்தல் நெட்டாறு சேறல் அன்றி, அணி மைக்கண் பிரிவு என்று கோடும்; என்னை?

'தாளான் எதிரும் பிரிவி ஞானும்' தொல். பொ. 105உரை. என்ப ஆகலின். 152

### விளக்கம்

இஃது இட்டுப்பிரிதல் எனவும் படும்.

1 தலைவன் தான் இட்டுப்பிரியச் சேர்தலை அறிவுறுத்தல்.

2 தோழி தலைவன்செலவிற்கு உடன்படாது மறுத்தல்.

3 தலைவன் காரணம் காட்டித் தான் செல்லவேண்டியதை வற்புறுத்தல்.

4 அதுகேட்டுத் தோழி தலைவனது செலவுக்கு உடன் படுதல்.

5 தலைவன் சென்றவழித் தலைவி கலங்குதல்.

6 தோழி தலைவியைத் தேற்றி ஆற்றுவித்தல்.

7 தலைவன் மீண்டு வந்தவழித் தோழி தலைவனிடம் நொந்து கூறுதல்.

ஒத்த நூற்பாக்கள்

முழுதும் — ந. அ. 167

'போக்குஅறி வுறுத்தல் போக்குஉடன் படாமை
போக்குஉடன் படுத்தல் போக்குஉடன் படுதல்
சென்றுழிக் கலங்கல் தேற்றி விடுதல்
எய்துழி நொந்துரைத் திடுதல்என்று ஏழ்வகை
உய்திறத்து ஓதிய ஒருவழித் தணத்தல்.' மா. அ. 59
152

## ஒருவழித்தணத்தலின் விரி

525 தன்பதிக்கு அகற்சி தலைவன் சாற்றலும்[1]
மென்சொல் பாங்கி விலக்கலும்[2] தலைவன்
நீங்கல் வேண்டலும்[3] பாங்கி விடுத்தலும்[4]
தலைவிக்கு அவன்செலவு உணர்த்தலும்[5] தலைவி
நெஞ்சொடு புலத்தலும்[6] சென்றோன் நீடலின்
காமம் மிக்க கழிபடர் கிளவியும்[7]
கோல்தொடிப் பாங்கி ஆற்றுவித் தலும்[8] அவன்
வந்தமை உணர்த்தலும்[9] வந்தோன் தன்னொடு
நொந்து வினாதலும்[10] வெந்திறல் வேலோன்
பாங்கியொடு நொந்து வினாதலும்[11] பாங்கி
இறைவியை ஆற்றுவித்து இருந்த அருமை
கூறலும்[12] என்னும் ஆறுஇரு கிளவியும்
ஒருவழித் தணத்தல் விரிஎனப் படுமே.

இஃது ஒருவழித் தணத்தலின் விரி இத்துணைத்து என்கின்றது.

(இ-ள்) தன்பதிக்கு அகற்சி தலைவன் சாற்றல் முதலாகப் பாங்கி இறைவியை ஆற்றுவித்து இருந்த அருமை

கூறல் ஈருகச் சொல்லப்பட்ட பன்னிரண்டு கிளவியும் ஒரு வழித் தணத்தலின் விரி என்று சொல்லுவர் புலவர் என்றவாறு.

## விளக்கம்

1 தலைவன் தன் ஊருக்குச் செல்லுதலைப் பாங்கிக்குக் கூறுதல்.

2 பாங்கி தலைவனை ஊருக்குச் செல்லாதவாறு விலக்குதல்.

3 தலைவன் 'ஊருக்குச் செல்லுதல் வேண்டும்' என்பதனை வேண்டல்.

4 பாங்கி தலைவனை ஊருக்குச் செல்ல விடுத்தல்.

5 பாங்கி தலைவிக்குத் தலைவன் தன் ஊருக்குச் சென்றதைத் தெரிவித்தல்.

6 தலைவி தன் மனத்தில் வருந்துதல்.

7 தலைவன் வருதற்குக் காலம் தாமதிக்கவே, காமத்தால் தலைவி வருந்துதல்.

8 பாங்கி தலைவியை ஆற்றுவித்தல்.

9 தலைவிக்குத் தலைவன் வந்த செய்தியைப் பாங்கி தெரிவித்தல்.

10 பாங்கி தலைவனிடம் அவனது பிரிவான் ஆகிய வருத்தத்தைத் தெரிவித்து மனம் வருந்தி வினவுதல்.

11 தலைவன் பாங்கியிடம் தன் வருத்தம் கூறி, அவள் தலைவியை ஆற்றுவித்துக்கொண்டிருந்த செய்தியை வினவுதல்.

12 தலைவியின் துன்பத்தைத் தான் தணித்துக்கொண்டிருந்த அருமையைப் பாங்கி தலைவனுக்குக் கூறுதல்.

ஒத்த நூற்பாக்கள்

‘ அகன்றணைவு கூறல் ஆழியொடு கேட்டல்
ஆழியொடு புலத்தல் அன்னமோடு ஆய்தல்
ஆழிக்கு உரைத்தல் ஆழி இழைத்தல்
சுடரொடு புலம்பல் பொழுதுகண்டு மயங்கல்
பையுள் எய்தல் பரிவுற்று உரைத்தல்
அன்னமோடு அழிதல் வரவுஉணர்ந்து உரைத்தல்
வருத்தம் கூறல் வருபதின் மூன்றும்
திருத்திய ஒருவழித் திறனு கும்மே.’

திருக்கோவை, மு,வீ.கள.20

முழுதும் — ந. அ. 168

‘ தலைவன் தன்பதிக்கு அகற்சி சாற்றலும்
சிலைநுதல் பாங்கி செலவு விலக்கலும்
நீங்கல் வேண்டலும் பாங்கி விடுத்தலும்
கோமகன் செலவினை இகுளை கூறலும்
பூமகள் நெஞ்சொடு புலந்து கூறலும்
சேம வேலவன் நீடலின் சேயிழை
காமம் மிக்க கழிபடர் கிளவியும்
அன்னமென் னடைதுயர் பாங்கி ஆற்றலும்
மன்னவன் வந்தமை மடந்தைக்கு உணர்த்தலும்
நுண்ணிடைப் பாங்கி நொந்து வினுதலும்
அண்ணலும் நொந்துஅவள் தன்னொடு வினுதலும்
அணங்கினைப் பாங்கி ஆற்றுவித்து இருந்தமை
இணங்கக் கூறலும் என்னும்முந் நான்கும்
ஒருவழித் தணத்தற்கு உரிய விரியே.’ மா. அ. 60

தன்பதிக்கு அகற்சி தலைவன் சாற்றல் :

ஒடிக்கும்கரும்பின்உடுக்குலம்தோன்றும்எம்ஊர்வயின்போய்
முடிக்கும் குறைஉண்டு நீஇசைந் தால்முழு முத்துஅலையும்

கொடிக்குங் குமமுலை வல்லிக்கு நீஇது கூறுசென்று
வடிக்கின்ற வேல்விழி யாய்வருகேன் இற்றை வைகல்சென்றே.
அம்பி 279

எனவும்,

[வேல்விழியாய்! கரும்பை ஒடிக்கும்போது விண்மீன்கள்போல முத்துக்கள் வெளிப்படும் எம்மூருக்குச் சென்று யான் இருந்து முடிக்கவேண்டிய காரியம் ஒன்று உண்டு இன்று என் ஊர் சென்று நாளை மீள்கிறேன். இதற்கு நீ இசைதல் வேண்டும். மேலும் நீ சென்று இதனை முத்தணியும் மார்பினளாகிய தலைவிக்குக் கூறுவாய்.]

மென்சொல் பாங்கி விலக்கல் :

அறையும் கடல்அன்ன அன்பின்எம் ஆவியின் நும்அரிய
குறைஇங்குஉமக்குமுடிப்பதுஉண்டேல்கொண்டகாதலுடன்
உறையும் பதிக்கண் ஒருப்பட்ட போதுநின் உள்ளம்செல்ல
இறையும் தவிர்க்ககில் லேன்எம் பிரான்நின்று எழுந்தருளே.
அம்பி. 280

எனவும்,

[தலைவ! கடலை ஒத்த அன்பினை உடைய எம் உயிராகிய தலைவியைவிட உமக்கு உம் காரியத்தை முடித்தல் அவசியமானால், காரியத்தில் விருப்பத்துடன் நீ உன் ஊருக்குச்செல்ல ஒருப்பட்டுச்செல்ல உள்ளம் கொண்டனையாயின், உன்னைச் சிறிதும் தடுக்கும் ஆற்றல் எனக்கு இல்லை. நீ புறப்படுவாயாக.]

தலைவன் நீங்கல் வேண்டல் :

உள்ளம் தடுப்ப வினையேன் எனைஇங்கு உறைபதிக்குத்
தள்ளும் பரிசு தலைக்கொண் டதுதணந் தாலும்வந்து
வெள்ளம் சுரும்பு விரும்புபைங் கோதை விளங்குஇழையாய்
நள்ளென் பகல்வரு வேன்ஒடுங் காஉள் நடுங்கலையே
அம்பி. 281

எனவும்,

[வண்டுகள் விரும்பும் கோதையை அணிந்த விளங் கிழைப் பாங்கியே! என்னை இங்கேயே இருக்குமாறு உள்ளம் தடுத்தாலும் என் ஊருக்கு என்னைச் செலுத்தும் அளவுக்கு ஒரு காரியம் உண்டு ஆதலின், உங்களைப் பிரிந்து என்ஊருக் குச் சென்றாலும் நடுப்பகலின்கண் மீண்டுவந்து விடுவேன்' ஆதலின் மனம் ஒடுங்கி நடுங்காதே.]

தலைவனைப் பாங்கி விடுத்தல் :

உமையாள் தலைவனை ஒன்றிய வாறுஇவள் உன்னைஅன்றி
அமையா நிலைமை அறிந்தனை யேல்அய லேபுயலின்
சுமையார் தடம்பொழில் சூடும்வெற் பாநின் துணிவைஎய்தி
எமைஆள எண்ணினை யேல்இன்று நாளை எழுந்தருளே.

அம்பி. 282

எனவும் வரும்.

[வானை அளாவிய பொழில்களை உடைய வெற்பா! பார்வதி சிவபெருமானைப் பொருந்தியதுபோல இவள் உன்னைஅன்றி உயிர்வாழ்தல் இயலாத நிலையை அறிந்தனை ஆயின், உன் ஊருக்குச்சென்று உன்செயலையும் முடித்து எம்மையும் காத்தலைக் கருதுவையாயின், இன்றோ நாளையோ உன்செயலை முடித்து விரைவில் மீண்டு வருவாயாக.]

இரவுநிலை உணர்த்தல் :

இருகாலும் இல்லை வலவனுக் கேனும் எழுபரித்தேர்க்கு
ஒருகால் ஒழிய ஒருகா லமும்இல்லை ஒண்சிலம்பா
குருகுஆறும் வாரிதி ஏழும்எண் குன்றமும் சூழ்ந்துஇரவி
வருகாலம் என்று கொல்அன்று நீயும் வருவதுவே.

அம்பி. 283

என இரவுநிலை உணர்த்தலும் இதன்பாற்படும்.

[சிலம்பா! சூரியனுடைய தேர்ப்பாகனுக்கு இரண்டு கால்களும் இல்லை. அவன் ஏழு குதிரைகள் பூட்டிய தேருக்கு ஒரு சக்கரமே உண்டு. மேலும் அது இராக்காலத்தில் ஓடாது

நாரைகள் பறக்கும். கடல்கள் ஏழனையும் குன்றங்கள் எட்டனையும் சுற்றிப் பின் கதிரவன் மீண்டும் உதித்துக் காட்சி வழங்கும் காலை நேரத்தில் நீயும் வந்துவிடு.]

பாங்கி தலைவிக்கு அவன்செலவு உணர்த்தல் :

கருநாள் மலர்க்குழல் காரிகை யாய்ஒரு காரணத்தால்
ஒருநாள் நமைவிட்டுஉறையவும்வேண்டினர்ஒன்றியநின்
பெருநாண் மடமை பிணிக்கப் பிணிப்புண்ட பேரறிவின்
மருநாள்மலர்த்தொங்கல்மன்னர்என்றேநம் வசம்ஒழிந்தே.
அம்பி. 284

எனவும்,

[மலர்க்குழல் காரிகையே! அவரோடு கூடிய உன் நாணமும் மடமும் தம் உள்ளத்தைப் பிணித்ததால் நின்னைப் பிரியாது உறைந்த, பேரறிவினை உடைய, மலர்மாலை அணிந்த நம் தலைவர், நம்மை விடுத்து ஒரு காரணத்தால் ஒருநாள் தம் ஊருக்குச் சென்று தங்குதலை வேண்டுகிறார்.]

தலைவி நெஞ்சொடு புலத்தல் :

அளித்துஅஞ்சல் என்றவர் நீப்பின் தெளித்தசொல்
தேறியார்க்கு உண்டோ தவறு. குறள் 1154

எனவும் வரும்.

ஒருநாள் பிரிய நினைத்தவர் நம்மை ஒழிந்தால்லை
வருநாள் மறக்கவும் வல்லர்அன் றேமறப் பார்நினைவார்
செருநாள் மலர்க்கணைத் திண்சிலை வேள்வந்து சிந்தும்எல்லை
அருநா ளுடன்எங்ஙன் ஆவியும் நாமும்இன்று ஆற்றுவதே.
அம்பி. 285

இதுவும் அது.

[நமக்கு அருள் செய்து 'அஞ்சாதீர்' என்று நம்மைத் தெளிவித்த தலைவனே பிரியின், அவன் சொல்லை நம்பியிருக்கும் நம்மேல் தவறு ஒன்றும் இல்லை.

நம்மொடு கூடியிருக்கும் காலத்திலேயே 'ஒருநாள் நம்மைவிட்டுப் பிரிய நினைக்கும் தலைவர், நம்மைப் பிரிந்த பின் மறுநாளில் நம்மை மறத்தற்கும் ஆற்றல் உடையவர். அவர் மறந்தபின்னர், நினைவை பறிகொடுத்த நாமும் நம் உயிரும், மலர்க்கணை தொடுக்கும் மன்மதன் அம்பு எய்யும் போது அரிய நாணத்தோடு எங்ஙனம் ஆற்றி இருத்தல் கூடும்?]

சென்றோன் நீடலின் காமம்மிக்க கழிபடர்கிளவி :

ஆரம் பரந்து திரைபொரு நீர்முகில் மீன்பரப்பிச்
சீர்அம் பரத்தில் திகழ்ந்துஒளி தோன்றும் துறைவர்சென்றார்
போரும் பரிசு புகன்றன ரோபுலி யூர்ப்புனிதன்
சீர்அம்பர் சுற்றிஎற் றிச்சிறந்து ஆர்க்கும் செறிகடலே.

திரு. 182

எனவரும். போதரும் பரிசு 'போரும் பரிசு' என விகாரமாய் நின்றது.

[புலியூரில் உள்ள சிவபெருமானது அழகிய அம்பர் என்ற ஊரைச்சுற்றிச் சிறந்து ஆரவாரிக்கும் கரையைக் கடவாத கடலே! முத்துப் பரந்து திரைகள் தம்முள் மோதும் கடல்நீர் முகிலையும் மீனையும் தன்கண் பரப்பி ஆகாயம்போல விளங்கி ஒளி தோன்றும் துறைவர் எம்மை விட்டுச் சென்ற போது, மீண்டு வரும் நேரத்தை உமக்குக் கூறினரோ? சொல்வாயாக.]

தலைவியைப் பாங்கி ஆற்றுவித்தல் :

அருகும் கலவி அளித்துஅகன் றார்அருள் இன்மைஎண்ணி
உருகும் தனிநெஞ்சம் உள்மகிழ் கூரவந்து ஒண்மதியைப்
பொருபைங் கதலியும் பூகமும் கன்னலும் பூவும்கொண்டு
வருகின்ற தால்அவர் ஊர்மலி நீர்நதி வாள்நுதலே.

அம்பி. 286

எனவரும்.

[வாள்நுதலே ! கலவி அளித்து நம்மை அகன்ற தலைவனுடைய அருளற்ற செயலை நினைத்து உருகும் உன்நெஞ்சம் மகிழுமாறு, வான் அளாவிய வாழை, பாக்கு, கரும்பு இவற்றையும் பூக்களையும் அடித்துக்கொண்டு அவர் ஊரிலிருந்து பெருகிவரும் ஆறு நம்மூர்க்கண் வெள்ளப்பெருக்கோடு காட்சி வழங்கி வருகின்றது.]

உரையிற் கோடலான், பாங்கி ஆற்றுவித்துழித் தலைவி நெஞ்சு நினைந்து இரங்கலும், நெஞ்சொடு கிளத்தலும், கடலொடு புலம்பலும், ஆற்றொடு புலம்பலும், புள்ளொடு புலம்பலும், கையறுகிளவியும், கூடல் இழைத்தலும், சூளுறவு பொய் என்றலும், மடமை கூறலும், தலைவி தன்னுள்ளே சொல்லுதலும் என்ற பத்தும் வரவும் பெறும். அவற்றுக்கு உதாரணம் பின்வருமாறு.

தலைவி நெஞ்சுநினைந்து இரங்கல் :

தேறாத அன்பினர் சென்றுழிச் சென்றான் சிந்தைகண்டு
மாறாது கூட வரநின்றதோ இங்கு வந்துஎன்வணம்
வேறா னதுகண்டு மீண்டது வோஅன்றி மாண்டதுவோ
வாறாது மையல்உற் றேன்அறி யேன்வந்து அடுத்ததுவே.
அம்பி. 287

எனவும்,

[தெளிந்த அன்பில்லாத தலைவர் சென்ற இடம் நோக்கிச் சென்ற மனம் அவரைப் பிரிந்துவர விரும்பாது அவரை அழைத்துக்கொண்டு அவருடன் வருதற்காக நின்றதுவோ? இங்கு வந்து என் நிறம் வேறானதுகண்டு அடையாளம் காண இயலாது மீண்டதுவோ? நீங்காத மயக்கமுற்ற யான் நிகழ்ந்த செய்தி ஒன்றும் அறியேன்.]

நெஞ்சொடு கிளத்தல் :

யாயும் கடலும் அலைப்பஇவ் வூரில்இங் க என்னைவைத்துப்
போய்அங்கு நம்மை மறந்தவர் பால்சென்று பூண்முலைமேல்
பாயும்கண் ணீரும் பசலையு மாய்நின்ற பாவிநெஞ்சே
நீஎன்சொன் ஞய்பின் அவர்என்சொன் ஞர்உன் நினைவுஅறிந்தே.

அம்பி 289

எனவும்,

[தாயும் கடலும் என்னைத் துன்புறுத்துமாறு என்னை இவ்வூரில் தனித்து இருக்குமாறு வைத்துவிட்டுத் தம் ஊருக்குப் போய் அங்கு நம்மை மறந்தவரிடம் சென்று, மார்பில் கண்ணீர் வடிய, உடல் முழுதும் பசலை பரக்க நின்ற என் நெஞ்சமே! நீ அவரிடம் யாது கூறிஞய்? அதற்கு உன் நினைவை உட்கொண்டு அவர் கூறிய மறுமாற்றம் யாது?]

கடலொடு புலம்பல் ;

அலிகொண்ட வெங்கனல் அம்புகொண்டு எய்தனர் அன்றியும்புன்
கவிகொண்டு நின்னைக் கடந்தனர் என்றுகொல் கன்றினர்தம்
புலிகொண்டு வண்புகழ் போர்ப்பவர் தேர்வழி தூர்ப்பதுநீ
குலிகொண்டல் உண்டுமிழ் தெண்திரை மோதும் குரைகடலே.

அம்பி. 290

எனவும்,

[மேகம் உட்கொண்டு உமிழ்ந்த நீர் பாய்தலால் தெள்ளிய அலைகள் வீசி மோதும் ஒலிக்கின்ற கடலே! என் தலைவர் பகைவர் நாட்டைக் கைக்கொண்டு பெரும் புகழால் உலகையே போர்த்திருப்பவர் ஆதலின், அவர் திருமாலின் அவதாரம் ஆவர். அவர் இராமனுய் அனல்அம்பு விட்டு உன்னைத் துன்புறுத்தினர் என்றும், குரக்குப்படையைக்கொண்டு நின் மீது அணைகட்டி நின்னைக் கடந்தனர் என்றும் போலும் அவரது தேர்சென்ற வழியை நின் அலைகளால் அழிக்கின்ருய் ]

ஆற்றொடு புலம்பல் :

மறைவந்துஎன் மேனிமணந்துஉயிர்வாடத்தணந்தசைநின்று
இறைவன் கொடுமை இயம்புதல் நாணி இரங்கிமெய்யை
நறைஉந் தியமலர்த் தூசான் மறைத்துஇந் நகர்ப்புறம்போம்
நிறைஉந்தி நீஎன்செய் வாய்இது வாகில்என் தீவினையே.
அம்பி. 291

எனவும்,

[களவில் வந்து என்னை மணந்து பின் பிரிந்து என் உயிரை வாட்டிய என் தலைவனுடைய கொடுமையை எனக்குக் கூறுதற்குக் கூசி மனம் இரங்கி உடம்பை மலர் ஆடையால் மறைத்து இவ்வூருக்கு வெளிப்புறத்திலேயே போய்க்கொண்டிருக்கும் நீர்ச்சுழி உடைய நதியே! என் தீவினையால் என் தலைவன் பிரிந்தானாக, நீ யாது செய்யவல்லை ?]

புள்ளொடு புலம்பல் ;

எம்கா தலர்செல்ல என்னைஇவ் வாறுகண்டு ஏசுமவர்
தம்கா தலரைத் தணந்துஅறி யார்கொல் மணந்துஉறையும்
செங்கானல் ஓதிமங் காள்கருங் கானல் சிறைஅன்றில்காள்
உம்கா தலர்செல்லின் நீர்உடன் போம்இக் குரம்பைவிட்டே.
அம்பி. 292

எனவும்,

[என் தலைவன் என்னைப்பிரிந்து சென்றானாக, என் நிலைமையைக்கண்டு என்னை எள்ளி நகையாடுபவர்கள் தம் கணவன்மார்களைப் பிரிந்து இருத்தலை அறியாதவர்கள்போலும்; கூடிவாழும் அன்னங்களே! கடற்கரைச் சோலையில் உள்ள அன்றில்களே! உம் தலைவர் பிரிந்து செல்வாராயின், நீங்கள் இக்கூடுகளை விட்டு, அவர்களுடனேயே பிரியாது சென்று விடுங்கள்.]

கையறு கிளவி :

நன்றே இனியவர் நண்பு நமக்கும் அவர்க்கும்உயிர்
ஒன்றே நினையில் உறையும்ஒன் றேஉயர்வெண்மணல்திண்
குன்றே குலஅன்ன மேகுரு கேநம் கொடிநெடுந்தேர்
அன்றே வருவல்என் றுர்இருந் தேன்மெய் வருந்தியுமே.

அம்பி. 294

எனவும்,

[மணற்குன்றே! அன்னங்களே! நாரைகாள்! தம்தேரில் ஊர் சென்று அன்றே மீண்டு வருவதாகத் தலைவர் கூறினார். அச்சொல்லை நம்பி மெய் வருந்தியும் ஆற்றி இருந்தேன். 'எனக்கும் அவருக்கும் உயிரும் ஒன்று; கூர்ந்து நோக்கின் உடலும் ஒன்று' என்று இருந்தேன். இனியவர் நட்பு நன்று!]

கூடல் இழைத்தல் :

முளைக்கும் பிறையை முனியும் திருநுதல் முத்துஅரும்ப
விளைக்கும் பசலை விழியிணை காட்ட விடாதஅண்டர்
கிளைக்கும் தெரிவுஅரு கேதகை நீழல் கிளிஇருந்து
வளைக்கும்சுழிக்கும்அழிக்கும்ஒண் கூடல்வளைக்கைகொண்டே

அம்பி. 295

எனவும்,

[பிறை நுதல் வேர்வு அரும்ப, விழிகள் பசலைபாய, தேவர்களும் காண்டல் இயலாத தாழையின் நிழலிலே கிளி போன்ற தலைவி இருந்து கூடல் சுழியை வளைப்பாள்; சுழிப் பாள்; பின் வளைக்கைகளால் அழிப்பாள். அவள் பெற்றி இது!]

சூளுறவு பொய் என்றல் :

புறம்தாழ் விரிசினைப் புன்னையங் கானல்மென் பூந்துறைவர்
சிறம்தாழ் கருங்கடல்தெய்வமும்தீதுகொல்சிந்தைமென்நாண்

துறந்துஆவிசோர்வதுஎன்என்றற்றைநாளுற்றசூள்முழுதும்
மறந்தார் இருக்க மறவாத எம்மை வருத்தியதே.

அம்பி. 297

எனவும்,

[விரிந்த கிளைகளை உடைய புன்னைமரச் சோலையை அடுத்த பூந்துறைவர் ஆகிய தலைவர் வணங்கும் கடல் தெய்வமும் நடுவுநிலை தவறுவதுதானோ? என் மனத்திடை நாணத்தைத் துறந்து நான் உயிர் சோர்வது ஏன்? அன்று தாம்செய்த சூளுறவை மறந்த தலைவரை விடுத்து, அத்தெய்வம் என்னை வாட்டுவது ஏனோ?]

மடமை கூறல் :

விடர்வாய் அரவை மிதித்து மதித்த விலங்குஅன்றியே
நடவா இரவில் நயந்தநம் காதலர் நம்மைஇனிக்
கடவார் எனநினைத் தேன்இவ்வன் ஆனதுஎன் கண்ணும்மெய்யும்
மடவார்அறிவதுஉண்டோஉரவோர்செயும்வன்கண்மையே.

அம்பி. 298

எனவும்,

[பிளப்பிடங்களிலுள்ள பாம்புகளையும் மிதித்துக் கொண்டு தீய விலங்குகளின் நடமாட்டத்தையும் பொருட்படுத்தாது இரவில் வந்து என்னைக் கூடிய தலைவன், என்னை இனிக் கைவிடமாட்டான் என நினைத்தேன். என் கண்களும் மெய்யும் இத்தகைய அழகு அழிநிலையை எய்திவிட்டன. அறிவுடையோர் செய்யும் கல்நெஞ்சச் செய்திகளை மடவார்கள் (பெண்கள், அறிவற்றவர்) யாங்கனம் அறிதல் கூடும்.?]

தலைவி தன்னுள்ளே சொல்லுதல் ;

மாயக் கலவி மணந்துஅகன் றூர்திரு மார்புஅகலம்
தோயப் பெறுது சுடுகின்ற மேனி துறந்தவர்தம்
தேயத்து நின்று வருநதி நீரில் திளைத்தனமேல்
சாயக் குளிரும்இன் றேஅவர் சாரல் தழைபடுத்தே.

அம்பி 299

எனவும் வரும்.

[களவுப்புணர்ச்சியில் என்னைக்கூடிப் பின் பிரிந்த தலைவருடைய மார்பைத் தோயாததனால் சுடும் உடல் என்னைப் பிரிந்த தலைவருடைய நாட்டிலிருந்து அவர் மலைப்பக்கத்துத் தழைகளைக் கொண்டு வரும் இனிய நீரில் குளித்தால் இன்றே வெப்பம் நீங்கக் குளிர்ச்சியைப் பெற்றுவிடும்.]

பாங்கி தலைமகட்குத் தலைமகன் வந்தமை உணர்த்தல் :

சந்துஆர் வனமுலை தங்கும் பசப்பும் தனிமையும்நின்
சிந்தா குலமும் சிதையும் படிசிறை வண்டினம்சேர்
கொந்துஆர் அலங்கல் குழல்அணங் கேதம் குறைமுடித்து
வந்தார் விரைய மணிநெடுந் தேர்இன்னம் மன்னவரே.

அம்பி. 300

எனவும்,

[வண்டுகள் மொய்க்கும் கூந்தலை உடைய தலைவியே! நின் முலைப்பசலையும் தனிமையும் நின் மனத்துயரும் நீங்கும் படி, நம் தலைவர் தாம் போன காரியத்தை முடித்துத் தம் மணி நெடுந்தேரில் ஏறி விரைவாக வந்துவிட்டார்.]

வந்தோன் தன்னொடு பாங்கி நொந்து வினாதல் :

வளரும்கறி அறி யாமந்தி தின்றுமம் மர்க்குஇடமாய்த்
தளரும் தடவரைத் தண்சிலம் பாதனது அங்கம்எங்கும்
விளரும் விழும்எழும் விம்மும் மெலியும்வெண் மாமதிநின்று
ஒளிரும் சடைமுடி யோன்புலி யூர்அன்ன ஒண்ணுதலே.

திரு. 193

எனவும்,

[மிளகை அறியாது உண்ட மந்தி மயக்கமுற்றுத் தளரும் மலைநாடனே! மதி சூடிய சிவபெருமானுடைய புலியூரை ஒத்த தலைவி தன் உடல்முழுதும் வெளுத்துப்போக விழுந்து எழுந்து விம்மி மெலிந்துள்ளாள்.]

தலைவன் பாங்கியொடு நொந்துவினாதல் :

ஐவாய் அரவுஉற்ற துஅன்னஇன் னுஇடர் ஆற்றிஎன்போல்
எவ்வாறு இருந்தனிர் எல்வளை யீர்எதிர்ந் தாரைவென்று
மைவாரணங்கொண்டவாணன்தென்மாறைமருவலர்போல்
ஒவ்வா அலரையும் கொண்டுஇரு வீரும் ஒருதனியே.

தஞ்சை. 258

எனவும்,

[ஒளி பொருந்திய வளையலை உடையீர்! பகைவரை வென்று அவர்கள் யானைகளைக் கைப்பற்றிய வாணன் தென் மாறையை அடையாதவர்களைப்போலப் பொருந்தாப் பழி மொழிகளை ஏற்றுக்கொண்டு நீங்கள் இருவீரும் தனியாக, ஐந்தலை நாகத்திடம் அகப்பட்டவர் போலப் பெருந்துன்பப் பட்டு, என் போல எவ்வாறு வருந்தி இருந்தீரோ?]

பாங்கி தலைவியை ஆற்றுவித்திருந்த அருமை சொல்லல் :

இவள்ஆ ருயிர்புரந்து யான்இருந் தேன்செக்கர் இந்துஎன்னப்
பவளா டவியில் பயில்நித் திலம்பங் கயம்துவியத்
தவளா தபம்சொரி தண்துறை வாதஞ்சை வாணன்தெவ்வின்
துவளாமல் ஆற்றுவி என்றுஎன்று நீசொன்ன சொல்நினைந்தே.

தஞ்சை. 259

எனவும் வரும்.

[செவ்வானிடைத் தோன்றிய சந்திரனைப் போலப் பவளக் காட்டில் இடையே பொருந்திய முத்துக்கள் தாமரை குவியுமாறு நிலாவைப்போன்ற வெள்ளிய கதிர்களைச் சொரியும் துறைவனே! 'தஞ்சைவாணனுடைய பகைவரைப் போல இவள் வருந்தாதபடி நீ ஆற்றுவித்துக்கொண்டு இருப்பாயாக' என்று நீ கூறிய சொற்களையே ஆதரமாகக் கொண்டு, இவளது அரிய உயிர் சோராதபடி நான் ஆற்றுவித்துக்கொண்டிருந்தேன்.]

இவற்றுள், தன்பதிக்கு அகற்சி தலைவன் சாற்றலும், பாங்கி தலைவிக்கு அவன் செலவு உணர்த்தலும் ஆகிய இரண்டும் செலவு அறிவுறுத்தலுக்கும்,

தலைமகளைப் பாங்கி விலக்கல் ஆகிய ஒன்றும் செலவு உடன்படாமைக்கும்,

நீங்கல்வேண்டல் ஆகிய ஒன்றும் செலவு உடன்படுத்தற்கும்,

பாங்கி விடுத்தல் ஆகிய ஒன்றும் செலவு உடன்படுதலுக்கும்,

தலைமகள் நெஞ்சொடு புலத்தலும், காமம் மிக்க கழிபடர் கிளவியும் ஆகிய இரண்டும் சென்றுழிக் கலங்கற்கும்,

தலைமகளைப் பாங்கி ஆற்றுவித்தலும், தலைமகன் வந்தமை தலைமகட்கு உணர்த்தலும் ஆகிய இரண்டும் தேற்றி ஆற்றுவித்தற்கும்,

பாங்கி வந்தோன்தன்னொடு நொந்து வினுதல் முதலாகிய மூன்றும் வந்துழி நொந்து உரைத்தற்கும் உரியவாம் என்றவாறு. 153

## வரைபொருட் பிரிதலின் வகை

526 பிரிவுஅறி வுறுத்தல்[1] பிரிவுஉடன் படாமை[2]
பிரிவுஉடன் படுத்தல்[3] பிரிவுஉடன் படுதல்[4]
பிரிவுழிக் கலங்கல்[5] வன்புறை[6] வன்பொறை[7]
வருவழிக் கலங்கல்[8] வந்துழி மகிழ்ச்சி[9] என்று
ஒருமையில் கூறிய ஒன்பது வகைத்தே
வரைவுஇடை வைத்துப் பொருள்வயின் பிரிவே.

இது, நிறுத்தமுறையானே வரைவு இடைவைத்துப் பொருள்வயின் பிரிதல் கூறுவனவற்றுள் இஃது அதன்வகை இத்துணைத்து என்கின்றது.

(இ-ள்) பிரிவு அறிவுறுத்தல் முதலாக வந்துழி மகிழ்ச்சி ஈறாக ஒன்பது வகையினை உடைத்தாம், வரைவு இடைவைத்துப் பொருள்வயின் பிரிதல் என்றவாறு. 154

## விளக்கம்

இஃது 'அருமை செய்து அயர்த்தல்' எனவும்படும். தமர் தேடிய செல்வம் பெரிதும் உடையன் ஆயினும், தலைவன் தானே தேடிவரும் பொருள்கொண்டே மணம் செய்து கோடல்வேண்டும் என்ற கருத்தான், இப்பிரிவை நாடு இடையிட்டும் காடு இடையிட்டும் மேற்கொள்வான் என்பது.

1 தலைவன் தன்பிரிவினைத் தோழிக்குத் தெரிவித்தல்.

2 தொடக்கத்தில் அவள் உடன்படாமை.

3 தலைவன் தனது பிரிவின் இன்றியமையாமையைத் தோழி உளம் கொள்ளுமாறு எடுத்துக்கூறுதல்.

4 தோழி தலைவன் பிரிவிற்கு உடன்படுதல்.

5 தலைவன் பிரிந்தவழித் தலைவி கலங்கல்.

6 தோழி தலைவியைக் களவு வெளிப்படாதவகை பிரிவுத் துயரைப் பொறுத்திருக்குமாறு வற்புறுத்துதல்.

7 தலைவி பொறுமையோடு ஆற்றி இருத்தல்.

8 தலைவன் வரும்வழியிலே கலக்கம் கொள்ளுதல்.

9 தலைவன் வந்தவழித் தலைவியும் தோழியும் மகிழ்தல்.

### ஒத்த நூற்பாக்கள்

முழுதும் — ந. அ. 169

'துறவுஅறி வுறுத்தல் துறவுஉடன் படாமை
துறவுஉடன் படுத்தல் துறவுஉடன் படுதல்
போயுழிக் கலங்கல்வன் பொறைவற் புறுத்தல்
வரும்வழிக் கலங்கல் வந்துழி மகிழ்ச்சியென்று
உரைபெறும் ஒன்பது வகைத்தென்று ஓதுப
வரைவுஇடை வைத்துப் பொருள்வயின் பிரிவே.'

மா. அக. 61

154

### வரைபொருட்பிரிதலின் விரி

527 என்பொருட் பிரிவுஉணர்த்து ஏந்திழைக்கு என்றலும்[1]
நின்பொருட் பிரிவுஉரை நீஅவட்கு என்றலும்[2]
நீடேன் என்றுஅவன் நீங்கலும்[3] பாங்கி
ஓடுஅரிக் கண்ணிக்கு அவன்செலவு உணர்த்தலும்[4]
பூங்குழை இரங்கலும்[5] பாங்கி கொடுஞ்சொல்
சொல்லலும்[6] தலைவி கொடுஞ்சொல் சொல்லலும்[7]
வருகுவர் மீண்டுஎனப் பாங்கி வலித்தலும்[8]
பருவம் கண்டு பெருமகள் புலம்பலும்[9]
இதுஅவம்பு என்றலும்[10] இறைமகள் மறுத்தலும்[11]
அவர்தூது ஆகிவந்து அடைந்ததுஇப் பொழுதுஎனத்
துணைவி சாற்றலும்[12] பிணைவிழி ஆற்றலும்[13]
அவன்அவண் புலம்பலும்[14] அவன்வருங் காலைப்
பாகன் தன்னொடும்[15] மேகம் தன்னொடும்[16]
சோகம் கொண்டுஅவன் சொல்லலும் பாங்கி
வலம்புரி கேட்டுஅவன் வரவுஅறி வுறுத்தலும்[17]
வலம்புரி கிழத்தி வாழ்த்தலும்[18] வந்துழி
நினைத்தமை வினாதலும்[19] நினைத்தமை செப்பலும்[20]
அனத்தகை அவளை ஆற்றுவித்து இருந்தமை
பாங்கி கூறலும்[21] என ஆங்குஎழு மூன்றும்
வரைவுஇடை வைத்துப் பொருள்வயின் பிரிவின்
விரிஎன விளம்பினர் தெரிபுஉணர்ந் தோரே.

இது, வரைவு இடைவைத்துப் பொருள்வயின் பிரிதலின் விரி இத்துணைத்து என்கின்றது.

(இ-ள்) என்பொருட்பிரிவு உணர்த்து ஏந்திழைக்கு என்றல் முதலாகத் ·தலைமகளை ஆற்றுவித்திருந்த அருமை பாங்கி கூறல் ஈறுகச் சொல்லப்பட்ட இருபத்தொன்றும் வரைவு இடைவைத்துப் பொருள்வயின் பிரிவின் விரி என மொழிந்தனர் ஆராய்ந்து அறிந்தோர் என்றவாறு.

1 தான் வரைவு இடைவைத்துப் பொருள்வயின் பிரியப் போவதைத் தலைவியிடம் கூறுமாறு தலைவன் தோழியை வேண்டுதல்.

2 ‘ நின்பொருட் பிரிவை நீயே தலைவிக்கு உரைப்பாயாக ’ என்று தோழி தலைவனிடம் கூறுதல்.

3 ‘ யான் பொருள்முற்றியபின் காலம் தாழ்க்கேன் ’ என்று தலைவன் தோழியிடம் கூறி நீங்குதல்.

4 பாங்கி பொருளுக்காகத் தலைவன் பிரிந்த செய்தியைத் தலைவிக்கு அறிவித்தல்

5 தலைவனது பிரிவினுல் தலைவி வருந்துதல்.

6 பாங்கி வருந்தும் தலைவியை இடித்துரைத்தல்.

7 தலைவி தன்னை இடித்துரைக்கும் பாங்கியைக் கடிந்து கூறல்.

8 ‘ விரைவில் தலைவன் மீண்டு வருவான் ’ என்று தோழி தலைவியிடம் வற்புறுத்திக் கூறுதல்.

9 மீண்டு வருவதாகத் தலைவன் குறிப்பிட்ட கார்ப்பருவ வரவு கண்டு தலைவி வருந்துதல்.

10 தோழி ‘ இதுகாலம் அல்லாக் காலத்து முற்பட்டுப் பெய்யும் மழையே; கார்ப் பருவ மழை அன்று ’ என்றல்.

11 தோழி கூறிய கூற்றைத் தலைவி மறுத்தல்.

12 'மேகம் மீண்டு வரும் தலைவனுடைய தூதாகி இக்காலத்தில் வந்தது' என்று பாங்கி கூறுதல்.

13 தலைமகள் அச்சொல் கேட்டு ஆறுதல் அடைதல்

14 தான் பிரிந்துசென்ற அவ்விடத்தில் தலைவியின் பிரிவு ஆற்றாது தலைவன் புலம்புதல்.

15 வினைமுற்றி மீளும் தலைவன் தேர்ப்பாகனிடம் கூறல்.

16 வினைமுற்றி மீளும் தலைவன் மேகத்திடம் கூறல்.

17 தன்வரவைத் தலைவிக்கு அறிவுறுத்தலுக்குத் தலைவன் ஊதிய சங்கின் முழக்கத்தைப் பாங்கி கேட்டு, அவன் வருகையைத் தலைவிக்கு அறிவித்தல்.

18 தலைவன் ஊதிய வலம்புரிச் சங்கினைத் தலைவி வாழ்த்துதல்.

19 தலைவன் வந்தஇடத்து, 'நீர் பிரிந்த காலத்துத் தலைவியை நினைத்தது உண்டோ?' என்று தோழி வினவுதல்.

20 தலைவன் தலைவியை நினைந்தவாற்றைக் கூறுதல்.

21 பாங்கி தலைவியைத் தலைவன் பிரிந்தகாலத்தில் ஆற்றுவித்துக்கொண்டிருந்த அருமையை விளக்கிக் கூறுதல்.

### ஒத்த நூற்பாக்கள்

'முலைவிலை கூறல் வரைவுஉடன் படுத்தல்
வரைபொருட்கு ஏகலை உரைஅவட்கு என்றல்
நீகூறு என்றல் சொல்லாது ஏகல்
பிரிந்தமை கூறல் நெஞ்சொடு கூறல்
நெஞ்சொடு வருந்தல் வருத்தம்கண்டு உரைத்தல்

வற்புறுத் தல்லொடு வன்புறை அழிதல்
வாய்மை கூறல் மன்னவன் மெய்யுரை
தேருது புலம்பல் காலம்மறைத்து உரைத்தல்
தூதுவரவு உரைத்தல் தூதுகண்டு அழுங்கல்
மெலிவு கண்டு செவிலி உரைத்தல்
மேவிய செவிலி கட்டுவைப் பித்தல்
கலக்குற்று நிற்றல் கட்டுவித்தி கூறல்
வேலனை அழைத்தல் இன்னல் எய்தல்
விலக்க நினைத்தல் நிலைமை உரைத்தல்
அறத்தொடு நிற்றல் ஐயம் தீர்த்தல்
அவன்வெறி விலக்கல் செவிலிக்குத் தோழி
அறத்தொடு நிற்றல் நற்றாய்க்குச் செவிலி
அறத்தொடு நிற்றல் தேர்வரவு உரைத்தல்
மணமுரசு கேட்டு மயங்கி உரைத்தல்
ஐயுற்றுக் கலங்கல் அவன்நிதி காட்டல்
ஆறைந் துடனே கூறிய மூன்றும்
விரைமலர்க் குழலாய் ! வருபொருட் பிரிதல்'

திருக்கோவை மு. வி. கள. 23

முழுதும் — ந. அ. 170

'பேதைக்கு என்பொருட் பிரிவுணர்த்து என்றலும்
கோதைக்கு உரைநின் குறிப்புநீ என்றலும்
தாழேன் என்று அவன் தணத்தலும் சேடி
ஏழைக்கு அவன்செலவு இனிதின் உணர்த்தலும்
இடுகுஇடை இறைவன் பிரிவுநினைந்து இரங்கலும்
கொடியசொல் பாங்கி கூறலும் தலைமகள்
கொடியசொல் கூறலும் கொற்றவர் மீண்டு
வருவர்என்று இதனை மதிபெற உணர்த்தலும்
பருவம் கண்டு பைந்தொடி புலம்பலும்
சேடிவம்பு என்றலும் திருநுதல் மறுத்தலும்
வற்புறுத் தலும்வன் பொறைஎதிர் அழிதலும்

மன்னவன் தூதாய் வந்தது இப் பொழுது என
மின் இடைக்கு இருளை விருப்பின் சாற்றலும்
இறைவி ஆற்றலும் இறையவன் புலம்பலும்
வலவன் தன்னொடும் மழைமுகில் கணத்தொடும்
குலமகன் வருத்தம் கொண்டு கூறலும்
வளைமுழங் கலின் அவர் வரவு அறி வுறுத்தலும்
கிளையொடும் அதனைக் கிளிமொழி வாழ்த்தலும்
வெற்றிவே லவன் தனை நினைந்தமை விளைதலும்
கொற்றவன் தான் நினைந் தமைபின் கூறலும்
கோல்தொடி தன்னைக் குறிப்பொடு நீங்காது
ஆற்றுவித்து இருந்தமை ஆருயிர்ப் பாங்கி
மொழிவதோடு இருபான் மேல்ஒரு மூன்றும்
குறியுடை வரைவுஇடைப் பொருள்வயின் மன்னன்
பிரிவதன் விரிவுஎனப் பேசினர் புலவர்.' மா. அ. 72

என்பொருட் பிரிவு உணர்த்து ஏந்திழைக்கு என்றல் :

குன்றம் கிடையும் கடந்துஉமர் கூறும் நிதிகொணர்ந்து
மின்தங்கு இடை நும்மை யும்வந்து மேவுவன் அம்பலம்சேர்
மன்தங்குஇடைமருதுஏகம்பம்வாஞ்சியம்அன்னபொன்னைச்
சென்று அங்குஇடைகொண்டுவாடா வகைசெப்புதேமொழியே
திரு. 263

எனவும்,

[தேமொழித் தோழியே! குன்றங்களைக் கடந்து சென்று உம் தமர் கூறும் செல்வத்தைக்கொண்டு மின்னலை ஒத்த இடையையுடைய உம்மைவந்து சேருவேன். சிவபெருமான் வீற்றிருக்கும் திருவிடைமருதூர், திருஏகம்பம், திருவாஞ்சியம் என்ற தலங்களை ஒத்த தலைவியை வருத்தம் கொண்டு வாடாதபடி என்பிரிவு கூறி ஆறுதல்மொழி கூறுவாயாக.]

பாங்கி நின்பொருட்பிரிவு உரை நீ அவட்கு என்றல் :

கேள்ஏ வரையும்இல் லோன்புலி யூர்ப்பயில் கிள்ளை அன்ன
யாழ்ஏர் மொழியாள் இரவரி னும்பகல் சேறிஎன்று
வாழேன் எனஇருக் கும்வரிக் கண்ணியை நீவருட்டித்
தாழேன் எனஇடைக் கண்சொல்லி ஏகு தனிவள்ளலே.

திரு. 269

எனவும்,

[ஒப்பற்ற வள்ளலே ! தனக்கு ஒப்பாரை இல்லாத சிவ பெருமானின் புலியூரில் உள்ள கிளியைஒத்த மழலையையும் யாழை ஒத்த இனிமையையும் கொண்ட மொழிகளை உடைய தலைவி நீ இரவில் அவளைக் காணவரினும் பகலில் பிரிந்து விடுகிறாயே என்று ஏங்கி நிற்பவள் ஆவாள். அவளை அமைதிஉறச் செய்து ' காலம் தாழ்க்கேன் ' என்று அவளிடம் கூறி விடைகொண்டு நீ செல்வாயாக ]

நீடேன் என்று அவன் நீங்கல் :

மதிமுற் றியதுஅன்ன வாள்முகத் தாளை வரையவல்லே
நிதிமுற்றி மீள்குவன் நீடநில் லேன்நெய்தல் நீலஉண்கண்
நுதிமுற் றியகுழை நுண்ணிடை யாய்எதிர் கொண்டுநுங்கள்
பதிமுற் றும் மங்கலம் பாடநின் று ஆடப் பரிசிலரே.

அம்பி. 305

[காதளவும் நீண்ட கண்களையும் நுண்ணிய இடையையும் உடையாய்! உங்கள் ஊரவர் மங்கலம் பாடவும், பரிசிலர் ஆடவும், முழுமதி போன்ற ஒளியை உடைய முகத்தாளாகிய தலைவியை மணப்பதற்கு விரைவாகப் பொருள் தேடிக்கொண்டு மீண்டுவிடுவேன். காலம் தாழ்க்கமாட்டேன்.]

பாங்கி தலைமகட்குத் தலைமகன் செலவு உணர்த்தல் :

நல்லாய்நமக்குஉற்றதுஎன்என்றுஉரைக்கேன்நமர்தொடுத்த
எல்லா நிதியும் உடன்விடுப் பான்இமை யோர்இறைஞ்சும்

மல்லார்கழல்அழல்வண்ணர்வண் தில்லைதொழார்கள் அல்லால்
செல்லா அழல்கடம் இன்றுசென் றார்நம் சிறந்தவரே.

திரு. 271

எனவும்,

[நல்லாய்! நமக்கு இன்று ஏற்பட்டுள்ள நிகழ்ச்சியை மகிழ்ச்சிக்கு உரியது என்பேனோ? வருத்தம் தருவது என்பேனோ? நமர் வேண்டிய எல்லாச் செல்வத்தையும் ஒருசேரத் திரட்டி வர, தேவர்கள் வணங்கும் கழல்களை உடைய சிவபெருமானுடைய தில்லையைத் தொழாத தீவினையாளரேயன்றிப் பிறர் யாரும் சென்று அறியாத வெய்ய பாலைநிலத்தைக் கடந்து செல்ல நம் தலைவர் இன்று சென்றுவிட்டார்.]

தலைமகள் இரங்கல் :

அருந்தும் விடம்அணி யாம்மணி கண்டன்மற்று அண்டர்க்குஎல்லாம்
மருந்தும்அமிர் தமும்ஆகும்முன் னோன்தில்லைவாழ்த்தும்வள்ளல்
திருந்தும் கடன்நெறி செல்லும்இவ் வாறு சிதைக்கும்என்றால்
வருந்தும் மடநெஞ்ச மேஎன்ன தாம்இனி வாழ்வகையே.

திரு. 272

எனவும்,

[மடநெஞ்சே! விடத்தைக் கழுத்துக்கு அணியாகக் கொண்டு தேவர்களுக்கு மருந்தும் அமுதமும் ஆகிய சிவபெருமானுடைய தில்லையை வாழ்த்தும் தலைவன் தன் கடமையை முற்றச் சென்று நம்மை இவ்வாறு துன்புறுத்துவனாயின், நமக்கு வாழும் வகை ஒன்றும் இன்று.]

பாங்கி கொடுஞ்சொல் சொல்லல் :

மதுமலர்ச் சோலையும் வாய்மையும் அன்பும் மருவிவெங்கான்
கதும்எனப்போக்கும் நிதியின் அருக்கும் முன்னிக்கலுழ்ந்தால்
நொதுமலர் நோக்கம்ஓர் மூன்றுஉடை யோன்தில்லை நோக்கலர்போல்
இதுமலர்ப்பாவைக்குஎன்னோ வந்தவாறுஎன்பர் ஏந்திழையே.

திரு. 752

எனவும்,

[சோலையிலே நம்மை மருவி வாய்மையும் அன்பும் கலந்த மொழிகளைப் பேசிப் பின் கொடிய கானவழியிலே திடீரென்று புறப்பட்டுப் போகும் போக்கையும் செல்வத்தின் தேடுதற்கு அருமையையும் நினைத்து நீ வருந்தினால், 'முக்கண்ணனுடைய தில்லையைத் தரிசிக்காதவர்போலத் தலைவிக்கு என்ன துயரம் ஏற்பட்டு விட்டது?' என்று அயலார் உசாவத் தொடங்கிவிடுவர்.]

தலைவி கொடுஞ்சொல் சொல்லல் :

வந்துஆய் பவரைஇல் லாமயில் முட்டை இளையமந்தி
பந்துஆடு இரும்பொழில் பல்வரை நாடன்பண் போஇனிதே
கொந்தார் நறுங்கொன்றைக் கூத்தன்தென் தில்லை தொழார்குழுப்போல்
சிந்தா குலம்உற்றுப் பற்றுஇன்றி நையும் திருவினர்க்கே.
திரு. 276

எனவும்,

[கவனிப்பவரைப் பெறாத மயில் முட்டையைப் பெண் குரங்கு பந்தாடும் சோலைகளையுடைய மலைநாடன் பண்பு' கொன்றை மாலையை அணிந்த கூத்தனின் தில்லையைத் தொழாதவர் கூட்டத்தைப்போல மனம்வருந்திப் பற்றின்றித் துன்புறும் பேறு உடையார்க்கு நன்றாக இருக்கிறதே !]

வருகுவர் மீண்டு எனப்பாங்கி வலித்தல் :

கான்அமர் குன்றர் செவிஉற வாங்கு கணைதுணையாம்
மான்அமர்நோக்கியர்நோக்குஎனமான் நல்தொடைமடக்கும்
வான்அமர்வெற்பர்வண் தில்லையின்மன்னை வணங்கலர்போல்
தேன்அமர் சொல்லிசெல் லார்செல்லல் செல்லல் திருநுதலே.
திரு. 274

எனவும்,

[இன்சொலாய் ! வில்லில் அம்பைப் பூட்டிய கானவர் தம்துணைவியர் நோக்கத்தை ஒத்த நோக்கைஉடைய மானைக் கண்டதும் அம்பு எய்தலை நீக்கிவிடும் வான்அளாவிய

மலையை அண்மையில்கொண்ட தில்லை மன்னனாகிய சிவபெருமானை வணங்காதவர் போல், தம்தலைவன் உன்னைப்பிரிந்து செல்லமாட்டான் ஆதலின், நீ வருந்துதல் வேண்டா.]

பருவம் கண்டு பெருமகள் புலம்பல் :

தார்கால மன்றல் அம் கொன்றையங் கானம் தடஞ்சிறைவண்
கூர்கால நாரை யுடன்குருகு ஆலக்கொழுங்கயல்கண்
நீர்கால ஆடகம் மென்னிறம் காலப்பிறங்குமழைக்
கார்காலம் வந்தது வாரார்கொல் இன்னமும் காதலரே.

அம்பி 313

எனவும்,

[கொன்றை மாலையைப் போலப் பூப்பக் கானத்தில் நாரையுடன் ஏனைய பறவைகளும் ஒலிப்ப, கண்கள் கண்ணீரைப் பெருக்க நிறம் பசலைபாயக் கார்காலம் வந்தும், நம் தலைவர் மீண்டுவந்தார் அல்லரே!]

இருளை வம்பு என்றல் :

கருந்தினை ஓம்பக் கடவுள் பராவி நமர்கலிப்பச்
சொரிந்தன கொண்மூச் சுரந்ததன் பேரரு ளால்தொழும்பில்
பரிந்தெனை ஆண்டசிற் றம்பலத் தான்பரங் குன்றில்துன்றி
விரிந்தன காந்தள் வெருவரல் கார்என வெள்வளையே.

எனவும், திரு. 279

[வெள்வளையே! தன் அருளால் என்னை ஆட்கொண்ட சிற்றம்பலத்தானின் பரங்குன்றில் தினை நன்கு செழித்து வளர்தல் வேண்டும் என்பதற்காக நமர் இறைவனை வேண்ட, மேகங்கள் காலம் அல்லாக் காலத்தில் மழை பொழியவே, அதனைக் கார்காலமாகக் கருதிக் காந்தள்செடிகள் பூத்ததனைக் கொண்டு, ‘ தலைவர் மீண்டு வாராமுன் கார்காலம் வந்துவிட்டதே ’ என்று அஞ்சாதே.]

இறைமகள் மறுத்தல் :

சொல்லிய சொல்வழு வாத்தொண்டை வேந்தன் அவனாவெற்பில்
புல்லி அருஞ்சுரம் போனவர் வார்த்தையில் பொய்ம்மைஒன்றும்

இல்லை எனும்கொடி யேஅது போக இவையும்பொய்யோ
மல்லிகை முல்லை செருந்திவிற் பார்சொல்லும் வார்த்தைகளே
கப்பல் 243

எனவும்,

[சொன்னசொல் தவருத தொண்டைமானுடைய துவரா பதியை அடுத்த மலையிலே நம்மைத் தழுவி வரைவு இடை வைத்துப் பொருள்வயின் பிரிந்த தலைவர் வார்த்தையில் பொய் ஒன்றும் இல்லை என்று சொல்லும் தோழியே! கார் காலத்தில் பூக்கக்கூடிய மல்லிகை முல்லை செருந்திப் பூக்களை விற்பார் கூறும் பண்டமாற்று ஒலியும் பொய்யோ?]

அவர் தூதாகி வந்தடைந்தது இப்பொழுது
எனத்துணைவி சாற்றல் :

பருவம் அடுத்தது வந்திலர் காதலர் என்றுபைம்பொன்
உருவ மடப்பிடி யேஉயங் கேல்உயங் காதவண்ணம்
பொருபகைசெற்றபொற்றேர்வெற்றிவேந்தர்பொருள்முடித்து
வருவது உரைப்பமுன் னேவந்த தால்இந்த மைம்முகிலே.
அம்பி. 317

எனவும்,

[பொன்னிற மடப்பிடியே! 'கார்காலம் வந்து விட்டது தலைவர் மீண்டு வரவில்லை' என்ற கூறி வருந்தாதே. 'நீ வருந்துதல் கூடாது என்பதற்காகவே, பகைவரை அழித்த வெற்றியை உடைய நம்தலைவர் வந்துகொண்டிருக்கிறார்' என்பதனை நமக்குக் கூறுவதற்காகக் கார் மேகம் தூதாகி வந்துள்ளது.]

தலைமகள் ஆற்றல் :

கருங்காலவெண்குருகும்கண்டல்வாய்வீடஅஞ்சும்கொண்டல்
பொருங்கால் அழிந்து புலம்பும்நெஞ் சேதண் புறவமயில்
ஒருங்குஆல மேகம் இகுத்துஉறை கால அறைகழலார்
வரும்காலம் வந்தது போங்காலம் இல்லைநம் மன்உயிர்க்கே.

எனவும், அம்பி. 318

[வெண்குருகுகள் கண்டல்களிடையே ஒலிப்பக் கண்டார் அஞ்சுமாறு மேகம் பொழிதல் கண்டு வருந்தும் நெஞ்சே! காடுகளில் மயில்கள் ஆட மேகங்கள் இடித்து மழை பொழியப் பிரிந்த தலைவர் மீண்டுவருவதாகச் சொன்ன காலம் வந்துவிட்டது; அவர் இன்னும் வரவில்லை; நம் உயிருக்குப் போகும் காலமும் வரவில்லை!]

அவன் அவண் புலம்பல் :

விழிகுழி யும்படி தேர்வழி பார்த்தனை வீழ்ந்துவண்டு
கொழுதிஇமி ரும்குழல் சோரக் கிடந்தும் குடங்கையின்மேல்
ஒழுகிய அஞ்சனவெள்ளத்துஉணங்கும்அணங்கைமுன்சென்று
எழுகானும்நெஞ்சம்என்னே அவரோஎனின்என்சொல்லுமே.

அம்பி. 319

எனவும்,

[விழிகள் தாம் பலகாலும் பார்ப்பதனுல் குழிந்து போகும்படி தேர்வரும் வழியை நோக்கியவண்ணம் வண்டுகள் ஒலிக்கும் கூந்தல் சோர உள்ளங்கையில் கண்ணீர் வெள்ளம்போல் பாய வருந்தும் தலைவியை, 'முன் சென்று தலைவனை வரவேற்க வருவாயாக' என்று கூறுதற்குப் போன என் மனம், 'அவர் எங்கே' என்று அவள் கேட்டால் என்ன விடை கூறுமோ?

மீண்டுவரு தலைவன் பாகனொடு சொல்லல் :

மொய்ஆ டகமுடித் தேர்வல வாமுன் மொழிந்ததுஎல்லாம்
பொய்யானது என்று புலந்துஉரை யாடப் பொருள்விரும்பி
மைஆர் குழலியை வாழ்வித்த பாவி மனத்தைஇன்றுஉன்
கையாக வும்பரிக் காலாக வும்அயன் கண்டிலனே.

அம்பி. 320

எனவும்,

[பொற்சிகரம் வேய்ந்த தேரை ஓட்டும் பாகனே! "தலைவன் கார்காலத் தொடக்கத்தில் 'பொருள்முற்றி மீண்டு வருகிறேன்' என்று கூறிய கூற்றுப் பொய்யாயிற்றே" என்று

என்று வாடி வருந்தித் தலைவி பேசும் நிலையில் மிக விரைந்து சென்று அவளை அடைவதற்கு, வரைபொருட்குப் பிரிந்து தலைவியை வாழ்வித்த என் மனத்தை உன் கையாகவும் உன் தேர்க்குதிரைகளாகவும் அயன் படைந்தான் அல்லனே! ஆத லின் இயன்றவரை தேரை விரைவில் செலுத்து.]

தலைமகன் மேகத்தொடு சொல்லல் ;

இளைத்துக் கிடந்தெனைக் கேட்குந் தொறும்கலுழ் கண்ணையும்முன்
வளைத்துக் கிடந்த வரிமணல் கூடலும் வண்ணம்எல்லாம்
விளைத்துக் கிடந்த பசலையு மாய்உள்ளம் விம்மிவிம்மி
இளைத்துக்கிடந்தவர்க்குஎன்சொலமேகங்கள்முன்செல்வதே.
அம்பி. 322

எனவும்,

[உள்ளத்தில் பல எண்ணங்கள் உண்டாகக் கிடந்து என் பேச்சை எடுக்குந்தொறும் கண்ணீர்வடித்து, மணலில் கூடற்சுழிவரைந்து, நிறம் பசலைபாய மனம் வீம்மிவிம்மி இளைத்துக் கிடக்கும் தலைவிக்கு என் தூதாக என்ன சொல் வதற்காக மேகங்கள் எனக்கு முன்னே புறப்பட்டுச் செல் கின்றன?]

பாங்கி வலம்புரிகேட்டு அவன்வரவு அறிவுறுத்தல் :

பொருகின்றசெங்கயல்போல்விழியாய்பண்டுபோயநின்கைக்
குருகுஇன்று உந்துஇறை கொள்வது காண்கநம் கொண்கர்பொற்றேர்
தருகின்ற சங்கம் தருஅன்ன வாணன் தமிழ்த்தஞ்சைவாய்
வருகின்றது என்றுமுன் னேஓகை கூறும் வலம்புரியே.
தஞ்சை 277

எனவும்,

[செங்கயல் விழியாய்! முன்புபோல இன்றும் நின் கைவளைகள் கழலாது அழகாகத் தங்கும் வாய்ப்பு ஏற்பட்டு விட்டது. நம் தலைவனுடைய பொற்றேர் சங்கநிதிபோன்ற கொடைத்தொழிலை உடைய வாணனுடைய தமிழ்த்தஞ்சை யை நோக்கி வந்துகொண்டுஇருக்கும் செய்தியை நமக்கு மகிழ்ச்சி உண்டாகுமாறு முன்னமேயே வலம்புரிச்சங்கங்கள் முழங்கித் தெரிவிக்கின்றன.]

வலம்புரி கிழத்தி வாழ்த்தல் :

மால்வண் டுளனமன் னிவாணன் தென்மாறைமன்னன்புகழே
போல்வண் தமிழ்மன் னர்போற்றவிளங்குகபொன்கொழிக்கும்
கால்வண்டல் வைகைக் கரைமல்கு மல்லிகைக் கான்முகையின்
மேல்வண்டு இருந்தது போல்கரு மாமுக வெண்சங்கமே.

தஞ்சை 278

எனவும்,

[பொன் கொழிக்கும் வண்டலை உடைய வைகைக் கரைக் கண் பூத்துச்சிறக்கும் மல்லிகைமொட்டில் வண்டு இருந்தாற் போலக் காணப்படும் கரிய முகங்களை உடையவெண்சங்கு, திருமால் கையில் இருக்கும் பாஞ்சன்னியத்தைப் போலப் பெருமையுற்று, வாணன் புகழ்போலத் தமிழ்மன்னர் போற் றும் புகழோடு விளங்குவதாகுக.]

தலைமகன் வந்துழிப் பாங்கி நினைந்தமை வினுதல் :

கடம்தந்த வெங்கைக் களிற்றுவெங் கானம் கடந்துசென்று
தடம்தந்த தாமரைத் தண்புனல் நாட்டுத் தடங்கடல்நீர்
விடம்தந்து அமுதம் தரும்மட நோக்குஇவண் மேவமனத்து
இடம்தந்து அறிவதுஉண் டோஒரு நாள்எம் இறையவனே.

அம்பி. 324

எனவும்,

[தலைவ! யானை செறிந்த காடுகளைக் கடந்து சென்று நீ தங்கிய தாமரைத் தடாகங்கள் நிறைந்த புனல்நாட்டிலே, விடமும் அமுதமும் போலும் பார்வைகளை உடைய தலைவி இங்கு உன்னைப் பிரிந்து தனித்திருக்கும் நிலையை ஒரு நாளாவது நீ நினைத்தது உண்டோ?]

தலைமகன் நினைத்தமை செப்பல் :

கோவையை வென்றசெவ் வாய்க்கொடி யேபொருள்கூட்டஎன்னும்
தேவையைமேற்கொண்டுதீவினையேன்சென்றசென்றஇடம்
யாவையும் உங்கள் இளமரக் காவும் இழைத்தகுன்றும்
பாவையும் நீயும் பரிமளச் சோலையும் பண்ணையுமே.

அம்பி. 325

எனவும்,

[கொவ்வைச் செவ்வாய்க் கொடியே! பொருள் தேடுதலாகிய தேவையை மேற்கொண்டு தலைவியைப் பிரிந்து சென்ற இடங்களில் எல்லாம், உங்கள் இளமரக்காவும் செய்குன்றும் பாவையும் நீயும் நறுமணம் கமழும் சோலையும் விளையாட்டிடமுமே என் கண்முன் உருவெளியாகக் காட்சி வழங்கின ]

தலைமகளை ஆற்றுவித்து இருந்த அருமை பாங்கி கூறல் :

மதிகாட் டியநுதல் வல்லிசிந் தாகுலம் மாற்றியதுஉன்
பதிகாட் டியும்ஒண் பனிவரை காட்டியும் பாய்திரைநீர்
நதிகாட் டியும்புது நன்விருந்தாகி நடந்ததிண்தேர்க்
கதிகாட் டியும்முன் கலந்தசந் தாடவி காட்டியுமே
அம்பி. 328

எனவும் வரும்.

[பிறைநுதல் தலைவியை, உன் ஊரைக்காட்டியும், உன் குளிர்ந்த மலையைக் காட்டியும், உன் மலையிலிருந்துவரும் நதியைக் காட்டியும், உன் தேர் சென்ற புதுச்சுவட்டைக் காட்டியும், உன்னைக் கூடிய சந்தனமரக்காட்டினைக் காட்டியுமே துயரத்தை ஆற்றுவித்துக் கொண்டிருந்தேன்.]

உரையிற் கோடலான், தலைவன் ஆற்றுவித்திருந்த அருமை வினுதலும் வரப்பெறும். அதற்குச் செய்யுள் :

சிமையா டகவரைச் சேண்நெறிச் சென்று அருஞ்செய்பொருளுக்கு
உமையான் ஒழிந்துஅங் குறைந்த அந்நாளிங் குடனிருந்து
இமையா விழிக்கின்ற இத்துணைப் போதினும் என்னை அன்றி
அமையா அணங்கின் அணங்கைஎவ் வாறுஇருந்து ஆற்றினையே
அம்பி. 327

எனவரும்.

[உச்சியைஉடைய மேருமலைபோலும் மலைப்பக்கத்தே நீண்ட தொலைவு சென்று பொருள் தேடுவதற்காக உம்மைப் பிரிந்து அங்குத் தங்கிஇருந்த நாள்களில் எல்லாம், இங்குப் பெரும்பாலும் என்னுடனேயே இருந்து, இமைத்துப் பின்

விழிக்கும் சிறுநேரத்தும் என் பிரிவைத் தாங்குதல் இயலாத தலைவியின் வருத்தத்தை நீ எவ்வாறு போக்கிக்கொண்டிருந் தாய் ?]

இவற்றுள், என் பொருட்பிரிவு உரை ஏந்திழைக்கு என்றல் ஆகிய ஒன்றும் பிரிவு அறிவுறுத்தற்கும்,

பாங்கி நின் பொருட்பிரிவு உரை நீ அவட்கு என்றலாகிய ஒன்றும் பிரிவு உடன்படாமைக்கும்,

தலைவன் நீடேன் என்று அவன் நீங்கலாகிய ஒன்றும் பிரிவு உடன்படுத்தற்கும்,

பாங்கி ஓடுஅரிக்கண்ணிக்கு அவன் செலவு உணர்த்தலாகிய ஒன்றும் பிரிவு உடன்படுதற்கும்,

தலைமகள் இரங்குதலும், கொடுஞ்சொல் சொல்லலும், பருவம் கண்டு புலம்பலும், மறுத்தலும், தலைமகன் சேண்இடைப்புலம்பலும் ஆகிய ஐந்தும் பிரிவுழிக் கலங்கற்கும்,

பாங்கி கொடுஞ்சொல் சொல்லலும், வருகுவர் மீண்டு எனப் பாங்கி வலித்தலும், பருவம் அன்று வம்பு என்றலும், அவர் தூதாகி வந்து அடைந்தது இப்பொழுது என்றலும் ஆகிய நான்கும் வற்புறுத்தற்கும்,

தலைமகள் ஆற்றலாகிய ஒன்றும் வன்பொறைக்கும்,

தலைமகன் மீண்டு வருகாலைப் பாகனொடு சொல்லலும், மேகமொடு சொல்லலும் ஆகிய இரண்டும் வருவழிக் கலங்கற்கும்,

பாங்கி வலம்புரி கேட்டு அவன் வரவு அறிவுறுத்தல் முதலாகிய ஐந்தும் வந்துழி மகிழ்ச்சிக்கும் உரியவாம். 155

---

# இப்பதிப்பில் காணப்படும் அச்சுப் பிழைகளும், அவற்றின் திருத்தங்களும்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 8 | 18 | இன்றி | இன்றியும் |
| 12 | 8 | செய் | சேடி |
| 13 | 12 | தன்னை | தம்மை |
| 17 | 2,4 | ஒருசாரர்ப் | ஒருசார் |
| 33 | 4 | இறை கள. | தொ.பொ. |
| | 9 | 6 | இறை கள 6 |
| | 12 | பிழை | பய |
| | 25 | கக | தக |
| 80 | 29 | வாபில் | வாயில் |
| 87 | 15 | மூனி | முனி |
| 88 | 28 | மெய் | மெய்ப் |
| 90 | 24 | தனை | தலை |
| 97 | 18 | அறப் | அறம் |
| 115 | 10 | கொண்டார். | கொண்டார், |
| 127 | 11 | குறி | குழி |
| 131 | 1 | அகன் | மகன் |
| 133 | 25 | சுறு, | சுறு; |
| 141 | 4 | உரை | உறை |
| 142 | 3 | பனை | பலை |
| 148 | 15 | மனை | மகனை |
| 152 | 1 | யொரு | பொரு |
| 158 | 7 | மொழீ | மொழி |
| 160 | 15 | பகர் | பகற் |
| 167 | 1 | ணருஞ் | ணறுஞ் |
| 169 | 13 | அதிர்ப்பு | அதிர்பு |
| 177 | 16 | அள | அன |
| 181 | 9 | வமின் | வயின் |
| 182 | 19 | அஃது | இஃது |
| 183 | 6 | மூன் | முன் |
| | 22 | யாளே | யானே |
| 206 | 3 | காலல் | காதல் |
| 208 | 14 | பொரு | யொரு |
| 227 | 16 | வில்லை | வில்லை |
| 231 | 26 | தன் | தம் |
| 232 | 26 | குனனும் | குளனும் |
| 247 | 7 | உயிர் | உயிர்த் |
| 260 | 16 | ஆலான் | ஆவான் |
| 261 | 9 | வனை | வளை |
| 267 | 16 | சாற்றின் | சாந்தின் |
| 268 | 6 | தெண் | தென் |
| 280 | 13 | பீனார் | மீனார் |
| 281 | 22 | தநழ் | தாழ் |
| 284 | 19 | புணர்ச் | புணர்ச்சி |
| 287 | 11 | பள் | பன் |
| 289 | 9 | திரு | திருக் |
| 313 | 21 | மிடாத | இடாத |
| 325 | 14 | தன | தள |
| 329 | 15 | மரி | மலி |
| 335 | 3 | கொல்லை | கொல்லோ |
| 339 | 16 | றுளை | றுனை |
| 343 | 5 | என்றார். | என்றார்; |
| 346 | 29 | எனவும் | எனவரும் |
| 352 | 4 | எனவரும் | எனவும் |
| 356 | 18 | வற்றை | வற்றைக் |
| 359 | 25 | எண்ணம் | தெளிதல் |
| 362 | 14 | என | எனவும் |
| 374 | 20 | வரு | வகு |
| 377 | 28 | கொடு | தொடு |
| 381 | 7 | — | வரும் |
| 385 | 13 | அள | அன |
| 386 | 1 | தூக்கிய | தூக்கியும் |
| 388 | 13 | ஆகுய | ஆகுப |
| 402 | 18 | கூறி | கூசி |
| 408 | 5 | யட்ட | பட்ட |
| 4.7 | 20 | வெற்யர் | வெற்பர் |
| 419 | 5 | தனை | தலை |
| 420 | 6 | மகட் | மகற் |
| 422 | 9 | தொண்டைமானும் | — |
| 459 | 5 | உள் | உன் |
| 464 | 12 | குறிக்கும். | குறிக்கும், |
| 468 | 25 | வழி | வழித் |
| 472 | 25 | அகா, | அக. |
| 474 | 22 | கூடிய | அணிந்த |
| 474 | 26 | நாறை | நாரை |
| 475 | 12 | வள | வன |
| 477 | 29 | திரு 1 | 176 |
| 481 | 15 | என | எனவும் |
| 503 | 1 | பறக்கும். | பறக்கும் |
| 504 | 4 | நிலைவை | நிலைவைப் |
| 505 | 18 | வாறு | ஆறு |
| 520 | 29 | 752 | 275 |
| 526 | 10 | முகங்களை | முகத்தை |